# பத்தினிக் கோட்டம்

(இரண்டாம் பாகம்)

ஜெகசிற்பியன்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# 75

## ஆதோத்ய வீணை

குடதிசை வானில் தங்கப் பாளம் உருகிக்கொண்டிருக்க, குணதிசை விண்ணில் நீலவண்ணப் பெருவெள்ளம் பாய்ந்து கொண்டிருந்தது. தென்திசைத் துரியத்தில் முத்துப் பொதிகள் அம்பாரமிட்டுக் குவிய, வடதிசை வான்பரப்பில் கரிய பாறைகள் உருண்டுகொண்டிருந்தன.

சுரும்புகள் சுருதி கூட்டிச் சுகானந்த கீதம் பாடிய அந்த மனானந்த மாலை வேளையில் எங்கிருந்தோ பறந்து வந்த பொன்வண்டு ஒன்று பாண்டியரின் 'புகழாபரணம்' அரண்மனையைச் சார்ந்த அழகிய சோலையினுள் இசைக் கோலமிட்டுக்கொண்டே புகுந்தது.

குரா, கோங்கம், கசருத்தி, வேங்கை, வெண்கடம்பு, சுரபுன்னை, மஞ்சடி, மகிழம், மருதம், சேடல், சண்பகம், பாதிரி முதலான கோட்டுப் பூக்கள் குலுங்கும் மரங்கள் ஒரு பக்கம்; குருக்கத்தி, செம்முல்லை, வெண்முல்லை, முசுண்டை, அதிரல், வெள்ளைக்கூதாளம், வெட்பாலை முதலான சிறு பூக்களைச் சுமந்த செடிகள் மற்றொரு பக்கம்; பகன்றை, பிடவம், மயிலை முதலான வண்ணப் பூக்கள் சொரியும் கொடிகள் இன்னொரு பக்கம்—என்று இவ்வாறு பாங்குடன் செழித்து வளர்ந்து, எழிலும் மணமும் கொழித்துக் கொண்டிருந்த அந்தச் சோலையைக் கண்டு உற்சாகம் தலைக்கேறிய பொன்வண்டு, நல்லதொரு மலரணையில் படுத்துச் சுகம் காண நாட்டம் கொண்டு பரவசப் போதையுடன் அங்குமிங்குமாகப் பறந்து வர ஆரம்பித்தது.

'முல்லை மலரா, அது வேண்டாம்; முனை சிவந்த செண்பகமா, அதுவும் வேண்டாம்; செவ்வந்தி மலரா, வேண்டாம் வேண்டாம்; செங்கழுநீர்ப் புஷ்பமா, உடல் உறுத்தும்; மாதுளை மலரா, மணம் இருக்காதே! நீலோற் பல மலரா, எங்கே, எங்கே? அதில் நெஞ்சையள்ளும் மணம் உண்டு; தேனும் உண்டு. மெத்தென்ற மென்மையுண்டு, அழகும் உண்டு. மென்னுடலைச் சாய்ப்பதிலே கொள்ளை இன்பம்!... நீலோற்பலம் எங்கே?... நீலோற்பலம் எங்கே?... அதோ, அழகு சொரிய அலர்ந்து நிற்கும் இரு நீலோற்பல மலர்கள்!' — வேகமாகப் பறந்து வந்த பொன்வண்டு அவ்விரு மலர்களையும் வேட்கையுடன் நெருங்கியது.

அடுத்த கணம்—"ஹா! வண்டு! வண்டு!" என்று தன் நீலோற்பல நேத்திரங்களைப் படபடவென இமைத்துக் கரங்களால் மூடிக்கொண்டு கிரீச்சிட்டாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி.

கலகலவென்ற சிரிப்பொலி!

அரண்டு மிரண்டு கண்களைப் பொத்திக் கொண்டு எழுந்து நின்ற இளங்கோப்பிச்சி இந்தச் சிரிப்பொலி கேட்டு மேலும் நடுங்கியவளாய்ப் பின்னால் திரும்பினாள். இவ்வளவு நேரம் அவள் சிந்தனையில் ஆழ்ந்து அமர்ந்திருந்த சிறியதொரு தடாகக் கரையை நோக்கிச் சிரித்தமுகத்துடன் தயங்கித் தயங்கி வந்து கொண்டிருந்தான் பல்லவ இளவரசன் கோவிந்த வர்மன்.

வியப்பும் திகைப்புமாகக் கண்களை மலர்த்தி அவனை ஏறிட்டு நோக்கினாள் இளங்கோப்பிச்சி. கோடை வெயிலில் வாடித் துவண்ட பசலைக் கொடியென இளைத்துக் களைத்திருந்த அவள் அந்த ஒரே கணத்தில் வர்ஷ ருது கண்ட செங்கதலிக் குருத்துப்போல் மகிழ்ச்சி தளதளப்புடன் நிமிர்ந்தாள்.

"மாவீர பழையாறைச் சோழரின் மகளா ஒரு சின்னஞ் சிறு பொன்வண்டைப் பார்த்து இப்படிப் பயந்து நடுங்குவது?

என்னால் நம்பவே முடியவில்லையே?" என்று குறும்புப் புன்னகையுடன் கேட்டுக்கொண்டே அவளருகில் வந்து நின்றான் கோவிந்தவர்மன்.

நீலோற்பல மலர்களென நினைத்து ஏமாந்த பொன் வண்டு, அங்கே திடீரென்று எழுந்த அலறல் ஒலியால் மிரட்சி யுற்றுப் பறந்தோடியதைக் கண்டு நாணித் தலை குனிந்த இளங்கோப்பிச்சி, தன் எதிரே நின்ற கோவிந்தவர்மனை ஆசை பொங்கக் கடைக்கண்ணால் நோக்கினாள். அடுத்த கணமே அவள் முகம் வெளுத்துச் சிறுத்தது. தனக்கு அறிமுகமில்லாத ஓர் அந்நியனைப் பார்த்துவிட்டதுபோன்ற வெறுப்பு உணர்ச்சி மேலிட்டவளாய் முகத்தைச் சுளித்துப் பூவுடலைக் கூனிக் குறுக்கிக்கொண்டு விருட்டென்று ஓடிப்போய் ஒரு செவ்வந்தி மலர்ச் செடியருகில் ஒடுங்கி நின்றாள்.

'என்ன மோசமான நெஞ்சம் எனக்கு! இந்தப் பொல்லாத மனிதரைப் பார்த்துக் கொஞ்சங்கூடத் தன்மான உணர்ச்சியின்றிப் புளகிதமடைய முற்படுகிறதே அது? அன்றொரு நாள் அந்த ஆலம்பாக்கம் இல்லத்தில் ஆயிர மாயிரம் இன்பக் கனவுகளோடு காத்திருந்த என்னைத் திரும்பி யும் பார்க்காமல் அத்தனை வெறுப்பும் முறைப்புமாக அலட்சியப்படுத்திவிட்டுப் போனாரே, அதை இதற்குள் மறந்துவிட்டதா என்ன? அதுதான் மறந்து போனாலும், அன்று மாலை பாண்டிய மன்னரின் முன்னிலையில் எனது காதுபட என் அருமைத் தந்தையை இழித்துப் பேசியதுமல்லா மல் என்னையும் எரித்து விடுவதுபோல் வெறித்து நோக்கி முகத்தைத் திருப்பிக்கொண்டாரே, அதையாவது நினைத்துப் பார்க்க வேண்டாமா? இவ்வளவையும் மறந்துவிட்டு இந்த இருதயமில்லாத மனிதரை இப்போது இத்தனை ஆவலுடன் பார்த்து மகிழ எப்படித் துணிந்தன என் கண்கள்? கண்கள்தாம் தவறிழைத்தன என்றால், மானாபிமானமிக்க வீர சோழிய குலத்தின் இரத்தத்தில் ஊறி வளர்ந்த என் நெஞ்சம்கூடவா அந்தத் தவற்றைச் செய்வது?'

தன்னைத் தானே நொந்து கடிந்துகொள்கிறவள்போல் தன் நெஞ்சத்தை ஒரு கையால் அழுத்திப் பிடித்துக்கொண்டு வீம்பும் வெறுப்புமாக விறைத்து நின்றாள் இளங்கோப்பிச்சி.

“சோழ இளவரசியாருக்கு என்மேல் அளவற்ற கோபம் என்று நினைக்கிறேன்; அப்படித்தானே?” — இளநகைக் கலவையிட்ட குரலில் தயக்கத்துடன் கேட்டுக் கொண்டே அவளருகில் நெருங்கி வந்த கோவிந்தவர்மன் திடுக்கிற்று ஓரடி பின்னால் நகர்ந்தான்.

கோபக் கனல் பரக்க வெடுக்கென்று திரும்பி அவனை விழித்து நோக்கிய இளங்கோப்பிச்சி அங்கிருந்து சடாரெனப் பாய்ந்து போய் ஒரு மாதுளஞ் செடியண்டை மறைந்து நின்றாள்.

அவன் மனம் அதிர்ந்தது. வெட்கத்தால் தலை தானாகவே கவிழ்ந்தது. அங்கு நிற்கவும் அச்சப்படுகிறவன் போல் மெல்ல மெல்லப் பின்னோக்கி நகர்ந்தான். அவளை என்ன சொல்லிச் சமாதானப்படுத்துவது என்றே அவனுக்குத் தோன்றவில்லை. அவள் எவ்வளவுக்கெவ்வளவு கனிவும் குழைவும் கொண்டவளோ அவ்வளவுக்கவ்வளவு வீம்பும் பிடிவாதமும் நிறைந்தவள் என்பதை அவன் நன்கு அறிவான். ஆயினும் அவளுடைய கோப தாபங்களைப் போக்குவதற் கான வழிமுறைகளையும் அவன் அறிந்தே வைத்திருந்தான். ஒரு கேலிப் பேச்சு, ஒரு கொஞ்சும் மொழி, ஓர் அசட்டுச் சிரிப்பு, ஒரு பொய்யான அணைப்பு, ஒரு மென்மையான வருடல்—இவற்றைக்கொண்டு அவளுடைய கோபம், குமுறல், வெடுக்கு, சிடுக்கு, வீம்பு, பிடிவாதம் எல்லாவற்றையும் நொடிப் பொழுதில் போக்கிவிடுவான். ஆனால், இன்றோ? அந்த ஊடல்முறை உபாயங்களைக் கையாண்டு அவளைச் சமாதானப்படுத்தி விடலாம் என்ற துணிவு நம்பிக்கையும் துப்புரவாக அற்றுப்போன நிலையில், அவளிடம் நெருங்கவோ அவளை நேருக்கு நேர் பார்த்துப் பேசவோகூட அவன் அஞ்சிப் பின்னடைந்தான். புதிய ஊர், புதிய இடம்,

புதிய சூழல் என்பதால் இப்படித் தைரியமிழந்து நிற்கிறானா? அல்லது அவளிடம் அவன் நடந்துகொண்ட முறை முற்றும் தவறானது என்பதை உணர்ந்து, அந்தக் குற்ற உணர்ச்சியின் மனத் தாழ்ச்சியால் குமைந்து நிற்கிறானா? இவ்விரண்டு காரணங்களும் சரிதான் என்றாலும், இவற்றை விட இன்னொரு முக்கிய காரணமே அவனை அவளிடம் அத்தனை எளிதாக நெருங்க விடாமல் இழுத்துப் பிரித்து நிறுத்தியது.

ஆம்; அவளுடைய நெஞ்சில் இடம் பிடித்துத் தன் உயிர்க் காதலியாக வரித்துக்கொள்வதற்கு முன்னும், அந்தப் பேறு கிடைத்த பின்னும் அவளைப்பற்றி அவன் தெரிந்து வைத்திருந்ததெல்லாம்—அவள் ஓர் அற்புத அழகி, இனிய சுபாவம் கொண்டவள், பூவினும் மெல்லிய இதயம் படைத்த வள், இசைக் கலையில் வல்லவள், தமிழ் இலக்கியத்தில் தேர்ந்தவள், சைவ சமயத்தில் ஆழ்ந்த பக்தி உள்ளவள், எளிமையை விரும்புகிறவள், இரக்க நெஞ்சம் பெற்றவள், அநீதி கண்டு பொறுக்காதவள், அன்புக்காக எதையும் தியாகம் செய்பவள், துன்பங்களை அநுபவிக்கத் தயங்காதவள், உணர்ச்சி வயப்பட்டு எந்தக் காரியத்தையும் துணிந்து ஆற்ற முற்படுகிறவள் என்பவையேதாம். ஆனால், அன்று பாண்டியப் பேரரசர் நெடுமாறர் முன்னிலையில் ஒரு நீண்ட பேச்சுப் பேசினாளே, அதைக் கேட்ட பின்தான் அவள் அரசியல் துறையிலும் ஆழ்ந்த அறிவு பெற்றவளாயிருக்கிறாள் என்னும் உண்மை அவனுக்குப் புலனாயிற்று. அரசியல் பேரறிஞர்களான மாமன்னர் நெடுமாறரும், மதியமைச்சர் குலச்சிறையாரும்கூட அவளுடைய அந்த அறிவார்ந்த பேச்சைக் கேட்டுப் பிரமித்துவிட்டார்களே! அன்று முதல் அவளைப்பற்றி அவன் மனத்தில் ஒருவித அச்சமும் விநயமும் குடி புகுந்துகொண்டன. அதனால், இத்தனை காலமாக அவனுக்குச் சமநிலையிலே நின்று அவனுடன் எளிதாகவும் சகஜமாகவும் நெருங்கி உறவாடி வந்தவள் இப்போது

திடீரென்று அவனுக்கு எட்டாத உயரத்தில் போய் உட்கார்ந்து கொண்டு அவனைக் குனிந்து நோக்குவது போன்ற ஒரு விசித்திரத் தாழ்மை உணர்ச்சியைத் தனக்குள்ளே அவன் வளர்த்துக் கொள்ளலானான். அவளைப்பற்றிய எண்ணமே அவனுக்கு ஒரு பக்தியாகவும் புனிதக் கனவாகவும் தோன்ற ஆரம்பித்தது. அவன் ஒரு மாவீரன்; வீரத்தையே தெய்வமென வழிபடுபவன். அறிவின் வழி சென்று சிந்திக்க அவனால் இயலும் என்றாலும்—அதற்கான கல்வியும் பயிற்சியும் பெற்றவன்தான் என்றாலும்—அவனிடமிருந்த அபரிமிதமான வீர உணர்ச்சி அதை எப்போதும் பின்னுக்குத் தள்ளியே வைத்திருந்தது. அதனால், அறிவின்வழி செல்ல வேண்டிய சமயங்களில்கூட அவன் உணர்ச்சி வழி செல்லவே முற்படுவான். எனவேதான் அவளுடைய அந்த அறிவார்ந்த பேச்சைக் கேட்டு வியந்து மகிழ்வதற்குப் பதிலாக அதை வணங்கிப் போற்றிக்கொண்டே பின்னடையும் ஒரு விந்தை மனப்பான்மைக்குத் தன்னை உட்படுத்திக்கொண்டு விட்டான். இப்போதும் அத்தகைய உணர்ச்சி தலைதூக்கி விடவே, அவளிடம் சொல்ல வந்த சில பெரிய உண்மை களைச் சொல்லவும், அவளது கோபத்தைத் தணிவிக்கவும் துணிவின்றி மரம்போல் சமைந்து நின்றான்.

நேரம் நகர்ந்தது. மதுரை நகரில் உள்ள ஆலய மணி களெல்லாம் ஏனோ ஒரே சமயத்தில் ஒலிக்கத் தொடங்கின. அவற்றுடன் முரசொலியும் கொம்பொலியும் சேர்ந்து முழங்கின.

அந்த ஒலிகளைக் கேட்டுப் பரபரப்படைந்த கோவிந்த வர்மன் அங்குமிங்குமாகத் திரும்பிப் பார்த்தான். பிறகு தனக்குத் தானே தைரியத்தை வரவழைத்துக்கொள்கிற வனைப் போல் மெல்லக் கனைத்தவாறு இளங்கோப்பிச்சியை நோக்கித் தயங்கித் தயங்கிச் சென்றான்.

அவள் கொஞ்சமும் கோபம் தணியாதவளாய் முன் போலவே விறைப்புடன் நின்றுகொண்டிருந்தாள்.

"இளவரசி, என்னை மன்னித்துவிடு! தயைகூர்ந்து என்னை மன்னித்துவிடு, இளவரசி!" என்று தழுதழுத்த குரலில் கூறிக் கொண்டே அவள் பின்னால் போய் நின்ற கோவிந்தவர்மன் அவளது மூங்கில் போன்ற வழுவழுப்பான தோளை மெல்லப் பற்றினான்.

"என்னைத் தொடாதீர்கள்! தூர விலகி நில்லுங்கள்!"— சீற்றத்துடன் திமிறிச் சுழன்று திரும்பிய இளங்கோப்பிச்சி அவனைத் தீய்த்து விடுவதுபோல் விழித்துப் பார்த்தாள். "நான் ஏன் உங்களை மன்னிக்க வேண்டும்? நானோ ஒரு துரோகியின் மகள்! மனச்சாட்சியற்ற ஒரு வஞ்சக பாவியின் மகள்! இதையெல்லாம் மறந்துவிட்டு என்னிடம் வந்து மன்னிப்புக் கேட்கிறீர்களே! வேண்டாம்; உங்களின் அந்த முடிவிலேயே நீங்கள் இனி இருந்து கொள்ளலாம்! நான் சென்று வருகிறேன்!"

அனற் கதிர்களை வீசிக்கொண்டு நெளிந்தோடும் மின்னலைப்போல் அவள் அங்கிருந்து அரண்மனையை நோக்கி விரைந்தோடி மறைந்தாள்.

**க**ண்ணின் நீரெல்லாம் வடிந்து வற்றிய பின்னும் நெஞ்சத்தில் சுமந்த துயரம் நீர்த்துக் கரையாமல் மேலும் மேலும் வளர்ந்து உயிர்க் கூட்டை நெருக்கிப் பிழியவே அந்த வேதனையைத் தாளமாட்டாமல் புழுப்போல் நெளிந்து கொண்டிருந்த இளங்கோப்பிச்சி படுக்கையைவிட்டு எழுந்து உட்கார்ந்தாள்.

அங்கே ஒரு மூலையில் ஆதோத்ய வீணை ஒன்று தூசி படிந்து கிடப்பது அவள் பார்வையில் பட்டது. தன் மனப் பரப்பில் மூண்டெரியும் துன்பத் தணலை இசையின் பனிப் படலத்தாலாவது அணைக்க முயன்று பார்க்கலாமே என்று எண்ணியவளாய் அவ்வீணையை எடுத்து வந்து மடியில் வளர்த்திக்கொண்டு அதன் தந்திகளை மெல்ல உளர்ந்து ஏதோ ஒரு பண்ணின் ஜீவனை இதமாகத் தட்டி எழுப்பினாள்.

ஆதோத்ய வீணை அழுதது. அவளுக்குப் பதிலாக அதுவே இப்போது அழ ஆரம்பித்தது. அவளுடைய நெஞ்சத்தின் வாயாக அமைந்து, அவளைவிட இன்னும் அழகாக—அவலத்தின் சகல செளந்தர்யங்களோடும்—அது அழுது ஓலமிடத் தொடங்கியது.

இசைக்கு இன்பம் சேர்க்கும் சக்தி மட்டுமா உண்டு? எதிர்மறையான இயல்பும் அதனிடம் உண்டே!

அவள் மௌனமாக அழுதாள்; ஆதோத்ய வீணை வாய் விட்டு அழுதது. அவள் தன் மனத்துக்குள் அலறினாள்; அந்த வீணையோ ஒலி சேர்த்து அலறிக் கதறியது.

# 76

## அவள் கண்ட காட்சி?

'நான் ஏன் அப்படி ஆத்திரப்பட்டு நடந்துகொண்டேன்? அவருடைய பொன்னான மனத்தை என் பேச்சாலும் செயலாலும் புண்படுத்தி விட்டேனே! ஐயோ, அவர் என்ன பாடுபட்டாரோ! எப்படியெல்லாம் நெஞ்சம் நொந்து வெய்துயிர்த்தாரோ! வாய் திறந்து மனம் திறந்து மன்னிப்புக் கேட்டாரே! அப்போதாவது என் கல் மனம் இளகிக் கரைந்திருக்கக்கூடாதா? பண்பறியாப் பேதை போல் ஏதேதோ பேசி, என்னை நானே சிறுமைப்படுத்திக் கொண்டு விட்டேனே!'

அவள் வீணையின் தந்திகளை வேகமாக உளர்ந்தாள்.

'இல்லை; என் பேச்சும் செயலும் சரிதான். என்னைப் புரிந்து கொள்ளாமல் நடந்துகொண்ட அவருக்குப் புத்தி புகட்டியே ஆகவேண்டும். இல்லையானால் அவர் மீண்டும் மீண்டும் அதே தவற்றைச் செய்துகொண்டேதான் இருப்பார்.

வீணையின் நாதம் சோர்ந்து தாழ்ந்தது.

'என் புத்தி ஏன் இப்படிப் பேதலித்துப் போகிறது? என்னைப்பற்றியோ என் தந்தையைப்பற்றியோ அவர் தவறான தகவல்கள் கேட்டு அதனால் அப்படி வீம்பும் கோபமுமாக நடந்துகொண்டுவிட்டுப் பிறகு உண்மையை அறிந்து வருந்தியிருக்கலாம்! இல்லையானால் என்னிடம் மன்னிப்புக் கோர வந்திருப்பாரா? இதை எண்ணிப் பாராமல் அவரை மேலும் வருத்தப்பட வைத்து விட்டேனே! என்னை அவர் தனிமையில் சந்திக்க வந்ததற்கு ஏதேனும் காரணம் இருக்குமோ? அதிமுக்கியமான சேதி எதையாவது சொல்லத்

தான் அப்படித் தயங்கி நின்றாரோ? பாண்டிய மன்னரிடம் படையுதவி கோரிய அவருக்கு என்ன பதில் கிடைத்திருக்கும்? அன்று மாலை பாண்டிய நாட்டுப் படைகள் நெல்வேலியை நோக்கிப் பெயர்ந்து சென்றபின் என்னுடைய அத்தையன்பர் அவரிடம் தனிமையில் ஏதோ பேசுவதற்காக அழைத்துச் சென்றாரே, அந்த விஷயம் என்னவாயிருக்கும்? இந்த அரண் மனையின் கிழக்குக் கோட்டை வாயிலண்டை எங்கள் சோழியப் படையொன்று இன்னமும் தயார் நிலையில் நின்று கொண்டிருக்கிறதே, அப்படி அதை நிறுத்தி வைத்திருக்கக் காரணம் என்ன? யாரால், எதற்காக இங்கு அந்தப் படை அனுப்பி வைக்கப்பட்டது? உண்மையில் அது சோழியப் படைதானா? அல்லது ஏதேனும் யுத்த தந்திர முறையில் திரட்டிய பாண்டியப் படையா? என்னைக் காண வந்த அவரிடம் நான் நல்லவிதமாக நடந்துகொண்டிருந்தால் இத்தனை கேள்விகளுக்கும் விடை கிடைத்திருக்குமே! அத்துடன் அவர் என்மீது கொண்ட கோபத்துக்குக் காரணமும் தெரிந்திருக்குமே! இந்த விவரங்களையெல்லாம் அறிந்துகொள்ள முடியாதபடி எனக்கு நானே திரை போட்டுக் கொண்டு விட்டேனே! என்னுடைய உதாசீன நடத்தை யாலும் பேச்சாலும் மனம் உடைந்து மீண்டும் அவர் என்மேல் வெறுப்பையும் கோபத்தையும் வளர்த்துக்கொண்டு போய் விட்டால் என்ன செய்வது?'

ஆதோத்ய வீணையின்மேல் தலைசாய்த்துத் துவண்டு கிடந்த இளங்கோப்பிச்சி, அந்த அறைக்குள் யாரோ வரும் காலடி ஓசை கேட்டு நிமிர்ந்தாள்.

"என்ன குழந்தாய்! உன்னை எங்கெல்லாம் நாங்கள் தேடி அலைவது?'' என்று புன்முறுவலுடன் கேட்டுக் கொண்டே அத்தாணி மண்டபத்திலிருந்து அவசரமாக இறங்கி வந்தார் பாண்டிமாதேவி.

"சோழ இளவரசியின் வருகையை எதிர்பார்த்துப் பாண்டியப் பேரரசரும், அமைச்சர் குலச்சிறையாரும் பிறரும்

வெகு நேரமாய்க் காத்திருக்கிறார்கள்; நீயானால் இங்கே இந்த இருட்டறையில் புகுந்து இசை வேள்வி நடந்துகிறாயே!" என்று சிரித்துச் சொன்ன பாண்டிமாதேவி, அவளை அன்புடன் அணைத்து அழைத்துக்கொண்டு அரண்மனை முன்றிலை நோக்கி நடந்தார்.

அந்த அழகிய விசாலமான முன்றிலின் நடுவே போடப் பெற்றிருந்த பொன்னாசனத்தில் யுத்த சன்னத்துக்களுடன் கம்பீரமாக வீற்றிருந்தார் பாண்டியப் பேரரசரான நெடுமாறர். அவருக்கு இருபுறமும் அமைச்சர் குலச்சிறையார் உட்பட அரசாங்க உயர்தர அதிகாரிகள் பலரும் வரிசையாக நின்றிருந்தனர். அவர்கள் அனைவரும் யாரையோ ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல் தோன்றியது. முன்றிலுக்கு எதிரே போர்க்களப் பயணத்துக்கான கவச அணிகளுடன் செருக்கும் மிடுக்குமாக இரு கரிய நிறப் புரவிகள் நின்றிருந்தன. அவற்றுக்கு அப்பால்—கிழக்குக் கோட்டை வாயிலின் நேரெதிரே—மிகப் பெரிய சோழிய சேனா சமுத்திரம் கயல், நந்தி, புலி ஆகிய மூன்று தேசக் கொடிகளையும் ஏந்தி வீராவேசக் கோஷங்களிட்டு அலைமோதிக் கொண்டு நிற்பது தெரிந்தது.

இந்தக் காட்சிகளைக் கொண்டு ஒன்றும் புரியாமல் திகைப்படைந்து நின்ற இளங்கோப்பிச்சி, பாண்டிமாதேவி யின் அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு முன்றிலின் முகப்பு வாயிலை நோக்கி நடக்க முற்பட்டவள், அங்கே மற்றும் ஒரு காட்சியைப் பார்த்து வெலவெலத்து நின்றாள்.

# 77

# ஊடலில் ஒரு புதிர்

**வீ**ரக் கழல் ஒலிக்க, போர்க் கவசங்கள் பூட்டிய மார்பு விம்மிப் புடைக்க, செருக்களை ஏறிச் சிவந்த முகத்தினனாய் சர்வ கம்பீர மிடுக்குடன் அந்த மேன்மாடத்துப் படிகளில் இறங்கி வந்துகொண்டிருந்தான் பல்லவ இளவரசன் கோவிந்தவர்மன்!

முன்றிலையடுத்த உள்கூடத்தின் பாரிய தூண் ஒன்றில் ஒடுங்கிச் சாய்ந்து நின்ற இளங்கோப்பிச்சி, நிலைகொள்ளாமல் சுழலும் தன் விழிகளை மேலுயர்த்தி அவனைப் பீதியுடன் நோக்கினாள்.

சற்று நேரத்துக்கு முன் அரண்மனைச் சோலையில் பார்த்த அவனது தோற்றத்துக்கும் இப்போதைய கோலத்துக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்! கவலை தேங்கிய முகம், விநயமான நடை, குழைவு நிறைந்த பார்வை, கனிவு கலந்த புன்சிரிப்பு — என்றிவ்வாறான தோற்றத்துடன் அங்கே காணப்பட்ட அவன், இப்போது ஆவேச உணர்ச்சியில் முகிழ்த்த பயங்கர மகிழ்ச்சி நிலவும் முகமும், கடாக்களிற்றின் மதர்ப்பேறிய நடையும், அஞ்சா நெஞ்சங்கொண்ட அரிமாவின் பார்வையும், அலட்சிய மிடுக்கு நிறைந்த புன்னகையும், பேராண்மை செருமிய பாவனைகளுமாக விளங்கினான்!

இளங்கோப்பிச்சியின் மனம் மிரண்டு நடுங்கியது. பிரமித்த நிலையில் அவனைப் பார்த்துக்கொண்டே பின்னால் நகர்ந்தாள் அவள்.

அரண்மனைச் சோலையில் அவளைச் சந்தித்தபோது அவளருகில் நெருங்கவோ, நேருக்கு நேர் பார்க்கவோ அஞ்சி ஒதுங்கி நின்ற அவன், இப்போது சிறிதும் தயக்கமின்றிச் சிம்ம நடைபோட்டு வந்து, "சோழ இளவரசிக்கு என்மேல் ஏற்பட்ட கோபமும் இன்னமும் தணியவில்லையா?" என்று குறும்பாகக் கண் சிமிட்டிக் கேட்டவாறு அவளது வாழைக் குருத்து போன்ற கரத்தை உறுதியாகப் பற்றினான்.

இளங்கோப்பிச்சியின் உடல் சில்லிட்டது. பார்வையை நிமிர்த்தி அவனைப் பார்க்கவும் சக்தியிழந்த வளாய் நிலவுத் தாமரையெனத் தலைகுனிந்து நின்றாள் அவள்.

"என் இதயக் கனியாளின் பூ மனத்தை நோக வைத்த குற்றத்துக்காக இனி நான் மன்னிப்புக் கோரப் போவதில்லை; அதற்கு அவகாசமும் இல்லை. ஆனால் அப்படியொரு தவறு இழைக்க நேர்ந்த காரணத்தை மட்டும் இப்போது சுருக்கமாகச் சொல்லிவிடுகிறேன்; பழையாறைச் சோழர் தம் மகளைச் சளுக்கிய விக்கிரமாதித்தனின் மைந்தனுக்கு மணம் செய்து தரப்போவதாகப் பெரும் பிடுகு முத்தரையர் சொன்னதைக் கேட்டுத்தான் அன்று அப்படி மனம் பேதலித்துப் பித்தனைப் போல் நடந்துகொண்டுவிட்டேன். என்னுடைய நிலையில் வேறு யார் இருந்தாலும் அப்படித்தான் நடந்துகொண்டிருக்க முடியும் என்றும் நினைக்கிறேன்." —கனிந்த குரலில் இவ்வாறு கூறி மெல்லச் சிரித்தான் கோவிந்தவர்மன்.

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டுத் திடுக்குற்றுத் தலை தூக்கினாள். "என்ன சொன்னீர்கள், இளவரசே? என் தந்தை யார் அப்படியொரு முடிவு செய்திருப்பது உண்மைதானா?"

'ஆம்' என்று இலேசாகத் தலையசைத்தான் கோவிந்த வர்மன்.

"அந்த முடிவை முத்தரையர் எவ்வாறு அறிந்தார்?" என்று அவசரமாக வினவினாள் இளங்கோப்பிச்சி.

"பழையாறைக்குப் போனபோது பழையாறைச் சோழரின் வாயிலாகவே அதை அவர் அறிந்தார்!"

"அப்படியானால் என் அநுமானம் சரி என்றே ஆகிறது..."

"நீ என்ன அநுமானித்தாய் இளவரசி?"

"என் தந்தையாரின் அந்த முடிவைக் கேள்விப்பட்டுத் தான் அன்றைய தினம் நீங்கள் ஆலம்பாக்கம் இளங்காரிக் குடையானின் இல்லத்துக்கு எதிரே நின்றிருந்த என்னைத் திரும்பியும் பார்க்காமல் அலட்சியப் படுத்திவிட்டுச் சென்றீர்கள் என்று எண்ணினேன். அது சரியாகவே ஆகிவிட்டது."

"உனக்கு அவ்விஷயம் தெரியுமா? உன் தந்தையார் அந்த முடிவை உன்னிடமும் வந்து சொல்லிவிட்டாரா?"

"இல்லை; பழையாறை அரண்மனையைவிட்டு வெளியேறி ஆலம்பாக்கம் இல்லத்தில் வந்து தங்கின நாள்முதல் இன்றுவரை என் தந்தையாரை நான் இன்னும் பார்க்கவே இல்லை."

"அப்படியானால் உனக்கு அந்தச் சேதி எப்படி, யார் வாயிலாகத் தெரிந்தது?"

"நீங்கள் யார் மூலமாகத் தெரிந்துகொண்டீர்களோ அவரே எனக்கும் அதை தெரிவித்திருக்கலாம் அல்லவா?"

"முத்தரையரைச் சொல்கிறாயா, இளவரசி?"

"அவராகத்தான் இருக்கும் என்று வைத்துக்கொள்ளுங் களேன்!"

"ஏன் சந்தேகத்துடன் சொல்கிறாய்?"

"அவர் அவ்விஷயத்தை என்னிடம் நேரிடையாகத் தெரிவிக்கவில்லை."

"வேறெப்படித் தெரிவித்தார்?"

"ஆலம்பாக்கம் சாலையோரத்தில் நின்ற – எல்லையற்ற தாபத்துடன் இதயத்தைக் கண்ணிலே ஏந்திக்கொண்டு உங்களை எதிர்நோக்கிக் காத்திருந்த என்னைத் திரும்பியும் பார்க்காமல் போனீர்களே, அன்றைய தினம் இருள் சூழ்ந்த

நேரத்தில் யாரோ ஒரு மனிதர் வந்து, நான் இருந்த அறைக்குள் ஓர் ஓலையைப் போட்டுவிட்டு ஓடி மறைந்தார். அப்படி ஓடிய மனிதர் யார் என்று அறிய முடியாத நிலையிலிருந்த நான் அவ்வோலையை மட்டும் படித்துப் பார்த்தேன். ஊர் பேர் இல்லாமல் எழுதப்பெற்றிருந்த அந்த ஓலையில், உங்கள் மனத்தைக் கலக்கிய அதே சேதி எனக்கும் தெரிவிக்கப் பட்டிருந்தது.”

“அன்று நீங்கள் எங்கே புறப்பட்டுப் போகிறீர்கள் என்ற விவரம் எனக்குத் தெரியாது. இந்த அரண்மனைக்கு வந்த பிறகுதான் உங்களை எதிர்பாராத விதமாகச் சந்தித்தேன்.”

இந்த விவரத்தைக் கேட்டு வியப்படைந்து நின்ற கோவிந்தவர்மன், “அது சரி, இளவரசி! அன்று நான் மதுரைக்குத்தான் புறப்பட்டுப் போகிறேன் என்பதை நீ எப்படி அறிந்தாய்? அதை அறிந்துதானே என்னைப் பின் தொடர்ந்து வந்து சேர்ந்தாய்?” என்று வினவினான்.

“அப்படியானால் நீ மதுரைக்கு வரக் காரணம்?”

“அநாமதேயமாக எனக்குக் கிடைத்த அவ்வோலையில் மேலும் சில முக்கியமான சேதிகள் இருந்தன. சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் என் தந்தை கூட்டுச் சேர்ந்திருக்கிறார் என்றும், அந்தக் கூட்டுறவை வலுப்படுத்தவே அவனுடைய மைந்தனுக்கு என்னை மணம் முடித்துத் தர அவர் இசைந்திருக்கிறார் என்றும் வரையப்பெற்றிருந்ததோடு, சளுக்கிய விக்கிரமாதித்தன் இன்னும் ஓரிரு வாரத்துக்குள் பாண்டிய நாட்டைத் திடீரென்று படைகொண்டு தாக்கிக் கைப்பற்றிக்கொள்ளத் திட்டமிட்டிருக்கிறான் என்னும் சேதியும் அதில் குறிக்கப்பெற்றிருந்தது. அந்தப் பயங்கரச் சேதியைப் பாண்டிய மன்னருக்கு உடனடியாகத் தெரிவிக்க வேண்டியது என் கடமை என்று எண்ணினேன். இதை அநந்தமதியம்மையிடமோ இளங்காரிக்குடையானிடமோ சொன்னால் அவர்கள் அநாவசியமாகப் பீதியடைந்து நான் மதுரைக்குப் போவதையும் தடுத்துவிடுவார்கள் என்று அஞ்சி

அவர்களிடமும் சொல்லிக் கொள்ளாமல் தனியாகவே புறப்பட்டு வந்துவிட்டேன்."

திகைத்து நின்ற கோவிந்தவர்மன் திடுமெனத் தலை நிமிர்ந்து கேட்டான்: " 'சளுக்கியர்கள் பாண்டி நாட்டின் மேல் படையெடுக்கவிருக்கும் சேதி உனக்கு எப்படித் தெரிந்தது' என்று பாண்டிய மன்னர் கேட்டபோது இந்த ஓலையைப்பற்றி நீ பிரஸ்தாபிக்கவில்லையே, ஏன்? மதுரைக்கு வரும் வழியில் அவ்விவரத்தை அறிந்ததாக அல்லவா அவரிடம் சொன்னாய்?"

"ஆம், இளவரசே! படையுதவி கோரி நீங்கள் எடுத்து வந்த ஓலையையே அவர் பொய் ஓலை என்று நிராகரித்துப் பேசிய சமயம், நானும் ஓர் அநாமதேய ஓலை மூலம் சளுக்கி யரின் படையெடுப்புத் திட்டத்தை அறிந்ததாகச் சொன்னால் அதை உண்மை என்று நம்புவாரா? எனவேதான் அந்த விஷயத்தை அவரிடம் சொல்லாமலே மறைத்து விட்டேன்."

வியப்பு மேலிட்டவனாய் அவளைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கிய கோவிந்தவர்மன் தயங்கிய குரலில், "இளவரசி! நீ நினைப்பதுபோல் இந்த விவரங்களை அவ்வோலையின் மூலம் உனக்கு அறிவித்தவர் முத்தரையராக இருக்கமுடியாது. வேறு யாரோ அந்தக் காரியத்தைச் செய்திருக்க வேண்டும்..." என்று இழுத்தான்.

இளங்கோப்பிச்சி இதை ஒத்துக்கொள்ள மறுப்பவள் மாதிரி தலையை வேகமாக ஆட்டினாள். "என் தந்தையாரின் அந்தத் தகாத போக்கைப்பற்றி முதலில் அறிந்தவர் முத்தரையர்தாமே? ஆகவே, அவர்தாம் அவ்வோலையின் மூலம் என்னை எச்சரித்திருப்பார்."

"அப்படி இருக்க முடியாது, இளவரசி! ஏனென்றால், பழையாறைச் சோழரின் முடிவுகளை மட்டும்தான் முத்தரையர் அறிவாரே தவிர சளுக்கிய விக்கிரமாதித்தன் பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கப் போகிறான் என்னும் விவரம் அவருக்குத் தெரியவே தெரியாது. அவரிடம்

நான் விடைபெற்றுக்கொண்டு மதுரைக்குப் புறப்பட்ட அந்த விநாடி வரையில்கூட அவருக்கு அவ்விஷயம் தெரியாதென்று நிச்சயமாகச் சொல்வேன். அப்படித் தெரிந்திருந்தால் பாண்டிய மன்னரிடம் படையுதவி பெற்றுவர என்னை இங்கே அனுப்பியிருக்கமாட்டார். எனவேதான் உனக்கு அவ் விவரங்களைத் தெரிவித்து ஓலை எழுதியவர் வேறு யாரோ ஒரு மூன்றாவது மனிதராக இருக்கவேண்டும் என்கிறேன்."

குழப்பமும் திகிலுமாகத் தலைகுனிந்த இளங் கோப்பிச்சி சிறிது நேர சிந்தனைக்குப் பின், "சரி; இளவரசரின் ஊகப்படியே அந்த விஷயம் இருக்கட்டும். என் திருமணத்தைப் பற்றி என் தந்தையார் செய்த முடிவைக் கேட்டு என்னையே வெறுக்கத் துணிந்த நீங்கள், இங்கு வந்த பிறகு அந்த வெறுப்பை அத்தனை சீக்கிரம் மாற்றிக்கொண்டு விட்டீர்களே, அது ஏன்?" என்று துக்கம் பீறிட்ட குரலில் குமுறிக் கேட்டாள்.

கோவிந்தவர்மன் கலகலவெனச் சிரித்தான். "பழை யாறைச் சோழரின் அந்தப் பயங்கர முடிவை முத்தரையரின் வாயிலாகக் கேட்டபோது உன்னை மட்டுமல்ல இளவரசி, இந்த உலகத்தையே நான் வெறுத்துச் சபித்தது உண்மைதான்! ஆனால், இங்கு வந்து அவருடைய அதே முடிவைப் பாண்டிய மன்னரின் வாயிலாகக் கேட்டதும் அந்த எனது வெறுப்பு, வேதனைக் குமுறல் எல்லாம் பஞ்சாய்ப் பறந்தோடி, என் அன்புக் கோமகள் இளங்கோப்பிச்சியை முன்னைவிடப் பன்மடங்கு ஆவேசத்துடன் நேசித்துப் பூசை செய்ய வேண்டுமென்ற துடிப்புக்கு நான் உள்ளாகிப் போனேன் என்று கூறி மீண்டும் நகைத்தான் அவன்.

புதிர் போன்ற இந்தப் பதிலைப் புரிந்துகொள்ள முடியாமல் திகைப்படைந்து நின்றாள் இளங்கோப்பிச்சி.

# 78

# நெல்வேலி நோக்கி...!

இரண்டாம் முறையாக முரசு முழங்கியது. கொம்பொலியும் எழுந்து விண்ணைச் சாடியது.

அந்த ஒலிகளைக் கேட்டு விம்மிப் புடைத்து நிமிர்ந்த கோவிந்தவர்மன் திமிறலிடும் காளைபோல் சடாரென்று திரும்பி, "நேரம் நெருங்கிவிட்டது! நெடுமாறர் காத்துக் கொண்டிருப்பார்! நான் சென்றுவர விடை கொடு, கண்ணே!" என்று அடித்தொண்டையில் கரகரத்தவாறு அவளெதிரே வந்து விறைத்து நின்றான்.

ஆண்மை பொங்கிக் குமுறும் அவனது அதிகாயபாகு வான தோற்றத்தைக் கண்டு மெய்சிலிர்த்து மயங்கி நின்ற இளங்கோப்பிச்சி, "தாங்கள் இப்போது...?" என்று தயங்கித் தடுமாறிய குரலில் இழுத்தாள்.

"ஆணவத் திமிர்கொண்ட சளுக்கியப் படைகளை நெல்வேலிப் போர்க்களத்தில் தூக்கியெறிந்து பந்தாடப் புறப் பட்டுவிட்டேன், கண்ணே!" — பயங்கர உறுமலுடன் சிரித்துச் சொன்னான் கோவிந்தவர்மன்.

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு வியப்பின் விளிம்பைத் தொட்டவளாய்த் தன் நீள் விழிகளை அகல மலர்த்தினாள். "அப்படியா!...பாண்டியப் பேரரசர் தாங்கள் கோரிய படையுதவியைத் தங்களுக்கு அளித்துவிட்டாரா இளவரசே?"

கோவிந்தவர்மனின் கண்டத்திலிருந்து ஒரு குறும்புச் சிரிப்பு உருண்டது. "நான் இங்கு வருவதற்கு முன்பே என்

தலைமையை எதிர்பார்த்து இந்த அரண்மனைக் கோட்டையின் கிழக்கு வாயிலில் மாபெரும் படையொன்று காத்து நிற்கிறதே, அதை நீ பார்க்கவில்லையா?"

இளங்கோப்பிச்சி குழம்பித் தவித்தாள். அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை.

"கவலைப்படாதே, இளவரசி! உனது மனத்தில் எழும் கேள்விகளுக்கெல்லாம் உன் அத்தையார் பாண்டிமாதேவி பதிலிறுப்பார். அவர் மூலம் நீ எல்லா விவரங்களையும் அறிந்து கொள்ளலாம்." —இப்படிக் கூறிய கோவிந்தவர்மன் குலுங்கிச் சிரித்தான்.

"அன்று நீங்கள் என்னை அலட்சியப்படுத்தி என் இதயத்தில் நெருப்பை அள்ளிக் கொட்டியதுபோல் இனி ஒரு நாளும் செய்யமாட்டீர்கள் என்று நான் உறுதியாக நம்பலாம் அல்லவா?" என்று துயரம் முட்டிய குரலில் விம்மிக் கொண்டு கேட்டாள் அவள்.

கோவிந்தவர்மனின் முகம் வாடியது. "மன்னித்துவிடு, கண்ணே! இந்த ஜன்மத்தில் மட்டுமல்ல, இனி வரும் ஜன்மங்களிலும் உன்னையே காதலியாக அடைய வேண்டுமெனப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கும் நான் அப்படி ஒரு போதும் நடந்துகொள்ள மாட்டேன்."

பரபரப்புடன் கண்களைத் துடைத்துக்கொண்டு ஓர் அழகுப் புன்னகையுடன் நிமிர்ந்த இளங்கோப்பிச்சி கணீரென்ற குரலில், "பார்புகழ் கொண்ட பல்லவ குல மாணிக்கமே! வீரத்தின் மகனாய்ச் சென்று வெற்றியின் மூத்த தலைமகனாய்த் திரும்பி வாருங்கள்!" என்று கூறிக் கொண்டே தன் நிலாப்பிறை நுதலில் வேர்வையால் நீர்த்துத் தளதளத்திருந்த திலகச் சாந்தைத் தொட்டு அவனது விசாலமான நெற்றியில் வீர திலகமிட்டாள்.

கோவிந்தவர்மன் அவளை அப்படியே இழுத்து அணைத்துத் தன் விரிந்த மார்பில் ஐக்கியப்படுத்திக் கொண்டு ஒரு கணம் மெய்ம்மறந்திருந்தான். மறுகணமே, அவளைட்

பளீரென விலக்கி ஒதுக்கிவிட்டு அரண்மனை முன்றிலை நோக்கிப் பாய்ந்தோடினான்.

**க**ணிகன் குறித்த சுப நேரம் நெருங்கியது. அந்த நேரம் பார்த்து அங்கு வந்து சேர்ந்த 'அறிவர்' என்னும் சித்தர் ஒருவர், "பழம்பெரும் பாண்டி நாட்டைச் சூழ வந்த சளுக்கியக் காரிருள் திருவருளின் துணையால் அகலுமாக! சிவநேசச் செல்வராம் நின்றசீர் நெடுமாறர் நெல்வேலிச் செருவென்று வெற்றி வாகை சூடி வருவாராக!" என்று வாழ்த்துக் கூறினார்.

கரம் குவித்துத் தலைவணங்கி நின்றிருந்த பாண்டியப் பேரரசர் நெடுமாறர் வில்லெனத் துள்ளி நிமிர்ந்தார். ஆலவாய் அழகிக் கோயிலின் அர்ச்சகர் கொண்டு வந்து வழங்கிய திரு நீற்றுப் பிரசாதத்தைப் பயபக்தியுடன் பெற்றுத் தம் நெற்றியி லும் மேனியிலுமாகத் தீற்றிக் கொண்டு திரும்பிய அவரது பார்வை அந்த முன்றிலின் உள்வாயிலை நோக்கிச் சென்றது.

குங்கும மங்கல மஞ்சள் நீர்த்திட்டுடன் தம் மணாளனை நோக்கி வந்தார் பாண்டிமாதேவி மங்கையர்க் கரசி. அவர் கண்கள் இலேசாகக் கலங்கியிருந்தன.

"தேவி, உன் கலக்கத்துக்கும் கவலைக்கும் காரணம் அறிவேன்! எதிர்பாராமல் நமக்கு ஏற்பட்டுவிட்ட இந்த நெருக்கடி நிலைமையால் திருமருத முன்துறை சிவன் கோயிலில் எடுப்பித்து வந்த திருக்கைக்கோட்டித் திருப்பணி பாதியில் நின்றுவிட்டதே என்று வருத்தப்படுகிறாய்; வருந்தாதே, தேவி! எல்லாம் திருவருளின் சித்தப்படிதான் நடக்கும். நான் இப்போது ஏற்று நடத்தப் போகும் யுத்தமும் இறைவனுக்குப் பிடித்தமான ஒரு மாபெரும் திருப்பணிதான். அதர்மத்தை அழித்து அறத்தை நிலை நாட்டுவது எல்லாவிதத் திருப்பணிகளிலும் தலையாயது அல்லவா? ஆகவே, நிறை மனத்தோடு நீ எனக்கு விடை கொடுக்க வேண்டுகிறேன்." — இளநகை மேவிய கம்பீரக் குரலில் கூறித் தம் தேவியாரின் முகத்தைத் தரிசித்தார் பாண்டியப் பேரரசர்.

"என் வணக்கத்துக்குரிய இறைவா! வீரமுடன் சென்று வெற்றியுடன் திரும்பி வருவீராக!" —மெல்லிய தொனியில் இவ்வாறு கூறிக்கொண்டே தம் மணாளரை மும்முறை வலம் வந்து வணங்கி, மங்கல ஆரத்தி எடுத்து, அவரது வெண்ணீறணிந்த நெற்றியில் வீர திலகம் இட்டார் பாண்டிமா தேவியார்.

திரிபுரமெரித்த விரிசடைச் சிவனே அங்கு எழுந்தருளி வந்தாற்போல் அத்தனை வீறார்ந்த கோலத்தில் விளங்கிய மாமன்னர் நெடுமாறர், தங்கச் சிலையெனத் தலைகுனிந்து நின்ற இளங்கோப்பிச்சியின் எதிரில் போய் நின்றார். உறையிட்ட நீண்ட வாள் ஒன்றைப் பொற்தாம்பாளத்தில் வைத்து ஏந்திக்கொண்டு அங்கு விரைந்து வந்தார் அமைச்சர் குலச்சிறையார்.

"சோழிய குல வீரத்திருமகளே! வெற்றிகளை மட்டுமே சந்தித்துப் பழக்கப்பட்ட இந்த வீர வைர வாளை உன்னுடைய வீறார்ந்த கரங்களால் வழங்கிப் பெற வேண்டுமென விரும்பு கிறேன்!" என்று கூறி அவள்முன் தம் இரு கைகளையும் நீட்டினார் மன்னர்.

இளங்கோப்பிச்சியின் முகம் பெருமிதப் பாங்குடன் பொலிவு பெற்று மலர்ந்தது. அவளது பூவுடல் சில்லெனச் சிலிர்த்துப் பூரித்தது. "பாண்டியர் அடையப் போகும் வெற்றி எங்கள் பல்லவநாட்டின் விடிவுக்கு வழிகோலவேணுமாய் எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்!" என்று நடுங்கும் குரலில் கூறியவாறு பொறதட்டில் பளிச்சிட்டுக் கொண்டிருந்த வைர வாளை எடுத்து நெடுமாறரின் கரங்களில் நிமிர்த்திக் கொடுத்தாள்.

மூன்றாம் முறையாக ஆலய மணி ஓங்கி ஒலித்தது.

மூன்றிலின் இருபுறமும் கும்பலாக நின்ற ஐம்பெருங் குழுவையும், எண்பேராயத்தையும், அரசாங்க உயர்தர அதிகாரிகளையும் பார்த்து அமைதியாகச் சொன்னார் அமைச்சர் குலச்சிறையார்; "மதிப்புக்குரியவர்களே! பல்லவ

நாட்டைக் கைப்பற்றிச் சுவை கண்ட சளுக்கியர்கள் இப்போது நம் பாண்டி நாட்டையும் பதம் பார்க்கத் துணிந்து படையெடுத்து விட்டார்கள். இன்று காலை விடியற்சாமப் போதில் பாண்டி நாட்டின் வட எல்லையான நெல்வேலியில் சளுக்கியருக்கும் நமக்கும் போர் மூண்டுவிட்டது. சளுக்கியப் படைத் தளபதி வில்வேலி என்பவன் என்ன காரணத்தினாலோ நெல்வேலிப் போர்முனைக்கு வராததால், சளுக்கியமன்னன் விக்கிரமாதித்தனே நேரிடையாக வந்து போரில் இறங்கிவிட்டானாம். எனவேதான் நம் மாவீர மாமன்னர் அவனுடன் நேரில் பொருதுகொள்ள இப்போது போர் முனைக்குப் புறப்படுகிறார். நெல்வேலியை மையப் படுத்தி மேற்கிலிருந்து நம் இளவரசர் கோச்சடையாரும், தெற்கிலிருந்து பாண்டிய மன்னரும், கிழக்கிலிருந்து பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரும் சளுக்கியப் படைகளின் மேல் மும்முனைத் தாக்குதல் நடத்தப் போகிறார்கள். இந்த நிலவரங் களை மனத்தில் கொண்டு நீங்கள் நம் உள்நாட்டு ராஜீய விவகாரங்களைத் திறம்பட நடத்திச் செல்லவேண்டுமென்று மாமன்னரவர்களின் ஆணைப்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்."

கூடிநின்ற குழுவினர் ஒரே குரலில் கோஷமிட்டனர்: "பாண்டியப் பேரரசர் வாழ்க!... வெற்றி நமதே!"

முரசங்கள் முழங்கின. சங்கமும் கொம்பும் ஒருங்கு சேர்ந்து ஆர்த்தன. கிழக்குக் கோட்டை வாயிலில் கொந்த ளித்து நின்ற சோழியப் படைகள் புழுதிக் கூடாரமிட்டுப் புறப்பட்டன. •

அறுபத்தைந்து வயதைக் கடந்த நிலையிலும் வாலிபத் தின் பரிபூரண வலிமைச் செருக்கோடு விம்மிப் புடைத்து நின்ற நெடுமாறர் தம் அருகில் மதமேறிய களிறுபோல் விறைத்து நின்றுகொண்டிருந்த பல்லவ இளவரசன் கோவிந்த வர்மனின் திண்ணிய தோள்மீது கைபோட்டு அழைத்தவாறு

அரண்மனைவாயிலில் நின்றிருந்த புரவிகளை நோக்கி மிடுக்கு நடையுடன் நடந்தார்.

மறுகணம், அவ்விருவரையும் தம் முதுகில் ஏற்றிக் கொண்ட புரவிகள் நாற்றிசையும் நடுநடுங்க கனைத்துக் கொண்டே மின்னலெனப் பாய்ந்து சென்று மறைந்தன.

இரவின் இரண்டாம் சாமம்.

பூஜையை முடித்துக்கொண்டு அப்போதுதான் அத்தாணி மண்டபத்துக்கு வந்து சேர்ந்த பாண்டிமாதேவி அங்கு தனிமையில் இளங்கோப்பிச்சி இருக்கக் கண்டு வியப்படைந்தார்.

"குழந்தாய்! நீ இன்னும் உறங்கச் செல்லவில்லையா!"

சிந்தனையிலிருந்து விடுபட்டவளாய் எழுந்து நின்ற இளங்கோப்பிச்சி அவரைப் புன்னகையுடன் நிமிர்ந்து நோக்கினாள். "அத்தையாரின் வருகையை எதிர்பார்த்துத் தான் இங்கு காத்திருக்கிறேன்..."

"எனக்காகக் காத்திருக்கிறாயா? என்ன விஷயம், குழந்தாய்?"

"நாளை விடியற்போதில் நான் ஆலம்பாக்கத்துக்குப் புறப்பட அத்தையார் அநுமதி தரவேண்டும்."

"என்ன! பல்லவ நாட்டுக்குப் போகிறாயா? நெல்வேலிப் போர் முடியும்வரை நீ இங்கேயே தங்கியிருப்பாய் என்றல்லவா நான் எண்ணிக்கொண்டிருக்கிறேன்?"

"இல்லை, அத்தை! நான் போய்த்தான் ஆகவேண்டும்."

"உனது விருப்பத்துக்குத் தடைசொல்வதாக நினைக் காதே, குழந்தாய்! உன் அருமைத் தந்தையார் எத்தகைய சூழ் நிலையில் என்னென்ன காரியங்களைச் செய்து வருகிறார் என்பது பற்றிச் சற்றுமுன் உன்னிடம் விளக்கிக் கூறிச் சென்றேன்; இந்நிலையில் நீ பல்லவ நாட்டுக்கோ, பழையாறைக்கோ போவது அத்தனை உசிதமாக எனக்குப் படவில்லையே!"

"அத்தையார் மன்னிக்க வேண்டும். நான் அங்கு போக வேண்டிய ஒரு கட்டாயம் எனக்கு இருக்கிறது."

"அந்தக் கட்டாய நிலை என்ன என்பதை நான் அறியலாமா, இளவரசி?"

"பல்லவபுரம் அரண்மனையில் பெரியதொரு காரியத்தை நான் சாதிக்க வேண்டியிருக்கிறது. அதை எப்படியும் சாதித்தே ஆகவேண்டுமென எனக்கு நானே சபதமும் ஏற்றிருக்கிறேன். எனவேதான்..."

நீண்ட நேரச் சிந்தனைக்குப் பின் பெருமூச்சுவிட்டு நிமிர்ந்த பாண்டிமாதேவி, "சரி, குழந்தாய்! இதற்குமேல் உனக்கு நான் ஏதும் சொல்ல இயலாது. உன் விருப்பப்படியே நாளைக் காலை நீ பல்லவ நாட்டுக்குப் பயணமாகலாம்" என்று உள்ளார்ந்த கவலையுடன் முணுமுணுத்தார்.

# 79

## ‘கவலை வேண்டாம்!’

**ப**ழையாறைச் சோழரா அவர்? நம்பவே முடிய வில்லையே! அவருடைய பழைய கம்பீரக் களைபொருந்திய தோற்றத்துக்கும் இப்போதைய நிலைக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்! இளைத்துக் கறுத்துக் குரூரமே வடிவாக மாறிப் போய்விட்டிருக்கிறாரே!...

அன்று எரித்த வெயிலையெல்லாம் தம் தலையில் தாங்கிக்கொண்டு எங்கெங்கோ சுற்றியலைந்தவர்போல் கருகிக் காய்ந்து வந்துகொண்டிருந்த அவர், பெருவள நல்லூர் சிற்றாற்றங் கரையோரமாகத் தமது இல்லத்தை நோக்கித் தயங்கித் தயங்கி நடந்துகொண்டிருந்த பரவாதி மல்லரைப் பார்த்து வியப்புற்றவராய் நின்று, ஒரு கணயோசனைக்குப் பின் அவரைப் பின்தொடர்ந்து விரைந்து போய், “கலைஞர் அவர்கள் இன்னமும் இந்த ஊரைவிட்டுப் புறப்பட வில்லையா? நேற்றுக் காலையே காஞ்சிக்கு அண்மையில் உள்ள திருப்பருத்திக் குன்றத்துக்குப் பயணமாகப் போவதாகச் சொன்னீர்களே!” என்று வறண்ட குரலில் மெல்லச் சிரித்துக் கேட்டுக்கொண்டே அவரெதிரில் சென்று நின்றார்.

கவலையே உருவாகத் தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டிருந்த பரவாதிமல்லர் திடுமெனத் தலைதூக்கி, “ஓ, நீங்களா?...வாருங்கள் நண்பரே!” என்றார் கலவரம் கலந்த புன்னகையுடன்.

அந்த ஆற்றங்கரையோரம் நீரோட்டத்தால் வேர் பறிந்து சாய்ந்து நின்ற ஒரு வெண்ணாவல் மரத்தடியில் சோர்வுடன்

பெருமூச்சு விட்டு அமர்ந்த பழையாறைச் சோழர் தாம் கேட்ட கேள்விக்குப் பதிலை எதிர்பார்ப்பவர் போல் பரவாதிமல்லரின் முகத்தை ஏறிட்டு நோக்கினார்.

“நேற்று விடியற்சாமப் போதில் நாம் இருவரும் நமது நிலவறையில் தங்கிப் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் புறப்பட்ட போது, நேரே திருப்பருத்திக் குன்றத்துக்குப் பயணமாகிவிட வேண்டும் என்றுதான் திட்டமிட்டேன். தங்களிடமும் அவ்வாறே சொல்லி விடைபெற்றுச் சென்றேன். ஆனால் அந்தத் திட்டப்படி செல்ல முடியாதவாறு ஒரு சிறு தடங்கல் ஏற்பட்டுவிட்டது...” என்று தணிந்த குரலில் கூறிக் கொண்டே அவரருகில் வந்து அமர்ந்தார் பரவாதிமல்லர்.

இதைக் கேட்டுக் கலக்கமடைந்தவர்போல் புருவங்களை நெரித்துக்கொண்டு நிமிர்த்த பழையாறைச் சோழர், “தடங்கலா? என்ன தடங்கல்?... ஓ, அந்த நிலவறைக் கதவை நாம் சாத்தாமல் மறந்து வந்துவிட்டதை நடுவழியில் நினைத்துக் கொண்டு திரும்பிவிட்டீர்களா? உங்களை அனுப்பியபின் எனக்கும் அந்த நினைவு வரவே, ஓடிப்போய் அவ்வறைக் கதவை நன்றாக இழுத்துத் தாழிட்டுவிட்டு அப்புறம்தான் வெளியே புறப்பட்டேன்!” என்றார் இளநகையுடன்.

“இல்லை, அன்பரே! அதற்காக நான் வரவில்லை!” என்று தயக்கத்துடன் சொன்ன பரவாதிமல்லர் ஒரு விநாடி மௌனமாயிருந்துவிட்டுப் பின் மெல்லத் தொண்டையைக் கனைத்துக்கொண்டு கேட்டார்: “பெருவளநல்லூருக்கும் ஆலம்பாக்கத்துக்குமிடையே ஆதுர சாலையொன்று இருக் கிறதே, நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?”

“திரமிள சமண சங்கத்தார் நடத்தும் ஆதுர சாலை தானே? அந்தச் சங்கத்தின் தலைவர் சமந்தபத்திரரைப் பற்றியும் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன்.”

“சளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனுக்கு அந்தச் சமண முனிவரும் அவரது சகாக்களும் ஆதரவு தரவேண்டும்

என்று வில்வேலி கேட்டுக்கொண்டதற்கு அவர் ஒப்புதல் அளிக்கவில்லை என்னும் விவரத்தை மட்டுமே நீங்கள் அறிந் திருப்பீர்கள், இல்லையா?"

"ஆமாம். அதற்கு மேலும் விவரம் உள்ளதா?"

"இருக்கிறது, நண்பரே! கங்க நாட்டுச் சிரவணபெள் குளத்துச் சமண சங்கத் தலைவரான அகளங்க அடிகள் என்பவரை இங்கே விஜயம் செய்யுமாறு சளுக்கிய விக்கிரமாதித்தன் அழைப்பு விடுத்திருந்தான்..."

"அதாவது, ஆந்திர இளவரசி உத்தமசீலி எதற்காக இந்நாட்டுக்கு வரவழைக்கப்பட்டாளோ அதே காரணத்துக்கு அவரும் வரவழைக்கப்பட்டார் என்ற விஷயம்தானே? அந்தத் திட்டமெல்லாம் தவிடு பொடியாகிப் பல நாட்களாகி விட்டனவே!" என்று அலட்சியமாகச் சொன்ன பழையாறைச் சோழர் அடித் தொண்டையில் மேலும் கூறினார்: "உண்மைதான் கலைஞரே! பல்லவ நாட்டில் தனது ஆட்சி யதிகாரத்தை நிலைநிறுத்திக் கொள்ளும் பொருட்டு சமண சமயத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்தலாம் என்று கருதிச் சளுக்கிய விக்கிரமாதித்தன் அவ்வாறு திட்டமிட்டான். அந்தத் திட்டம் கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்துப் பிடிக்க முயல்வது போன்றதென்று கூறி அவனது கவனத்தை நான்தான் வேறு திசையில் திருப்பிவிட்டேன். அதாவது, பல்லவ நாட்டில் அவனது ஆட்சி நிலைக்க வேண்டுமானால் பாண்டிய நாட்டின்மேல் போர் தொடுக்க வேண்டும் என்று யோசனை கூறினேன். நானே எதிர்பார்க் காத விதமாக அவன் அந்த யோசனையை ஏற்றுக்கொண்டு அதைச் செயல்படுத்தவும் முனைந்துவிட்டான்."

வியப்புடன் அவரை நிமிர்ந்து நோக்கிய பரவாதி மல்லர், "அப்படியானால் நீங்கள் சளுக்கிய மன்னனை நேரில் சந்தித்தீர்களா?" என்று இரகசியக் குரலில் கேட்டார்.

"இன்றுவரை அப்படியொரு சந்திப்புக்கு நான் இடம் வைத்துக் கொள்ளவில்லை. தளபதி வில்வேலியை கொண்டே

என் நோக்கங்களை ஒவ்வொன்றாக நிறைவேற்றி வருகிறேன்." குறும்பாகக் கூறிப் பெரிதாக நகைத்தார் பழையாறைச் சோழர்.

சிறுபொழுது பேசாதிருந்த பரவாதிமல்லர், "அது சரி, நண்பரே! நான் சொல்ல வந்த விஷயம் இதுவல்ல... என்று தயங்கியபடி இழுத்தார்.

"அகளங்க அடிகளைப்பற்றித்தானே? அவர் விஷயம் தான் முடிவாகி விட்டது என்கிறேனே! இன்னும் என்ன சொல்லப் போகிறீர்கள்?"

"நண்பர் எந்த முடிவைச் சொல்கிறார்?" என்று திருப்பிக் கேட்டார் சேதியக் கலைஞர்.

"சிரவண பெள்குளத்திலிருந்து வரவழைக்கப்பட்ட அகளங்க அடிகளை நடு வழியிலேயே மடக்கித் தீர்த்துக் கட்டிவிட வில்வேலிக்கு விக்கிரமாதித்தன் உத்தரவு இட்டு விட்டுப் போனதைப் பற்றித்தானே கேட்கிறீர்கள்?"

"அவ்வாறே நடந்தும் விட்டது என்கிறீர்களா?"

"ஆம், கலைஞரே! காஞ்சிக் கோட்டையைக் காவல் காத்துக்கொண்டிருந்த சளுக்கிய இளவரசன் விநயாதித் தனைக் கொண்டு அந்தக் காரியத்தை நிறைவேற்றிவிட்டதாக வில்வேலியை நான் கடைசியாகச் சந்தித்தபோது அவன் சொன்னான்."

"நீங்களும் அதை நம்பிவிட்டீர்களா?"

"ஏன்?...அப்படி நடக்கவில்லை என்று உங்களுக்குத் தகவல் கிடைத்திருக்கிறதா என்ன?"

"வில்வேலியும் விநயாதித்தனும் சேர்ந்து அந்தக் கொலைபாதகச் செயலை நிறைவேற்றத்தான் செய்தார்கள்; ஆனால், அவர்களுக்கே தெரியாமல் சிரவணபெள் குளத்துச் சமண சங்கத் தலைவர் உயிர் பிழைத்து விட்டார்!"

"உண்மைதானா கலைஞரே?"

“முற்றும் உண்மை. அந்த அகளங்க அடிகள் உயிர் தப்பி இங்குள்ள திரமிள சமண சங்கத்தில் போய் சேர்ந்தும் விட்டார்.”

“பிறகு ?...”

“இந்த விவரத்தைச் சளுக்கிய வில்வேலி அறிந்தால் மீண்டும் அதே கொலை முயற்சியில் இறங்கிவிடுவான் என்று அறிந்த சமந்தபத்திரர் தமது ஆதுர சாலையையும் திரமிள சமண சங்கப் பள்ளியையும் மூடிவிட்டு, அகளங்க அடிகளை யும் மற்ற சமண முனிவர்களையும் அழைத்துக் கொண்டு அங்கிருந்து வெளியேறி விட்டார்.”

“அவர்கள் எங்கே போவதாக உத்தேசம் ?”

“தற்போதைக்குத் திருப்பருத்திக்குன்றத்தில் போய்த் தங்கியிருக்கலாம் என்று புறப்பட்டிருக்கிறார்கள்.”

“சமந்தபத்திரரை நீங்கள் நேரில் சந்தித்தீர்களா ?”

“நேற்று நான் பயணப்பட்ட வழியில் அவரைச் சந்திக்க நேர்ந்ததால்தான் இத்தனை விவரங்களும் எனக்குத் தெரிய வந்தன.”

சற்று நேரம் ஆழ்ந்த சிந்தனையிலிருந்த பழையாறைச் சோழர், “அது சரி, கலைஞரே ! இந்த விஷயத்துக்கும் நீங்கள் திருப்பருத்திக்குன்றத்துக்குப் போகாமல் திரும்பி வந்ததற்கும் என்ன சம்பந்தம் ? இதனால் உங்களுக்கு என்ன தடங்கல் ஏற்பட்டது ?” என்று அவசரமாகக் கேட்டார்.

“சளுக்கிய விக்கிரமாதித்தனின் உத்தரவுப்படி வழி மறித்துத் தாக்கப்பட்ட அகளங்க அடிகள் உயிர் பிழைக்க காரணமாக இருந்தவர் நம் பல்லவ மன்னர் பரமேசுவர வர்மர்தானாம் ! அவர்தாம் அந்தச் சமணத் துறவியைக் காப்பாற்றிக் கொண்டுபோய் திரமிள சமண சங்கத் தலைவரிடம் சேர்ப்பித்தாராம் !”

ஆச்சரியத்தால் கண்கள் அகல விரிய, “அப்படியா ?” என்று அடைத்த குரலில் விளித்த பழையாறைச் சோழர்,

"பல்லவபுரம் இலவந்திகைப்பள்ளிக்குப் போன பரமேசுவர வர்மர் அங்கிருந்து தப்பி வந்துவிட்டாரா? எனக்கும் தெரியாமல் வில்வேலி அவரைச் சிறைப் பிடித்து எங்கோ அடைத்து வைத்திருக்கிறான் என்றல்லவா இத்தனை நாட்களும் எண்ணிக் கொண்டிருக்கிறேன்!" என்று குழறியவர் மீண்டும் கேட்டார்: "ஆமாம்; அதற்காக நீங்கள் ஏன் உங்கள் பயணத்தைத் தடைப் படுத்திக்கொண்டு திரும்பி விட்டீர்கள்?"

"பல்லவபுரத்துக்குப் போன பரமேசுவரவர்மர் அங்கிருந்து புறப்பட்டுவிட்டதால் அவர் எப்படியும் என் இல்லத்துக்குத்தானே வந்தாக வேண்டும்? எனவேதான்..." என்று மலர்ந்த முகத்துடன் மெல்லிய குரலில் இழுத்தார் பரவாதிமல்லர்.

"ஓ!... உங்களுடைய இல்லம் சாத்திக் கிடப்பதால் அவர் வந்து பார்த்துவிட்டுத் திரும்பிப் போய்விடுவாரோ என்று பயந்து நீங்களே அவரை வரவேற்க வந்துவிட்டீர்கள்; அப்படித்தானே?"

"ஆம், அன்பரே! முன்னேற்பாடாக என் இல்லத்தில் அவருக்குப் பழக்கப்பட்ட ஒரு சிறு கதவைத் தாழிடாமல் வெறுமனே சாத்தி வைத்திருக்கிறேன் என்றாலும், அதோடு திருப்திப்பட்டுக்கொண்டு போய்விட என் மனம் இடம் தரவில்லை..."

"அந்தக் கவலையே உங்களுக்கு வேண்டாம், கலைஞரே! அப்படி அவர் வந்தால் அவரைக் கவனித்துக் கொள்ளத்தான் கடந்த ஒரு வாரமாக நான் இங்கு பேயாகச் சுற்றிக்கொண்டிருக்கிறேனே!" என்று கூறிக் கடகடவென நகைத்தார் பழையாறைச் சோழர்.

# 80

# கொள்ளிப் பார்வை

சிறுபொழுது மௌனமாக இருந்த பரவாதிமல்லர் மெல்லத் தலைநிமிர்ந்து, "நண்பரே! உங்கள் மகள் இளங்கோப்பிச்சி..." என்று ஏதோ கேட்க வாய் திறந்தார்.

திடுக்குற்று எழுந்த பழையாறைச்சோழர், "எங்கே?... எங்கே என் செல்வ மகள்?'' என்று ஆவல் செறிந்த அங்கலாய்ப்புடன் கேட்டுக்கொண்டே அங்குமிங்குமாகப் பார்த்தார்.

"இல்லை, அன்பரே! தங்கள் செல்வியின் விஷயம் என்ன ஆயிற்று, அவரைப்பற்றி ஏதேனும் தகவல் கிடைத்ததா என்றுதான் கேட்டேன்."

பழையாறைச் சோழரின் முகம் வெளுத்தது. கண்கள் கலங்கி நீர் கோத்தன. "என் அன்பு மகளின் பெயரைக் கேட்டதுமே அவள்தான் வந்துவிட்டாளோ என்று பரபரத்துப் போனேன்!...அவளைப்பற்றி நினைக்கும்போதெல் லாம் என் நெஞ்சம் இப்படித்தான் பேதலித்துவிடுகிறது!... இன்னும் சில நாட்கள் இதே கவலைகள் நீடித்தால் நான் மேற் கொண்ட காரியங்களையெல்லாம் அப்படியப்படியே விட்டு விட்டு எங்காவது போய்த் தற்கொலைதான் செய்து கொள்வேன்போல் தோன்றுகிறது!" என்று துயரம் கப்பிய குரலில் முணுமுணுத்தார்.

மகளின் பிரிவாற்றாமையால் அவர் எவ்வளவு மனம் நொந்து வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்பதை

நன்கு புரிந்துகொண்ட சேதியக் கலைஞர் ஏதும் பேசத் தோன்றாமல் மௌனமானார்.

"சோழ பூபதி அவர்களுக்கு, வணக்கம்."

கண் கலங்கித் தலைகுனிந்திருந்த பழையாறைச் சோழர் சடாரென்று நிமிர்ந்தார்.

"சோழ இளவரசியார் நலமாக இருக்கிறார் அரசே!" என்று மகிழ்ச்சிப் பெருக்குடன் குழறிக் கூறிக்கொண்டே அங்கு ஓடி வந்தான் அவரது ஆபத்துதவி வீரனான சம்புவராயன்.

தம் காதுகளையே நம்பாதவர்போல் ஒரு கணம் அலங்க மலங்க விழித்துப் பார்த்த பழையாறைச் சோழர் துள்ளி எழுந்து வான் நோக்கி அண்ணாந்தவாறு, "இறைவனுக்கு நன்றி!" என்று பரவச விம்மலுடன் கூறிக்கொண்டே நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார். பிறகு அவசரமாகத் திரும்பி, "சம்புவராயா, என் மகளை எங்கே கண்டாய்? அவள் இப்போது எங்கே இருக்கிறாள்?" என்று துடிப்பேறிய குரலில் வினவினார்.

"மதுரை அரண்மனையில் தங்கள் தங்கையார் பாண்டிமா தேவியாரின் பாதுகாப்பிலே நம் இளவரசி இளங் கோப்பிச்சி இருந்து வருகிறார் அரசே!"

"ஓ!... நான் நினைத்தபடியேதான் நடந்திருக்கிறது இல்லையா கலைஞரே?" என்று பரவாதிமல்லரின் பக்கம் திரும்பிச் சந்தோஷப் பெருமிதத்துடன் தலையாட்டினார் பழையாறைச் சோழர்.

"ஆமாம், அன்பரே! ஆலம்பாக்கம் அநந்தமதியின் இல்லத்திலிருந்து தங்கள் அருமைச் செல்வி காணாமற் போன சேதி கேட்டதுமே அவர் மதுரைக்குத்தான் போயிருப்பார் என்று என்னிடம் சொன்னீர்கள்; அந்த ஊகம் சரியாகவே ஆகிவிட்டது!" என்று பரவாதிமல்லரும் புன்னகையுடன் பதிலிறுத்தார்.

"அப்படி இல்லை, ஐயா! சோழ இளவரசியார் காணாமற் போன சேதியை நான் முதலில் வந்து தெரிவித்த போது அவர் போயிருந்த இடம் வேறு; மீண்டும் ஆலம் பாக்கத்துக்கே திரும்பி வந்து சேர்ந்த அவர் மறுநாள் இரவு தான் அநந்தமதியிடம்கூடச் சொல்லிக் கொள்ளாமல் மதுரைக்குப் புறப்பட்டுப் போயிருக்கிறார்..." என்று சேதியக் கலைஞரைப் பார்த்துத் தயக்கத்துடன் சொன்னான் சம்புவராயன்.

அவன் சொன்னதைப் புரிந்துகொள்ள முடியாமல் இருவரும் அவனை ஏறிட்டு நோக்கினர். அதைப் புரிந்து கொண்ட சம்புவராயன் மேலும் கூறினான்: "அந்த விஷயத்தை விளக்கிச் சொல்லுமுன் அதிமுக்கியமான இன்னொரு சேதியை அரசரவர்களிடம் தெரிவித்தாக வேண்டும்."

"சீக்கிரம் சொல்!" என்று அதட்டினார் பழையாறைச் சோழர்.

"தாங்கள் விரும்பியபடியே சளுக்கியருக்கும் பாண்டிய ருக்கும் நெல்வேலி என்னும் இடத்தில் போர் மூண்டு விட்டது."

"அப்படியா?" என்று உற்சாகத்துடன் உரத்த குரலில் கேட்ட பழையாறைச் சோழர், "வெற்றி! என் சூழ்ச்சித் திட்டத்துக்கு முதல் வெற்றி!" என்று கூறிக் கடகடவெனச் சிரித்தார்.

"அத்துடன் இன்னொரு நற்சேதியையும் கொண்டு வந்திருக்கிறேன், அரசே! தாங்கள் எதிர்பார்த்தபடியே நம் பல்லவ இளவரசர் கோவிந்தவர்மர், பாண்டியப் பேரரசரிடம் படையுதவி கோரப் போயிருக்கிறார்..."

இதைக் கேட்டு மேலும் மகிழ்ச்சியடைந்தவராய் இடி முழங்குவதுபோல் சிரித்த பழையாறைச் சோழர், "கேட்டீர் களா, கலைஞரே! என்னுடைய திட்டங்கள் எள்ளளவும் பிசகாமல் நடந்தேற ஆரம்பித்துவிட்டன!" என்றவாறு

மீண்டும் உடல் குலுங்க நகைத்துக்கொண்டே, "இன்னும் ஏதேனும் சேதி இருக்கிறதா, சம்புவராயா?" என்று ஆவலுடன் வினவினார்.

"ஆம், அரசே!..." என்று தயக்கத்தோடு சுற்றுமுற்றும் பார்த்து விழித்தான் சம்புவராயன்.

"சரி; நீ என்ன சொல்லப் போகிறாய் என்பதை நான் அறிவேன். அதையெல்லாம் இங்கிருந்து கேட்கவோ, பேசவோ கூடாது. கலைஞரே, நீங்களும் என்னுடன் வாருங்கள், நம் நிலவறைக்குப் போவோம்" என்று கூறிக் கொண்டே மிடுக்கு நடை போட்டு முன்னால் நடந்தார் பழையாறைச் சோழர். அவருடன் சேதியக் கலைஞரும் செல்ல அவர்களைப் பின் தொடர்ந்து சென்றான் சம்புவராயன்.

இரத்தக் கோளமாகச் சிவந்திருந்த மாலைச் சூரியன் மேற்கு வானில் சரியத் தொடங்கின நேரத்தில் சேதியக் கலைஞரின் இல்லத்துப் பின்புறத் தோட்ட வழியே வெகு எச்சரிக்கையுடன் அங்குமிங்கும் பார்த்தவாறு வந்து கொண் டிருந்த பழையாறைச் சோழர் எதையோ கண்டு அதிர்ச்சி யுற்றவர்போல் சட்டென்று நின்று, தமக்குப் பின்னால் வந்த பரவாதிமல்லரையும் சம்புவராயனையும் தமது இரு கரங்களால் வேகமாகப் பின்னுக்குத் தள்ளித் தாமும் அவர்களோடு ஒரு மறைவில் மறைந்து நின்றுகொண்டு நோக்கினார்.

அங்கே, அந்த இல்லத்துப் பின்புறமாக அமைந்த சிறிய வாயிலின் கதவைத் திறந்துகொண்டு மகிழ்ச்சி நிலவும் முகத்தினனாய் வெளியே வந்தான் பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன். அவனுடைய வலக் கரத்தைப் பற்றிக் கொடிபோல் தவழ்ந்து சாய்ந்தவாறு ஆந்திர இளவரசி உத்தம சீலியும் வந்தாள். அவர்களிருவரும் சிற்றாற்றங் கரையை நோக்கி உல்லாசமாக நடக்க ஆரம்பித்தனர்.

## 81

# சித்த யோகம்

பருவப் பெண்ணின் தங்க நிற மேனியில் பின்னிப் புடைத்தோடும் பச்சை நரம்புபோல் வெண் மணல் விரிப்புக் கிடையே அந்தச் சிற்றாறு சலசலத்து ஓடிக்கொண்டிருந்தது. அதன் வலப்புறக் கரைச் சரிவில் மரகத வண்ணச் சூலாயுதம் போல் வானோங்கி வளர்ந்து நின்ற ஒற்றைச் சவுக்கை மரத்தின் அடியில் துறவறத்திலே நம்பிக்கை இழந்த போலிச் சந்நியாசி ஒருவன் தன் வசமிருந்த உருத்திராக்க மாலைகளை அறுத்தெறிந்துவிட்டுப் போனாற்போல் உதிர்ந்து சிதறிக் கிடந்த சவுக்கைக் காய்களை மகிழ்ச்சித் துள்ளலிட்டு ஓடி ஓடிப் போய்ப் பொறுக்கிகொண்டிருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

அந்தச் சவுக்கை மரத்துக்கு மேலண்டைப்புறம் ஆற்று நீர் விளிம்பை ஒட்டினாற்போல் எழும்பி நின்ற ஒரு வழுக்குப் பாறைமேல் ஒருக்களித்துச் சாய்ந்து உட்கார்ந்திருந்த பரமேசு வரவர்மன், தூரத்தே தன்னந்தனியாக இறங்கி வந்து களியாட்டமிடும் வனதேவதைபோல் விளங்கிய உத்தம சீலியை விழியசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தான். மாலைச் சூரியன் வானப் பரப்பிலே நிகழ்த்திய எழில்மிகு இந்திர ஜாலங்களும், பூந்தென்றலின் இன்பச் சீதள வருடலும், அந்தச் சிற்றாற்றங்கரைப் பிரதேசத்தைச் சுற்றி அமைந்த மனோரம்மியமான இயற்கைக் காட்சிகளும், அங்கு நிலவிய ஆழ்ந்த அமைதியும் சேர்ந்து அவன் மனத்தில் குதூகலத்தைக் கொட்டி நிறைத்தன. தன் கவலைகளையெல்லாம் மறந்து அந்த இனிய சூழலை அநுபவித்துக் கொண்டே, ஆற்றங்கரைச்

சரிவில் உயிர் பெற்ற கந்தர்வ ஓவியமாக ஓடியாடிச் சவுக்கைக் காய்களையெல்லாம் பொறுக்கிக் கொண்டிருந்த உத்தம சீலியை இமை தட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான் அவன்.

நேற்றும் அதற்கு முன்தினமும் அவள் இருந்த நிலையை எண்ணிப் பார்த்தபோது, இப்போதைய அவளது தோற்றமும் மகிழ்ச்சித் துள்ளலும் உண்மைதாமா, அல்லது தன் மனப் பிரமையா என்று அவனுக்கே சந்தேகமாகிவிட்டது.

'பாவம், இந்தச் சின்னஞ்சிறு பேதைப் பெண்ணை எத்தனை பயங்கரமாக வஞ்சம் தீர்க்க முயன்றிருக்கிறான் வில்வேலி! மனித இதயத்தின் நியாயமான உணர்ச்சி அணு வளவாவது இருந்திருந்தால் அத்தகைய படுமோசமான தண்டனையை அளிக்கத் துணிந்திருப்பானா? இத்தனைக்கும் இவள் செய்த குற்றம்தான் என்ன? சளுக்கிய மன்னனின் மண்ணாசையையும், இங்கே அவனது ஆட்சி அதிகார உறுதிப் பாட்டுக்காகச் சமண சமயத்தின் பெயரால் செய்யவிருந்த அக்கிரமச் சூழ்ச்சிகளையும் இவள் அறிந்துகொண்டிருப் பாளோ என்று அவனாகவே சந்தேகப்பட்டு அந்தச் சந்தேக மிரட்சியால் இவளை ஒழித்துக்கட்டிவிடமுயன்றிருக்கிறான். சளுக்கியப் பேரரசனின் சொந்தச் சகோதரனுடைய மகளையே அவன் பழிபாவத்துக்கு அஞ்சாமல் கொடுமைக்கு உள்ளாக்கத் துணிந்தான் என்றால், அந்நியர்களான என் நாட்டு மக்களை என்ன பாடு படுத்திக்கொண்டிருப்பான்!'

பரமேசுவரவர்மனின் உடல் சிலிர்த்தது. நேற்றுக் காலை அவள் பிரக்ஞை தெளிந்து எழுந்த பின் சொன்ன எல்லா விஷயங்களையும் இப்போது நினைத்துப் பார்த்தான். அவள் அவனிடம் எதையும் மறைக்கவில்லை. தான் இந்த நாட்டுக்கு வந்த நோக்கத்தையும், வந்த பின் நடந்த ஒவ்வொரு சிறு சம்பவத்தையும் ஒளிவு மறைவின்றிச் சொல்லிவிட்டாள். தன்னுடைய இலட்சிய விஜயம் என்ன என்பதைக் கூறி, அது சிதைந்த காரணங்களையும் விளக்கிச் செய்யும் பொருட்டுத்

தான் வந்ததாக அவள் கூறியதைக் கேட்டு அவன் சிறிதும் மனம் சிவந்து கொள்ளவில்லை. 'சமயம் என்பது ஒரு தர்ம வழிகாட்டி. தர்மத்துக்குப் பல்வேறு பொருள்கள் உண்டு. சமயத்தைப் பொறுத்தவரையில் அதன் பொருள் கடமை என்பதே. ஒவ்வொரு சமயமும் இந்தக் கடமையைத்தான் பல்வேறு விதமாக உபதேசிக்கின்றன. தார்மீக அடிப்படையில் அதை எடுத்துச் சொல்ல எல்லாச் சமயங்களுக்கும் உரிமை உண்டு. அறிவின் வழி நின்று சத்திய எல்லையை மீறாமல் கொள்கைகளை மோத விடுவது தவறே அல்ல; — இப்படிப் பட்ட ஒரு விரிந்த மனப்பாங்கு கொண்ட அவன் அவளுடைய விஜயத்தின் நோக்கத்தைக் கேட்டுக் கொஞ்சமும் அவள்மீது வெறுப்படையவில்லை. ஆனால், சமண சமயத்தின் பெயரால் சளுக்கிய விக்கிரமாதித்தன் செய்யத் திட்டமிட்ட அரசியல் சூழ்ச்சிகளை அறிந்தபோது தான் அவன் மனம் எரிமலையாகக் குமுறியது. அதே முயற்சியை வேறு திட்டத்துடன் அவன் ஆரம்பித்துவிடு வானோ என்று எண்ணி ஒரேயடியாகக் கலங்கிப் போனான். அத்துடன், பாண்டிய நாட்டின்மேல் விக்கிரமாதித்தன் படையெடுக்கப் போகிறான் என்பதையும், ஆந்திர நாட்டின் ஆட்சிப்பொறுப்பை விஷ்ணுவர்த்தனனிடமிருந்து பறித்து அதைச் சளுக்கிய சாம்ராஜ்யத்துடன் ஐக்கியப்படுத்திக் கொள்ள அவன் எண்ணியிருக்கிறான் என்பதையும் அவளுடைய வாயிலாகக் கேள்விப்பட்ட பரமேசுரவர்ம னுக்கு ஒரே அதிர்ச்சியும் குழப்பமுமாகிவிட்டது. இத்தனை குமுறலுக்கும், குழப்பத்துக்கும், அதிர்ச்சிக்குமிடையே அவள் அவனைப் பார்ப்பதற்காகவும், அவன் இருக்கும் இடத்தி லேயே தானும் போய்த் தங்கிவிடவேண்டும் என்பதற்காகவும் பல்லவபுரத்திலிருந்து பெருவளநல்லூருக்குப் புறப்பட்டு வந்ததாகச் சொன்னதைக் கேட்டுத்தான் அவற்றையெல்லாம் ஒருவாறு மறந்து அவளுடைய பேரன்புக்கு அடிமையாகிப் போனான்.

அவள்தான் அவன்மேல் எத்தனை ஆழ்ந்த அன்பு வைத்திருக்கிறாள்! அந்த அன்பை அவள் தனக்குத்தானே

தோற்றுவித்துக் கொண்டதாகவும் அவனுக்குத் தோன்ற வில்லை. அவளையறியாமலே அந்த அன்பு அவளிடமிருந்து பொங்கிப் பெருக்கெடுத்து அதிலே அவளையும் அவனையும் அமிழ்த்துவதாகவே அவன் உணர்ந்தான். 'எதிர் முகாமைச் சேர்ந்த ஒரு பெண்ணின் அன்பில் இத்தனை சீக்கிரம் தன்னைக் கரைத்துக் கொள்வது அறிவுடைமையாகுமா?' என்று அவன் எண்ணாமலில்லை. ஆனால் அவளுக்கும் தனக்கும் பேதமற்று ஓர் ஒருமையுணர்வு தன் உள்ளத்திலிருந்து தீப்பிழம்பாக எழுந்து அந்த எண்ணத்தைத் தீய்த்துப் பொசுக்குவதை உணர்ந்து அவனே ஆச்சரியப்பட்டுப் போனான்.

அவளைப்பற்றி அவன் நன்றாக அறிந்துகொண்டு விட்டான். தன்னையும் அவள் தெரிந்துகொள்ளத் தன் மனத்தைத் திறந்து காட்டிவிட்டான். ஆயினும் அவள் அவனிடம் சொன்ன பல விஷயங்களில் அந்த ஒரே விஷயம் தான் இன்னமும் அவனுக்குப் புரிபடாமல் இருந்தது.

'நான் ஓர் இலட்சியத்தோடு இந்த நாட்டுக்கு வந்தேன். அந்த இலட்சியம் சிதறிவிட்டது. அப்படிச் சிதறிய இலட்சியத் திலிருந்தே இப்போது வேறோர் இலட்சியம் என் நெஞ்சத்தில் முளைத்தெழுந்து வேரூன்றியிருக்கிறது. அதை நான் செயல் படுத்த வேண்டும். அதற்காக என் உயிரையே தியாகம் செய்ய நேர்ந்தாலும் தயங்காமல் நின்று அதை நிறைவேற்றியே தீருவேன்.' — இப்படி அவள் சொன்னதுதான் அவனுக்குப் புரியவில்லை. அவளுடைய அந்தப் புதிய இலட்சியம்தான் என்ன?...

மஞ்சள் ஒளிப் புனலில் முழுக்காடியவாறு சவுக்கைக் காய்களைப் பொறுக்கிக் கொண்டிருந்த உத்தமசீலி, பாறை மேல் அமர்ந்திருந்த பரமேசுவரவர்மனைக் கடைக் கண்ணால் கவனித்துக்கொண்டே ஆற்று நீரின் நுரை தட்டிய விளிம்பை நோக்கி அழகு நடை பயின்று வந்தாள்.

அன்றொரு நாள் இதே ஆற்றங்கரையில் இதே போன்று சவுக்கைக் காய்களைப் பொறுக்கிக் கொண்டுவந்து அதை மாலையாகக் கோப்பதற்காக அமர்ந்தாளே, அதே இடத்தில் தான் இப்போதும் போய் அதேபோன்று அழகு நளினத்தோடு ஒரு காலை ஒருக்களித்து மடித்து, மறுகாலை நீரில் நீட்டி உளைந்தவாறு அமர்ந்தாள். புன்னகை மேவிய அவள் முகத்தில் எள்ளளவு கவலையோ அச்சமோ தலைகாட்ட வில்லை. தான் எந்த இடத்தில் எத்தகைய இக்கட்டான சூழ் நிலையில் இருக்கிறோம் என்ற கிலேசமும் கொண்டவளாகத் தோன்றவில்லை. தன்னுடைய பாதுகாப்பு முழுவதையும் தன் தாயிடம் ஒப்படைத்துவிட்டுத் தன் போக்கில் சுதந்தரமாக ஓடியாடி விளையாடும் சிறு குழந்தையைப் போல அவள் ஒய்யார உல்லாசப் பாங்குடன் அங்கே உட்கார்ந்திருந்தாள். தன் மடியில் இருந்த சவுக்கைக் காய்களை ஒவ்வொன்றாக எடுத்து அதைத் திருப்பித் திருப்பிப் பார்ப்பதும், பிறகு பாறை மேல் அமர்ந்திருந்த பரமேசுவர வர்மனைக் குறும்புப் புன்னகையுடன் ஓரக் கண்ணால் கவனித்துக் கொண்டே சலசலத்து ஓடும் ஆற்று நீர்ப்பரப்பில் விட்டெறிவதுமாக வேடிக்கை செய்யலானாள் அவள்.

அவளுடைய அந்தச் சிறுபிள்ளைத்தனமான விளை யாட்டைக் கண்டு பரமேசுவரவர்மனின் மனம் குதூகலித்தது. அன்றொரு நாள் அவள் விளையாட்டாகக் கோத்து வீசிய சவுக்கைக் காய் மாலை தன் கழுத்தில் வந்து விழுந்த சம்பவத்தை இப்போது தனக்கு நினைவுபடுத்துவதற்காக அவள் அவ்வாறு குறும்பு செய்கிறாள் என்பதைப் புரிந்து கொண்ட அவன் மகிழ்ச்சிப் போதையில் கிறுகிறுத்தான். அவனை அறியாமலே அவன் கை அவனுடைய கழுத்தில் தவழ்ந்துகொண்டிருந்த அந்தச் சவுக்கைக் காய் மாலையை மெல்ல வருட ஆரம்பித்தது. பிறகு அதை வாஞ்சையுடன் எடுத்து விலை மதிப்பற்ற நவரத்தின ஹாரமொன்றைப்

பார்ப்பதுபோல் ஆசை பொங்கப் பார்த்துத் தனக்குத்தானே அழகாகச் சிரித்துக் கொண்டான்.

இதைக் கவனித்த உத்தமசீலியின் முகம் நாணத்தால் சிவந்து கன்றியது. வெட்சிப் பூவொத்த தன் இடக் கை விரல் களைக் குவித்துக் கன்னக் கதுப்பை மறைத்தவாறு தலை குனிந்து எழில் சிந்த முறுவலித்தாள் அவள். அவளுக்குப் பின் புறத்தில் ஓர் ஆள் உயரத்துக்கு வளர்ந்திருந்த நாணற் போத்துக்கள் இளந்தென்றலில் தலையசைத்துப் பஞ்சுச் செண்டுபோன்ற பூங்கொத்துக்களிலிருந்து மகரந்தப் பொடிகளை அவள்மேல் தூவின.

உத்தமசீலி தன் நெஞ்சகம் விம்மித் தாழ ஓர் ஏக்கப் பெருமூச்சு விட்டாள். அந்தப் பெருமூச்சொலியை எதிரொலிப்பதுபோல் தூரத்தில் நின்ற சவுக்கை மரம் 'ஊய்ங்' என்ற ஒலி எழுப்பியது. சுருதி நாதமாக இடைவிடாமல் கேட்ட அந்த 'ஊங்'கார ஒலியையே உற்றுக் கேட்டுக் கொண்டிருந்த அவள் ஏதோ ஒன்றை நினைவுபடுத்திக் கொள்ள முயல்பவள்போல் தன் விற்புருவங்களை வளைத்துச் செவ்வதரங்களை நெளித்துக் குவித்தாள். நினைவிலே இழுக்க நினைத்தது நெஞ்சிலே வந்து இறங்கிவிட்டாற் போன்ற ஒரு மகிழ்ச்சிப் புன்னகை!

அந்தச் சவுக்கை மரத்தின் 'ஊங்'கார ஓசையை உற்றுச் செவிமடுத்துக்கொண்டிருந்த உத்தமசீலி, அவ்வொலியையே சுருதியாக வைத்துத் தன் இனிய மென்குரலை அத்துடன் இதமாக இழைக்க ஆரம்பித்தாள். அவளுடைய கண்கள் மெல்ல மூடின. முகத்தில் ஓர் அபூர்வ ஒளி விகசித்தது. மகரயாழின் மென்னலைத் துடிப்புகளாக இழைந்த அவளது கண்டத்வனி ஓர் எழிலார்ந்த பண்ணாகப் பரிணமித்து, நினைவுபடுத்தி இழுத்து வந்து நெஞ்சில் மிதக்க விட்டிருந்த ஒரு பாடலுடன் ஒருமித்து ஒலிக்கத் தொடங்கியது;

"சொல்துணை வேதியன் சோதி வானவன்
பொன்துணை திருந்துஅடி பொருந்தக் கைதொழ..."

பாறைமேல் அமர்ந்து அவளையே பார்த்துக்கொண் டிருந்த பரமேசுவரவர்மன் இந்தப் பாட்டைக் கேட்டுத் தன் உடம்பைச் சிலிர்த்துக்கொண்டு சரேலெனக் கீழே சரிந்து நின்றான்.

'என்ன! உத்தமசீலியா பாடுகிறாள்? இது என் அன்றாட இறை வழிபாட்டின்போது நான் பாடும் பாட்டல்லவா? இந்தப் பாட்டை இவள் எப்படி அறிந்தாள்? அன்றொரு நாள் சேதியக் கலைஞரின் இல்லத்தில் எனக்கென அமைந்த பூஜையறையில் நான் இந்தப் பாடலைப் பாடிக்கொண்டிருந்த போது இவள் அங்கு வந்து, என்னை முதன் முதலாகப் பார்த்தாளே, அன்றே அதனை மனனம் செய்து கொண்டாளா? அந்தப் பாடலை இப்போது ஏன் பாடுகிறாள்? தொலைவில் இருக்கும் என்னை அருகில் இழுப்பதற்காக இந்தப் பாட்டைப் பாடுகிறாளா? என்னுடைய மனப் பாங்கை இவள்தான் எத்தனை துல்லிய மாகப் புரிந்தும் தெரிந்தும் வைத்திருக்கிறாள்!"

அவன் அவளைப் பரவசக் கிறக்கத்துடன் பார்க்க, அதை அறியாதவள் போன்ற பாவனையில் மேலும் தன் கந்தர்வ ரசமயமான பூங்குரலைத் திறந்து அந்த நறுஞ்சுவைத் தேன் பாடலைத் தொடர்ந்து இசைத்தாள் அவள்:

**"கல்துணைப் பூட்டி ஓர் கடலில் பாய்ச்சினும்**
**நல்துணையாவது நமச்சி வாயவே!...'**

மணங் கமழும் பூக்களால் தொடுக்கப்பெற்ற மாலை யொன்றால் தன்னை யாரோ பிணைத்துக் கட்டி முன்னால் இழுப்பது போன்ற உணர்ச்சியுடன் உத்தமசீலி இருந்த இடத்தை நோக்கி நடக்கலானான் பரமேசுவரவர்மன். அப்படி நடந்து சென்றவன், அந்த நாணற் புதரில் நுழைந்து தன் இரு கைகளாலும் பசிய நிறத் தண்டுத் தாள்களை நீவிப் பற்றியவாறு குனிந்து அவளை ஆவல் பொங்கப் பார்த்தான்.

பாட்டின் இறுதிச் சொல்லை நிறைவாக்கி அதைப் பண்ணின் கடைசி அலையில் கரைத்து நிறுத்திய உத்தமசீலி

தன் செவ்வதரங்களை மடித்துச் சுவைத்தவாறு கண் திறந்தாள்.

"இளவரசி!..."

பூந்துகள் செவியில் படர்ந்தாற்போல் ஒரு மென்னசை வுடன் நெளிந்து தன் வலக் கையை வெண் மணலில் ஊன்றி ஒருக்களித்துச் சாய்ந்து பின்னால் திரும்பினாள் உத்தமசீலி.

நாணற் போத்துக்களை நீவிப் பற்றியவாறு நின்றிருந்த பரமேசுவரவர்மன் அவளுக்குப் பின்னால் வந்து அமர்ந்து அவளின் முகத்துக்கு நேரே தன் முகத்தைச் சாய்த்து நீலமணிப் பரல்களாக ஒளிர்ந்த அவளது நீள் விழிகளை இமைக்காமல் நோக்கினான்.

மறுகணம், செக்கச் சிவந்த செந்தாமரை மலர் தன் பாரம் தாளாமல் தண்டு வளைந்து நீர்ப் பரப்பிலே சாய்வது போல் அவனது அகன்ற மார்பில் துவண்டு சாய்ந்தாள் உத்தமசீலி.

அநங்கனே மயங்கும் விதமாக ஓர் அழகுப் புன்னகை பூத்தவாறு அவளை இதமாக அள்ளியெடுத்து அணைத்துப் பற்றிய பரமேசுவரவர்மன், செந்தேன் பூசிய கொவ்வைக் கனி போல் சிவந்து தளதளத்துக் கொண்டிருந்த அவளது அதரங் களைக் குறி வைத்துத் தலைகுனிந்தவன், எங்கோ தொலை தூரத்துக்கு அப்பால் அழுகையும் கூக்குரலுமான ஒலி கேட்கவே திடுக்குற்று நிமிர்ந்தான்.

# 82

# மறலியின் நிழல்

அந்தச் சிற்றாற்றின் மறு கரைக்கு அப்பால் வெகுதூரத்தில் தோப்பும் துரவுமாக இருந்த சிற்றூர் ஒன்று தீப்பற்றி எரிவது தெரிந்தது. வானளாவி எழுந்து பரவிய கரும் புகைக்கிடையே தீச்சுவாலை கோரமாகப் புலப்பட்டது. அந்தச் சிற்றூரில் வதிந்த மக்கள் நாலாபுறமும் சிதறி ஓடிக் கொண்டிருந்தனர். பெண்கள் தத்தமது பிள்ளைகளைத் தூக்கிக் கொண்டு தலைவிரிகோலமாக ஓலமிட்டு அழுதவாறு பெருவளநல்லூரை நோக்கி வந்தனர். ஆண்கள் கூட்டம் ஒன்று, "அக்கிரமக்கார சளுக்கியர்கள் ஒழிக! அநியாய வரிகள் கொடுக்கமாட்டோம்!" என்று இரைந்து கூவிக் கொண்டே, கத்தி ஈட்டி முதலானவற்றுடன் வெறி பிடித்தாற்போல் வேறொரு திசையில் ஓடியது.

இனிய மென்னுணர்வில் தன்னை மறந்திருந்த பரமேசுவரவர்மன் இந்தக் காட்சிகளையும் கூக்குரலையும் பார்த்து செவியுற்றே அப்படித் துடிப்படைந்தவனாய் எழுந்து நின்றான். அவனது அணைப்பிலிருந்து நழுவிச் சரிந்த உத்தமசீலியும் திகிலுடன் எழுந்து நின்று சுற்றுமுற்றும் நோக்கினாள்.

பரமேசுவரவர்மனின் முகத்தில் சினமும் துக்கமும் மாறி மாறிப் பரம்படித்தன. அவனுடைய நெஞ்சம் சிவந்து பழுத்ததால் மார்பிலே மண்டிக்கிடந்த ரோமக்காடு தீய்ந்து பொசுங்குவதுபோல் சுருண்டு சிலிர்த்தது. தலையைத் தாங்கிப்

பிடித்தவாறு தட்டுத்தடுமாறி நடந்துபோய் அந்த வழுக்குப் பாறைமேல் முகத்தைப் புதைத்துக்கொண்டு சாய்ந்தான்.

அவனுக்கு எல்லாம் புரிந்துவிட்டது. அந்தச் சிற்றூர் தீப்பற்றி எரிவதும் மக்கள் அழுது புலம்பி ஓடுவதும் ஏன் என்பதை அவன் ஒரு சில விநாடிகளுக்குள் தெரிந்து கொண்டான். சளுக்கிய அதிகாரிகள் வரி வசூல் செய்ய வந்திருப்பார்கள்; அவ்வூர் மக்கள் வரி கொடுக்க மறுத்திருப் பார்கள்; உடனே அந்தச் சளுக்கியர்கள் தீ வைத்திருப்பார் கள்— எல்லாம் அவன் ஏற்கனவே பார்த்துவிட்டு வந்த காட்சிகள் தாமே? அதே நிகழ்ச்சிதான் இப்போதும் அங்கே நடந்திருக்கும்!...

'நாடு இந்த நிலைமையில் இருக்கும்போது நான் இங்கே காதல் மாளிகை எழுப்பிக்கொண்டிருக்கிறேனே! என்னைப் போல் பொறுப்பற்ற மனிதன் வேறு யாரேனும் இருப்பானா?' தன்னைத் தானே நொந்து கடிந்துகொண்டு வெட்கிக் குமைந்தான் பரமேசுவரவர்மன். அந்தக் குமைச்சலினூடே அவன் மனத்தில் வேறொரு பரபரப்பான கேள்வியும் எழுந்தது:

'சளுக்கியரை எதிர்த்து விரட்டியடிப்பதற்காக என் நாட்டு மக்கள் இரகசியப்போர் அணியில் திரள வேண்டும் என்ற திருமுக ஓலையில் கைச்சாத்து இட்டுப் பெரும்பிடுகு முத்தரையரிடம் கொடுத்து அனுப்பினேனே, அந்த விஷயம் என்ன ஆகியிருக்கும்? மக்கள் என் கட்டளைக்கு இணங்கிப் போர் அணியில் சேருவார்களா, அல்லது என்மீது நம்பிக்கை யிழந்து அந்தக் கட்டளையை உதாசீனம் செய்து விடுவார் களா? சளுக்கிய விக்கிரமாதித்தன் இப்போது பாண்டி நாட்டின்மேல் போர் தொடுத்திருப்பதைக் கேள்விப் பட்டு அவர்கள் பீதியடைந்து முத்தரையருக்குப் போதிய ஆதரவு தராமல் இருந்துவிடுவார்களோ? அவரை நேரில் பார்த்தால் தான் இந்த விவரங்களையெல்லாம் அறிய முடியும்; ஆனால்

அவர் இங்கு வந்து என்னைச் சந்திக்க ஒரு வார காலம் ஆகலாம் என்று சொல்லிவிட்டுப் போனாரே! அதுவரையில் சேதியக் கலைஞரின் இல்லத்தில் எப்படித் தங்கியிருப்பது? இரண்டு நாட்களாகியும் அவரைப்பற்றி ஒரு தகவலும் தெரிய வில்லையே! அவர் எங்கு சென்றிருப்பார்? என்ன காரணத்தி னால் தம் இல்லத்தைப் பாழடையப் போட்டு விட்டுப் போய் இருப்பார்? சாத்திக் கிடக்கும் அந்த இல்லத்தில் நான் தங்கியிருப்பது சரிதானா? தனியாக இருந்து விட்டாலும் என்னை நானே எப்படியாவது சமாளித்துக் கொள்வேன்; என்னுடன் இந்தப் பெண்ணுமல்லவா இருக்கிறாள்? இப்போது இவளைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பும் என் மீது சுமந்துவிட்டதே! என்னைப்பற்றிய தகவல் தெரியா விட்டாலும், இவள் கதி என்ன ஆயிற்று என்பதைத் தெரிந்து கொள்ளவாவது வில்வேலி இங்கு வந்து விடுவானே! மேலும், அன்று முன்னிரவு நேரத்தில் அந்தச் சென்னிவாய்க் கால் கரையோரம் இவளைத் தூக்கிக்கொண்டு நான் புறப்பட விருந்த சமயத்தில், சோனக வணிகர்போல் இருவர் வந்து என்னிடம் பேச்சுக் கொடுத்தார்களே, அவர்கள் நிச்சயமாகச் சளுக்கிய ஒற்றர்களாகத்தான் இருக்கவேண்டும். என்னை அவர்களுக்கு அடையாளம் தெரியாவிட்டாலும், தங்கள் ஆந்திர இளவரசியான இவளை உடனே தெரிந்து கொண்டு அன்றிரவே பல்லவபுரத்துக்கு ஓடிப்போய் அந்த விவரத்தைத் தளபதி வில்வேலியிடம் தெரிவித்துவிட்டிருப்பார்கள். இந் நிலையில், வில்வேலிக்கு அறிமுகமான சேதியக் கலைஞரின் இல்லத்தில் இவளை நான் இருத்திவைப்பது ஆபத்தல்லவா? எந்த விநாடியும் அவன் இங்கு வரலாம்; அவன் வரா விட்டாலும் தன் வீரர்களையாவது அனுப்பி வைக்கலாம். விக்கிரமாதித்தனின் ஜன்ம எதிரியான என்னுடன் இவள் இருக்கக் கண்டால் இவளது கதி என்ன ஆகும்?...'

பாறைமேல் முகம் புதைத்துச் சாய்ந்து நின்ற பரமேசுவரவர்மன் விருட்டென்று நிமிர்ந்து திரும்பினான்.

இச்சமயம், அந்த உயரமான வழுக்குப் பாறைக்கு மறு புறத்தில் செடி கொடிகளுக்கிடையே ஒரு மனித உருவம் கூரிய குத்துவாளை இறுகப் பற்றியவாறு ஒளிந்து மறைந்து பையப் பைய நகர்ந்து வந்துகொண்டிருந்தது!

ஏமாற்றத்தாலும் பயத்தாலும் அதிர்ச்சியடைந்து நின்று கொண்டிருந்த உத்தமசீலி தன் பக்கம் திரும்பிய பரமேசுவரவர்மனைப் பயப்பிராந்தியுடன் பார்த்து, “என்ன நடந்தது அரசே? ஏன் இப்படித் திடீரென்று...?” என்று நடுங்கிக் குழறும் குரலில் கேட்டுக்கொண்டே அருகில் சென்று அவன் கையை மிருதுவாகப் பற்றினாள்.

# 83

# நிலவில் மறைந்த பரிதி

**தீ**க்குழம்பில் குளிப்பாட்டி நிறுத்திய திருமால் சிலை போல் சிவந்து நிமிர்ந்து நின்ற பரமேசுவரவர்மன், "என்ன நடந்ததென்றா கேட்கிறாய், இளவரசி? அதோ பார்! என் மணித்திரு நாட்டு மக்கள், தம் வீடு, வாசல், கைப்பொருள் அனைத்தையும் அக்கினிக்கு இரையாக்கிவிட்டு அநாதைகள் போல் அழுது புலம்பிக்கொண்டு ஓடுகிறார்களே, அந்த அவலக் காட்சியை நீ பார்க்கவில்லையா? அவர்கள் வாழ்ந்த அந்தச் சிற்றூர் அதோ, அநியாயமாக எரிந்து சாம்பலாகிக் கொண்டிருக்கிறதே, அதைக்கூட நீ பார்க்கவில்லையா?" என்று அடித் தொண்டையில் படபடத்துச் சொன்னவன் தன் கண்களை இறுக மூடிக்கொண்டு, "ஐயோ! இந்த வேதனைக் காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டு ஏதும் செய்யச் சக்தியற்ற வெறும் மனிதனாய் நிற்கிறேனே! இறைவா, என்னை ஏன் இப்படிச் சோதிக்கிறாய்?" என்று கண்டம் விம்மிப் புடைக்கப் பொருமிக் கொண்டே தலையை இரு கைகளாலும் அழுத்திப் பிடித்துக்கொண்டான்.

குழம்பித் தவித்து நின்ற உத்தமசீலி பல்லவ மன்னன் காட்டிய திசைப்பக்கம் தன் பார்வையை ஓட்டினாள். அங்கே, தீப்பற்றி எரிந்துகொண்டிருந்த சிற்றூர் இப்போது வெறும் பொட்டல் காடாய்ப் புகை சூழ்ந்து காணப்பட்டது. அந்த நெஞ்சுறுத்தும் காட்சியையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்த உத்தமசீலி தனக்குள் ஏதோ ஒன்றைத் தீர்மானித்துக் கொண்டவள்போல் மெல்லத் தலையசைத்துத் திரும்பி, "என்ன இது, அரசே? ஏன் அந்தச் சிற்றூர் அப்படி

எரிந்து கொண்டிருக்கிறது? தீப்பற்றிய குடில்களை அணைக் காமல்கூட மக்கள் ஏன் தலைதெறிக்க ஓடுகிறார்கள்?" என்று அமைதியாக வினவினாள்.

பரமேசுவரவர்மனின் கண்கள் சிவந்தன. பொங்கிவந்த ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு, "காரணம் கேட்கிறாயா, இளவரசி? எல்லாம் உன் பெரிய தந்தை விக்கிரமாதித்தனின் இதயமற்ற வரித் தண்டல் அதிகாரிகளுடைய வெறியாட்டக் காட்சி அது! வரி கொடாத மக்களின் வீடு வாசல்களை இப்படித் தீயிட்டுப் பொசுக்கிவிட்டுப் போவது அவர்களுக்கு ஒரு விளையாட்டுக் காரியம்! அந்த அக்கிரம விளை யாட்டைத்தான் இப்போதும் அங்கே நடத்தியிருக்கிறார்கள்!" என்று குத்தலும் குமுறலுமாகப் பொரிந்தான் அவன்.

உத்தமசீலியின் முகம் ஜிவ்வென்று வெளுத்துச் சிறுத்தது. தன் உதடுகளை மடித்துக் கடித்தவாறு தலை குனிந்து ஒரு கணம் மௌனமாயிருந்த அவள், "ஆமாம்; அரசன் விதித்த வரிகளை மறுக்காமல் செலுத்தவேண்டியது தானே நியாயம்? இந்த ஊர் மக்கள் ஏன் அந்த நியாயத்துக்கு விரோதமாக நடந்துகொண்டார்களாம்?" என்று வெகு அலட்சியமாகக் கேட்டாள்.

ஒரு விநாடி திக்கித் திணறிய பரமேசுவரவர்மன் அவளை எரித்து விடுவதுபோல் விழித்துப் பார்த்துக் கடுகடுத்த குரலில் கூறினான்: "ஏன் என்றா கேட்கிறாய், இளவரசி? இந்தப் பல்லவ நாடெங்கிலும் சளுக்கிய வரித் தண்டல் அதிகாரிகள் செய்துவரும் அட்டூழிய அநியாய வரி விதிப்புக் கெடுபிடிகளை இதயமுள்ள எந்த மனிதன் கேள்விப் பட்டாலும் இரத்தக் கண்ணீர் வடிக்காமல் இருக்கமாட்டான். 'அரசன் விதிக்கும் வரிகளை மக்கள் செலுத்த வேண்டியது நியாயம்' என்று நியாயம் பேசுகிறாயே, என்னுடைய நாட்டின் வரி விதிப்பு நியாயத்தைச் சொல்கிறேன், கேள்: ஊரவை யாராலும், அற மன்றத்தாலும், அரசனாலும், கோயிலதிகாரி களாலும், சிற்றூர்த் தலைவனாலுமே வரிகள் விதிக்கப்பட

வேண்டும் என்பது எங்கள் அரசியல் தர்மத்திலுள்ள ஒரு பிர தான நெறிமுறை. இந்த நெறி முறையை முற்றும் தகர்த்துவிட்ட சளுக்கிய வரித் தண்டல் அதிகாரிகள், எல்லா வரிகளையும் தாமே விதிக்கும் அதிகாரத்தை மேற்கொண்டு விட்டிருக் கிறார்கள். இதனால் இங்கே இதுவரையில் கேள்விப்படாத வரிகளெல்லாம் இப்போது மக்கள் தலைமீது சுமந்து விட்டிருக்கின்றன. இறை வழிபாட்டுக்குப் பயன்படும் நீலோற்பலம், செங்கழு நீர் முதலான மலர்ச்செடிகள் பயிரிடவும் வரிகள் விதிக்கப்பட்டிருக்கிறது. சீன தேசத்தி லிருந்து கொண்டுவரப் பட்டதும் மங்கையர் சூடிக்கொள்வது மான மருக்கொழுந்து செடிக்குக்கூட வரி விதித்தாகிவிட்டது. கல்லால மரம் வளர்க்க வரி; கருஞ்சராங்கண்ணி பயிரிடவும் வரி; திருமணம் செய்துகொள்ளக் ‘கண்ணாலக் காணம்’ என்பதாக ஒரு வரி. இவை தவிர, தரிசு நிலம், ஊர்ப் பொது நிலம், ஊர்க்களம், நத்தப்பாழ், கடைத்தெரு, கோயில், குளம், குட்டை, மடம், சத்திரம், பள்ளி, நந்தவனம், மந்தைப்பட்டி, கன்றுமேய் பாழ், பெருவழி, ஓடை, ஊடறுத்துப்போன வாய்க்கால், பாறை, ஆற்றுப்படுகை, உடைப்பு, இடுகாடு, சுடுகாடு, இவ்விரண்டுக்கும் செல்லும் வழி முதலானவை யெல்லாம் வரி நீக்கம் செய்யப்பட்டவையாகும்; ஆனால் இவை அனைத்துக்குமே இப்போது தீர்வை விதிக்கப் பட்டிருக்கிறது. பிரமதேயம், தேவதானம், பட்ட விருத்தி, பள்ளிச்சந்தம், முற்றூட்டு நிலம் முதலான அறக்கட்டளை களும் பறிக்கப்பட்டுவிட்டன. தென்னை, பனை மரங்களை வெட்டினால் அவற்றின் அடிப்பாகங்களை அரசாங்கத் துக்குக் கொடுத்துவிட வேண்டும் என்பது சளுக்கியர் விதித்திருக்கும் ஒரு புதிய சட்டம். அறுவடை சமயத்தில் வரி வசூல் செய்ய வரும் அதிகாரிகளின் உணவுக்காக ‘நெடும்பறை’ என்ற ஒரு புது வரி. இதுவும் தவிர, ஆவணக் களரியில் பதிவு செய்து வைத்துக் காப்பாற்றப் பெறும் நிலவுடமைக்குரிய மூல பத்திரங்களைச் சளுக்கிய

அதிகாரிகள் அழித்தும் எரித்தும் விடுகிறார்கள். அவற்றின் அநுபோகப் பற்றொழுக்கை யொட்டிப் புதிய பத்திரங்கள் எழுதிக்கொள்ளவும் அவர்கள் தடுக்கிறார்கள். இப்படி வரிக்குமேல் வரியாகப் போட்டு அதர்ம வழிகளில் அவற்றை வசூலிக்க முற்படுவதால்தான் மக்கள் அவ்வரிகளைச் செலுத்தச் சக்தியின்றிக் கை விரிக்கிறார்கள். உடனே அவர்களுடைய சொத்துக்கள் சூறையாடப்படுகின்றன; நிலங்களும், தொழிற் பட்டறைகளும் பறிமுதலாகின்றன; வீடு வாசல்கள் தீக்கிரையாகின்றன...”

துக்க மேலீட்டால் தொண்டை கம்மிக் கரையப் பெருமூச்சுவிட்டு ஒரு விநாடி மௌனமாயிருந்த பரமேசுவர வர்மன் தழுதழுத்த குரலில் மேலும் கூறினான்: “இந்த விவரங் களையெல்லாம் நான் சொல்வதற்கு ஒரு முக்கியமான காரணம் இருக்கிறது, இளவரசி! மொழித் துறையில் பல மாபெரும் சாதனைகளை நிகழ்த்தித் தமிழகத்துக்கு உயர்வு தேடித் தந்த பெருமை பாண்டியருக்கு உண்டு; சமூகத் துறையில் பல நாகரிகச் சீர்திருத்தங்களைச் செய்து செம்மை படுத்திய புகழ் சோழருக்கு உண்டு; அரசியல் துறையில் மனிதாபிமான கண்ணோக்குடன் தர்க்க ரீதியான பல சட்ட திட்டங்களை வகுத்து முறைப்படுத்திக் கொடுத்த கீர்த்தி பல்லவருக்கே உரியது. அந்தச் சிறப்புமிக்க கீர்த்தியின் அஸ்தி வாரத்தையே அரசியல் நாகரிகம் தெரியாத சளுக்கியர்கள் இப்போது ஆட்டி அசைத்துத் தகர்த்தெறிந்து கொண்டிருக் கிறார்கள் என்பதை நினைக்கும்போதுதான் என் மனம் எரிமலையாகக் குமுறுகிறது. இறைவன் அருளால் எனது நாட்டினின்றும் சளுக்கியரின் ஆதிக்கத்தை அழித்தொழிப் பேன் என்ற நம்பிக்கையில் இருந்துவரும் நான், அவர்களுக்குப் பின் அவர்களால் விதிக்கப்பட்ட அநியாய வரிகளையும் அநாகரிகச் சட்டங்களையும் அறவே நீக்கிவிடலாம் என்றா லும், அவற்றின் துன்பமயமான வடுக்களை மக்கள் மனத்தி லிருந்து அகற்றுவதென்பது மட்டும் அத்தனை எளிதான

காரியமாய் இராதென்றே நினைக்கிறேன். ஏனென்றால், என்னையறியாமலே—எனக்குத் தெரியாமலே—அந்தக் கொடுமையான வரி விவரங்கள் கல்வெட்டுக்களிலும் பட்டய சாசனங்களிலும் இடம் பெற்றுவிடலாம். என் காலத்துக்குப் பின் வரப்போகிற பல்லவ மன்னர்களும் பிற தமிழரசர்களும் அவற்றைக் கண்ணுற்று என்னால் அவை விதிக்கப்பட்டதாக எண்ணி மீண்டும் அவ்வரிகளை நடைமுறைக்குக் கொண்டு வர முயற்சி செய்யலாம். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் வரப்போகிற தமிழ்ச் சமூகம் இதனை அறிய நேர்ந்தால் பல்லவரது ஆட்சி முறையைப் பற்றி என்ன நினைக்கும்? உலகிலேயே பல்லவர்கள்தாம் மிகக் கொடிய ஆட்சி நடத்தியவர்கள் என்று அது தூற்றிப் பேசும். இப்படி எனக்குப் பின் வரப்போகிற அரசர்களுக்கு ஒரு தவறான முன் மாதிரியாகவும், அப்போதைய குடிமக்களுக்கு ஒரு மாபெரும் தீங்காகவும், அவர்களுக்குப் பின்னால் வரப்போகிற நாகரிக உலகத்துக்கு எங்களைப்பற்றிய ஒரு பழிப்புப் பேச்சாகவும் அமையும் வகையில் இன்றைய பல்லவ நாட்டின் அரசியல் நிலை பாழ்பட்டுக்கொண்டு போகிறதே என்பதை எண்ணித் தான் மனம் புண்ணாகிக் கொண்டிருக்கிறேன்.”

அவன் பேசி முடிப்பதற்குள் ஜலதரங்கத்தைச் சுண்டி விட்டாற்போல் கலகலவென்று நகைத்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி. மமதையும், மிடுக்கும், குறும்பும், குத்தலுமாக அவனைப் பார்த்துக் ‘கலீர் கலீ’ரெனச் சிரித்தாள் அவள்.

ஏற்கனவே சினத்தால் சினந்து பழுத்து நின்ற பரமேசுவரவர்மன் அவளுடைய இந்த எகத்தாளச் சிரிப்பைக் கேட்டு மேலும் சினமுற்றவனாய் அவளை விழித்து நோக்கினான்.

“நல்ல நியாயம் இது! நகைக்கத் தெரியாதவர்கள்கூட இந்தப் பேச்சைக் கேட்டால் கைகொட்டி நகைக்க ஆரம்பித்து விடுவார்கள்!” என்று கூறித் தானே கைகொட்டி நகைத்தாள் உத்தமசீலி.

பரமேசுவரவர்மனின் கண்களில் அக்கினி ஜ்வாலை வீசியது. "என்ன சொன்னாய்? என் பேச்சு உனக்கு நகைப்பாகவா இருக்கிறது?"

"ஆமாம், அரசே! நீங்களே சிந்தித்துப் பாருங்கள். படை கொண்டு தாக்கிக் கைப்பற்றிய ஒரு நாட்டில், பல காலம் வஞ்சம் வைத்துக் குமுறிக்கொண்டிருந்த ஒரு மன்னன் தர்ம ஆட்சியா நடத்துவான்? தன் எதிரி நாட்டு மக்களிடம் அன்பும் பரிவும் கொண்டு—சத்தியத்துக்கும் நேர்மைக்கும் கட்டுப்பட்டு—வரிகளையும் சட்ட திட்டங்களையும் அவன் விதிக்க வேண்டும் என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்கலாம்? இது வரையில் எந்த ஒரு நாட்டிலும் எந்த ஒரு மன்னனும் அப்படி நடந்திருக்கிறானா? வஞ்சம், பொறாமை, மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை, பதவி வெறி, மதவெறி இவை தாமே ஒரு நாடு இன்னொரு நாட்டின்மீது போர் தொடுப்பதற்கு அடிப்படைக் காரணங்களாக இருக்கின்றன? இந்த அதர்ம நோக்கங்களால் உந்தப்பட்டுப் போர் தொடுத்த ஒருவன் வெற்றியும் பெற்றுவிட்டால் அவனிடம் அடிமைப் பட்ட நாட்டில் செங்கோல் ஆட்சியை எதிர்பார்க்க முடியுமா? கைப்பற்றிய நாடு தன் வசமே இருந்தாலாவது அவன் தனது சுயநலத்துக்காகவேனும் ஓரளவு தர்மத்துக்கும் நியாயத்துக்கும் கட்டுப்பட்டு நடப்பான். அந்த நம்பிக்கையே இல்லையென்றால், எரிகிற வீட்டில் பிடுங்கினவரையில் ஆதாயம் என்று பேயாட்டம் போடத்தானே செய்வான்?"

பனிப் பாறையில் மோதுண்டவன்போல் அப்படியே வெலவெலத்துப்போன பரமேசுவரவர்மன் அவளை விழி யசைக்காமல் நோக்கினான்.

"அரசே, தங்களிடம் இந்த கசப்பான உண்மையை எடுத்துச் சொல்வதற்காக மன்னிக்கவேண்டும்!... தங்கள் மதிப்புக்குரிய பாட்டனாரான நரசிம்மவர்மர் பழி தீர்க்கும் எண்ணத்தோடு சளுக்கியப் புலிகேசியின் மேல் படை யெடுத்துச் சென்று வாதாபி நகரைக் கைப்பற்றினாரே,

அப்போது அங்கே அவர் தர்மத்துக்கும் நியாயத்துக்கும் கட்டுப்பட்டா நடந்து கொண்டார்? அந்த அழகிய நகரின் மாட மாளிகைகளையும் கூட கோபுரங்களையும் இடித்துத் தரைமட்டமாக்கியதோடு நில்லாமல் அந்நகரையே தீயிட்டுப் பொசுக்கிச் சாம்பலாக்கி அந்தச் சுடுகாட்டின் மத்தியிலே தமது வெற்றி வாசகம் பொறித்த கல் தூணை நாட்டிவிட்டு வரவில்லையா? அவரது படைவீரர்கள் இன்னும் ஒரு படி மேலே சென்று பொன்னையும் பொருளையும் கொள்ளை யிட்டு, புகழ் மிக்க கலைஞர்களையும் எழில் வாய்ந்த கன்னியர் களையும் சிறைப்படுத்திக்கொண்டு வந்தார்களே, இவை யெல்லாம் தர்மத்துக்கும் நீதிக்கும் சத்தியத்துக்கும் உட்பட்ட செயல்கள் தாமா? உண்மை இவ்வாறிருக்க, தங்கள் பாட் டனார் நரசிம்மவர்மரைப்போலவே வஞ்சினம் கொண்டு படை பலத்தால் பல்லவ நாட்டைக் கைப்பற்றிக் கொண் டிருக்கும் சளுக்கிய விக்கிரமாதித்தர் இங்கே தர்ம ஆட்சி நடத்துவார்—அல்லது நடத்த வேண்டும்—என்று நீங்கள் எப்படி எதிர் பார்க்கலாம்? அப்படி நடத்தவில்லை என்பதை அறிந்து துக்கப்படுவதில் அர்த்தம் இல்லையே!"

வாயடைத்துப்போய் நின்ற பரமேசுவரவர்மன் வெட்கத்தால் தலைகுனிந்து விட்டான்.

# 84

## உயிரின் ஆராதனை

ஆடிவரும் பொன் விளக்குப்போல் அழகாக நடந்து வந்து பரமேசுவரவர்மனின் முகத்தைக் குறும்புப் புன்னகை யுடன் சாய்ந்து நோக்கிய உத்தமசீலி, "இதோடு நான் உங்களை விடப்போவதில்லை, அரசே! இன்னுமொரு கேள்வியையும் கேட்டு உங்களையே குற்றவாளியாக்கப் போகிறேன்" என்றவள் சட்டென்று நிமிர்ந்து நறுக்குத் தெறித்தாற்போல் சொற்களை வீசினாள்: "தங்களுக்குச் சொந்தமான நாட்டில் தங்களால் இரட்சிக்கப்படவேண்டிய மக்களை ஓர் அந்நியன் வந்து வரிக் கொடுமைகளாலும் நெஞ்சிரக்க மற்ற நீசத்தன மான கட்டளைகளாலும் அலங்கோலப்படுத்திச் சீரழிக் கிறான் என்பதை நேருக்குநேர் பார்த்துக்கொண்டும் கேட்டுக் கொண்டும் இத்தனை காலமாக உங்களால் எப்படிச் சும்மா யிருக்க முடிந்தது? உங்களைப் பத்து மாதம் சுமந்து, பெற் றெடுத்த அன்னை சிறைப்பட்டுக் கிடப்பதைக் கூட நீங்கள் இந்நாள்வரையில் எண்ணிப் பார்த்துக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லையே! சளுக்கிய விக்கிரமாதித்தரின் இப் போதைய கொடுங்கோலாட்சி, தங்களது புகழ் மிக்க பல்லவ குலத்தின்மீது பழிக்கரையைப் பூசிவிடுமே என்றுதான் நீங்கள் கவலைப்படுகிறீர்களே தவிர, இன்று கண்ணெதிரேயுள்ள உங்கள் நாடும் அதன் மக்களும் சொல்லொணா நரக வேதனைகளை அநுபவிப்பதுபற்றித் துயரப்படுவதாகவோ துடிப்புக்கொள்வதாகவோ தோன்றவில்லையே! ஒரு மாபெரும் நாட்டின் மன்னர் இப்படி ஆண்டி மனம் கொண்டு அடங்கிக் கிடப்பது ஏன்?"

நெருப்புக் கணைகளால் துளைக்கப்பட்டவன்போல் உடம்பை நெளித்துக்கொண்டு பின்னால் நகர்ந்த பரமேசுவர வர்மன், "எதிர்காலச் சரித்திரத்தை மனிதன் எழுதுவதில்லை; விதியே அதன் முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்கிறது! விதியை எதிர்த்து நிற்க நான் யார்?' என்று இத்தனை காலமும் வாளாவிருந்து விட்டேன், இளவரசி!" என்று அடைத்த குரலில் முணுமுணுத்தான்.

உத்தமசீலி இதைக் கேட்டுக் களுக்கென்று சிரித்தாள். "இன்றைய மனிதனின் சிந்தனைகளும் முடிவுகளும் செயல் களுமே நாளைய சரித்திரமாக உரு மாறுகின்றன அரசே!" என்று இனிய தொனியில் மென்மையாகச் சொன்ன அவள் மேலும் கூறினாள்: "அப்படி ஒரு முடிவுடன் நீங்கள் நீறு பூத்த நெருப்பாக இருக்கிறீர்கள் என்று தெரிந்துதான் அன்று அந்த ஜீனாலயத்துக் குளக்கரையிலே உங்களிடமே சொன்னேன், 'குகையை விட்டு வெளிவரும் சிங்கத்தைப்போல், கூட்டை விட்டு வெளிப்படும் ராஜாளியைப்போல், கட்டை அவிழ்த்துக் கொண்டு பாயும் காளையைப்போல், மதர்ப் படைந்து திமிறியோடும் யானையைப்போல் நீங்களும் உங்கள் சுய உருவிலே வெளிப்பட்டு வருவதைக்காண விரும்புகிறேன்' என்று."

ஓங்கிப் பெருமூச்சுவிட்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன் அவளைப் பரிதாபமாகப் பார்த்து, "உன்னுடைய அந்தப் பொன்னான கட்டளையை ஏற்று என் துறவு மனச் சட்டையை உரித்துப் போட்டுவிட்டு எழுந்து இன்றோடு மூன்று நாட்களாகின்றன, இளவரசி! ஆனால், சந்தர்ப்பமும் சூழ்நிலையும் என்னை இன்னமும் கட்டிப்போட்டு வைத்திருக்கின்றனவே, நான் என்ன செய்யட்டும்?" என்று கரகரத்தான்.

"ஓ... சந்தர்ப்பத்தையும் சூழ்நிலையையும் பற்றி நீங்கள் தவறாகக் கணக்குப் போட்டு விட்டிருக்கிறீர்கள் அரசே!

இப்போதுதான் அவை வெகு வாய்ப்பாகத் தங்களைத் தேடி வந்திருக்கின்றன."

"என்ன சொல்கிறாய், இளவரசி?"

"ஆம், அரசே! யானை கொழுத்தால் தன் தலைமீது தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்வதுபோல மண் ணாசை தலைக்கேறிவிட்ட சளுக்கிய விக்கிரமாதித்தர் முன் பின் யோசியாமல் பாண்டிய நாட்டின்மேல் படையெடுத் திருக்கிறார். நேற்றோ இன்றோ அந்தப் போர் மூண்டு விட்டும் இருக்கலாம். இத்துடன், அரசியல் ஞானமோ இராஜ தந்திரமோ சிறிதும் அறியாத ஆணவத் திமிர் படைத்த சளுக்கியத் தளபதி வில்வேலி, காஞ்சிக் கோட்டையைக் காவல் காத்துக்கொண்டிருந்த இளவரசன் விநயாதித்தனைப் பல்லவபுரத்துக்கு அழைத்துக் கொண்டுவந்து அங்கேயே இருக்கச் செய்திருக்கிறான். இவை தவிர, பல்லவ நாட்டில் ஆங்காங்கே நிறுத்தி வைக்கப்பெற்றிருந்த சளுக்கியப் படைகளும் நெல்வேலிப் போர் முனையில் போய்க் குவிந்துவிட்டன. அவர்களின் இந்த முட்டாள்தனமான செயல்களினால் இப்போது காஞ்சிமாநகர் உட்படப் பல்லவ நாட்டின் முக்கால் பகுதி எவ்விதப் பாதுகாப்புமின்றித் தாழில்லாத வீடுபோல் கட்டுக் காவலற்றுக் கிடக்கிறது. சிற்சில இடங்களில் சொற்பத் தொகையினராயுள்ள சளுக்கிய வீரர்களும், அவரவர் இஷ்டத்துக்கு வரித் தண்டல் அதிகாரி களாக மாறிப் பொன்னையும் பொருளையும் கொள்ளையடிப் பதிலேயே குறியாயிருக்கிறார்கள். இந்நிலையில், பல்லவ நாட்டின் வடக்கு எல்லை வழியாக ஒரு சிறு படையுடன் வந்தாலும் போதும்—ஒரே நாளில் காஞ்சிமா நகரைக் கைப்பற்றிக்கொண்டு, பிறகு ஒரு சில நாட்களில் இந்தப் பெருவளநல்லூர் வரையில்கூட முன்னேறிவிடலாம். தெற்கே பாண்டியப் படைகள் தாக்க, வடக்கிலிருந்து இன்னொரு படை நெருக்கினால், இடையில் அகப்பட்டுக் கொள்ளும் விக்கிரமாதித்தருக்கு மூச்சு விடக்கூட முடியாமல் போய்

விடும். இத்தனை அருமையான சந்தர்ப்பமும் சூழ்நிலையும் உங்களுக்கு வாய்த்திருக்கும்போது, அவை இல்லையே என்று கவலைப்படுகிறீர்களே?"

"இளவரசி, உன்னுடைய அரசியல் ஞானத்தைக் கேட்டு நான் பிரமிக்கிறேன். ஆனால், என்னுடைய நிலையை நீ இன்னமும் சரியாகப் புரிந்துகொண்டதாகத் தோன்ற வில்லை. ஆமாம், இளவரசி! இதோ பார், இரண்டு கைகளைப் பரக்க விரித்துத் தட்டும் ஒரு பரதேசிபோல் நிற்கிறேனே, இது உனக்குத் தெரியவில்லையா? இப்படிப்பட்ட தனி மனிதனாய் நிற்கும் நான் இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வது எங்ஙனம்? கீழே விழுந்தால் தூக்கிவிடக்கூட ஆள் இல்லாமல் நிற்கும் நான், படை பலம் கொண்ட விக்கிரமாதித் தனைப் படை திரட்டி வந்து தாக்குவது எப்படி? ஓர் இரகசியப் படை திரட்டும் வேலை இப்போது நடந்து கொண்டிருக்கிறது என்றாலும், அதில் பூரண வெற்றி கிடைக்குமா என்பதில் எனக்கே சந்தேகமாக இருக்கிறது. எனவேதான் சூழ்நிலை இடம் கொடுத்து விட்டால் மட்டும் போதாது, சூத்திரக் கயிறும் வேண்டும் என்கிறேன்" என்று துவண்ட குரலில் கரகரத்தான் பரமேசுவரவர்மன்.

உத்தமசீலி மௌனமாக நின்றாள். செதுக்கி நிறுத்திய பொற்சிலைபோல் ஆடாது அசையாது நின்ற அவள் மெல்ல நிமிர்ந்து அவனிரு கரங்களையும் மிருதுவாகப் பற்றித் தன் நெஞ்சகத்துக்குள் வைத்துக்கொண்டு அண்ணாந்த நிலையிலே அவனை ஏக்கத்துடன் பார்த்து, "அரசே! என்னை நீங்கள் நம்புகிறீர்களா?" என்று கண்களில் ஓர் அபூர்வ ஒளி மிளிரக் கேட்டாள்.

"என் உயிரை நான் நம்பாமல் இருக்க முடியுமா, கண்ணே! என் உயிர்கள் உயிரான உன்னை நம்பி, உனது அன்பையே தெய்வமென ஆராதிப்பதைத் தவிர இந்த ஜன்மத்தில் எனக்கு வேறு நினைவே இருக்க முடியாது!"

சடாரென அவன் அணைப்பிலிருந்து நழுவி விலகிய உத்தமசீலி எல்லையற்ற குதூகலத்துடன் கும்மாளியிட்டுச் சிரித்தாள். "என் இலட்சியம் வெற்றி பெற்றுவிட்டது! அது வெற்றி பெற்றேவிட்டது! வாருங்கள் பிரபு! தனி மனிதராக நிற்கும் தங்களுக்கு எது தேவையோ அதைப் பெற்றுத் தருகிறேன், வாருங்கள்!" என்றவாறு அவனுடைய வலக் கரத்தைப் பற்றிக்கொண்டு சேதியக் கலைஞரின் இல்லத்தை நோக்கிச் செல்லத் திரும்பினாள்.

"ஹா!... ஐயோ!"

பயங்கரமான இந்த அலறல் ஒலி திடீரென்று எழுந்து அந்தப் பிரதேசத்தையே கிடுகிடுக்கச் செய்தது. பரமேசுவர வர்மனும் உத்தமசீலியும் பரபரப்புடன் பின்னால் திரும்பிப் பார்த்தனர்.

அங்கே, அந்த வழுக்குப் பாறையின் பின்புறத்தே, தோளில் பாய்ந்த குத்துவாளுடன் இரத்தம் கொப்புளிக்க வெட்டிப் போட்ட வாழை மரம்போல் சாய்ந்து துள்ளித் துடித்துக் கொண்டிருந்தார் சளுக்கியத் தளபதி வில்வேலி! அவருக்குப் பின்னால் யாரோ ஒரு மனித உருவம் நாணற் புதர்களுக்கிடையே ஒளிந்து ஓடுவது தெரிந்தது!

# 85

## 'பகைவனுக்கு அருள்வாய்!'

அதிர்ச்சியுற்றுப் பிரமித்து நின்ற பரமேசுவரவர்மன் அந்தப் பாறையை நோக்கி விரைந்து செல்ல முற்பட்ட போது, அவன் பின்னால் நடுநடுங்கி நின்றுகொண்டிருந்த உத்தமசீலி சட்டென்று அவனுடைய கையைப் பற்றி, "வேண்டாம், அரசே! நீங்கள் அங்கு போகாதீர்கள்!" எனக் கீச்சுக் குரலில் படபடத்தாள்.

அவன் அவளைத் திரும்பிப் பார்த்தான். ஏதும் பேசாமல் தன்னை மீறிய ஒரு துடிப்போடு பாறையின் மறு பக்கத்தை நோக்கிச் சென்றான்.

சந்தேகமில்லை; சளுக்கியத் தளபதி வில்வேலிதான் அங்கே குப்புற வீழ்ந்து பிணம்போல் கிடந்தார். அவரது வலப் புஜத்தில் குத்துவாள் ஒன்று ஆழமாகப் புதைந்து குத்திட்டு நின்றது. அதிலிருந்து இரத்தம் பீறிட்டுக் கொட்டி அவர் முகத்தைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தது. அவருக்குச் சற்றுத் தொலைவில் மற்றொரு குத்துவாள் பளபளத்துக் கொண்டு கிடப்பது தெரிந்தது.

இடுப்பின்மேல் இரு கைகளையும் ஊன்றியவாறு நின்று அவரையே ஒரு கணம் கூர்ந்து பார்த்தான் பரமேசுவரவர்மன். அவனது அடிமனத்தின் ஆழத்திலிருந்து சோகப் பெருமூச்சு ஒன்று விலாவை மோதிக்கொண்டு வெளிப்பட அவலப் புன்முறுவல் பூத்தான். பிறகு சிறிதும் அச்சமோ பதற்றமோ இன்றி வில்வேலியின் அருகில் போய் ஒற்றை முழந்தாளிட்டு

உட்கார்ந்து அவரது தோளில் புதைந்து நின்ற குறுவாளை வெடுக்கெனப் பிடுங்கி ஆற்றுக்கு அப்பால் வீசியெறிந்தான்.

'ஹா' என்ற முனகல் ஒலி. வில்வேலிதான் அப்படி வலி பொறுக்கமாட்டாமல் ஓலமிட்டார். கத்தி பாய்ந்த புஜத்தில் இரத்தம் குபுகுபுவெனப் பொங்கி நுரைத்தது. ஒரு சகோதரனுக்குரிய பாசப் பரிவோடு தன் மேல் ஆடையின் ஒரு பகுதியைக் கிழித்துக் கத்திக் காயத்தில் வழியும் குருதியைத் துடைத்து அதன்மேல் கட்டுப்போட்டுவிட்டு, மண்ணில் புதைத்திருந்த அவர் முகத்தை மெல்லப் புரட்டிக் குனிந்து பார்த்தான் பரமேசுவரவர்மன். அதில் மரணச் சாயை விரவி வருவது தெரிந்தது. பல்லவ மன்னனின் உடலில் ஒரு பரபரப்பு. சட்டென்று பின்னால் திரும்பித் தொலைவில் நின்ற உத்தம சீலியை நோக்கி, "இளவரசி! சீக்கிரம் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா! விரைவில் வேணும். இளவரசி!" என்று பட படத்தான்.

புழுக்கமிட்ட மதியப் போதில் துவண்டு நிற்கும் முல்லைக் கொடிபோல் அசையாமல் நின்று கொண்டிருந்த உத்தமசீலி இதைக் கேட்டு வெறுப்பும் சினமுமாக முகத்தைத் திருப்பிக்கொண்டு, "அந்தக் கொடிய பாவிக்கு ஒரு சொட்டுத் தண்ணீர் கொடுத்தாலும் அது கோடி பாவங்களுக்குச் சமமாகும்! அவன் சாகட்டும்! துடிதுடித்து மடியட்டும்!" என்று சீற்றத்துடன் கூறினாள்.

பரமேசுவரவர்மனின் முகத்தில் இளநகை தவழ்ந்தது. அவன் அங்கிருந்து அமைதியாக எழுந்துபோய் ஆற்று நீரைக் கை நிறைய அள்ளி வந்து தளபதி வில்வேலியின் முகத்தில் தெளித்து அவர் வாயிலும் கொஞ்சம் புகட்டினான்.

சில வினாடிகளுக்குப் பின் வேதனைப் பொருமலோடு மெல்லக் கண் திறந்த வில்வேலி மரண பயத்துடன் அங்கு மிங்குமாகப் பார்த்தார். பிறகு, தம்மையே பார்த்துக் கொண்டு நின்ற பல்லவ மன்னனை மிரள மிரள நோக்கினார். அவர் உடலில் அவரையும் மீறிய ஒரு நடுக்கம் புரண்டது. குருதிச்

சேற்றின் கிடந்த தம் கரங்களை நெஞ்சுக்கு நேரே நிமிர்த்திக் குவித்து, "ஐயா! என்னைக் கொல்லப் போகிறீர்களா? வேண்டாம்! வேண்டாம்!" என்று பயப் பிராந்தியுடன் நாக் குழறக் கெஞ்சிக் கரைந்தார் அவர்.

பரமேசுவரவர்மன் இதைக் கேட்டு மெல்லச் சிரித்தான். "அஞ்சாதீர்கள் வீரரே! உங்கள் உயிருக்கு நான் ஒரு கெடுதலும் செய்யமாட்டேன்" என்று வேதனை செறிந்த குரலில் கூறி மீண்டும் சிரித்தான் அவன்.

வில்வெளி மிரட்சியுடன் திருதிருவெனப் பார்த்துக் கொண்டே எழுந்திருக்க முயன்றார். கத்திக் காயத்தின் கட்டுத் தளர்ந்து மறுபடியும் இரத்தம் ஊற்றெடுத்தது. அவர் மயங்கி மண்ணில் சாய்ந்தார். பிரக்ஞை பிசகிவிட்டது. பிணம்போல் அப்படியே கிடந்தார்.

"எவ்வளவு பெரிய வீரனாக இருந்தால் என்ன? மரண பயம் அவனையும் விடாது போலும்!" என்று தனக்குள் தணி வாக முணுமுணுத்துக்கொண்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். சற்றுத் தூரத்தில் ஒரு கரு வேல மரத்தடியில் குதிரையொன்று அரண்டுமிரண்டு நின்று கொண்டிருந்தது. அது வில்வேலியின் குதிரையாகத் தான் இருக்கவேண்டும்.

ஒரு விநாடி யோசனைக்குப் பின் ஏதோ முடிவுக்கு வந்தவனாய் மூர்ச்சித்துக் கிடந்த வில்வேலியைக் குண்டுக் கட்டாய்த் தூக்கிக்கொண்டு அந்தக் குதிரையை நோக்கி நடந்தான் பரமேசுவரவர்மன். அவனைக் கண்ட குதிரை மிரண்டு ஓட முற்பட்டது. அதைப் பிடித்து நிறுத்திச் சாந்தப் படுத்திவிட்டு அதன் முதுகில் வில்வேலியை உட்கார வைத்தான். சவ நிலையிலிருந்த அவரது உடல் துவண்டு குதிரையின் பிடரியில் சாய்ந்தது. அப்படிச் சாய்ந்த வாக்கி லேயே அமர்த்திச் சேணக் கசைகளால் அவரைக் குதிரையின் முதுகோடு பிணைத்துக் கட்டினான். பிறகு குதிரையை நடத்தி அழைத்தவாறு பெருவளநல்லூர் சாலையை நோக்கி நடந்தான்.

மாலை முதிர்ந்து மந்தார நிழல் படர்ந்து வந்த அந்த நேரத்தில் பெருவளநல்லூர் சாலையை அடைந்த அவன், குதிரையைப் பல்லவபுரம் சாலைப் பக்கமாகத் திருப்பி அதைத் தட்டிவிட்டான். மறுகணம் அந்தக் குதிரை பயங்கர மாக ஒரு கனைப்புக் கனைத்துக்கொண்டே சதை மூட்டை யாகத் தன் முதுகில் கட்டுண்டு கிடந்த வில்வேலியைச் சுமந்துகொண்டு பல்லவபுரத்தை நோக்கி வளியென விரைந்தோடியது.

அப்படி ஓடிய அந்தப் புரவியையே சற்றுநேரம் பார்த்துக்கொண்டு நின்ற பரமேசுவரவர்மன் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டவாறு சிற்றாற்றங்கரைக்குத் திரும்பி நடக்கலானான்.

அடித்து நிறுத்திய கற்சிலைபோல் அதே இடத்தில் திகிலடைந்து நின்றுகொண்டிருந்தாள் உத்தமசீலி.

“இளவரசி! இன்னமும் நீ இங்கேயே இருக்கிறாய்? கலைஞரின் இல்லத்துக்குப் போய்விட்டிருப்பாய் என்றல்லவா நினைத்தேன்!” என்று இளஞ்சிரிப்புடன் கேட்டுக் கொண்டே அவளருகில் வந்து நின்றான் பரமேசுவர வர்மன்.

அவனைக் கோபமாக விழித்துப் பார்த்த உத்தமசீலி மளுக்கென்று வேறு பக்கம் திரும்பி நின்றுகொண்டு, “அந்தக் கொடிய விஷப் பாம்புக்கு நீங்கள் உதவி செய்திருக்கக் கூடாது அரசே! அவனை அங்கேயே கொன்றிருக்க வேண்டும்! அல்லது அவன் சாகும்படியாவது விட்டிருக்க வேண்டும்?” என்று கடுகடுத்த குரலில் கூவினாள்.

பரமேசுவரவர்மன் இதைக் கேட்டு இதமாகச் சிரித்தான். “அது எப்படி முடியும் கண்ணே? மரணாவஸ்தைப் பட்டு உயிருடன் போராடிக்கொண்டிருக்கும் ஒருவனுக்கு உதவி செய்ய வேண்டியது நம் கடமையல்லவா?” என்று அவள் முகத்துக்கு நேரே மெல்லக் குனிந்து கேட்டான்.

"அவன் உங்கள் எதிரி! உங்களுடைய ஜன்ம எதிரியையே ஆட்டி வைத்துக்கொண்டிருக்கும் சூத்திரதாரி அவன். அந்த அதர்மனுக்கு உதவி செய்வதே ஓர் அதர்மமாகும்" என்று முன்னைவிட ஆக்ரோஷத்தோடு இரைந்தாள் உத்தமசீலி.

பரமேசுவரவர்மன் அவளை மென்மையாகப் பற்றித் தன் பக்கம் திருப்பிக்கொண்டு அவளது இளநுங்கு போன்ற மோவாயைத் தூக்கி அமைதியாகச் சொன்னான்; "அப்படி யல்ல கண்ணே! சளுக்கியத் தளபதிதான் என் எதிரி; வில்வேலி என் சகோதரன். அநந்தகோடி மனித ஜீவன்களில் என்னைப் போலவே அவனும் ஓர் அங்கத்தினன். அதனால் அவனுக்கு நேர்ந்த துன்பம் எனக்கு நேர்ந்தாற்போலவே எண்ண வேண்டியது என் கடமை. எந்தத் தனி மனிதனையும் என் எதிரியாக எப்போதுமே நான் நினைப்பதில்லை. புற வாழ்க்கையில் நேரும் கோபதாபங்களை அக வாழ்க்கையில் சம்பந்தப்படுத்திக்கொள்வதும் இல்லை. 'இன்னா செய்தாரை ஒறுத்தல், அவர் நாண நன்னயம் செய்துவிடல்' என்று எங்கள் தமிழ்மறை கட்டளையிட்டிருக்கிறது. நான் நம்பும் சமயமும் இதனையே எனக்குப் போதித்திருக்கிறது. இதே வில்வேலி யைப் போர்க்களத்தில் வாள் முனையில்—சந்தித்திருந்தால் அப்போது நான் நடந்து கொள்ளும் முறையே வேறு விதமாக இருந்திருக்கும். கரும்புக் கழியை நறுக்குவதுபோல் வீச்சுக்கு ஒரு துண்டாக வெட்டி வானத்தில் வட்டமிடும் பருந்துக்கு விருந்து வைத்திருப்பேன். அது யுத்த தர்மம். இப்போது நான் செய்ததோ மனித தர்மம்."

இப்படிக் கூறி அழகாகச் சிரித்த அவன் சட்டென்று முகம் வெளுக்க அடைத்த குரலில் மேலும் சொன்னான்: 'உன்னைத் தேடிவந்த அவன், உன்னுடன் நானும் இருப்பதைக் கண்டு நம் இருவரையும் ஒரே கத்தியால் ஒழித்துக் கட்ட அந்த வழுக்குப் பாறைக்குப் பின்னால் மறைந்திருந்தான் என்பதை நான் அறியாமல் இல்லை, இளவரசி! ஆயினும் அவனுடைய

எண்ணத்தை வேறு யாரோ குலைத்த பின் தனது சாவைக் கண்டு அஞ்சி என்னைக் கையெடுத்துக் கும்பிட்ட பின்னும் நான் அவனைப் பழி தீர்க்க முயன்றிருப்பேனாகில் என்னைப் போன்ற ஒரு கோழையை—கொடிய நெஞ்சம் கொண்டவனை —வேறு எங்குமே பார்க்க முடியாது என்றாகி விட்டிருக்கும். இந்த உலகமே எனக்குச் சொந்தமாவதானாலும் அத்தகைய இழிநிலைக்கு நான் ஒருபோதும் தாழ்ந்து போய்விட மாட்டேன்."

வியப்பின் எல்லை கடந்தவளாய் அவனை வைத்த விழி வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தாள் உத்தமசீலி.

'ஐயோ! இத்தனை காலமாக என் சமயக் கொள்கைகளை அணுவும் பிசகாமல் கைக்கொண்டு ஒழுகிவந்த நான் இப்போது அதன் தலையாய நெறியை எத்தனை எளிதாகக் காற்றில் பறக்க விட்டுவிட்டேன்! வில்வேலியைப் பழிவாங்க வேண்டும் என்று சொன்னதன் மூலம் என் சமயத்தின் அடிப்படை தர்மத்தையே மீறிப் போய்விட்டேனே! சைவ சமயத்தைச் சார்ந்த அவரல்லவா இப்போது உண்மையான சமணவாதியாக உயர்ந்து நிற்கிறார்! அன்று திரமிள சமண சங்கத் தலைவர் சம்பந்தபத்திரர் இவரைப்பற்றிச் சொன்னாரே, அது எவ்வளவு பேருண்மை!' வேர்த்து விறுவிறுத்து ஒடுங்கி முடங்கிய உத்தமசீலி தழுதழுத்த குரலில், "தயவுசெய்து என்னை மன்னியுங்கள் பிரபு! ஆத்திரத்தில் அறிவு மழுங்கி ஏதோ சொல்லிவிட்டேன்" என்று கழிவிரக்க மிகுதியால் குழறினாள்.

அன்பின் ஆவேசத்தோடு அவளை அணைத்துத் தழுவிய பரமேசுவரவர்மன், "கவலைப்படாதே, கண்ணே! உன்னுடைய இயற்கை மனப்போக்கு என்ன என்பதை நான் அறிவேன். வில்வேலி உனக்கு இழைத்த பெருங்கொடுமையின் வேதனை இன்னமும் உன்னிடம் மறையாமல் இருப்பதாலேயே அப்படி உன் சுபாவத்தை மீறிக் கடுமையாகப் பேசி விட்டாய். நம் மனத்துக்கு இரவு பகல் போன்ற இரண்டு

தன்மைகள் உண்டு. கோபம், வஞ்சம், பொறாமை முதலிய கொடிய உணர்ச்சிகளுக்கு நாம் உள்ளாகும்போது மனத்தின் இருண்ட பகுதி செயல்படத் தொடங்குகிறது. அந்த இருண்ட பகுதியைச் செயலற்றதாக வைத்திருப்பதிலே தான் நம்முடைய இகவாழ்க்கையின் வெற்றியே அடங்கியிருக்கிறது. சரி; நேரமாகிறது. வா, போவோம்!" என்றவாறு மெல்ல நடக்கலானான்.

ஐந்தாறு அடியெடுத்து வைத்த உத்தமசீலி சட்டென்று நின்று பல்லவ மன்னனின் கரத்தை இழுத்துப் பற்றியவாறு, "அங்கே பாருங்கள், அரசே!..." என்று திகிலுடன் குழறினாள். நிதானமாகத் திரும்பிய பரமேசுவரவர்மனும் திடுக்குற்று நின்றான்.

அங்கே, இருநூறுக்கும் மேற்பட்ட சளுக்கிய வீரர்கள் ஈட்டி-கத்தி ஏந்தியவர்களாய்க் குதிரைகள்மீது வாயு வேகமாக வந்து கொண்டிருந்தனர்.

"என்ன இது பிரபு? எதற்காக இந்தச் சளுக்கிய வீரர்கள் இப்படி வெறிகொண்ட பேய்கள்போல் விரைந்து வருகிறார்கள்?" என்று அச்சத்தால் குரல் நடுங்கக் கேட்டாள் உத்தமசீலி.

அதற்குள் அந்தக் குதிரைப் படை பெருவளநல்லூர்ச் சாலையில் திரும்பிச் சென்று சேதியக் கலைஞரின் இல்லத்தை நோக்கிப் பறந்தது.

ஓங்கிப் பெருமூச்சுவிட்ட பரமேசுவரவர்மன் மெல்லத் தலையசைத்து, "ஓகோ! பின்னால் தன் படை வீரர்களை வரச் சொல்லிவிட்டு முன்னால் வந்திருக்கிறான் வில்வேலி; அவனுக்கு நேர்ந்த கதியை வழியில் கண்டறிந்து நம்மை வளைத்துப் பிடிக்கவோ, அல்லது சேதியக் கலைஞரின் இல்லத்தை முற்றுகையிடவோதான் அந்தக் குதிரைப்படை அத்தனை வேகமாக வருகிறது போலும்!" என்றான் கலவரத்துடன்.

"என்ன சொன்னீர்கள், அரசே! சேதியக் கலைஞரின் இல்லத்தை வளைத்துக்கொள்ளப் போகிறார்களா?..... ஐயையோ!...அங்கே...அங்கே...என் உயிர்ப்பொருள் ஒன்று இருக்கிறதே!" என்று பதறியவாறு அங்கிருந்து ஓட முயன்றாள் உத்தமசீலி.

அதிர்ச்சியுடன் பரமேசுவரவர்மன் பாய்ந்து போய் அவளை வளைத்துப் பற்றி, "எங்கே போகிறாய், இளவரசி? வேண்டாம்! நீ அங்கே போக வேண்டாம்! போனால் ஆபத்து நேரும்! சொல்வதைக் கேள்!" என்று படபடத்தான்.

"தடுக்காதீர்கள், அரசே! நான் போய்த்தான் ஆக வேண்டும்! தயவு செய்து என்னைத் தடுக்காதீர்கள்!" என்று கூறிக்கொண்டே தன் பூவுடலை முறுக்கித் திமிறி அவனது பிடியிலிருந்து நழுவிக்கொண்டு சேதியக் கலைஞரின் இல்லத்தை நோக்கி கண்மண் தெரியாமல் ஓடினாள் உத்தமசீலி.

சற்றுத் தூரம் அவள் பின்னாலேயே ஓடிய பரமேசுவர வர்மன் பிரமை பிடித்தவன்போல் அப்படியே திகைத்து விறைத்து நின்றுவிட்டான்.

# 86

# நந்தி இலச்சினை

**கா**ணும் இடமெல்லாம் ஒரே காரிருளாக இருண்டு கிடந்த அந்த நிலவறையின் படிக்கட்டில் மயங்கிப் படுத்துக் கிடந்த இளங்காரிக்குடையான் தட்டுத்தடுமாறி எழுந்து உட்கார்ந்தான். பசி அவன் காதை அடைத்தது; தாகம் தொண்டையை வறளச் செய்தது. கண்கள் இருண்டு, ஏற்கனவே இருள் மண்டிக் கிடந்த அந்த நிலவறையை இன்னும் இருட்டாக்கிக் காட்டின. தலை சுற்றியது. சிந்திக்கும் திராணியையே சிறுகச் சிறுக இழந்துகொண்டிருந்தான் அவன். எத்தனை இரவு, எத்தனை பகல் கழிந்திருக்கிறதென்ற கணக்குக்கூட அவனுக்குத் தெரியவில்லை. எங்கும் அந்தகாரமே விரிந்து கிடந்த அந்த இருட் குகையில் இரவாவது, பகலாவது!

அவன் தன் தாயை நினைத்தான், அடிமைப்பட்டுக் கிடக்கும் தனது அருமை நாட்டை நினைத்தான். தன் உயிரைவிட மேலாக நேசித்துப் போற்றிய பல்லவ மன்னனையும், பல்லவ இளவரசனையும், சந்திரலேகைச் சிற்றரசையும் நினைத்தான். அவனது கண்கள் குளமாயின. 'அவர்களுக்கு என்ன கதி நேர்ந்ததோ?' என்று எண்ணிய போது அவன் வாய்விட்டு அலறிக் கதறிவிட்டான். திடீரென்று பழயாறைச் சோழரின் நினைவு வந்தது. அந்த நினைவையொட்டிப் பரவாதிமல்லரையும் நினைத்தான். பயங்கரமாகப் பற்களைக் கடித்து, "பாவிகள்! அந்தத் துரோகி கள் மட்டும் இப்போது என் எதிரே வந்தால் ஒரே பாய்ச்ச லாகப் பாய்ந்து அவர்களுடைய குரல்வளையைக் கடித்து

இரத்தத்தை உறிஞ்சிவிடுவேன்!” என்று உறுமிக் கர்ஜித்துக் கொண்டே திமிறி எழுந்தான். மறுகணம் தடாலெனக் கீழே சாய்ந்தான். அப்படிச் சாய்ந்தவன் கடகடவெனப் படிகளில் உருள ஆரம்பித்து விட்டான்.

உருண்டுகோண்டே போன இளங்காரி ஓரிடத்தில் மடாரென முட்டிக்கொண்டான்.

என்ன ஆச்சரியம்! அவன் விழுந்த இடத்தில் பளிச்சென ஒரு வெளிச்சம் வந்து விழுந்தது.

அவன் துடித்துப் பதறி எழுந்தான். கண்களைக் கசக்கி விட்டுக்கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தான். எங்கோ மேலே யிருந்து அந்த ஒளிக்கற்றை கீழ்நோக்கி வந்து கொண்டிருந்தது. அது விளக்கின் ஒளி அல்ல; மங்கிய மாலைப் போதின் சன்னமான ஒளிதான்; ஆனால் இரண்டு நாட்களாக ஒளியையே ஸ்பரிசிக்காத அவன் கண்களுக்கு அந்த மங்கிய ஒளி கோடி சூரிய ஒளியாகப் பிரகாசித்தது.

பரபரப்புடன் அங்குமிங்குமாகப் பார்த்தான் இளங்காரி. பழையாறைச் சோழன் சொன்னது அவ்வளவும் உண்மைதான்; அந்தப் பிரம்மாண்டமான நிலவறையெங்கும் போர்க்கருவிகளாகவே குவிக்கப்பட்டிருந்தன!

கணையம், கோல், குத்தம், சதக்னி, தள்ளி வெட்டி, களிற்றுப் பொறி, எரிசிரல், ஐயவித்துலாம், தொடக்கு, ஆண்டலை, கல்லுமிழ், கவண், கருவிரலூகம், மழு, வாள், கவசம், தோமரம், கதை, தண்டம், நாராசம், இருப்பு முள், கழுமுள், கூன்வாள், சிறுவாள், கொடுவாள், அரிவாள், குத்துவாள், குறுவாள், ஈர்வாள், உடைவாள், கைவாள், சுழல்படை, கோடரி, தோட்டிவேல், வச்சிரம், குறுந்தடி, ஈட்டி, கவண், சிறுசவளம், பெருஞ்சவளம், சக்கரம், கன்னம், உளி, பாசம், தாமனி, சாலம், ஊசிமுசுண்டி, முசலம், இடங்கணி, அள்பகை—அடேயப்பா! எத்தனை வகையான போர்க் கருவிகள்! கண்ணுக்குப் புலனானவை இவ்வளவே; இன்னும்

என்னென்ன கருவிகள் எங்கெங்கே குவித்து வைக்கப் பெற்றி ருக்கின்றனவோ!

திக்குமுக்காடித் திணறி நின்ற இளங்காரி தன் அருகில் குவிந்திருந்த கைவாள் குவியலில் ஒரு வாளை எடுத்து மங்கிய வெளிச்சத்தில் பார்த்தான். அந்த வாளின் கைப்பிடியில் புதிதாகப் பல்லவ நந்தி இலச்சினை பொறிக்கப்பட்டிருந்தது.

வியப்பு மேலிட்டனவாய் வேறொரு கருவியை எடுத்துப் பார்த்தான். அதிலும் நந்திச் சின்னமே பதிக்கப்பட்டிருந்தது. மேலும் சில கருவிகளை எடுத்து நோக்கினான். எல்லா வற்றிலும் நந்தி இலச்சினை பளிச்சிட்டுக் கொண்டிருந்தது. வீரர்கள் அணிவதற்கென்று புலித் தோலாலான கவச அணிகளில் ஒன்றை எடுத்துப் பார்த்தான். அந்த அணியிலும் நந்தி முத்திரையே குத்தப் பெற்றிருந்தது.

அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. 'சளுக்கியருக்காகப் பழையாறைச் சோழர் திரட்டி வந்து குவித்திருக்கும் இந்தப் போர்க் கருவிகளிலும், போர்க் கவசங்களிலும் பல்லவருக் குரிய நந்தி இலச்சினை பொறிக்கப்பட்டிருப்பது ஏன்? சளுக்கியரின் வராகச் சின்னமோ, சோழரின் புலிச் சின்னமோ அல்லவா இவற்றில் பதிக்கப் பெற்றிருக்க வேண்டும்?'

குழம்பி நின்ற அவன் தன் எதிரே தெறிந்திருந்த ஒளி சிறுகச் சிறுக மங்கலாவதைக் கண்டு திகிலுற்றவனாய் அங்கு மிங்கும் திரும்பிப் பார்த்தான். தான் வந்த வழி இருண்டு கிடக்க, எதிர்ப்பக்கம் செங்குத்தான படிக்கட்டு ஒன்று இருப்பது இலேசாகப் புலப்பட்டது. அந்தப் படிக்கட்டின் வழி யாகவே அவ்வெளிச்சம் வந்து இப்போது சுருங்கிக் கொண்டி ருப்பதாகவும் தோன்றியது.

இளங்காரி தன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டு அந்தப் படிக்கட்டை நோக்கி விரைந்தோடினான். இரண்டோர் இடங்களில் பலமாக முட்டி மோதியும் கொண்டான். உடலின் பல இடங்களில் சிராய்ப்பு ஏற்பட்டுக் குருதி கசிவதை அவன் சில்லென்ற ஸ்பரிசத்தால் உணர்ந்து

கொண்டான். ஆயினும் அதையெல்லாம் பொருட்படுத் தாமல் மூச்சைப் பிடித்துக்கொண்டு மளமளவென மேலே ஏறினான்.

நீண்ட நேர நடையேறலுக்குப் பின் தடாலென்று ஓர் அறையில் வந்து விழுந்தான் அவன். விழுந்த அதே வேகத்தில் துள்ளி எழுந்து நின்று சுற்றுமுற்றும் பார்த்தான்.

அது ஓர் அழகிய பூஜை அறையாக விளங்கியது. ஆமாம்; சேதியக் கலைஞரின் இல்லத்தில் பல்லவ மன்னனுக்காக அமைந்திருந்த பூஜை அறைதான் அது. அந்த அறையின் ஒரு முக்கோண பெரிய மாடமே அந்நிலவறைக்கு மறு வழியாய் இருந்தது. அந்த முக்கோண மாடத்தின் முகப்பிலும் ஒரு செப்புச் சிலை விளக்கு ஏந்தி நின்றுகொண்டிருந்தது.

குளிர்ந்த காற்றை ஓங்கி இழுத்துச் சுவாசித்ததால் ஓரளவு தென்பு பெற்ற இளங்காரி அவ்வறையை விட்டு அடுத்த கூடத்து அறைக்குப் பாய்ந்து வந்தவன் ஏதோ பயங்கரக் காட்சியைக் கண்டவன் மாதிரி அப்படியே மிரட்சியுற்று நின்றுவிட்டான்.

ஆம்; அந்தச் சேதியக் கலைஞரின் இல்லத்தை வளைத்துச் சூழ்ந்துகொள்வதற்காக நாலாபுறமிருந்து சளுக்கிய வீரர்கள் வாயு வேகமாகத் தம் குதிரைகளைச் செலுத்தி வந்து கொண்டிருந்தார்கள்! இந்நிலையில், சிற்றாற்றங்கரைப் பக்கமிருந்து ஒரு பெண் அந்த இல்லத்தை நோக்கி தலைதெறிக்க ஓடி வந்துகொண்டிருந்தாள்.

'யார் அந்தப் பெண்? ஆந்திர இளவரசி உத்தமசீலி அல்லவா அவள்?'

குலைநடுக்கம் கொண்டுவிட்ட இளங்காரி குபீரெனப் பாய்ந்து சாளரத்துப் பின்புறத் தோட்டத்துப் பக்கமாக ஆற்றங் கரையை நோக்கி வேகமாக ஓட்டமெடுத்தான்.

# 87

# புற்றில் சிக்கிய தேரை

**சே**தியக் கலைஞர் பரவாதிமல்லரின் பிரார்த்தனை அறைக் கதவுகள் படீரெனத் திறக்கப்பட்டன. விடுபட்ட அம்புபோல் தறிகெட்டு ஓடிவந்து அவ்வறைக்குள் புகுந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி தன்னைமீறிய பரபரப்புடன் அங்குமிங்குமாகச் சுழன்று பார்த்தாள். பிறகு சடாரெனத் தாவியோடிப் போய் அந்த அறையில் தொங்கவிடப் பட்டிருந்த—சமணரின் 'பிறவிச் சக்கரமான' ஸ்வஸ்திகச் சின்னம் பொறித்த—நீல நிறத் திரைக்குப் பின்னாலிருந்து வெகு பத்திரமாக மறைத்து வைத்திருந்த ஓலைக் குழலொன்றை எடுத்துக்கொண்டு திரும்பி நின்றவள், அதைத் திறந்து ஒரு பட்டோலையைப் பிரித்து, மிரண்டு சுழலும் தன் பார்வையை அதில் படர விட்டாள். முகத்தில் வெற்றிக் களிப்பு!

பட்டோலையைச் சுருட்டிக் குழலில் அடைத்து மூடித் தன் கொடியிடையில் செருகிக்கொண்டு அதே பரபரப்புடன் கூடத்து அறைக்கு ஓடி வந்தாள்.

சளுக்கியக் காவல் வீரர்களில் ஒரு பகுதியினர் அப்போதுதான் அந்த இல்லத்து வேலியின் வாயிலை நெருங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. இந்தச் சமயம் அவள் முகப்புக் கதவைத் திறந்துகொண்டு வெளியேறினால் அவர்கள் கண்ணில் நிச்சயமாகத் தென்பட்டுவிடுவாள்!

தவிதவித்து நின்ற உத்தமசீலி சடாரென்று திரும்பி இடது பக்கமிருந்த ஓர் அறைக்குள் ஓடி அதன் சாளரத்தைத்

திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள். சளுக்கிய வீரர்களில் மற்றொரு பகுதியினர் அந்தப் பக்கமாகவும் தொலைவில் வந்துகொண்டிருப்பது தெரிந்தது. அங்கிருந்து வலப் பக்க அறைக்கு ஓடிவந்த உத்தமசீலி, அந்தத் திசையிலிருந்தும் சளுக்கிய வீரர்களில் இன்னொரு பகுதியினர் வெறி வேகத் துடன் தம் குதிரைகளைச் செலுத்தி வருவதைக் கண்டு திகைத்து நின்றாள். என்ன செய்வதென்றே அவளுக்குப் புரிய வில்லை. நெஞ்சு வேகமாக அடித்துக்கொண்டது. கால்கள் நிலை கொள்ளாமல் பரபரத்தன. இறுதியில் அந்த இல்லத்தின் பின்புறச் சிறிய வாயிலை நோக்கி விரைந்து சென்றவள், கிரீச்சிட்டு அப்படியே நின்றுவிட்டாள்.

“வணக்கம், அம்மணீ!—ஆந்திர இளவரசியின் சிவிகை தூக்கியான நாகோதரன்தான் அச்சிறிய வாயிலின் வெளிப் புறச்சுவர் அருகில் விநயமாக நின்று கொண்டிருந்தான். தன் மதிப்புக்கும் அன்புக்கும் உரிய இளவரசியைச் சந்தித்து விட்ட மகிழ்ச்சி அவன் முகமெங்கும் பரவியிருந்தது.

ஸ்தம்பித்து நின்ற உத்தமசீலி உள்ளார்ந்த மகிழ்ச்சி யுடன், “என்ன நாகோதரா! இத்தனை நாளும் நீ எங்கே போய் இருந்தாய்? கடந்த இரண்டு நாட்களாக உன் வரவை எதிர் பார்த்து இங்கு காத்திருக்கிறேனே!” என்று படபடப்பான குரலில் வினவினாள்.

“மன்னியுங்கள், தாயே! அன்று தாங்கள் என்னை அந்த ஆதுரசாலையில் சந்தித்து ஓலையொன்றைக் கொடுத்து அதை ஆலம்பாக்கம் இளங்காரிக்குடையானின் இல்லத்தில் தங்கி யிருக்கும் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியிடம் சேர்ப்பித்து விட்டு நேரே இந்தப் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்துக்கு வருமாறு கட்டளையிட்டீர்களே, அதன்படி அன்றைக்கே ஆலம்பாக்கத்துக்குப் போய் சோழ இளவரசி இருந்த அறைக்குள் அவ்வோலையைப் போட்டு விட்டு அதன் விளைவு என்ன ஆகிறது என்பதைச் சாலையின் ஓரிடத்தில் மறைந்திருந்து கவனித்துக்கொண்டிருந்தேன். மறுநாள் விடியற்

சாம நேரத்தில் சோழ இளவரசி அந்த இல்லத்திலிருந்து வெளிப்பட்டு மதுரைக்குப் போகும் ஒரு கூலவாணிகனின் வண்டியில் ஏறிச் சென்றார். பிறகு நான் அங்கிருந்து பெருவளநல்லூருக்குப் புறப்பட்டேன். வரும் வழியில், திரமிள சமண சங்கத் தலைவரும் அவரது குழுவினரும் ஆதுர சாலையை மூடிவிட்டுக் காஞ்சியை நோக்கிச் செல்வதைக் கண்டு அவர்களிடம் போய் விவரம் விசாரித்தேன். சளுக்கியத் தளபதி வில்வேலியால் தங்களுக்குச் சங்கடம் நேரிடும் என்று அஞ்சி அகளங்க அடிகளைக் கூட்டிக்கொண்டு காஞ்சிக்கு அருகில் உள்ள திருப்பருத்திக்குன்றம் என்னும் ஊருக்குப் போவதாகச் சமந்தபத்திரர்சொன்னார். அத்துடன் என்னையும் சிறைப்பிடிக்கச் சளுக்கிய வீரர்கள் அலைந்து கொண்டிருப்பதாகத் தேரிவித்தார். நான் மிக எச்சரிக்கை யோடு என் பயணத்தைத் தொடர்ந்தேன். சமந்தபத்திரர் சொன்னது போலவே சளுக்கிய வீரர்கள் சுற்றியலைந்து கொண்டிருப்பதைப் பல இடங்களில் கண்டேன். அவர்கள் கையில் சிக்கி விடக் கூடாதே என்பதற்காக, அங்கங்கே ஒளிந்தும் மறைந்தும் தங்கியும் இருக்க வேண்டியதாகிவிட்டது. அதனால்தான் இங்கு வந்து சேரத் தாமதமாகியும் விட்டது, அம்மணீ!" என்று பணிவுடன் கூறி நிறுத்தினான் நாகோதரன்.

அவன் சொன்ன விவரங்களை ஒரு செவியிலும், தூரத்தில் கேட்ட சளுக்கிய வீரர்களின் குதிரைக் குளம் பொலியை மறுசெவியிலும் கவனித்துக்கொண்டு நின்ற உத்தமசீலி, "சமந்தபத்திரர் தம் குழுவினருடன் திருப்பருத்திக் குன்றத்துக்குப் போயிருக்கிறாரா?" என்று தனக்குள் முணு முணுத்துக் கொண்டவள், "அது சரி, நாகோதரா! சளுக்கிய விக்கிரமாதித்தர் பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கப் போகும் விஷயத்தை அந்த ஓலையில் தெரிவித்திருந்தேனே, அதைச் சோழ இளவரசி பாண்டிய மன்னரிடம் போய்த் தெரிவித்து விட்டிருப்பாள் அல்லவா?" என்று அவசரமாகக் கேட்டாள்.

''அவர் அந்தச் சேதியைத் தெரிவித்தாரோ இல்லையோ! ஆனால் பாண்டியருக்கும் சளுக்கியருக்கும் நெல்வேலி என்னும் இடத்தில் போர் மூண்டுவிட்டதாக இன்று காலையில் இவ்வூர் மக்கள் பேசிக்கொண்டிருந்ததை என் காதாரக் கேட்டேன், தாயே!" என்றான் நாகோதரன்.

"அப்படியா?" என்று தன் கண்களை அகல மலத்திய உத்தமசீலி சட்டெனத் திரும்பி, "நாகோதரா! இன்று மாலை அதோ அந்தச் சிற்றாற்றங்கரையோரம் ஒரு வழுக்குப் பாறையண்டை ஒளிந்திருந்த சளுக்கியத் தளபதி வில்வேலியை நீதான் கத்தி எறிந்து கொல்ல முயன்றாயா?" என்று அச்சம் நிறைந்த ஆவலுடன் வினவினாள்.

"அப்படி ஏதாவது நடந்ததா, இளவரசி?... ஆகா, எனக்கு அந்தச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லையே! கிடைத்திருந்தால் கத்தியை எறிந்ததோடு விடுவேனா? அவனுடைய உறைந்த இரத்தத்தை மூட்டை கட்டிக் கொண்டுவந்து உங்களிடம் கொட்டியிருப்பேனே, தாயே!" என்று பற்களை நறநறவென்று கடித்தான் நாகோதரன்.

நாலாபுறமுமிருந்து குதிரைகளின் குளம்பொலி நெருங்கிக் கேட்க ஆரம்பித்தது.

"அது போகட்டும், நாகோதரா!...இந்தா, இதைப் பிடி!" என்று சொன்ன உத்தமசீலி தன் இடுப்பில் செருகி வைத்திருந்த ஓலைக் குழலை எடுத்துக்கொடுத்து அவன் செவியருகில் குனிந்து ஏதோ கிசுகிசுத்தாள்.

ஓலைக் குழலை வாங்கிக்கொண்ட நாகோதரனின் கண்கள் வியப்பால் விரிந்தன.

"சீக்கிரம் ஓடிவிடு! அவரை இங்கே வரவிடாதே! நான் சொன்னபடி செய்! போ, சீக்கிரம்!'' என்று நடுங்கிக் குழறினாள் உத்தமசீலி.

தயக்கத்துடனும் பீதியுடனும் அவளைப் பார்த்து, "தாங்கள் அம்மணீ?" என்று இழுத்தான் நாகோதரன்.

"நானா?... நான் இன்னும் சில விநாடி நேரத்தில் பாம்பின் வாய்ப்பட்ட தேரையாகப் போகிறேன்! அதோ, என்னைப் பிடிக்கச் சளுக்கிய வீரர்கள் வந்து கொண்டிருக் கிறார்கள்! நீ ஓடிவிடு! சீக்கிரம் ஓடு!"

நாகோதரன் தன் கால்களை அழுந்த ஊன்றி நின்று கொண்டு, "மன்னியுங்கள் தாயே! உங்களைத் தனியே விட்டு விட்டு நான் இங்கிருந்து ஓரடியும் நகர்ந்து போகமாட்டேன். உங்களைப் பிடிக்க வரும் அந்தப் பாம்புக் கூட்டம் என்னையும் பிடித்துக்கொண்டு போகட்டும். விஷ்ணுவர்த்தன பூமானின் உப்பைத் தின்று உடம்பை வளர்த்த நான் அவருக்குத் துரோகம் செய்யமாட்டேன். என் உயிரே போவதாயினும் எங்கள் அருமை ஆந்திர இளவரசியாரை அநாதரவாக விட்டுவிட்டுப் போகவே மாட்டேன்!" என்று அடம் பிடித்தான்.

குதிரைகளின் குளம்பொலி இப்போது இன்னும் நெருங்கிக் கேட்டது.

உத்தமசீலி எல்லையற்ற சினம்கொண்டு அவனைத் தீய்த்துப் பொசுக்குவதுபோல் விழித்துப் பார்த்தாள். தன் இரு கரங்களையும் இருப்பின்மேல் ஊன்றிக்கொண்டு மிடுக்குடன் நிமிர்ந்து, "ஏ, நாகோதரா! ஆந்திர இளவரசி கட்டளையிடு கிறேன்; இங்கிருந்து இக்கணமே போகப் போகிறாயா, இல்லையா?" என்று ஆவேசக் குரலில் கூவினாள்.

நடுநடுங்கிவிட்டான் நாகோதரன். பின்னால் நகர்ந்து கொண்டே தலை வணங்கிக் குனிந்து, "ஆகட்டும், அம்மணீ! தங்கள் ஆணைப்படியே இதோ செல்கிறேன்" என்று விம்மலும் பொருமலுமாக அழுது கூறியவாறு அங்கிருந்து சடாரெனத் திரும்பித் தோட்டத்தின் செடி கொடிகளுக்கிடையே புகுந்து குடல் அறுந்து போவது போன்ற ஓட்டத்தில் ஓடலானான்.

சளுக்கிய வீரர்களின் குதிரைக் குளம்பொலி மிக மிகச் சமீபித்துவிட்டது!

விறைத்து நின்ற உத்தமசீலி சரேலென உள்ளே ஓடி ஒரு விசாலமான அறைக்குள் புகுந்தாள். அது அன்றொரு நாள் அவள் வழி தப்பி வந்தபோது தங்கியிருந்த எழிலார்ந்த அறை.

அந்த அறையின் மயில் கண் சாளரத்தைத் திறந்து அதன் திரையை நீக்கிவிட்டுத் தொலைதூரத்திலிருந்த சிற்றாற் றங்கரைப் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினாள். அங்கே, அந்த உயர்ந்தோங்கிய ஒற்றைச் சவுக்கை மரம் பலமான காற்றில் அலைப்புற்று ஆடிக் கொண்டிருப்பது மட்டுமே தெரிந்தது!

உத்தமசீலியின் அழகிய கருவண்டுக் கண்கள் அருவியென நீரைச் சொரிந்தன.

திகிலும் திகைப்புமாகப் பிரமை பிடித்து நின்றுகொண் டிருந்த பரமேசுவரவர்மன் சற்றுமுன் அங்கிருந்து ஓடிய உத்தமசீலி திரும்பி வராததையும், சளுக்கியக் காவல் வீரர்கள் சேதியக் கலைஞரின் இல்லத்தைச் சுற்றி வளைக்க விரைவதை யும் கண்டு திடீரென ஓர் ஆவேசமடைந்தவனாய் அந்த இல்லத்தை நோக்கி ஓட முற்பட்டவன், எதிரே பாய்ந்து வந்த யாரோ ஒரு மனிதனால் பலமாகத் தடுக்கப் பட்டு அதிர்ந்து நின்றான்.

"மாமன்னரவர்கள் மன்னிக்கவேண்டும். என் பெயர் நாகோதரன். ஆந்திர இளவரசியாரின் சிவிகைதூக்கி நான். தாங்கள் அந்த இல்லத்துப் பக்கம் போகவேண்டாம். போகா தீர்கள் அரசே!" என்று மூச்சடைக்க உளறிக்கொண்டே அங்கு ஓடிவந்த நாகோதரன் இரு கைகளையும் பரக்க விரித்து அவனை மேலே போகவிடாமல் வழி மறித்து நின்றான்.

கடுகடுத்த முகத்துடன் வெறித்துப் பார்த்த பரமேசுவர வர்மன் பசி கொண்ட வேங்கைபோல் அவன் தலைக்கு மேலே ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடலானான். பதறித் துடித்த நாகோதரன் அவனுக்கு முன்னால் ஓடிப்போய் மீண்டும் அவனைத் தடுத்து மறித்துக்கொண்டு குறுக்கே நின்று,

"நான் சொல்வதைத் தயைகூர்ந்து கேளுங்கள் அரசே! ஆந்திர இளவரசியார் சொன்னதைத்தான் சொல்கிறேன்; இந்த எளியேனின் பேச்சை ஏற்றருளுங்கள் பிரபு!" என்று கெஞ்சிக் கையெடுத்துக் கும்பிட்டான்.

அவன் சொன்னது எதையுமே காதில் வாங்கிக்கொள் ளாத பரமேசுவரவர்மன், முன்னைவிடக் கோபாவேசத்தோடு திமிறித் துள்ளி அவனை முரட்டுத்தனமாக இடித்துக் கீழே தள்ளிவிட்டுப் புயலெனப் பாய்ந்து ஓடினான். உருண்டு புரண்டு எழுந்த நாகோதரன் மறுபடியும் அவனுக்கு முன்னால் ஓடி, "வேண்டாம், அரசே! அடியேன் சொல்வதைக் கேளுங்கள்; அங்கே போனால் உங்களுக்கும் ஆபத்து நேரும்!" என்று அலறிக் கதறிக்கொண்டே அவனைப் பின்னுக்குத் தள்ள முயன்றான்.

இடிமுழக்கம் போன்ற ஒரு குமுறல் ஒலி! கோபாவேசத்தின் உச்சத்தை அடைந்துவிட்ட பரமேசுவர வர்மனின் புஜங்கள் மலைபோல் உயர்ந்து எழும்பின. கண்கள் அனற்பிழம்பெனச் சிவந்து கனல் ஒளியைக் கக்கின. மரமரத்துத் துடித்த தன் வலக் கையால் இடையைத் தொட்டுத் தடவினான். இன்றுதான் முதன் முதலாகத் தனது உடைவாளைத் தேடித் துழாவியது அவன் கை. உடைவாளற்ற இடையை வெறுமனே தொட்டுவிட்டுத் திரும்பிய கையை வேகமாகச் சுழற்றி, "அற்ப மிருகமே! என்னையா தடுக்கிறாய்?" என்று பயங்கரமாக உறுமிக்கொண்டே நாகோதரனின் மேல் பாய்ந்து அவன் காலை வாரிப் பிடித்துத் தூக்கி ஆலவட்டமாகக் கரகரவென்று சுழற்றிப் பந்து எறிவது போல் ஆகாயத்தில் விட்டெறிந்தான். குபீரென்று மேலே சுழன்றுகொண்டு போன நாகோதரன் அதே சுழற்சியுடன் ஆற்று மணலில் போய்த் 'தொப்'பென்று விழுந்தான். அப்படி விழுந்த அதிர்ச்சியால் அவன் கையில் பற்றியிருந்த அந்த ஓலைக் குழல் சற்றுத் தொலைவில் போய்க் கணீரென்ற ஓசையுடன் தெறித்து விழுந்தது.

சேதியக் கலைஞரின் இல்லத்தை நோக்கிப் பாய்ந் தோடக் காலெடுத்த பரமேசுவரவர்மன் அந்த ஓலைக் குழலை எப்படியோ பார்த்துவிட்டுப் பரபரப்புடன் விரைந்துபோய் அதை எடுத்து மங்கிய மாலை ஒளியில் பட்டோலையைப் பிரித்துப் படித்தான்.

உலையிலிட்ட செப்புச் சிலைபோல் சிவந்து கனன்று கொண்டிருந்த அவன் உடல் சில்லிட்டுப் பனிப்பாறையாக உறைந்து விறைத்தது. கண்களில் நீர்க் கொப்புளித்து வழிய, தொலை தூரத்துக்கு அப்பால் தெரிந்த சேதியக் கலைஞரின் இல்லத்தை ஏறிட்டு நோக்கினான்.

தேன் கூட்டை மொய்க்கும் ஈக்கள்போல் அந்த இல்லத்தைச் சுற்றி வளைத்துக்கொண்ட சளுக்கியக் காவல் படை காட்டுக் கூச்சல் போட்டு ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தது.

"என் அன்பின் பேரரசி! எனது ஆத்மாவின் பொற் சுடரே! எனக்கு எதை அளிக்கப் போவதாகச் சொன்னாயோ, அது என்ன என்று இவ்வோலையின் மூலம் அறிந்துகொண் டேன்! உனது கட்டளைப்படி இதோ இவ்வோலையை எடுத்துக்கொண்டு இப்போதே புறப்படுகிறேன் கண்ணே!" என்று இரண்டு கைகளையும் விரித்து உயர்த்திப் பரிதாபமாகக் கேவிக் கதறிய பரமேசுவரவர்மன் தொய்ந்து துவண்டு பின்னால் திரும்பினான். அங்கே அவனுடைய காலடியில் வந்து சுருண்டு கிடந்தான் நாகோதரன்.

அவனை மெல்லக் குனிந்து தூக்கி நிறுத்திய பரமேசுவர வர்மன்,அவனது உடலில் அப்பியிருந்த குருதியையும் மண்ணையும் இதமாகத் துடைத்துவிட்டு, "வருத்தப்படாதே, நாகோதரா! ஆத்திரத்தில் அறிவிழந்து நடந்துவிட்டேன்! உன் இளவரசியின் கட்டளைப்படி நாம் புறப்படுவோம், வா!" என்று தழுதழுத்த குரலில் கரகரத்தான்.

இந்தச் சமயம் ஒரு பயங்கரமான பிளிறல் ஒலியும், கனைப்புச் சப்தமும் கேட்டன. கலைஞரின் இல்லத்தருகில்

நிறத்தி வைக்கப்பெற்றிருந்த அவனுடைய பட்டத்து யானை யான அரிவாரணமும், குதிரையும்தான் அப்படிப் பிளிறி முழக்கமிட்டன.

அந்த ஒலியைச் செவிமடுத்த பரமேசுவரவர்மன் வாயில் கைகளை வைத்துக் குவித்துக்கொண்டு, "அரிவாரணா!" எனப் பெருங்குரலெடுத்துக் கூவினான்.

அப்படிக் கூவிய சில விநாடிகளுக்கெல்லாம் ஒரு கரிய பெரிய குன்றமே உருண்டு புரண்டு வருவதுபோல் தன் புழைக் கையைச் சுழற்றிப் பயங்கரமாகப் பிளிறிக் கொண்டே அவனை நோக்கி ஓடிவந்தது அரிவாரணம். அதைப் பின் தொடர்ந்து அந்தக் குதிரையும் மிரண்டோடி வந்துகொண்டி ருந்தது. அவற்றைத் துரத்திக்கொண்டு சளுக்கியக் காவல் வீரர்கள் வெறிப் பாய்ச்சலிட்டு வந்தனர்.

"நாகோதரா! அதோ, அந்தக் குதிரைமீது நீ ஏறிக்கொள்! போ, சீக்கிரம்!" என்று துரிதப்படுத்தினான் பரமேசுவர வர்மன். அங்கு ஓடிவந்த தன் அரிவாரணத்தின் மீது மின்ன லெனத் தாவி அமர்ந்தான். நாகோதரனும் குதிரை மேல் பாய்ந் தேறினான். மறுகணம் அவ்விருவரும் அந்தச் சிற்றாற்றைக் கடந்து வடதிசை நோக்கிக் காற்றெனக் கடுகி மறைந்தனர்.

மாலை மங்கி இருள் திரை எங்கும் விரிந்துவிட்டது!

## 88

# புயலில் சிக்கிய பூங்கொடி

"வரவேண்டும், வரவேண்டும்! மதிப்புக்குரிய மாதுலரே, வரவேண்டும்!" என்று மகிழ்ச்சிப் பெருக்குடன் கூவிக்கொண்டே தன் கையிலிருந்த மதுக் கிண்ணத்தை எறிந்துவிட்டு எழுந்து ஓடிவந்து வரவேற்றான் சளுக்கிய இளவரசன் விநயாதித்தன்.

சாக்காடுபோல் வெறிச்சோடிக் கிடந்த அந்தப் பல்லவ புரம் அரண்மனைக் கூடத்தில் கம்பீரமாகப் பிரவேசித்த பழையாறைச் சோழர் தம் கூரிய பார்வையைச் சுற்றிலும் சுழல விட்டவாறு, "சளுக்கிய இளவரசரை இன்று முதன் முதலாகச் சந்திக்க நேர்ந்ததுபற்றிப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்!" என்று கலகலப்பான குரலில் கூறிக்கொண்டே ஓர் ஆசனத் தில் போய் அமர்ந்தார்.

"சளுக்கிய இளவரசனா?... உங்கள் அருமை மருகன் என்று கூறுங்கள், மாதுலரே!" என்று உற்சாகக் கேவலிட்டு நகைத்த விநயாதித்தன் மெல்ல விரல்களைச் சொடுக்கினான். உடனே நான்கைந்து காவல் வீரர்கள் அங்கிருந்து ஓடிவந்து நின்றனர்.

அவர்களிடம் அவன் ஏதோ கண்சாடை செய்து விட்டுத் திரும்பி, "என்ன மாதுலரே, முன்னறிவிப்பு இன்றித் திடீரென வந்துவிட்டீர்களே! தாங்கள் இங்கு வருவதாகத் தெரிந்திருந்தால் ஒரு பிரமாதமான வரவேற்பு வைபவத்துக்கே ஏற்பாடு செய்திருப்பேனே!" என்று முகத்தைச் சுளித்து வருத்தப்பட்டுக் கொண்டான். நெல்வேலியில் பாண்டிய

ருடன் ஜீவ மரணப்போர் நிகழ்த்திக்கொண்டிருக்கும் சளுக்கிய மாமன்னன் விக்கிரமாதித்தனுடைய மைந்தன்தான் மதுப்போதையில் இவ்வாறு உளறிக் கொட்டினான்.

"வருந்தவேண்டாம், இளவரசே! இன்றில்லாவிட்டாலும் இன்னொரு நாள் அதை வேறு விதமாகச் செய்து கொண்டால் போகிறது!'' என்று நமட்டுச் சிரிப்புடன் சொல்லி மீண்டும் தம் பார்வையை மேயவிட்டார் பழையாறைச் சோழர்.

இந்தச் சமயம், பல வகையான மதுபானங்கள் நிறைந்த பொற்தட்டு ஒன்றை இரு பணியாட்கள் ஏந்தி வந்து அவருக்கு முன்னே வைத்துவிட்டுச் சென்றனர்.

"எங்கே என் அத்தியந்த நண்பர் வில்வேலி!" என்று தம் எதிரிலிருந்த மதுபானங்களைப் பார்க்காமலேயே கேட்டார் பழையாறைச் சோழர்.

"முதலில் மது அருந்துங்கள்; மற்ற விஷயங்களைப் பிறகு பேசிக்கொள்வோம்" என்று பணிவுடன் விண்ணப்பித்துக் கொண்டான் விநயாதித்தான்.

"அவரை ஓர் அவசர காரியமாகப் பார்க்க வந்தேன். அதனால்தான்..."

"அப்படியானால் என் மாதுலர், என்னைப் பார்க்க வரவில்லையா?"

"ஓ...அதற்குப் பொருள் அப்படியல்ல; என் மருகரைப் பார்த்த பின் அவரையும்..."

"பரவாயில்லை; இந்த மதுவை அருந்தி உங்கள் நினைவுகளை இனிப்பாக்கிக் கொள்ளுங்கள்."

"இல்லை; நான்..."

''ஏன்? மண்ணிலே விண்ணைப் பார்க்க என் மாதுலருக்கு இரண்டு பேர் துணை வேண்டுமோ? அவ்வாறானால் எனது பணியாள் ஒருவனை அழைக்கிறேன்; அவனையும் இந்தச் சத்-காரியத்தில் கூட்டுச் சேர்த்துக்

கொள்வோம். மூன்று பேராக மதுக் கிண்ணங்களை எடுத்தால் அப்புறம் நாம் மூவரும் ஆறு பேராக மாற அதிக நேரம் ஆகாது.” —குதிரை கனைப்பதுபோல் சிரித்து முழக்கினான் விநயாதித்தன்.

அவனுடைய சிரிப்பில் உற்சாகமாகக் கலந்துகொண்ட பழையாறைச் சோழர், “இளவரசே! நம் தளபதி வில்வேலி நெல்வேலிப் போர்முனைக்குப் போய்விட்டாரா என்ன?” என்று கனத்த குரலில் வெகு அக்கறையோடு விசாரித்தார்.

“தங்களிடம் அவர் சொல்லிக்கொள்ளாமல் புறப் படுவாரா? அதெல்லாம் இல்லை. ஒரு கடுகத்தனை விஷயத்தைக் கவனிப்பதற்காகப் பெருவளநல்லூருக்குப் போயிருக்கிறார். இப்போது வருகிற நேரம்தான். வந்ததும் இன்று மாலையே நெல்வேலிப் போர்க்களத்துக்குப் போவ தென்பது அவரது திட்டம்.” —அலட்சியத் திமிரோடு இவ்வாறு சொன்னான் விநயாதித்தன்.

“அது என்ன இளவரசே, கடுகத்தனை விஷயம்? பெரிய காரியத்துக்குப் போவதை நிறுத்தி வைத்துவிட்டு அவர் ஏன் பெருவளநல்லூருக்குப் போனார்?” என்று தம் அடர்த்தியான புருவங்களை நெரித்துக்கொண்டு அவசரமாகக் கேட்டார் பழையாறைச் சோழர்.

சினம் கனன்ற சிறுநகையுடன் செருக்காகச் சொன்னான் விநயாதித்தன்: “எங்கள் குலத்தில் பிறந்து எங்களுக்கே கோடரிக் காம்பாகிவிட்ட ஒரு துரோகிப் பெண்ணைச் சிறைப் பிடித்து இழுத்து வருவதற்காகப் போய் இருக்கிறார் வில்வேலி!”

ஒன்றும் புரியாதவர்போல் விழித்த பழையாறைச் சோழர், “என்ன சொன்னீர்கள், இளவரசே?” என்று கேட்டுக் கொண்டே ஆசனத்திலிருந்து சற்று முன் தள்ளி வந்தார்.

“அதாவது, என் சிற்றப்பாவின் மகளான ஆந்திர இளவரசி உத்தமசீலியைச் சொல்கிறேன். அவளைப்பற்றிய கசப்பான விஷயங்களை இந்த இனிப்பான நேரத்தில்

என்னைக் கேட்காதீர், மாதுலரே! அவற்றையெல்லாம் வில்வேலியே வந்து உங்களிடம் விவரிப்பார். ஆனால், ஒரு நல்ல சேதியை மட்டும் இந்த மது நனைந்த நாவினால் இப்போதே சொல்லிவிடுகிறேன்; இத்தனை நாட்களாக நம் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு மறைந்து திரிந்துவந்த பல்லவ மன்னனையும் இன்னும் சிறிது நேரத்தில் இங்கே காணப் போகிறீர்கள்."

"என்ன! பல்லவ மன்னனையும் பிடித்து வரப் போய் இருக்கிறாரா, வில்வேலி?" என்று தம்மை மீறிய பதற்றத்துடன் வினவினார் பழையாறைச் சோழர்.

இதைக் கேட்டுக் கடகடவென்று நகைத்த விநயாதித்தன், "இந்த அற்ப விஷயத்துக்கு ஏன் இப்படிப் பதற்றமடைகிறீர்கள், மாதுலரே!" என்றான் குறும்பாக.

"இல்லை, இல்லை! உதவாக்கரையான பல்லவ மன்னனைப் பிடித்து வர நம் ஒப்பற்ற மாவீரர் வில்வேலி போவதா என்றுதான் மனம் பதறுகிறேன்" என்று கூறித் தலை குனிந்தார் பழையாறைச் சோழர்.

ஒருகணம் அவரையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த விநயாதித்தன், "அதுசரி, மாதுலரே! தங்கள் அருமைச் செல்வியை — என் எதிர்காலப் பட்டத்தரசியை — நான் இன்னும் ஒருமுறை கூடப் பார்க்கவில்லையே! அந்த மகத்தான பேற்றை எனக்கு நீங்கள் எப்போது அளிக்கப் போகிறீர்கள்?" என்று வெட்கம் செறிந்த குழைவுடன் விளித்தான்.

"வெகு விரைவிலேயே ஒரு சுபயோக சுப நேரத்தை அதற்கெனச் சிருஷ்டித்துத் தந்து நான் பெருமைப்படத்தான் போகிறேன்!" என்று கூறி மெல்லச் சிரித்த பழையாறைச் சோழர், "சளுக்கிய இளவரசரிடம் ஒரு சிறு விஷயம்..." என்றார் தயக்கத்துடன்.

"சொல்லுங்கள் மாதுலரே!" என்று மிகவும் அக்கறை யாகக் கேட்டான் விநயாதித்தன்.

ஒரு கணம் தயங்கிச் சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டே பழையாறைச் சோழர் தணிந்த குரலில் கூறினார்: "இந்த விஷயத்தை வில்வேலியிடம் தெரிவிப்பதற்காகவே இப்போது இங்கு வந்தேன்; அவர் வருவதற்கு நேரமாகும்போல் இருப்ப தால் உங்களிடமே அதைச் சொல்லிவிடலாம் என்று நினைக் கிறேன்!... அதாவது, இந்த அரண்மனைக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்த பல்லவ இளவரசன் கோவிந்தவர்மன் தப்பியோடிவிட்டான் அல்லவா?..."

"ஆமாம் அதற்கென்ன இப்போது வந்தது?" என்று அசுவாரசியமாகக் கேட்டான் விநயாதித்தன்.

"பெரிதாக ஒன்றுமில்லை!... அந்தக் கோவிந்தவர்மன் தப்பியோடக் காரணமாய் இருந்தவன் யார் என்ற விவரத்தை இன்றுதான் அறிந்து கொண்டேன்..."

"யார் அந்தப் பதர்?"

"பல்லவ ஆபத்துதவி வீரனான இளங்காரிக்குடையான் என்பவன்தான் அந்தத் துணிகரக் காரியத்தைச் செய்தவனாம். அவனுடைய இல்லம் இங்கே, ஆலம்பாக்கத்தில் இருக்கிறதாம்..."

"அப்படியா! அந்த நீசப் புழுவை இன்னமும் ஏன் உயிரோடு விட்டு வைத்தருக்கிறீர்கள்?"

"வில்வேலியிடம் ஒரு வார்த்தை சொல்லிக்கொண்டு..."

"வேண்டாம், மாதுலரே! நாமே அவனுக்குத் தகுந்த தண்டனை அளிப்போம். இப்போது அவன் ஆலம்பாக்கத்தில் தானே இருக்கிறான்?"

"இருக்கலாம்..."

"என் காவல் வீரர்களை அனுப்பி இதோ, அவனைப் பிடித்து இழுத்துக்கொண்டு வரச் சொல்கிறேன்."

"அப்படிச் செய்யக்கூடாது, இளவரசே! நாம்தான் அவனை நேரில் போய்ப் பிடித்து வரவேண்டும். ஏனென்றால்

அவன் சரியான ஜகஜாலப் புரட்டன். நமது காவல் வீரர்களை எளிதில் ஏமாற்றிவிட்டு ஓடிவிடுவான்.

ஒரு கண யோசனைக்குப் பின், "அப்பேர்ப்பட்ட ஒரு பயங்கரப் பேர்வழியைப் பிடிக்கும் சிரமத்தை நாம் ஏன் மேற்கொள்ள வேண்டும்? இதையெல்லாம் தளபதி வில்வேலியிடமே விட்டுவிடலாமே!" என்றான் விநயாதித்தன் பயந்த குரலில்.

"இளவரசர் சொல்வது சரிதான். ஆனால், வில்வேலி வரும்வரையில் இந்தக் காரியத்தைத் தாமதப்படுத்துவது நல்லதல்ல என்று எனக்குப் படுகிறது. காரணம், பல்லவ இளவரசனின் வலக்கரம் போன்ற அவனைப் பிடித்து விட்டால், அப்புறம் கோவிந்தவர்மனைப் பிடிப்பது மிக எளிதாகிவிடும். இன்றையச் சூழ்நிலையில் இவ்விருவரையும் ஒரு நாள்கூட வெளியே விட்டு வைக்கக்கூடாது" என்று படபடத்தார் பழையாறைச் சோழர்.

முகத்தைச் சுளித்துத் தயங்கிய விநயாதித்தன், "என்னையா கூப்பிடுகிறீர்கள்?" என்று முணுமுணுத்தான். பிறகு, "சரி; என் மாதுலரின் விருப்பத்துக்கு மாறாக நான் நடக்கக் கூடாது" என்றவாறு எழுந்து தொலைவில் நின்ற காவல் வீரர்களைப் பார்த்து, "எங்களோடு இருபது பேர் வரவேண்டும்! ஊம், சீக்கிரம்!" என்று மிடுக்காகக் கட்டளையிட்டான்.

"எதற்கு இளவரசே, நமக்கு இருபது பேர் காவல்? இந்தச் சிறு காரியத்தை நாம் இருவருமே கவனித்துக் கொள்ளலாமே!"

"எனக்காக அல்ல, மாதுலரே! உங்களுக்குத் துணையாகத்தான் அவ்வீரர்களை வரச் சொல்லுகிறேன்."

அடுத்த சில விநாடிகளில், இருபது காவல் வீரர்கள் பின்தொடர, ஆலம்பாக்கத்தை நோக்கி அவ்விருவரும் தம் குதிரைகளைச் செலுத்தினர்.

இளங்காரிக்குடையானின் இல்லத்துக்கு எதிரேயுள்ள பல்லவபுரம் சாலையின் ஒரு மரத்தடியில் நின்று தம் இடையில் தொங்கிய குறுவாளின் முனையைத் தொட்டுக் கூர் பார்த்தபடி குரூர முகத்துடன் விழிகளை உருட்டிக்கொண்டிருந்த பழையாறைச் சோழர், அந்த இல்லத்தின் உள்ளிருந்து கடகடவெனச் சிரித்துக்கொண்டே வெளியே வந்த சளுக்கிய இளவரசன் விநயாதித்தனை வெறித்து நோக்கினார்.

“எனக்குத்தான் எதைக் கண்டாலும் இரண்டிரண்டாகத் தெரிகிறது என்றால் என் அருமை மாதுலர் என்னை விட மோசமாய் இருக்கிறாரே! ஒருகால் பல்லவபுரத்துக்கு வரு முன்னரே அவர் மருவருந்தி யிருப்பாரோ?” என்று சிரிப்பை அடக்கமாட்டாமல் சிரித்தவாறு சற்றுத் தொலைவில் நின்ற தன் காவல் வீரர்ரகளைக் கைதட்டி அழைத்துவிட்டு அவர் எதிரில் வந்து நின்றான் விநயாதித்தன்.

காவல் வீரர்கள் விரைந்து வருவதைக் கண்டு கத்தி முனையை வருடிக்கொண்டிருந்த தம் கையைச் சட்டென்று விலக்கிவிட்டு நிமிர்ந்த பழையாறைச் சோழர், “என்ன இளவரசே! அந்தத் துரோகிப் பயல் இளங்காரி இல்லையா?” என்று அவசரமாக வினவினார்.

“போங்கள், மாதுலரே! வீணாக நீங்களும் ஏமாந்து எனக்கும் சிரமம் கொடுத்துவிட்டீர்கள். ஒருவேளை உங்கள் மகளை எனக்கு மணம் முடித்துக் கொடுக்குமுன் இப்படி ஏதாவது சொல்லி என்னைப் பரீட்சிக்க விரும்பினீர்களோ என்னவோ!” என்ற சலிப்புடன் குழைந்த விநாயதித்தன், “நல்ல வேடிக்கை இது! யாரோ ஓர் இடைச்சியின் இல்லத்தைத் தவறுதலாகக் காட்டிவிட்டீர்கள் மாதுலரே! அங்கே இளங்காரியும் இல்லை, முதுங்காரியும் இல்லை; வயதான ஒரு மூதாட்டியும், எழிலார்ந்த பருவக் குமரி ஒருத்தியும் தான் இருக்கிறார்கள்!” என்றான் வெடிச் சிரிப்புடன்.

*இதைக் கேட்டுப் பழையாறைச் சோழரின் முகம் பேயறைபட்டதுபோல் வெளுத்துச் சிறுத்தது. பரபரப்புடன் தலைதூக்கி அந்த இல்லத்தின் சாளரத்துப் பக்கம் தம் பார்வையை ஓட்டினார். அங்கே, மிரண்ட நிலையில் நடு நடுங்கிக் கொண்டு நின்றார்கள், அநந்தமதியும் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும்.*

*பழையாறைச் சோழருக்குத் தெரியாமல் தன் வீரன் ஒருவனுக்குக் கண்ணால் ஏதோ சாடை காட்டிவிட்டுத் திரும்பிய விநயாதித்தன், "சரி; வாருங்கள், மாதுலரே! பல்லவபுரத்துக்குப் போவோம். அங்கு போய் மற்ற விஷயங் களைப் பேசிக்கொள்ளலாம்" என்றவாறு தன் குதிரையை நோக்கி நடந்தான்.*

*இந்தச் சமயம், அந்தப் பல்லவபுரம் சாலை வழியே ஒரு புரவி பயங்கரமாகக் கனைத்துக்கொண்டு புயல் வேகத்தில் பாய்ந்து வந்தது. அந்தக் குதிரையின் முதுகிலே சளுக்கியத் தளபதி வில்வேலி குற்றுயிரும் குறையுயிருமாகத் தொங்க லாடிக் கொண்டிருந்தார்.*

*இந்தக் காட்சியைப் பார்த்துக் குலை நடுங்கிவிட்ட விநயாதித்தன், "என்ன இது கோரம்?" என்று பயப்பிராந்தி யுடன் குழறிக்கொண்டே பின்னால் திரும்பினான். அங்கு நின்றிருந்த பழையாறைச் சோழரைக் காணோம்!*

# 89

## 'மாமனிதர்!'

"ஆம் அன்பரே, அதுதான் உண்மை! அதுவே முற்றும் உண்மை!" என்று அமைதியாகக் கூறித் தம் வெண்ணிறத் தாடியைக் கோதியவாறு மெல்லச் சிரித்தார் பரவாதிமல்லர்.

திகைப்பும் பிரமிப்புமாக மரமரத்து உட்கார்ந்திருந்த பெரும்பிடுகு முத்தரையர் திடுமெனத் தலைநிமிர்ந்து, "என்ன! என் செவிகளில் இறங்கிய சேதிகள் அனைத்தும் உண்மை தாமா?" என்று கனவுக் கிறக்கத்தில் உளறுவது போல் குழறிக் கேட்டுக்கொண்டே தம் காதுகளைப் பரபரப்புடன் குடைந்த வாறு விழித்து நோக்கினார்.

"உண்மைகளை விற்றே இவ்வுலகத்தில் வாழ்ந்துவிட முடியும் என்று உறுதியாக நம்பிக்கொண்டிருக்கும் ஓர் எளிய கலைஞனின் வாயிலிருந்து வெளிவந்த சொற்கள்தாம் தங்கள் செவியில் இறங்கியிருக்கின்றன அன்பரே!" என்றார் பரவாதி மல்லர் களங்கமற்ற புன்முறுவலுடன்.

முத்தரையருக்கு ஏற்பட்ட வியப்பும் திகைப்பும் மிகுதி யாயின. குழப்பத்துடன் தம் பார்வையை வலப் பக்கமாகத் திருப்பினார் அவர்.

பெருவளநல்லூரிலிருந்து பல்லவபுரத்துக்குச் செல்லும் சாலையில் மருங்கே அமைந்திருந்த அந்தப் பழமையான ஜினாலயத்துக்குப் பின்னால்—சமண ஐயனாரின் யானை வாகனத்து மேடையருகில்—வெடிப்பும் துடிப்புமாக நின்று கொண்டிருந்த ஆபத்துதவி இளங்காரிக்குடையான் தன் பெரிய கண்களை உருட்டி அவரை எச்சரிப்பதுபோல்

வெறித்துப் பார்த்ததைக் கண்டு விழிப்படைந்தவராய் வெடுக் கென்று நிமிர்ந்த முத்தரையர், "கலைஞரே! தாங்கள் சொன்ன விவரங்களை என்னால் ஜீரணிக்கவே முடியவில்லை. தயவு செய்து அவற்றை மீண்டும் ஒருமுறை சொல்லுங்கள்" என்றார் அவநம்பிக்கை செறிந்த அடித் தொண்டையில்.

ஜினாலயத்து வலப்புற மண்டபப்படியில் அமர்ந்திருந்த சேதியக் கலைஞர் தமது நரையோடிய புருவங்களை மேலு யர்த்திக் குறும்பாகச் சிரித்தவாறு சாந்தம் நிறைந்த குரலில் கூறினார்; "பழையாறைச் சோழரைப்பற்றி நான் தெரிவித்த விவரங்களைத்தானே கேட்கிறீர்கள்? நீங்களும் இந்த நாட்டு மக்களும் அவரைப்பற்றி இப்போது என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ, அதற்கு அவர் முற்றும் மாறானவர்; வேறானவர்."

முத்தரையர் இதைக் கேட்டு அலட்சியமும் வெறுப்பு மாகக் கடகடவெனச் சிரித்தார். "நல்ல கதை! நயமான கற்பனை! கல்லிலே காட்டவேண்டிய திறமையைச் சொல்லிலே காட்டத் துணிந்துவிட்டார் என் மதிப்புக்குரிய கலைஞர்!"

பரவாதிமல்லர் முகம் சுண்டிச் சிறுத்தது. மெல்லப் பெருமூச்சுவிட்ட அவர், "என்ன செய்வது, நண்பரே? மாபெரும் மனிதர்களையெல்லாம் நம்மைப் போன்றவர் களுக்கு முதலில் இந்த வகையில்தான் சித்திரித்துக் காட்டு கிறது விதி."

"ஹூம்! அந்தப் பச்சைத் துரோகி பழையாறைச் சோழர் மாபெரும் மனிதராம்! கையகல நிலப் பரப்பின் ஆட்சிப் பதவி நீடிக்க வேண்டும் என்பதற்காக ஓர் அந்நியப் படையெடுப்பாளனின் முன் கைகட்டித் தலை வணங்கி நிற்கத் துணிந்தவர், பிறந்த பொன்னாட்டின் புனிதத்தைக் காக்கத் திராணியில்லாமல் நகமும் சதையும்போல் கூடிக் குலாவிவந்த பல்லவக் கொற்றவரது நல்லெண்ணத்தையும் நட்பையும் கொன்றுவிட்டு அவரது ஜன்மப் பகைவனிடம்

போய்ச் சரணாகதியடைந்த கோழை, தமது சொந்த சுகபோக வாழ்வுக்காகத் தம் குலப்பெருமை இனப்பெருமை மொழிப் பெருமை சமயப்பெருமை ஆகிய அனைத்தையும் உதறித் தள்ளிச் சளுக்கியனுடன் சம்பந்தி உறவு கொள்ள முற்பட்ட நயவஞ்சகர் மாபெரும் மனிதராம்! செவியால் தீண்டவே அருகதையற்ற பொய்ப் புகழ் பேச்சு இது.

"அரசியல் சாஸ்திரத்தைக் கரைகண்ட சந்திரலேகைச் சிற்றரசரா இப்படி ஆத்திரமடைந்து பேசுகிறார்? என்னால் நம்பவே முடியவில்லையே!" என்று இதமாகக் கூறி மென்மை யாகப் புன்னகை புரிந்தார் பரவாதிமல்லர்.

முத்தரையரின் முகம் கோபத்தால் சிவந்து கொந்தளித் தது. தம் மலைபோன்ற உடலைப் பயங்கரமாகக் குலுக்கிப் புரட்டிக்கொண்டு நிமிர்ந்த அவர், "கலைஞரே! கல்லையும் மண்ணையும் கவிபாட வைக்கத்தான் உங்களுக்குத் தெரியுமே தவிர அரசியல் சூதாடிகளின் கபட நாடகங்களை நீங்கள் அறியமாட்டீர்கள். பாம்பின் பாதச் சுவடு பாம்புக்குத்தான் தெரியும். பழையாறைச் சோழரின் வஞ்சக விளையாட்டங் களை இந்தச் சந்திரலேகைச் சிற்றரசன்தான் அறிவான். தயைசெய்து இனி அவரைப் பற்றி என்னிடம் ஏதும் சொல்லித் தங்கள்மீது நான் வைத்திருக்கும் உயர்வான எண்ணத்தைச் சரித்து விடாதீர்கள்" என்றார் கடுகடுத்த குரலில்.

பரவாதிமல்லர் ஒரு கணம் அவரையே உற்றுப் பார்த்தார். பிறகு மெல்லத் தம் பார்வையை மேல்நோக்கி நிமிர்த்திக்கொண்டு நெஞ்சடைக்கக் கூறினார்: "விதியை வெல்ல மனிதரால் ஆகாது என்பது முற்றும் உண்மையே போலும்! இல்லையானால் இந்தப் பழம் பெருமை வாய்ந்த பல்லவ நாட்டுக்குக் கதிமோட்சம் கிட்டக்கூடிய சந்தர்ப்பமும் சூழ்நிலையும் உருவாகி வரும்போது அவற்றைத் தகர்க்கும் கருவியாக என் அருமை நண்பர் முத்தரையரே இத்தனை பிடிவாதத்துடன் முன்வந்து நிற்பாரா?"

அலுப்பும் சலிப்புமாக முகத்தைச் சுளித்த முத்தரையர், "கலைஞரே! என்னை ஏன் இப்படிச் சோதிக்கிறீர்கள்?

பழையாறைச் சோழரின்மேல் நான் கண்ணை மூடிக் கொண்டு எந்தவிதப் பழிபாவங்களையும் சுமத்திவிட வில்லை. என்னிடம் அவர் நேருக்கு நேர் நின்று தெரிவித்த முடிவுகளைக் கொண்டே அவருடைய புதிய போக்கைப் புரிந்துகொண்டேன். அவர் சொன்னபடியே இன்றுவரை நடந்து வருகிறார் என்பதையும் பல சம்பவங்களின்மூலம் அறிந்து கொண்டேன். இந்த விவரங்களைப் பலமுறை உங்களிடம் நான் எடுத்துக் கூறியும் அவற்றை ஏற்காமல், அந்த வஞ்சக மனிதரை மகாபுருஷராக்கிக் காட்டுவதிலேயே குறியாய் நிற்கிறீர்களே, ஏன்?" என்று வினவினார்.

இளநகை புரிந்த பரவாதிமல்லர், "இதற்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்? 'அரசியல் சாஸ்திரத்தைக் கரை கண்ட முத்தரையரா இப்படி அவசரப்பட்டுப் பேசுகிறார்' என்றுதான் நான் மீண்டும் ஆச்சரியப்பட்டுக்கொள்ள வேண்டும்!" என்றார்.

"அப்படியானால் பழையாறைச் சோழர் எங்களுக்கு எதிராகச் சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் சேர்ந்து நிற்கிறார் என்ற முடிவு தவறானது என்பதுதான் தங்கள் கருத்தா?"

"அதில் எள்ளத்தனையும் சந்தேகம் இல்லை, நண்பரே!"

"அவருடைய அந்த முடிவை அவரே சொல்லக் கேட்டேனே?"

"வீழ்ந்துபட்ட பல்லவ நாட்டின் விடுதலைக்காகத் தறுகண் ஆண்மையுள்ள தனியொரு மனிதர் செய்ய முன்வந்த நிகரற்ற தியாக வாசகமாகவே நீங்கள் அதைக் கொள்ள வேண்டும்.

"அதாவது?..."

"எதிரியின் எதிரியாக நில்லாமல், எதிரியின் நண்பனாக நின்று, எதிரியின் எதிரி செய்யக்கூடிய காரியத்தைச் செய்யவே அவர் உங்களிடமிருந்து பிரிந்து சென்றார்."

"காதால் கேட்பதற்கே கசப்பான விஷயம் இது!"

"கசப்பு இனிப்புபற்றி நான் கருத்துரை வழங்கவில்லை, நண்பரே! உண்மை எது என்பதையே உங்களிடம் இப்போது சொல்லிக் கொண்டிருக்கிறேன். வீரத்தை மட்டுமே வழிபடும் உங்களால் அவருடைய அந்த விவேக முடிவு கசப்பாகத்தான் தோன்றும். ஆனால் புகழ்மிக்க ஒரு நீண்ட இராஜபரம் பரையில் வந்த பழையாறைச் சோழர் வெறும் வீரத்தை மட்டும் நம்பிக்கொண்டிருப்பவராய் இருக்க முடியாது; விவேகத்தையும் அவர் துணை சேர்க்க முற்படுவார்."

"இந்தத் திடீர் ஞானோதயம் அவருக்கு ஏன், எதனால் ஏற்பட்டது என்பதை விளக்க முடியுமா கலைஞரே?"

"அதற்குப் பல காரணங்களும், காரணகர்த்தர்களும் உண்டு. காரணகர்த்தர்களில், நீங்களும், நம் மாமன்னர் பரமேசுவரவர்மரும், அவரின் இளவல் கோவிந்தவர்மரும் முக்கியமானவர்கள். உலகில் மனிதராய்ப் பிறக்கும் எல்லாருமே ஏதேனும் ஓர் இலட்சியத்தைக் கொள்ளத்தான் செய்கிறார்கள். ஆனால் அப்படி ஏற்கும் இலட்சியத்தை எல்லாருமே எட்டிப் பிடித்துவிடுவதில்லை. இலட்சியங்களை உருவாக்கிக் கொள்வது சுலபம்; அவற்றை அடைவது மட்டும் அத்தனை எளிதல்ல. இதற்குக் காரணம், இலட்சியத்திலுள்ள பற்று அதை அடையும் மார்க்கத்தில் இல்லாமல் போய் விடுவதுதான். அந்நிய ஆதிக்கத்தில் வீழ்ந்துபட்ட பல்லவ நந்திக் கொடியை அதன் பழைய ஒளி வானில் உயர்த்திப் பறக்கவிட வேண்டும் என்பதே உங்கள் இலட்சியம்; இந்தப் புனித இலட்சியத்தை அடைய உங்களுக்குத் தெரிந்த ஒரே வழி, போர்! படை திரட்டிச் சளுக்கியருடன் போரிடுவது ஒன்றுதான் அந்த இலட்சியத்தை அடைவதற்கான ஒரே வழி என்பது உங்களுடைய திடமான முடிவு. உண்மையில் இது சரியான முடிவே. ஆனால் இந்த முடிவின் வழி சென்று நீங்களாகவே செயல்பட உங்களுக்கு உரிமையோ சக்தியோ இல்லை. யாருக்காக அந்த இலட்சியத்தை மேற் கொண்டீர்களோ அவருடைய பரிபூரண ஆதரவும் சம்மதமும்

ஒத்துழைப்பும் இருந்தால்தான் அதற்கென கண்ட அவ்வழி யில் உங்களால் அடியெடுத்து வைக்கமுடியும். அதாவது, பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரின் அநுமதியும் கட்டளை யும் கிடைத்தால்தான் அந்த ஆதிக்க எதிர்ப்புப் போருக்கு நீங்கள் ஆயத்தம் செய்ய முடியும். துரதிர்ஷ்டவசமாக ஆரம்ப நாள்முதலே அவரின் ஒத்துழைப்பு உங்களுக்குக் கிடைக்க வில்லை. ஏதோ ஒரு விந்தை மனப்பான்மையைத் தம்முள் வளர்த்துக் கொண்டுவிட்ட அவரை அவ்விஷயமாக அணுகினபோதெல்லாம் உங்களுக்குத் தோல்வியே கிடைத்திருக்கிறது. ஆயினும் நீங்கள் விடாமல் அந்த ஒரே முயற்சியிலேயே முனைந்து நின்றீர்கள். ஏனென்றால் உங்களுக்குத் தெரிந்து ஒரே வழி அது ஒன்றுதான். இதற் கிடையே இந்த நாட்டின் நிலைமை என்ன ஆயிற்று? தன்னை எதிர்ப்பார் யாருமில்லை எனத் தெரிந்துகொண்ட சளுக்கிய விக்கிரமாதித்தன் தனது ஆதிக்கத்தை இங்கே நிரந்தரமாக்கிக் கொள்வதில் வெகு தீவிரமாக முனையலானான். கட்டளைகள் பிறந்தன. வரிகள் வசூலிக்கப்பட்டன. பொன்னாலும் மணியாலும் அவனுடைய பொக்கிஷம் கொழுத்து நிறைந்தது. படைபலம் இரட்டிப்பாகியது. இவற்றோடு நில்லாமல் நமது புனிதமான சமண சமயத்தின் பெயராலும் தன் ஆதிக்க ஆட்சியை உறுதிப்படுத்திக்கொள் வதில் துணிந்து இறங்க முற்பட்டான். இவ்வளவுக்குப் பின்னும் நீங்கள் அந்த ஒரே வழியையே நம்பிக்கொண்டிருந் தீர்கள். பமேசுவரவர்மரும் இந்த வழியில் உங்களை நடக்க விடாமல் கட்டிப்போட்டு வைத்திருந்தார். இந்த நிலை இன்னும் கொஞ்ச காலத்துக்கு நீடித்தால் அப்புறம் எத்தனை படைகள் திரட்டி வந்து எத்தனை ஆண்டுகள் போரிட்டாலும் சளுக்கிய விக்கிரமாதித்தனைப் பல்லவ நாட்டின் மண்ணி லிருந்து அகற்ற முடியாதென்பது தெளிவாகத் தெரியலாயிற்று. இதையெல்லாம் கூர்ந்து கவனித்துச் சிந்தித்த பழையாறைச் சோழர் உடனே தம் இலட்சியத்தை அடையும் மார்க்கத்தை

மாற்றிக்கொண்டு விட்டார். அவர் மாற்றிக்கொண்ட அந்த மார்க்கம்தான் உங்களுக்கு எதிராளிபோல் சளுக்கியருடன் போய்ச் சேர்ந்து கொண்டது.

செப்புக் குடத்தில் கல்லைக் கொட்டிக் குலுக்கினாற் போன்ற ஒலி. முத்தரையர்தாம் அப்படிக் குலுங்கிச் சிரித்தார். "நிஜமாகவே இது சுவையான கதைதான்! இந்தக் கதையை இத்தனை சாமர்த்தியமாகப் புனைந்தது மட்டுமல்லாமல் அதை மகாக் கலைஞர் பரவாதிமல்லரும் நம்பும்படி செய்வித்த பழையாறைச் சோழர் உண்மையிலேயே மிகவும் கெட்டிக்காரர்தாம். கலைஞரே, நீங்கள் ஏமாந்து விட்டீர்கள். உங்கள் 'மகா புருஷ'ராலேயே நன்றாக ஏமாற்றப்பட்டு விட்டீர்கள்" என்று கூறி மீண்டும் கடகடவெனச் சிரித்து முழக்கினார் அவர்.

**90**

# கலைஞரின் திணறல்

**யா**னை வாகனத்தின் அருகில் நின்றிருந்த ஆபத்துதவி இளங்காரிக்குடையான் எதையோ நினைவுபடுத்துவது போல் மெல்லத் தொண்டையைக் கனைத்தான். அந்தக் கனைப்புக் குறிப்பை உடனே புரிந்துகொண்ட பெரும்பிடுகு முத்தரையர் வெடுக்கென்று தலைதூக்கிப் பரவாதிமல்லரை வெறித்துப் பார்த்தவாறு கடுகடுத்த குரலில் படபடத்தார்; "இல்லை, இல்லை! பழையாறைச் சோழரால் நீங்கள் ஏமாற்றப்பட் டிருக்கிறீர்கள் என்று நான் சொன்னது தவறு; அவரும் நீங்களும் சேர்ந்து எங்களை ஒரேயடியாகக் கவிழ்க்கத் திட்டமிட்டிருக்கிறீர்கள். சளுக்கியர்களுக்குக் குழி பறிக்க அவர்களுடன் சேர்ந்ததாகச் சொல்லிக்கொண்டு எங்களுடன் சேர்ந்து எங்களுக்குக் குழி தோண்டவே இந்தக் கபட நாடகம் நடத்துகிறீர்கள்."

சேதியக் கலைஞரின் உடல் மெல்ல நடுக்கமுற்றது. ஆயினும் அவர் தம் அமைதியை இழக்காமல் மென்முறுவலுடன் சொன்னார்: "என் மதிப்புக்குரிய நண்பரால் சுமத்தப் பெறும் இந்தக் குற்றச்சாட்டைக் கேட்டு நான் சிறிதும் வருத்தப்படவே இல்லை."

"என் குற்றச்சாட்டுகள் உண்மைக்கு மாறாக இருந்தால் தானே உங்களால் வருத்தப்பட முடியும்?"என்று ஈட்டியால் குத்துவதுபோல் நறுக்கென வினவினார் முத்தரையர்.

“இந்த விநாடிவரையில் உண்மையின் பக்கமே நீங்கள் திரும்பவில்லை என்பதால்தான் இத்தனை பொறுமையோடு இருந்து வருகிறேன்.”

ஆத்திரத்தால் முத்தரையரின் கண்கள் அக்கினிக் குண்டங்களாயின. “அப்படியானால் நான் கேட்கும் வினாக்களுக்கு உங்களால் நேரான விடையிறுக்க முடியுமா கலைஞரே?” என்றவாறு புள்ளெனத் துள்ளியெழுந்தார் அவர்.

“நண்பரிடமிருந்து அதைத்தான் இப்போது எதிர்பார்க் கிறேன்!”

இரண்டு கைகளையும் இடுப்பின்மேல் ஊன்றி ஓங்கி உயர்ந்து நின்ற முத்தரையர் அழுத்தந்திருத்தமான குரலில் கேட்டார்; “சளுக்கியருக்காகப் பல்லவ நாட்டுக் குடிமக்களிட மிருந்து போர்க் கருவிகளையும் பிற ஆயுதங்களையும் உங்களுடைய ‘மகா புருஷ’ரான பழையாறைச் சோழர் பலாத்காரமாகப் பறித்துச் சேகரித்து வரும் விவரம் உங்களுக்குத் தெரியும் அல்லவா?”

“நண்பரின் கேள்வியில் உள்ள ‘சளுக்கியருக்காக’ என்னும் சொல்லை எடுத்துவிட்டால், அதற்கு என்னுடைய பதில் ‘ஆம்’ என்பதே.”

“விழிப்பான பதில்!... சரி; இந்நாள்வரை எங்களுக்கும் தெரியாமல் உங்களுடைய இல்லத்தில் ஒரு நிலவறையை அமைத்து வைத்திருந்தது உண்மைதானே?”

“என் இல்லத்தில் உள்ள நிலவறையைப்பற்றி உங்களிடம் தெரிவிக்க வேண்டிய அவசியமோ சந்தர்ப்பமோ இதுவரை எனக்கு ஏற்படவில்லை என்பதை முதலில் தெரிவித்துக் கொண்டு, அந்த நிலவறை இருப்பது உண்மை என்று இப்போது ஒப்புக்கொள்கிறேன்.”

“சாமர்த்தியமான விடை!... சரி; பழையாறைச் சோழர் சேமித்த போர்க்கருவிகளைப் பத்திரப்படுத்துவதற்காக அந்த

நிலவறையை நீங்கள் கொடுத்து உதவியிருப்பது உண்மை தானே?”

“அப்படி ஓர் உதவி செய்ய வாய்ப்பு கிடைத்ததற்காக நான் பெருமைப்படுகிறேன்.”

“எங்களுக்கு எதிராகவே அந்த வஞ்சகச் சதி காரியத்தில் நீங்கள் இருவரும் ஈடுபட்டீர்கள் என்று நான் சொல்கிறேன்; இதை உங்களால் மறுக்க முடியுமா?”

“இல்லை என்று மறுத்தால் என் அருமை நண்பரின் அந்தப் பேதைமையான கேள்வியை நான் கேலி செய்வது போல் ஆகிவிடும். ஆகவே அதற்கு என் பதில், மௌனம்.”

திடீரென்று தம் உடலை முறுக்கிச் சிலிர்த்துக்கொண்டு நிமிர்ந்த முத்தரையர், “கலைஞரே! பழையாறைச் சோழரின் அந்தப் பயங்கரச் சதி காரியத்துக்கு நிலவறை தானம் செய்வதற்காக நீங்கள் அவரிடம் ஏதோ பெரிய கைம்மாறு எதிர்பார்க்கவில்லையா?” என்று இரைந்து கேட்டார்.

பரவாதிமல்லர் உள்ளூறத் திகிலுற்றவர்போல் சிறிதே பரபரப்படைந்தார். பிறகு மெல்லச் சிரித்தவாறே, “முத்தரையரின் ஒற்றர்கள் மிகத் திறமை வாய்ந்தவர்கள் என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆனால் ஒரு விஷயம்: போர்க் கருவிகளைச் சேமித்து வைக்க என் நிலவறையைக் கொடுத்து உதவியதற்குப் பழையாறைச் சோழரின் நன்றி மொழியை ஏற்க மறுத்தது உண்மைதான். காரணம், அந்த நன்றியை நான் ஏற்றுக்கொண்டால் அவருடைய புனித இலட்சியத்தில் எனக்கு அக்கறை இல்லை என்றாகிவிடும். அப்படி என்னை ஓர் அயலானாக்கிக் கொள்ள எனக்கு விருப்பமில்லை” என்றார்.

“ஓகோ!....சரி; பழையாறைச் சோழர் சேகரித்து வைத்திருக்கும் அந்தப் போர்க் கருவிகளெல்லாம் யாருக்காக? எதற்காக?”

“பல்லவ நாட்டின் விடுதலைப் போருக்காக.”

"பச்சைப் பொய்! அந்த யுத்தக் கருவிகளில் பல்லவ நந்திச் சின்னம் பொறித்திருப்பதால் இத்தனை எளிதாகப் பதில் சொல்லிவிட்டீர்களோ? உண்மை வெளியாகிப் போனால் எங்களிடமிருந்து தப்பிக்க முன்கூட்டியே திட்டமிட்டுச் செய்த கண் துடைப்புக் காரியம் அது என்பது எனக்குத் தெரியாதா என்ன?"

"சந்திரலேகைச் சிற்றரசரின் அபாரக் கற்பனையை மெச்சுகிறேன்" என்று கூறி நகைத்தார் பரவாதிமல்லர்.

"கலைஞரே! இனியும் உங்கள் வித்தார பதில்களைக் கொண்டு என்னை ஏமாற்ற முயற்சி செய்யாதீர்கள். எனக்கு எல்லாம் புரிந்துவிட்டது. நீங்கள் ஏன் என்னிடம் வந்து பழையாறைச் சோழரைர மகாபுருஷராக்கிப் பேசுகிறீர்கள் என்பது எனக்கு நன்றாக விளங்கிவிட்டது. ஆமாம்; பல்லவ மாமன்னன் பரமேசுவரவர்மர் தமது தாய்த் திருநாட்டின் விடுதலையைக் காணப் பொங்கியெழுந்துவிட்டார் என்பதையும், சளுக்கியச் சண்டாளர்களைப் பல்லவ நாட்டின் மண்ணிலிருந்து விரட்டியடிக்கத் தம் குடிமக்களை இரகசியப் போர் அணியில் திரளும்படி அவர் கட்டளை கொடுத்து விட்டார் என்பதையும், அந்தக் கட்டளையை நான் வெற்றிகரமாகச் செயலாக்கி வருகிறேன் என்பதையும் பழையாறைச் சோழர் எப்படியோ அறிந்து கொண்டிருக்கிறார். எனவேதான் தமது துரோக நடத்தைக்குத் தியாக முலாம் பூசிய ஒரு கட்டுக் கதையைக் கற்பித்து அதைத் தங்கள் மூலம் என்னிடம் வந்து ஒப்பிக்க அனுப்பியிருக்கிறார். நீங்களும் அவருடன் துணை நின்றவராதலால் உங்களுக்கு நேரக்கூடிய ஆபத்தை உணர்ந்து அதிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, அவர் கட்டிக் கொடுத்த பொய் மூட்டையைக் கொண்டு வந்து என்னிடம் அவிழ்த்துப் பரப்புகிறீர்கள். இதுதான் உண்மை. இதுவே முற்றும் உண்மை!" என்று தம்மை மீறிய ஆத்திர உணர்ச்சியுடன் உரக்கக் கூவினார் பெரும்பிடுகு முத்தரையர்.

இந்தச் சமயம், பல்லவபுர சாலைப் பக்கமிருந்து அந்த ஜினாலயத்தை நோக்கி அலங்க மலங்க ஓடிவந்த பழையாறைச் சோழர் அவ்வாலயத்தின் இடது பக்க முகப்பு மண்டபத் தூண் ஒன்றில் ஒளிந்து உட்கார்ந்தார். அவரது திண்ணிய உடல் இலேசாக நடுங்கிக்கொண்டிருந்தது. முகத்தில் பீதியும் துக்கமும் மாறி மாறிக் கறை பூசின. தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு உள்ளூறக் குமுறிப் பொருமினார் அவர்.

ஜினாலயத்தின் வலப்பக்க மண்டபப் படியில் அமர்ந் திருந்த சேதியக் கலைஞரோ, முத்தரையரோ, யானை வாகனத்துக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த இளங்காரிக் குடையானோ, அவர் அங்கு வந்ததைக் கவனித்ததாகவே தெரியவில்லை.

# 91

## இலட்சியச் சதுரங்கம்!

முத்தரையர் தம்மீது சாட்டிய பெருங் குற்றச்சாட்டு களைக்கூடப் பொருட்படுத்தாமல், அவருடைய அந்தக் கோபப்பேச்சுக்கிடையே பரமேசுவரவர்மனின் இப்போதைய நிலைபற்றி வெளிப்பட்ட விவரத்தைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ச்சியுற்றவராய் நிமிர்ந்து, "என்ன சொன்னீர்கள், அன்பரே! நம் பல்லவ மன்னர் விடுதலைப் போர்க்குரல் எழுப்பிவிட்டாரா? சளுக்கியரை எதிர்க்கத் தம் குடிமக் களைத் திரண்டெழும்படி கட்டளையிட்டு விட்டாரா?" என்று ஆவல் மோதலிடும் குரலில் அவசரமாகக் கேட்டார் பரவாதிமல்லர்.

கோபாவேசக் கொந்தளிப்புடன் நின்றுகொண்டிருந்த முத்தரையர் அவரைக் கூர்ந்து பார்த்து, "கலைஞரே! இன்னமும் நீங்கள் என்னை ஏமாற்றும் முயற்சியிலேயே ஈடுபடுவதாகத் தெரிகிறது. அம்மாதிரி முயற்சி எதுவும் இனிமேல் என்னிடம் பலிக்காது என்ற முடிவுடன் தயவு செய்து இங்கிருந்து எழுந்து போய்விடுமாறு உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்" என்று உள்ளார்ந்த சீறலுடன் கரகரத்தார்.

உடல் குன்றித் தலைகுனிந்த பரவாதிமல்லரின் முகம் அவமானத்தால் வெளிறிச் சிறுத்தது. வெண் கவரி போன்ற தம் நீண்ட தாடியை மடித்துக் கடித்தவாறு சில விநாடி மௌனமாயிருந்த அவர் திடுமெனத் தலைநிமிர்ந்து, "சந்திரலேகைச் சிற்றரசே! உங்களுக்கு ஒரு விஷயத்தை

நினைவுபடுத்த விரும்புகிறேன். என்னையோ பழையாறைச் சோழரையோ நல்லவர்களாக்கிக்கொள்ளும் பொருட்டு உங்களைத் தேடி நான் வந்ததாக நீங்கள் சொல்வது முழுதும் தவறு. நாம் இருவரும் இங்கே அசந்தர்ப்பமாகத்தான் சந்தித்துக் கொண்டோம். அதை மறுத்துவிட்டுப் பேசுகிறீர்கள்" என்று உள்ளடங்கிக் குமுறும் சினத்துடன் படபடத்தார்.

முத்தரையர் இதைக் கேட்டு அலட்சியமாக நகைத்தார்; "வெள்ளத்தில் மூழ்கிப் போகிறவன் துரும்பைத் தோணி யாக்கிக்கொள்ள முயல்வதுபோன்ற பேச்சு இது. இன்று நீங்கள் இவ்விடத்திலே என்னைப் பார்த்திராவிட்டால், நாளை வேறு எங்கேனும் சந்தித்து இதே விவரங்களைத்தான் சொல்லியிருப்பீர்கள். ஏனென்றால், உங்கள் ஆருயிர்க் கூட்டாளியான பழையாறைச் சோழரின் கட்டளை அது என்பது எனக்கு நன்றாகத் தெரியும்."

"நிலைமையை உணராதவர்களும், நுனிப் புல் மேய்கிறவர்களும் இப்படித்தான் எதையும் சீர்தூக்கிப் பாராமல் எடுத்தெறிந்து பேசுவிடுவார்கள்!... நண்பரே, நீங்கள் சொல்வதுபோல் இன்று நான் உங்களைச் சந்தித்திரா விட்டால், நாளை அல்லது மறுநாள்—அல்லது இன்னும் சில தினங்களில்—வேறொருவர் வந்து இதே விவரங்களைச் சாங்கோபாங்கமாகத் தெரிவித்திருப்பார்."

"ஓ,... இந்தச் சாமர்த்தியமான பொய்ப் பிரசாரத்துக்குச் சேதியக் கலைஞரைத் தவிர வேறு சிலரையும் தயார்ப்படுத்தி வைத்திருக்கிறாரோ பழையாறைச் சோழர்?"

"சந்திரலேகைச் சிற்றரசரின் அன்புக்கும் நம்பிக்கைக் கும் உரியவரான பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரைத் தமக்குச் சாதகமாகப் பேச வைக்கப் பழையாறைச் சோழரால் இயலாது என்றே நினைக்கிறேன்!"

இதைக் கேட்டுச் சட்டென்று திரும்பிய முத்தரையர், "என்ன கோவிந்தவர்மரா?" என்றார் தம்மை மீறிய துடிப்புடன்.

"ஆம், அன்பரே! பாண்டிய மன்னரிடம் படையுதவி பெற்று வரப் பரமேசுவரவர்மரின் கைச் சாத்தைத் தகூட லேகை செய்து தாங்கள் கொடுத்தனுப்பிய ஓலையுடன் மதுரைக்குச் சென்றிருக்கும் இளவரசர் கோவிந்தவர்மர்தாம் தங்களிடம் வந்து இவ்விவரங்களைச் சொல்ல நேரிட்டிருக்கும் என்கிறேன்."— மகிழ்ச்சியும் மனவேதனையும் கலவையிட்ட குரலில் இவ்வாறு மொழிந்தார் பரவாதி மல்லர்.

முறுக்கேறி நின்ற முத்தரையர் திடீரெனத் தளர்ச்சி யுற்றவராய்த் திருதிருவென விழித்துப் பார்த்து, "கலைஞர் சொல்வதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லையே!" என்று குழறினார்.

"அதாவது, பழையாறைச் சோழர் பல்லவருக்கு எதிராகச் சளுக்கியருடன் சேர்ந்த உண்மைக் காரணங்களை யும் அவர் தம் உயிரைப் பணயம் வைத்து ஆற்றிய மகத்தான காரியங்களையும் கோவிந்தவர்மரே வந்து உங்களிடம் சொல்லியிருப்பார் என்கிறேன், நண்பரே! ஆனால் பல்லவ இளவரசர் இப்போதைக்கு உங்களைச் சந்திக்க இயலாத நிலையில் இருப்பதாலும், அவரைச் சந்தித்து உண்மைகளை அறிந்துகொள்ளுமுன் நீங்கள் அவரசப்பட்டு, அருமையாக உருவாகிவரும் சந்தர்ப்பச் சூழ்நிலைகளைக் கெடுத்துக் குழறுபடியாக்கி விடுவீர்களோ என்பதாலும்தான் நானே அந்த விவரங்களையெல்லாம் தெரிவிக்கத் துணிந்தேன்."

"பல்லவ இளவரசர் என்னை ஏன் சந்திக்க இயலாத நிலையில் இருக்கிறார் என்கிறீர்கள் கலைஞரே? அவருடைய வருகையை நான் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேனே!"

இளநகை புரிந்த பரவாதிமல்லர் எகத்தாளக் குரலில் கேட்டார்: "பாண்டியருக்கும் சளுக்கியருக்கும் நெல்வேலி

என்னும் இடத்தில் போர் மூண்டுவிட்ட சேதியை நீங்கள் அறிவீர்களா, நண்பரே?"

"ஆபத்துதவி இளங்காரிக்குடையானின்மூலம் நேற்றுத் தான் எனக்கு அந்த விவரம் தெரியவந்தது."

"ஆமாம், நண்பரே! அந்த நெல்வேலிப் போர்க்களத்தில் பல்லவ நாட்டின் விடுதலைக்காகப் பாண்டியருக்குத் துணை நின்று சளுக்கியப் படை வீரர்களின் தலைகளை உருட்டிப் பந்தாடிக்கொண்டிருக்கிறார் நம் இளவரசர் கோவிந்தவர்மன். அதனால்தான் அவர் தங்களை வந்து சந்திக்க நாளாகும் என்றேன்."

அளவுக்கு மீறிய வியப்பால் அதிர்ச்சியுற்று ஆட்டம் கண்ட முத்தரையர், "அப்படியா?" என்று கண்ணையும் வாயையும் அகலத் திறந்தார். பிறகு சட்டென்று நிமிர்ந்து, "படையுதவி பெற்றுவரப் போன பல்லவ இளவரசரைப் பாண்டிய மன்னர் தம் படைத் தளபதியாக்கிக்கொண்டு விட்டாரா என்ன?" என்று ஆத்திரத்துடன் விளித்தார்.

பரவாதிமல்லரின் முகத்தில் ஓர் ஏளனச் சிரிப்பு இழை யோடியது. "பாண்டிய மன்னரிடம் படையுதவி கோரிய தாங்கள் அதை எவ்வழியாகக் கொண்டு வந்து, எப்படிப் பயன்படுத்தத் திட்டமிட்டிருக்கிறீர்கள் நண்பரே?"

"எங்களுக்குத் தேவையானபோது பாண்டிய மன்னர் படை உதவி அளிப்பார் என்பதற்கு வாக்குறுதி மட்டுமே பெற்று வரும்படி பல்லவ இளவரசரை அனுப்பி வைத்தேன்."

"அந்த நிலைமை அடியோடு மாறிவிட்டது. சளுக்கியரை எதிர்த்துப் போரிட வேண்டிய கட்டாய நிலை இப்போது பாண்டியருக்கே ஏற்பட்டுவிட்டது. எனினும், தமது நாட்டின் வட எல்லையைக் காத்துக் கொள்வதோடு அந்தப் போரை நிறுத்திவிடுவது என்பது பாண்டிய மன்னரின் நோக்கம் அல்ல. பல்லவநாட்டின் மண்ணிலிருந்தும் சளுக்கியரை விரட்டியடிக்க வேண்டும் என்று அவர் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார். எனவேதான்

படையுதவி கோரப்போன பல்லவ இளவரசரைப் போர் முனைக்குத் தம்மோடு அழைத்துச் சென்றுவிட்டிருக்கிறார். நெல்வேலிப் போர்க்களத்தின் கிழக்கு முனையில் இப்போது சளுக்கியரைக் கதிகலங்கச் செய்துகொண்டிருப்பது பாண்டியப் படைகள் அல்ல; பழையாறைச் சோழரின் வீரம் செறிந்த சோழியப் படைகளே! அந்தப் படைகளைத்தான் நமது பல்லவ இளவரசர் தலைமை தாங்கி நடத்திக்கொண் டிருக்கிறார். நெல்வேலியிலிருந்து சளுக்கியர்கள் பின் வாங்கினாலும் அதோடு அவர்களை விட்டுவிடாமல் பல்லவ நாட்டின் வட எல்லைக்கு அப்பால் விரட்டியடிக்கும் வரையில் அந்தப் போரைத் தொடர்ந்து நடத்தத் திட்டமிட்டிருக்கிறார் பாண்டிய மன்னர். அப்போது சோழியப் படைகள் மட்டுமல்லாது பாண்டியப் படைகளும் நமது இளவரசர் கோவிந்தவர்மனின் தலைமையில் செயல்பட ஆரம்பிக்கும். இதற்குக் காரணம் என்னவென்றால், பல்லவ நாட்டின் விடுதலைப் போரைப் பாண்டிய மன்னரே தலைமை தாங்கி நடத்த முற்பட்டால் நமக்குள் பல விபரீத சந்தேகங்கள் எழலாம் என்பதாலேயே அவர் இத்தகைய ஓர் ஏற்பாட்டைச் செய்திருக்கிறார். இவ்வளவுக்கும் மூலப் பிதா யார் தெரியுமா? நண்பரே? உங்கள் கண்ணுக்குப் பச்சைத் துரோகியாகத் தோற்றம் அளிக்கும் பழையாறைச் சோழர் தாம்." உணர்ச்சிக் கலவையிட்ட குரலில் இவ்வாறு கூறினார் பரவாதிமல்லர்.

மரமரத்து நின்றுகொண்டிருந்த முத்தரையரின் முகத்தில் இன்னமும் சிறிதளவு சந்தேகக் கறை படர்ந்தே காணப்பட்டது. "கலைஞர் சொன்ன விவரங்களைக் கவனமாகக் கேட்டேன். ஆனால்?..." என்று தயங்கி இழுத்தார்.

"நான் கூறிய விவரங்களோடு பழையாறைச் சோழரைச் சம்பந்தப்படுத்துவதுதான் புரியவில்லை என்கிறீர்களா? சரி; புரியும்படி சொல்கிறேன், கேளுங்கள்!" என்று மென்னகை புரிந்த சேதியக் கலைஞர் மேலும் கூறினார்: "பல்லவ

நாட்டைக் கைப்பற்றிக்கொண்ட சளுக்கியப் பகைவரை அகற்றித் தம் உரிமையை நிலைநாட்ட வேண்டும் என்னும் எண்ணமே இல்லாமலிருந்த பரமேசுவரவர்மரின் பொறுப்பற்ற போக்கையும், அவரது உத்தரவு ஒன்றையே பிரதானமாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த தங்கள் பலவீனத்தையும் கூர்ந்து கவனித்து வந்த பழையாறைச் சோழர், அந்த நிலைமை அப்படியே நீண்டுகொண்டு போனால் பல்லவ நாட்டுக்கு இனி விமோசனமே கிடைக்காது என்றும், அது சளுக்கியரிடம் தன் முழுச் சுதந்திரத்தையும் இழந்து நிரந்தரமாக அடிமைப்பட்டுவிடும் என்றும் தீர்மானித்தவராய், அதற்கு ஒரு மாற்று வழி காணவே பல்லவருக்கு எதிராகச் சளுக்கியருடன் சேர்ந்து விட்டது போன்ற ஒரு பயங்கரத் தந்திரத்தைக் கடைப் பிடிக்கத் துணிந் தார் என்று ஏற்கனவே சொன்னேன். பல்லவபுரம் அரண்மனைக் கோட்டைச் சிறையிலிருந்து தப்பி வந்த கோவிந்தவர்மரை மண்டகப்பட்டுக் குகைக் கோயிலில் சந்தித்து, ஆந்திர இளவரசியின் சிவிகையிலிருந்து அவர் கவர்ந்து வந்த பட்டோலையைப் படித்துப் பார்த்தபோது தான் பழையாறைச் சோழரின் மனத்தில் அத்தகையதோர் எண்ணம் உருவாயிற்று. சளுக்கிய விக்கிரமாதித்தன் தனது ஆட்சியதிகாரத்தை இங்கே நிலைநாட்டிக்கொள்வதற்காகச் சமண சமயத்தைப் பயன்படுத்தத் திட்டமிட்டிருக்கிறான் என்பதையும், அதற்காகவே ஆந்திர இளவரசி உத்தமசீலியை இந்நாட்டுக்கு வரவழைத்திருக்கிறான் என்பதையும் அறிந்தே அவர் அந்த முடிவுக்கு வந்தார். அதனால்தான் அன்றைய தினம் அவர் உங்களுடன் பரமேசுவரவர்மரைச் சந்திக்கப் பெருவளநல்லூருக்கு வரவும் மறுத்தார். அப்படி மறுத்து விட்டுப் போனவர் தமது பழையாறை அரண்மனைக்கு அன்று போகவில்லை; நேரே பல்லவபுரம் போய் சளுக்கியத் தளபதி வில்வேலியைச் சந்தித்திருக்கிறார்...”

"உங்கள் நண்பரின் நோக்கத்தைப்பற்றிய விளக்கம் இருக்கட்டும், கலைஞரே! அவர் சளுக்கியருடன் சேர்ந்து எங்களுக்குச் சாதகமாக என்ன செய்தார் என்பதை முதலில் சொல்லுங்கள்."

"அதைத்தான் சொல்ல வருகிறேன், அன்பரே! பல்லவ நாட்டிலுள்ள குறுநில மன்னர்களின் ஒத்துழைப்பு கிடைத்தால் தமது ஆட்சியதிகாரத்தை இங்கே எளிதில் நிலை நாட்டி விடலாம் என்ற நைப்பாசையுடன் தளபதி வில்வேலி ஏற்கனவே பல முயற்சிகள் செய்து தோல்வி கண்டிருந்தான். நமது சிற்றரசர்களில் யாருமே அந்தத் துரோகச் செயலுக்கு உடன்படவும், அவனது கெடுபிடிகளுக்குப் பணிந்து போகவும் மறுத்துவந்தனர். இதனால் அவர்களைக் கண்காணித்து அடக்கி வைப்பதே அவனுக்குப் பெரும்பாடாக இருந்தது. எந்த விநாடியும் அவர்கள் கட்டு மீறிக் கலகக் கொடியை உயர்த்தி விடலாம் என்ற அச்சத்துடனேயே அவன் ஒவ்வொரு நாளையும் கழித்து வந்தான். இந்நிலையில் பழையாறைச் சோழர் தாமே முன்வந்து சளுக்கிய மன்னனுக்கு ஒத்துழைப்பு நல்குவதாகச் சொன்னதைக் கேட்டதும் வில்வேலிக்கு அது ஒரு பெரிய வரப்பிரசாதம் போல் ஆகிவிட்டது. ஆயினும் அவரை அவன் உடனே நம்பி விட்டான் என்றும் சொல்லிவிட முடியாது. அவனுடைய நம்பிக்கையைப் பெறப் பழையாறைச் சோழர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் அனந்தம். அம்முயற்சியில் ஓரளவு வெற்றி பெற்றதும் அவனை அவர் அடிக்கடி போய்ச் சந்தித்து, சளுக்கிய மன்னனின் ஆட்சியதிகாரத்தை நிரந்தரமாக்குவதற் கான புதுப் புது யோசனைகள் சொல்வதுபோல் சொல்லி, அதற்காக அவர்கள் போட்டிருக்கும் திட்டங்களைக் கொஞ்சங் கொஞ்சமாக உசாவி அறியலானார். அவற்றில் அவருக்கு முக்கியமாகப் பட்டது, சமண சமயத்தைப் பயன்படுத்திக்கொள்ளப் போட்டிருக்கும் திட்டம்தான். ஏனென்றால், சக்தி வாய்ந்த சிரவணபெள்குளத்துச் சமண

சங்கத் தலைவரையே தமது அந்த அரசியல் ஆதிக்கத் திட்டத் துக்குப் பயன்படுத்திக்கொள்ள அவர்கள் வஞ்சகமாக அழைப்பு விடுத்திருந்தார்கள். அத்துடன், இங்கே சமண சமயத்தை வலுவாக்குவதற்காக ஆந்திர நாட்டின் பொக்கிஷம் முழுவதையும் திறந்து கொட்டிவிடுவது என்ற நோக்கத்துடன் அந்நாட்டு இளவரசி உத்தமசீலி வேறு வந்து காத்திருந்தாள். எனவே, ‘சமண சமய வளர்ச்சிப் பணி’ என்னும் புனிதமான போர்வைக்குள் ஒரு பெரிய அரசியல் ஆதிக்கச் சூழ்ச்சி நாடகத்தை நடத்தி அதிலே அவர்கள் வெற்றியும் அடைந்து விடுவார்கள் என்று தோன்றியது. அந்தத் திட்டத்தை முறியடிப்பதே தாம் செய்ய வேண்டிய முதல் பணி என்று தீர்மானித்துக்கொண்ட பழையாறைச் சோழர், முதலில் அந்தத் திட்டத்தை ஊக்குவிப்பது போலவும் அதற்குத்தாம் முழு ஆதரவு தருவது போலவும் நடித்தார். தாமே சமண சமயத்தைச் சார்ந்து விடுவதாகவும் வாக்களித்தார். ஆனால் அது வெற்றி பெறாது என்று தாம் அஞ்சுவதாகக் கூறி அதற்கான சில பொய்க் காரணங்களைச் சாமர்த்தியமாக எடுத்துக் காட்டினார். அரசியல் விவேகமற்ற வீரனான வில்வேலி அந்தப் பொய்க் கூற்றுக்களைச் சிறிதே நம்பத் தலைப்பட்டான். அதற்குத் தோதாக, இங்குள்ள திரமிள சமண சங்கத் தலைவரும் அவனுக்கு சமயத்தின் பெயரால் ஆதரவு தர மறுத்து விட்டார். இதுதான் தருணமென்று, அவனுடைய சிந்தனையை ஒரு புதிய திசையில் திருப்பிவிடலானார் பழையாறைச் சோழர். அதாவது, பல்லவ நாட்டில் சளுக்கிய விக்கிரமாதித்தனின் ஆதிக்க ஆட்சி வேரூன்ற வேண்டுமானால் அண்டை நாடான பாண்டிய நாட்டின்மேல் ஒரு வலுத்தாக்குதலை நடத்த வேண்டும் என்றும், அந்த வலுத்தாக்குதல் போரில் வெற்றி கிட்டினாலும் கிட்டாமற் போனாலும் இந்த நோக்கம் நிறைவேறிவிடும் என்றும், இது தான் சரியான இராஜ தந்திரம் என்றும் கூறி அவனுடைய மூளையை மழுக்கி அதில் ஆசைக் கனலைத்

தூண்டி விட்டார். பல்லவ நாட்டின் வீழ்ச்சியால் பாண்டிய நாடு பயந்து நடுங்கிக்கொண்டிருக்கிறது என்றும், அதனிடம் போதிய படை பலம் இல்லை என்றும், அதன் மன்னன் கிழடு தட்டிய ஒரு வறட்டு வேதாந்தி என்றும் பலபடியாகக் கூறித் தம் சதியாலோசனைக்கு வலுவேற்றினார். போர் வெறி கொண்ட வில்வேலிக்கு அந்த யோசனை மிகவும் கவர்ச்சிகர மாகப் பட்டுவிட்டது. அதிலே மயங்கிய அவன், ஆந்திர இளவரசியைச் சந்திக்கும் பொருட்டு உறையூரிலிருந்து பல்லவ புரத்துக்கு வந்த சளுக்கிய விக்கிரமாதித்தனிடம் அந்த யோசனையை உற்சாகத்துடன் சொல்லியிருக்கிறான். மண்ணாசை கொண்ட விக்கிரமாதித்தனும் முன்பின் யோசியாமல் அதை உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொண்டு விட்டான். சமண சமயத்தைப் பயன்படுத்தித் தன் ஆதிக்க ஆட்சியை நிலைநாட்டிக் கொள்வதற்காக அவன் போட்டிருந்த திட்டம் உடனே கைவிடப்பட்டது. பாண்டிய நாட்டின்மேல் படையெடுப்பதற்கான ஆயத்தம் வெகு தீவிரமாக மேற்கொள்ளப்பட்டு இறுதியில் அந்தப் போரும் இப்போது ஆரம்பமாகி விட்டது."

"ஓ!... பல்லவ நாட்டுக்குச் செய்த துரோகம் போதா தென்று பாண்டிய நாட்டையும் காட்டிக் கொடுத்து அழிக்கச் சொல்லிக் கொடுத்தவர் பழையாறைச் சோழர் தாமோ?" என்று குரோதம் வெடிக்கக் கூவிக் கேட்டார் முத்தரையர்.

# 92

# அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி

"அவசரப்படாதீர்கள், அன்பரே!" என்று அமைதி யாகக் கூறிப் புன்முறுவல் பூத்த பரவாதிமல்லர் மேலும் சொன்னார்: "சளுக்கியரைப் பாண்டி நாட்டின்மேல் படையெடுக்கத் தூண்டி விட்டதோடு பழையாறைச் சோழர் சும்மாயிருந்து விடவில்லை. நேரே மதுரைக்குச் சென்று தம் தமக்கையின் கணவரான பாண்டிய மன்னர் நெடுமாறரைச் சந்தித்துத் தமது திட்டங்களை விளக்கிக் கூறிச் சளுக்கியருடன் ஒரு பெரும் போர் நடத்தத் தயாராகும்படி எச்சரித்திருக் கிறார். பல்லவ நாட்டின் விடுதலைக்காகப் பாண்டிய நாட்டைப் போரில் ஈடுபடுத்த நெடுமாறர் முதலில் விரும்ப வில்லை. இன்னும் சொல்லப்போனால், கடல் போன்ற படை பலம் கொண்ட சளுக்கிய விக்கிரமாதித்தனை எதிர்த்துப் போரிட அவர் அச்சமே காட்டினார். ஆனால், பழையாறைச் சோழர் அவரை விடவில்லை; இந்தச் சமயம் சளுக்கிய விக்கிரமாதித்தனை எதிர்க்காமல் விட்டுவிட்டால் பாண்டிய நாடும் அவனுக்கு அடிமைப்பட்டுப் போவதல்லாமல், வீழ்ந்து பட்ட சமண சமயம் புத்துயிர் பெற்று எழுந்து பல்லவ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் ஆழமாக வேர் விட்டுப் பிறகு அசைக்க முடியாதவாறு படர்ந்துவிடும் என்று தமது கடைசி அஸ்திரத்தைப் பிரயோகித்துப் பயமுறுத்தியிருக் கிறார். சைவ சமயத்துக்காகத் தம்மையே அர்ப்பணித்துக் கொண்டவரான நெடுமாறர் இதைக் கேட்டபின்தான் கொதித்து எழுந்து சளுக்கியருடன் ஜீவ மரணப் போர் நடத்தத் துணிந்தார்...".

"ஆமாம்; சிவனே என்று கிடந்த பாண்டிய மன்னரை எதற்காக இந்தப் பயங்கரப் போரில் இழுத்துவிட்டாராம், பழையாறைச் சோழர்?"

"இதிலேதான் அவருடைய மகத்தான இலட்சியத்தின் மூலக் கருவே அடங்கியிருக்கிறது, நண்பரே! பல்லவ நாட்டில் ஆதிக்க ஆட்சியை நிலைநாட்டிக் கொள்வதில் தீவிர கவனம் செலுத்தி வந்த சளுக்கியரை ஏதேனும் ஒரு போரில் இழுத்து விட்டால்தான் இங்கே நமது விடுதலைப் போருக்கான ஆயத்தம் செய்ய முடியும் என்பது அவர் எண்ணம். எதிரியின் கவனத்தை வேறு திசையில் திருப்பி வைத்து எதிர்பாராத விதமாகப் பின்னாலிருந்து ஒரு சிறிய தாக்குதல் நடத்தினாலும் போதும். அவனுடைய பலத்தை எளிதில் சிதறடித்துவிடலாம் என்பது சாதாரண அரசியல் தந்திரந்தான் என்றாலும் அதைச் சாதிப்பது மட்டும் அத்தனை எளிதல்ல; ஆனால் பழையாறைச் சோழர் அதைத்தான் சாதிக்க விரும்பினார் — பாதியளவு சாதித்தும் விட்டார்."

முத்தரையர் இந்தக் கூற்றை ஒப்புக்கொள்ள மறுப்பவர் போல் வேகமாகத் தலையாட்டினார். "உண்மையில் பழை யாறைச் சோழரின் நோக்கம் அதுவானால், இந்தத் தந்திரத் திட்டத்தை எங்களிடம் கூறி எங்கள் ஒத்துழைப்பையும் உதவியையும் பெற்று இன்னும் சிறப்பாகச் செய்திருக்கலாமே? இப்படிக்கின்றி எங்களை அவர் விரோதித்துக் கொண்டு தனி மனிதராய் நின்று இதைச் சாதிக்க முனைவானேன்?"

"அதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு, நண்பரே!" என்றவாறு நிமிர்ந்தார் பரவாதிமல்லர்.

"அதாவது, சளுக்கியரை எதிர்க்க இரகசியப் படை திரட்டும் முயற்சிக்குப் பரமேசுவரவர்மரின் உத்தரவு ஒன்றையே எதிர்பார்த்துக் கொண்டிருந்த என்னிடம் அந்தத் திட்டத்தை வெளியிட்டுப் பயனில்லை என்று அவர் நினைத்ததாக முதல் காரணத்தைச் சொல்லி முடிப்பீர்கள். சரி; இரண்டாவது காரணம் என்னவோ?"

"சளுக்கியருடன் சேர்ந்து அவர்களது ஆதிக்க ஆட்சிக் குரிய முயற்சியைத் தாம் தீவிரப்படுத்துவதாக நீங்கள் அறிய நேர்ந்தால் உங்களுடைய அந்த ஒரே வழி முயற்சியைக் கைவிட்டுவிட்டு வேறு பயனுள்ள மார்க்கத்தில் கவனம் செலுத்துவீர்கள் என்று எண்ணிய பழையாறைச் சோழர் அவ்வாறு நடந்து கொண்டார். அதிசயிக்கத்தக்க விதமாக அவர் நினைத்தபடியேதான் நீங்களும் உங்கள் போக்கை மாற்றிக்கொண்டு விட்டீர்கள். அதாவது, சளுக்கியரை எதிர்த்துப் போரிடுவதற்காகப் பல்லவக் குடிமக்கள் ஓர் இரகசியப் படையணியில் சேரவேண்டும் என்று பரமேசுவர வர்மர் ஆணையிடுவதாகத் திருமுக ஓலையொன்றைத் தாங்களே எழுதிக்கொண்டு, அதிலே அவரது கைச்சாத்தைப் பெற முயன்று, அம்முயற்சியில் வெற்றி பெறாது போகவே விரக்தியடைந்து, அவ்விரக்தியில் பிறந்த ஆவேசத் துணிவினால் பல்லவ மன்னர் பாண்டியப் பேரரசரிடம் படையுதவி கோரியதாகப் பொய் ஓலை வரைந்து அதை இளவரசர் கோவிந்தவர்மரிடம் கொடுத்தனுப்பினீர்கள். இப்படி நீங்கள் செய்வீர்கள் என்று திட்டவட்டமாக எதிர் பார்த்தே பழையாறைச் சோழர் தமது சோழியப் படைகளை மிகவும் சாமர்த்தியமாக—பரம இரகசியமாக— பாண்டிய நாட்டின் தலைநகருக்கு முன்னதாகவே அனுப்பி வைத்திருந் தார். படையுதவி கோரிப் பல்லவ இளவரசர் வந்தால் அவரிடம் அந்தச் சோழியப் படைகளை ஒப்படைத்து விடும்படி பாண்டிய மன்னருக்குச் சொல்லியும் வைத்திருந்தார். அவருடைய அற்புதக் கணிப்பு அணுவளவும் பிசகவே இல்லை."

இதைக் கேட்டு வியப்பில் ஆழ்ந்த முத்தரையர், "அது சரி, கலைஞரே! என்னைப்பற்றி இத்தனை துல்யமாகக் கணக்கிட்டு அறிந்து தீர்க்கதரிசனத்துடன் நடந்துகொண்ட அவர் கோவிந்தவர்மரை ஏன் அநாவசியமாகப் பகைத்துக் கொண்டார்?" என்று கேட்டார்.

"ஓ,... பழையாறைச் சோழர் தம் அருமை மகள் இளங்கோப்பிச்சியைச் சளுக்கிய இளவரசன் விநயாதித்த னுக்கு மணம் செய்து தருவதாக வாக்களித்தது ஏன் என்று கேட்கிறீர்களா? அதுவும் அவருடைய இலட்சியச் சதுராட்டத்தின் ஒரு பயங்கரப் பரிசோதனைதான் அன்பரே! நாட்டின் விடுதலைக்காகப் பாடுபடவேண்டிய இந்தத் தருணத்தில் பல்லவ இளவரசர் தம் காதல் விவகாரத்தில் சற்று அதிகப் படியாகக் கவனம் செலுத்துவதாகத் தோன்றியது அவருக்கு. அந்த நிலையை வளரவிட்டால் விடுதலைப் போருக்கான தீவிரத்தை அது குறைத்துவிடுவதுமல்லாமல் வீரம் செறிந்த ஓர் இளம் சக்தி விரயமாகிவிடும் என்று அஞ்சியே, இளவரசர் தம் மகள்மீது கொண்ட காதலைச் சிறிது காலத்துக்கேனும் துண்டுபடுத்தி வைக்கத் தீர்மானித்தார். இந்தத் தீர்மானத்தினால் விளையக்கூடிய விபரீதங்களையும் அவர் எண்ணிப் பார்க்காமல் இல்லை. ஆயினும் தமது மகத்தான இலட்சியம் சித்திக்கத் தம் அருமை மகளின் வாழ்க்கையைப் பலியிட அவர் தம்மைத் தாமே திடப்படுத்திக் கொண்டார். இது தவிர, சளுக்கியருடன் சம்பந்தி உறவு கொள்ளப் போவதாக அவர் பொய்யறிவிப்பு செய்ததற்கு இன்னொரு காரணம், அதன் மூலமாக அவர்களுடன் இன்னும் தாராளமாய் நெருங்கி அவர்களைக் கவிழ்க்கும் சதியில் ஈடுபடலாம் என்பதுதான்."

இதைக் கேட்டுப் பிரமித்த நிலையில் மரமரத்துப்போய் உட்கார்ந்திருந்தார் முத்தரையர்.

93

# முறிந்த கனவு

ஏதோ நினைவு வரப்பெற்றவர்போல் மெல்லத் தலை தூக்கி, "இதெல்லாம் சரிதான் கலைஞரே! சளுக்கியருக்காக என்று சொல்லிப் பல்லவ குடிமக்களிடமிருந்து போர்க்கருவி களையெல்லாம் பழையாறைச் சோழர் பறித்துக்கொண்டு போய் உங்களுடைய இல்லத்து நிலவறையில் சேமித்து வைத் திருக்கிறாரே, அதற்குக் காரணம் என்ன?" என்று அடித் தொண்டையில் விளித்தார் முத்தரையர்.

"அதுதான் அவர் செய்த எல்லாக் காரியங்களிலும் அதி முக்கியமானது நண்பரே! பாண்டியருடன் சளுக்கியர் போர் தொடுக்க வேண்டுமெனத் திட்டமிட்ட உடனேயே தம் படை வீரர்களுக்குத் தேவைப்படும் போர்க்கருவிகளைப் பல்லவ நாட்டிலிருந்தே சேமிக்கத் தளபதி வில்வேலி எண்ண மிட்டான். இதையறிந்த பழையாறைச் சோழர் தாமே முந்திக் கொண்டு அவனுக்குத் தெரியாமல் அந்தப் பணியில் இறங்க லானார். அவரைப்பற்றி நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருந்தீர்களோ அதே கருத்தைப் பல்லவ நாட்டுக் குடி மக்களும் கொண்டிருந்ததால் அவருக்கு எத்தனையோ இடங்களில் எத்தனையோ விதமான பயங்கர ஆபத்துக்கள் நேரலாயின. அவற்றிலிருந்தெல்லாம் தப்பி அந்தக் காரியத்தை அவர் விடாப்பிடியாகச் செய்ததற்கு இன்னொரு காரணமும் உண்டு. பாண்டி நாட்டின்மேல் சளுக்கிய விக்கிரமாதித்தன் போர் தொடுத்துவிட்ட சேதியைக் கேட்ட பிறகாவது பல்லவ மன்னர் தமது விரக்தி மனப்பான்மையிலிருந்து விடுபட்டுத் தம் விடுதலைப் போருக்கு ஆயத்தம் செய்ய அனுமதி

வழங்குவார்—உடனே நீங்கள் படை திரட்டும் முயற்சியில் இறங்குவீர்கள். ஆள் பலம் திரட்டுவது உங்களுக்குச் சுலபமா யிருக்கலாம்; ஆனால் ஆயுத பலத்துக்கு எங்கே போவீர்கள்? வெறும் கையோடு இருக்கும் வீரர்களைக் கொண்டு விக்கிரமாதித்தனை எதிர்க்க முடியுமா? எனவேதான், அப்படி யொரு நிலைமை ஏற்பட்டால் அதற்கு அநுசரணையாக இருக்க, முன் கூட்டியே ஆயுத சேமிப்பில் இறங்கினார் அவர்!" என்று உணர்ச்சி வசப்பட்ட குரலில் கூறிக்கொண்டே உற்சாகமாக எழுந்த பரவாதிமல்லர், "இந்தாருங்கள் நண்பரே! இது என் இல்லத்து நிலவரையின் தாழ்க்கோல்; உங்களை நான் எங்கே சந்தித்தாலும் இதை ஒப்படைத்துவிட வேண்டும் என்று எனக்குப் பழையாறைச் சோழர் பணித்தார்!'' என்றவாறு தம் இடுப்பில் செருகி வைத்திருந்த பெரியதொரு தாழ்க்கோலை எடுத்து நீட்டினார்.

"வெற்றி, வெற்றி! மகத்தான வெற்றி!" என்று உரக்கக் கூறிக்கொண்டே ஆவலுடன் பாய்ந்துபோய்த் தாழ்க்கோலை வாங்கினார் பெரும்பிடுகு முத்தரையர்.

இந்தச் சமயம், அந்த ஜீனாலயத்து மண்டபத்தின் மறு பக்கத்திலிருந்து, "தோல்வி, தோல்வி! மாபெரும் தோல்வி!" என்ற குரல் கேட்டுத் திடுக்குற்ற முத்தரையரும் பரவாதி மல்லரும் அவசரமாக அவ்விடத்தை நோக்கி ஓடினார்கள்.

இவ்வளவு நேரம் அங்கே தூணில் சாய்ந்து உட்கார்ந் திருந்த பழையாறைச் சோழர்தாம் அவ்வாறு கூறி விம்மிப் பொருமிக் கொண்டிருந்தார்!

கல்லடி பட்டுப் பிரிந்த நீர் ஆவேச எழுச்சியுடன் மீண்டும் ஒன்றுகூடிச் சேர்வதுபோல் தம்மை மீறிய துடிப்போடு பாய்ந்தோடி வந்த பெரும்பிடுகு முத்தரையர், அங்கே தாள முடியாத மனவேதனையால் தோய்ந்து துவண்டு தூணில் சாய்ந்து விம்மிப் பொருமிக்கொண்டிருந்த பழையாறைச் சோழரை அப்படியே ஆரத் தழுவித் தூக்கி நிறுத்தித் தோளின்மேல் புதைத்துக்கொண்டு, "மாவீர மகா

புருஷரே, என்னை மன்னியுங்கள்! ஆய்ந்தோய்ந்து பாராமல் தங்களை அவமதித்துத் தூற்றிப் பேசிய என்னைத் தயை கூர்ந்து மன்னித்துவிடுங்கள்!" என்று விம்மிக் கரைந்த குரலில் தழுதழுத்தார்.

சேதியக் கலைஞரும், முத்தரையரும் பேசிய பேச்சுக் களையெல்லாம் சமண ஐயனாரின் யானை வாகனத்துக்குப் பின்னால் நின்று கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்த ஆபத்துதவி இளங்காரிக்குடையானும் ஓடிவந்து பழையாறைச் சோழரின் காலடி பதிந்த மண்ணைத் தொட்டுத் தன் கண்ணில் ஒற்றிக்கொண்டு சற்றுத் தள்ளிப் போய்த் தலைகுனிந்து நின்றான். அப்பழுக்கற்ற வீரமா மனிதரொரு வரை அற்பத்தனமாகச் சந்தேகித்துப் பலவாறு தூஷித்தது மல்லாமல் அவர்மீது குற்றஞ் சுமத்தும் வகையில் பல சேதிகளைக் கொண்டுவந்து முத்தரையரிடம் சொல்லி முட்டாள் பட்டம் கட்டிக் கொண்டோமே என்று மனம் புழுங்கிக் குமைந்தான் அவன்.

ஆனால் பழையாறைச் சோழரோ எவ்வித சலனமு மின்றி அமைதியாகத் தலைதூக்கி அவலப் புன்முறுவல் பூத்த வாறு, "ஹூம்! நானா மகா புருஷன்? என்னைப்போல் ஒரு முழு மூடன், துரதிர்ஷ்டக்காரன், அவசரப் புத்தி கொண்ட பேதை வேறு யாருமே இருக்க முடியாது! என் முயற்சிகள் அனைத்தும் முறிந்துவிட்டன; என் இலட்சியக் கனவுகளெல் லாம் கலைந்து கானலாகிவிட்டன!" என்று விரக்தியுடன் முணுமுணுத்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு மீண்டும் தூண்மீது சோர்ந்து சாய்ந்தார்.

"என்ன நண்பரே, ஏன் இப்படி மனம் தளர்ந்து பேசுகிறீர்கள்?" என்று திகிலுடன் வினவினார் பரவாதிமல்லர்.

தலையைத் தாங்கிப் பிடித்தவாறு சில விநாடி மௌனமாயிருந்த பழையாறைச் சோழர், "ஆம், கலைஞரே! என் ஆருயிர்ச் செல்வி இளங்கோப்பிச்சியை நானே எதிரி களிடம் காட்டிக் கொடுத்துவிட்டேன்! எனது இலட்சிய

வெறியின் தீக்குண்டத்துக்கு அவளைப் பலியாக்கி விட்டேன்!” என்று தாள முடியாத துயரத்துடன் பொருமிக் கூறியவர் மேலும் சொன்னார்: “நேற்று மாலை நாம் பெருவள நல்லூர் சிற்றாற்றங்கரையிலிருந்து தங்கள் நிலவறைக்குப் போகும் போது கொஞ்சமும் எதிர்பாராத விதமாக அந்த இல்லத்திலிருந்து பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரும், ஆந்திர இளவரசி உத்தமசீலியும் வெளிப்பட்டுப் போனதைப் பார்த்தோம் அல்லவா?...”

புத்துயிர் பெற்ற நட்பின் ஆழ்ந்த உணர்ச்சிக் கனலால் நீறு பூத்து நின்றுகொண்டிருந்த முத்தரையர் இதைக் கேட்டுப் பரபரப்பு அடைந்தவராய், “என்ன! கலைஞரின் இல்லத்தில் பல்லவ மன்னரைப் பார்த்தீர்களா? நேற்று விடியற்காலை நான் அங்கு போனபோது அந்த இல்லம் பாழடைந்து இருண்டு கிடந்ததுமல்லாமல் அதன் வாயிற் கதவும் தாழிடப் பட்டிருந்ததே?” என்று துடிப்புடன் வினவினார்.

பரவாதிமல்லர் அவரை நோக்கிக் கையமர்த்திவிட்டுப் பழையாறைச் சோழரின் பக்கம் திரும்பி, “ஆமாம்; அந்த விந்தையான காட்சியைப் பார்த்த பின் என்னையும் உங்கள் ஆபத்துதவி சம்புவராயனையும் இந்த ஜினாலயத்தில் போய் இருக்கும்படி சொல்லிவிட்டு அவரைப் பின்தொடர்ந்து சென்றீர்கள்! அதன் பிறகு என்ன நடந்தது?” என்று கேட்டார்.

“அந்த விஷயத்தை நான் எப்படிச் சொல்வேன் கலைஞரே! என் வாழ்நாளில் அதுவரை அவ்வளவு பெரிய அதிர்ச்சியான அநுபவம் எனக்கு ஏற்பட்டதே இல்லை!” என்று கசந்த குரலில் சொன்ன பழையாறைச் சோழர் மெல்லக் கண் மூடியவாறு, “நான் மட்டுமென்ன? நீங்களும் அதைக் கேட்டால் அதிர்ந்துதான் போவீர்கள். ஆனால் என் மதிப்பிற்குரிய சந்திரலேகைச் சிற்றரசர் அவ்விஷயத்தை ஏற்கனவே அறிந்திருக்கலாம். அப்படி அறியவில்லை யென்றால் நம்மைவிட அவருக்குத்தான் அது ஒரு பேரிடிச் சேதியாக இருக்கும்” என்றார்.

பரவாதிமல்லரும் பெரும்பிடுகு முத்தரையரும் ஏதோ ஒரு பயங்கரத் தாக்குதலுக்குத் தம்மை உட்படுத்திக் கொள்ளத் தயாராவதுபோல் கழுத்தை நீட்டி உடம்பை வளைத்துக் கொண்டு அவரை உற்றுப் பார்த்தனர்.

"கேளுங்கள், நண்பர்களே! இன்னமும் நான் நம்புவதற் குச்சிரமப்பட்டுக்கொண்டிருக்கும் அந்த விஷயம் என்ன தெரியுமா? நம் ஜன்மப் பகைவன் சளுக்கிய விக்கிரமாதித் தனின் தம்பி மகளான ஆந்திர இளவரசி உத்தமசீலியைப் பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர் தம் உயிர்க் காதலியாக ஏற்று அவளுடன் உல்லாச உரையாடல் நடத்திக்கொண் டிருந்த காட்சியைத்தான் அங்கு கண்டேன்."

முத்தரையர் இதைக் கேட்டு உண்மையிலேயே இடியால் தாக்குண்டவர் போல் துடித்துப் பதறிவிட்டார்! ஆனால் பரவாதிமல்லரோ தமது நீண்ட தாடியை அமைதி யாக வருடியவாறு புன்முறுவல் பூத்தார்.

"அப்படியானால் முத்தரையரும் இப்போதுதான் முதன் முதலாக இவ்விஷயத்தைக் கேள்விப்படுகிறாரோ?" என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு வினவினார் பழையாறைச் சோழர்.

"இல்லை நண்பரே! பரமேசுவரவர்மரின் பேச்சில் இந்த விஷயம் பலமுறை பூடகமாக வெளிப்பட்டிருக்கிறது. ஆனால் நான் அதைச் சரியாகப் பொருள்படுத்தி உணரத் தவறி விட்டேன். இப்பொழுதுதான் உண்மை புலனாகிறது" என்று முணுமுணுத்தார் முத்தரையர்.

பழையாறைச் சோழர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

"நண்பர் சொல்ல வந்ததைச் சொல்லி முடிக்க வில்லையே?..." என்று பூஞ்சிரிப்புடன் இழுத்தார் பரவாதி மல்லர்.

"ஆமாம், கலைஞரே! அது ஒரு மின்னல்தான்; அதைத் தொடர்ந்து பல பேரிடிகள் என் தலைமீது விழுந்து விட்டன!" என்று விரக்தியுடன் கூறிச் சிறுபொழுது மௌனமாயிருந்த

பழையாறைச் சோழர் திடுமெனத் தலைநிமிர்ந்து படபடப் பாகப் பேசினார்: "அந்தச் சிற்றாற்றங்கரையிலே பல்லவ மன்னரும் ஆந்திர இளவரசியும் காதல் பேச்சில் களித்திருந்த சமயம் அவர்களுக்குப் பின்னால்—ஒருவழுக்குப் பாறையின் மறுபக்கத்தில்—சளுக்கியத் தளபதி வில்வேலி, ஓங்கிய கத்தியுடன் ஒளிந்து நின்றதைக் கண்டேன். பரமேசுவர வர்மரின் நெஞ்சைப் பிளக்க அப்போது அவன் குறி பார்த்துக் கொண்டிருந்தான்.

சட்டென்ற குறுக்கிட்ட முத்தரையர் தம் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு, "சொல்லுங்கள் நண்பரே! சீக்கிரம் சொல்லுங்கள்!" என்று மூச்சடைக்கத் திணறிக் கேட்டார்.

ஏக்கப் பெருமூச்சுவிட்ட பழையாறைச் சோழர் வெறுப் பும் வேதனையுமாகத் தொடர்ந்து சொன்னார்: "அந்த ஒரு கண நேரத்திலே என் மனத்திலே பற்பல கேள்விகள் எழுந்து புடைத்தன. 'பரமேசுவரவர்மரை நேரில் பார்த்திராத வில்வேலி அவர் இருக்கும் இடத்தை எப்படி இத்தனை குறிப் பாகக் கண்டு பிடித்துக்கொண்டு வந்திருப்பான்? ஆந்திர இளவரசி அவரை அவனுக்குக் காட்டிக் கொடுத்து விட்டாளோ? அவ்வாறு காட்டிக் கொடுக்கத்தான் அவரைக் காதலிப்பதுபோல் நடித்து இங்கு அழைத்து வந்திருக் கிறாளோ? அவள் எப்படி யார் மூலமாக அவரை இன்னா ரெனத் தெரிந்துகொண்டாள்? அவர் வரைந்து கொடுத்து விட்டு வந்த ஓவியத்தின்மூலம் அது வெளிப்பட்டு விட்டதோ? அல்லது அவரே தம்மை அவளுக்கு அறிமுகப்படுத்திக் கொண்டாரோ? அவர் எப்படி அந்தச் சதிகாரியிடம் ஏமாந்தார்? உண்மையிலேயே அவளால் ஏமாற்றப்பட்டு விட்டாரா? அல்லது ஏதேனும் ஒரு திட்டத்தோடு அவளிடம் ஏமாந்தவர் போல் நடித்துக் கொண்டிருக்கிறாரா? அந்தப் பெண் சில தினங்களுக்கு முன்னால் சளுக்கியத் தளபதியின் வஞ்சகச் சூழ்ச்சிக்கு இரையானவளாயிற்றே! மதங்கொண்ட அரிவாரணத்தின்மீது ஏற்றி விரட்டியடிக்கப்பட்டவள் அந்தப்

பேராபத்திலிருந்து எப்படித் தப்பினாள்? தன்னைப் பழிவாங்க நினைத்த வில்வேலிக்குச் சாதகமாகப் பல்லவ மன்னரைக் காட்டிக் கொடுப்பதால் அவளுக்கு என்ன பயன்? ஒருகால் அவளும் அவரை உண்மையாகவே காதலிக்கிறாளோ? அல்லது அவள் அவரைக் காதலிக்க வேறேதேனும் காரணம் இருக்குமோ?" — இதற்குமேல் என்னால் சிந்திக்க முடிய வில்லை. வில்வேலியின் கையில் இருந்த குறுவாள் பரமேசுவர வர்மரின் மார்பை நோக்கிப் பாய்வதற்கான இலக்கைப் பிடித்துவிட்டது. அந்த ஒரு கண நேரத்தில் நான் என்ன செய்தேன் என்பது எனக்கே தெரியாது. என்னையறியாமலே என் இடையில் தொங்கிய குத்துவாளைப் பிடுங்கி வில்வேலியைக் குறி வைத்து வீசியெறிந்துவிட்டு அங்கிருந்து விரைந்தோடி மறைந்தேன். அதன் பிறகுதான் என்னால் சற்று நிதானமாகச் சிந்திக்க முடிந்தது. அப்படிச் சிந்தித்துப் பார்த்த போது நான் செய்த காரியம் சரியென்றே பட்டது. காரணம், சளுக்கிய விக்கிரமாதித்தனின் அசுர பலத்துக்கெல்லாம் அஸ்திவாரமாக நிற்பவன் அந்த வில்வேலிதான். அவனை வீழ்த்துவது விக்கிரமாதித்தனின் வலக் கரத்தை வெட்டிச் சாய்ப்பது போல் ஆகும். நெல்வேலிப் போர்க்களத்தில் விக்கிர மாதித்தன் நேரிடையாக இறங்கி நிற்கும் இந்த நேரத்தில், வில்வேலியின் துணையை இழப்பது அவனுக்குப் பேரிடிபோல் ஆகிவிடும். எனவேதான் இப்படியொரு சந்தர்ப் பத்தை நெடுநாட்களாகவே நான் எதிர்பார்த்துக்கொண் டிருந்தேன். அது இன்று சரியாக வாய்த்தது பற்றி மகிழ்ச்சியும் அடைந்தேன். ஆனால் மற்றோர் எண்ணம் எழுந்து மறுகணமே அந்த மகிழ்ச்சியை அழித்தது. ஆமாம்; வெகு தூரத்தில் நின்று நான் எறிந்த கத்தி வில்வேலியின் உயிரைப் போக்கியிருக்காது. பலத்த காயத்தையே அது உண்டு பண்ணியிருக்கும் என்று எனக்குத் தோன்றியது. அந்நிலையில் அவனைப் பார்க்கும் பரமேசுவரவர்மர் என்ன செய்வார் என்பது எனக்குத் தெரியும். எந்தத் தனிமனிதனையும் வன்முறைச் செயல்களால் பழிவாங்குவதை அறவே வெறுப் பவரான அவர், முன்பின் யோசியாமால் வில்வேலியின்

உயிரைக் காப்பாற்ற முனைவார். அதனால் அவருக்கு மட்டு மல்லாது, எனக்கும் ஆபத்து நேரலாம். ஏனென்றால், வில்வேலியின் மீது நான் கத்தியை எறிந்துவிட்டு ஓடியபோது என்னை அவன் திரும்பிப் பார்த்துக்கொண்டே தான் மரண ஓலமிட்டு மண்ணில் சாய்ந்தான். எனவே, அந்த இக்கட்டான நிலையை எப்படிச் சமாளிப்பதென்றே எனக்குப் புரிய வில்லை. திரும்பி ஓடிப்போய் பரமேசுவரவர்மரை எச்சரித்து அவரை அங்கிருந்து அகற்றிக்கொண்டு வந்துவிடலாமா என்றும் ஓர் எண்ணம் தோன்றியது. ஆனால் என்னைப்பற்றி எல்லாரும் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறார்களோ அதே கருத்தை அவரும் கொண்டிருப்பாரோ என்ற அச்சம் எழவே அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். மேலும், தம் ஜன்மப் பகைவனின் தம்பி மகளையே காதலிக்கத் துணிந்திருக்கும் அவருடைய மனப்போக்கு இப்போது எப்படியெல்லாம் மாறி யிருக்குமோ என்ற குழப்பம் வேறு ஏற்பட்டது. இறுதியில் ஒரு புதிய முடிவுடன் பல்லவபுரத்தை நோக்கிப் புறப்பட்டேன். அதாவது, பல்லவபுரம் அரண்மனையில் தங்கியிருக்கும் சளுக்கிய இளவரசன் விநயாதித்தனைத் தீர்த்துக் கட்டி விட்டுப் பாண்டிய நாட்டுக்கு ஓடிவிடவேண்டும் என்று எண்ணினேன். சளுக்கியக் காவல் வீரர்களின் பலத்த பாதுகாப்போடு இருக்கும் விநயாதித்தனைக் கொல்வது அத்தனை எளிதல்ல என்பது எனக்கு ஏற்கனவே தெரிந்த விஷயம்தான். ஆயினும், அதற்காக ஒரு சூழ்ச்சி செய்தேன். பல்லவ இளவரசர் கோவிந்தவர்மர் சிறையிலிருந்து தப்பியோட உதவியவன் இளங்காரிக்குடையான் என்ற உண்மையை வெளியிட்டு, அவனைப் பிடித்துத் தண்டிக்க வேண்டியது அவசியம் என்று சளுக்கிய விநயாதித்தனைத் தூண்டி, ஆலம்பாக்கத்துக்கு அழைத்துச் சென்றேன். என்னுடன் தனியாக வரும் அவனை நடுவழியிலேயே பழி தீர்த்துவிடலாம் என்று எண்ணியே அவ்வாறு செய்தேன். ஆனால் அந்தப் பயலோ தன்னுடன் இருபது காவல் வீரர்களைத் துணைக்கு வைத்துக்கொண்டு என்னோடு புறப் பட்டான். நாங்கள் போகும்போது இளங்காரிக்குடையான்

தன் இல்லத்தில் இருக்கமாட்டான் என்றும் என்னுடைய மகள் இளங்கோப்பிச்சி மதுரைக்குப் போயிருப்பதால் அநந்த மதியும் அங்கே இருக்கமாட்டாள் என்றும் அநுமானித்து, அந்தத் தைரியத்தில் சளுக்கிய இளவரசனை ஆலம்பாக்கத்துக்கு அழைத்துச் சென்றேன். அப்படியே அவன் அங்கு இருந்து விட்டாலும் என்னுடைய மகத்தான இலட்சியத்துக்காக அவனைப் பலியிட்டு அதனால் நேரும் பழிபாவத்தை ஏற்கவும் சித்தமானேன். ஆனால், எதிரிக்கு வெட்டிய குழியில் நானே தடுக்கி விழும்படி விதி என் காலைத் தட்டிவிட்டது.

பழையாறைச் சோழரின் கண்கள் பொலபொலவெனக் கண்ணீர் உகுத்தன. உள்ளடங்கிய தேம்பலுடன் அவர் மேலும் சொன்னார்: “என் அருமை மகள் இளங்கோப்பிச்சி மதுரை அரண்மனையில் இருப்பதாக நான் எண்ணிக் கொண்டிருக்க, அங்கிருந்து ஏனோ எப்படியோ ஆலம் பாக்கத்துக்கு வந்து அநந்தமதியுடன் இருந்திருக்கிறாள். அந்த விவரத்தை அறியாமல் சளுக்கிய இளவரசனை அவள் இருந்த இல்லத்துக்கு அனுப்பிவிட்டு என்னுடைய நோக்கத்தை நிறை வேற்ற சாலையோரம் மறைந்து நின்று சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். கொலை வெறியுடன் உள்ளே சென்ற அவன் கும்மாளச் சிரிப்போடு வெளியே வந்ததைக் கண்ட பிறகுதான் எனக்கு விஷயம் விளங்கியது. என் ஆருயிர்ச் செல்வியைத் தனது கொள்ளிக் கண்களால் தீண்டிவிட்ட அவன், அவளைப் பல்லவபுரம் அரண்மனைக் குக் கடத்தி வரும்படி தன் காவல்வீரர்களிடம் இரகசிய உத்தரவு பிறப்பித்தான். இந்தச் சமயம் நான் ஏற்கனவே பார்த்தவாறு கத்திக் குத்துக்கு இலக்கான வில்வேலி தன் குதிரைமேல் கட்டுண்ட நிலையில் பல்லவபுரம் சாலையில் வந்துகொண்டிருந்தான். சளுக்கிய இளவரசன் விநயாதித்தனும் அவனைப் பார்த்துவிட்டான். என் முயற்சிகள் அனைத்தும் முறிந்தன. பட்டபாடெல்லாம் பாழானதுமல்லாமல், என் அருமைச் செல்வி இளங்கோப்

பிச்சியையும் பறிகொடுத்துவிட்டு, இதோ பிரேத மனிதனாக ஓடி வந்திருக்கிறேன்." —துக்கம் தொண்டையை இறுக்கத் தேம்பிப் பொருமிய பழையாறைச் சோழர் திடீரென வெறி பிடித்தாற்போல் உரத்த குரலில் கூறினார்: "எல்லாம் அந்தப் பல்லவ மன்னரால் வந்த வினை! அவர் ஒரு துரோகி! தமது சொந்த நாட்டுக்கே துரோகம் செய்த மகாபாவி! அவரை முதலில் ஒழிக்க வேண்டும்!"

மூர்க்காவேசமாகத் துள்ளித் திமிறி எழுந்த அவரை இரும்புப் பிடியாகப் பிடித்து அணைத்துக்கொண்ட முத்தரையர், "அவசரப்படாதீர்கள், நண்பரே! நீங்கள் சொன்ன விவரங்களைப் பார்த்தால் நம் பல்லவ மன்னரே ஏதோ ஒரு பேராபத்தில் சிக்கிக்கொண்டு விட்டார் என்றே தோன்றுகிறது" என்றார் நடுங்கும் குரலில்.

பழையாறைச் சோழர் அவரை விழித்து நோக்கினார்.

"ஆம், அன்பரே!" என்று கண்கலங்கி வெடவெடத்த முத்தரையர், நேற்றைக்கு முன்தினம் இளங்காரிக்குடையான் சேதியக் கலைஞரின் நிலவறையில் அகப்பட்டுக்கொண்ட விவரத்தையும் பிறகு அங்கிருந்து அவன் வெளியேறியபோது ஆந்திர இளவரசி உத்தமசீலி மட்டும் தனியே ஓடிவந்து நுழைந்ததையும், அதன்பின் அந்த இல்லத்தைச் சளுக்கியக் காவல் வீரர்கள் வளைத்துக் கொண்டதையும் விவரமாகச் சொல்லி வெய்துயிர்த்தார்.

பழையாறைச் சோழரின் உடல் கிடுகிடுவென ஆட்டம் கண்டது. "தோல்வி! எல்லாம் படுதோல்வி! என் உயிரைப் பணயம் வைத்துச் சேமித்த போர்க்கருவிகள்கூட நமக்குப் பயன்படாமல் எதிரிகளிடம் சிக்கிவிட்டனவே!" என்று விம்மலிட்டவாறு முத்தரையரின் கையிலிருந்து நிலவறைத் தாழ்க்கோலை வெடுக்கெனப் பிடுங்கி ஆத்திரக் குமுறலுடன் தூர வீசியெறிந்தார் அவர்.

94

# ஏரிக்கரையில்...?

நடுக்கம் தீராத நிலையில் சுவரோடு சுவராகச் சாய்ந்து கொண்டிருந்த இளங்கோப்பிச்சியையே இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த மூதாட்டி அநந்தமதி, "என்ன, இளவரசி இது? இன்று பகல் இங்கே நடந்த சம்பவங்களை எண்ணிப் பார்த்தால், தங்கள் தந்தையாரைப் பற்றித் தாங்கள் என்னிடம் சொன்ன தகவல் எதுவுமே உண்மை இல்லை என்றாகிறதே?" என்றாள் பீதி நிறைந்த குரலில்.

"நானும் அதைத்தான் நினைத்துக் குழம்பிக்கொண் டிருக்கிறேன் அம்மா!" என்று துயரப் புலம்பலுடன் சொன்ன இளங்கோப்பிச்சி, "என் தந்தையார் சளுக்கியருடன் சேர்ந்து உறவாடுவதன் உண்மைக் காரணங்களை நானாகக் கற்பனை செய்து சொல்லவில்லை. பாண்டியப் பேரரசியான என் அத்தையார் அறிவித்த விவரங்களே அவை. பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரும் அவற்றைத் தான் என்னிடம் சொல்லாமல் சொல்லிவிட்டுப் போர்க்களத்துக்குப் புறப்பட்டுச் சென்றார். ஆனால், இன்று இங்கே என் தந்தையாரின் நடவடிக்கையைப் பார்த்த பின் எனக்கே அவர்மீது மீண்டும் சந்தேகம் எழுந்து விட்டிருக்கிறது" என்றாள்.

"ஆம் இளவரசி! சளுக்கியருக்கு எதிரான நடவடிக்கை யில் அவர் ஈடுபட்டிருப்பது உண்மையானால் அந்த முரட்டு சளுக்கிய இளவரசனை இங்கு ஏன் அழைத்து வந்தார்?"

ஒரு விநாடி மௌனமாயிருந்த இளங்கோப்பிச்சி, "நான் மதுரைக்குப் போன சேதியை மட்டும் எப்படியோ அறிந்து கொண்ட அவர், அங்கிருந்து நான் திரும்பி வந்து இந்த இல்லத்தில் தங்கியிருப்பதை அறியாமல், ஏதோ சதித் திட்டத்துடன் சளுக்கிய இளவரசனை இங்கே அழைத்து வந்திருப்பாரோ என்று நினைக்கிறேன் அம்மா!" என்று கம்மிய குரலில் இழுத்தாள்.

"அப்படியானால் அவருடைய திட்டம், என்னையோ என் மைந்தனையோ எதிரிகளிடம் காட்டிக் கொடுக்க வேண்டும் என்பதாகத்தான் இருக்கும் இல்லையா? இளவரசி?"

"சளுக்கிய விநயாதித்தன் இங்கே வந்து இளங்காரிக் குடையானைப்பற்றித் தகவல் கேட்டான் என்பதால் இப்படிச் சொல்கிறீர்களா?"

"ஆம், அம்மணீ!"

இளங்கோப்பிச்சியின் பூவுடல் மீண்டும் நடுங்கித் துடித்தது. "இது இளங்காரிக்குடையானின் இல்லம் இல்லை" என்று சொல்லி அனுப்பிவிட்டீர்களே! அப்புறம் ஏன் அவனுக்காகப் பயப்படுகிறீர்கள்?" என்றார் பயந்த குரலில்.

"அது ஒரு சமாதானம் ஆகுமா, இளவரசி? அப்போதைக்கு ஏதோ வாயில் வந்ததைச் சொன்னேன். அந்தப் பொய் எவ்வளவு நேரம் நீடித்து நம்மைக் காப்பாற்றிவிடும்? நான் சொன்னதை அவன் நம்பினானோ இல்லையோ! ஆனால் அழகின் இலக்கணமாக விளங்கும் உங்களைத் தன் கொள்ளிக் கண்களால் பார்த்துவிட்டுப் போயிருக்கிறானே என்பதை எண்ணித்தான் இப்போது நடுங்கிக்கொண்டிருக்கிறேன்."

நெடுநேரம் மௌனமாயிருந்த இளங்கோப்பிச்சி ஏதோ ஒரு திடமான முடிவுடன் தலைநிமிர்ந்து, "சரி; என்ன வந்தாலும் வரட்டும். நான் ஏற்கனவே திட்டமிட்ட காரியத்தை இன்றிரவு எப்படியும் நடத்திவிட வேண்டியது தான்" என்றவாறு எழுந்து சரேலென வெளியில் வந்து ஆலம்

பாக்கம் ஏரியை நோக்கி வேமாக நடக்கலானாள். அவளைப் பின் தொடர்ந்து அநந்தமதியும் விரைந்தாள்.

இரவின் இரண்டாம் சாமம். காரிருள் எங்கும் கப்பிக் கிடந்தது. அந்த இருளான இருளில் எள்ளளவு பயமுமின்றி நடந்து வந்த இளங்கோப்பிச்சி ஏரிக்கரையின் மீது ஏறி நின்று தன் கூரிய பார்வையைச் சுற்றிலும் படர விட்டாள்.

ஏரியின் வலப்புறமிருந்த பொட்டல் வெளியில் கன்னங் கரேலென்ற ஒரு பெருங்கூட்டம் கூடி நிற்பது தெரிந்தது.

அந்தக் கரும் பரப்பையே சிறுபொழுது வெறித்துப் பார்த்துக்கொண்டிந்த இளங்கோப்பிச்சி சட்டென்று திரும்பி, "ஏனம்மா! இவற்றின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?" என்று கமறலான குரலில் வினவினாள்.

"ஏறத்தாழ எண்ணூற்றுக்கும் அதிகமாக இருக்கும் அம்மணீ!" என்று குழறிய அநந்தமதி சற்றுத் தள்ளிப்போய் நின்று ஏதோ ஒரு சங்கேத ஒலியை எழுப்பினாள். மறுகணம் அந்த ஏரிக்கரையின் சரிவிலிருந்த புதரொன்றின் பின்னாலிருந்து எரியும் தீப்பந்தம் ஒன்றை ஏந்திப் பிடித்தவாறு அங்கு ஓடி வந்தான் ஒரு முதியவன்.

"எல்லாம் தயார் செய்து விட்டீர்களா? பெரியவரே?" என்று அதிகாரக் குரலில் கேட்டாள் இளங்கோப்பிச்சி.

"ஆயிற்று தாயே!" என்று பணிவுடன் கூறித் தன் கையி லிருந்த தீப்பந்தத்தை நீட்டினான் முதியவன்.

அதை வெடுக்கென்று வாங்கிக்கொண்ட இளங்கோப் பிச்சி ஏரிக்கரை மேலிருந்து கீழே இறங்கினாள்.

அவள் சென்ற சற்றைக்கெல்லாம் காதைப் பிளக்கும் படியான இரைச்சல் எழுந்துஅந்தப் பிரதேசத்தையே கிடுகிடுக்க வைத்தது. நூற்றுக்கணக்கான காளை மாடுகளும் எருமை மாடுகளும் சேர்ந்து முக்காரமிடும் ஒலி!

ஆமாம்; அங்கே ஒரு மிகப் பெரிய மாட்டு மந்தை பட்டி போட்டு மடக்கி நிறுத்தி வைக்கப்பெற்றிருந்தது! அதிலே

இன்னும் ஓர் ஆச்சரியம் என்னவென்றால், அந்த மாடுகள் ஒவ்வொன்றின் கொம்புகளிலும் ஆமணக்கு நெய்யில் தோய்த்த தீப்பந்தங்கள் சுற்றிக் கட்டப்பட்டிருந்தன!

எரியும் தீப்பந்தத்துடன் வீராவேசத் துடிப்போடு விரைந்து வந்த இளங்கோப்பிச்சி தன் கண்ணில் பட்ட ஒரு காளை மாட்டின் கொம்பில் கட்டியிருந்த பந்தத்தைக் கொளுத்தினாள்.

மாட்டு மந்தையில் ஒரே முக்கார இரைச்சல்! மிரட்சிக் கொந்தளிப்பு!

இளங்கோப்பிச்சி உரக்கச் சிரித்தாள். அவளுடைய சிரிப்பொலியை அந்தப் பயங்கர இரவின் அமைதியிலே அழுந்திக் கிடந்த உயரமான ஏரிக்கரை எதிரொலித்து முழக்கியது.

# 95

# பனி மூட்டம்

ஆந்திர நாட்டின் தலைநகரான வேங்கி அன்று பர பரப்புடனும், பீதி மயமான சுறுசுறுப்புடனும் காணப்பட்டது. வீதிகளில் ஆங்காங்கே மக்கள் கூட்டம் கூட்டமாக நின்று தமக்குள் ஏதோ இரகசியம் பேசிக்கொண்டனர். நாட்டில் ஒரு பெரும் மாறுதலோ, வியப்புக்குரிய நிகழ்ச்சியோ, பயங்கர நெருக்கடியோ ஏற்படப் போவதை எதிர்பார்ப்பவர்கள் போல் அவர்கள் அரண்மனையை நோக்கிச் சாரிசாரியாகச் சென்று கொண்டிருந்தனர். நகரைச் சுற்றிப் பல்வேறு பாளையங்களில் தங்கியிருந்த படை வீரர்கள் எச்சரிக்கை செய்யப்பெற்றவர்களாக நகரவீதிகளில் மதமதர்ப்புடன் விரைந்துகொண்டிருந்தனர். குதிரைப்படையில் ஒரு பெரும் பகுதி வேங்கி நகருக்குத் தெற்கே ஓடும் கிருஷ்ணையாற்றை நோக்கிச் செல்வதாகத் தெரிந்தது. அந்த ஆற்றங்கரையோரம் அமைந்த 'கொட்டகாரம்' ஒன்றில் வேற்று நாட்டு மன்னன் ஒருவன் சிறை வைக்கப்பட்டிருக்கிறான் என்றும், அதனால் அந்தக் கொட்டகாரத்தைக் காவல் காக்கவே ஆந்திர நாட்டுக் குதிரைப்படை அங்கு விரைகிறது என்றும் மக்கள் பேசிக் கொண்டனர்.

வேங்கி நகரம் இப்படி விறுவிறுப்புடன் விளங்க, அதன் நடுநாயகமாக அமைந்திருந்த அரண்மனைப் பகுதியோ ஆழ்ந்த அமைதி நிலவும் பனிக்குன்றமாகக் காட்சியளித்தது. அதைக் காட்டிலும் அந்த அரண்மனை ஆலோசனை மண்டபத்தில் இன்னும் அதிகமான நிசப்தம் நிலவிக் கிடந்தது.

ஆலோசனை மண்டபத்துக்கு வெளியே ஆந்திர நாட்டின் அமைச்சர் குழுவும், அரசியல் உயர் அதிகாரிகளும், படைத்தலைவர்களும் குழுமி நின்றனர். அவர்கள் ஒவ்வொருவரது முகத்திலும் கலவரக் குறிகள் தென்பட்டன.

மண்டபத்தின் உள்ளே உயரமான மேடைமீது போடப் பட்டிருந்த அழகிய ஆசனத்தில் சுமார் ஐம்பது வயது மதிக்கத் தக்க அதிகாய பாகுவான மனிதர் ஒருவர் கவலையே வடிவாகத் தலையைத் தாங்கிப் பிடித்தவாறு வீற்றிருந்தார். அவரது இடக்கையில் பட்டோலைக் குழல் ஒன்று இறுகிக் கிடந்தது. ஆசனத்துக்குப் பின்னால் சற்றுத் தள்ளி நின்று கவரி வீசிக்கொண்டிருந்தாள் ஒரு பணிப்பெண். மற்றபடி அந்த விசாலமான மண்டபத்தில் வேறுயாருமே இருப்பதாகத் தெரியவில்லை.

யார் அந்த மனிதர்? விரிந்து பரந்த சளுக்கிய சாம்ராஜ் யத்தின் மகாசக்கரவர்த்தி விக்கிரமாதித்தனின் ஒன்றுவிட்ட தம்பியான ஆந்திர மன்னர் விஷ்ணுவர்த்தனர்தாம் அவர்!

ஆழ்ந்த அமைதியில் தோய்ந்த ஒவ்வொரு விநாடியும் ஏதோ ஒரு பூகம்ப வெடிப்புக்கு நேரத்தை நெருக்கி வைத்து விட்டு நகர்வதுபோல் தோன்றியது. அப்படிப் புழுங்கிக் குமுறிப் புதைந்த சில விநாடிகளுக்குப் பின், "எங்கே அந்தச் சிவிகைதூக்கி? கொண்டு வாருங்கள் அவனை!" என்று இடி போன்ற குரலில் கூறிக்கொண்டே துள்ளி எழுந்தார் விஷ்ணுவர்த்தனர்.

மறுகணம் அந்த மண்டபத்தின் பக்கவாட்டுக் கதவொன்று திறக்கப்பட்டது. அதன் வழியே ஆந்திர நாட்டு அரசியல் செயலாளர் ஒருவர் முன்னால் வர அவருக்குப் பின்னால் ஈட்டி முனைக்கிடையில் கூனிக் குறுகிக் கைகட்டி வந்த நாகோதரன் சிரம் தாழ்த்தி வணங்கி எழுந்து ஒரு புறமாய்ப் போய் ஒதுங்கி நின்றான். வியர்வை வழிந்து கொண்டிருந்த அவனுடல் கிடுகிடுவென நடுங்கியது. மனமோ ஒரேயடியாகக் கலங்கி உதறலெடுத்தது. உத்தம சீலியின்

கட்டளைப்படி பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனை அழைத்துக்கொண்டு வேங்கி நாட்டுக்கு வந்து சேர்ந்த அவன் இப்படி ஒரு நிலைமை ஏற்படுமென எள்ளளவும் எதிர்பார்க்க வில்லை. ஆந்திர இளவரசியின் ஓலையோடு வந்திருக்கும் தனக்கும் பல்லவ மன்னனுக்கும் பிரமாதமான வரவேற்பு கிடைக்கும் என்றுதான் எண்ணியிருந்தான் ஆனால், இங்கு நடந்ததென்ன? பரமேசுவரவர்மன் வேங்கி நகருக்குள் பிரவேசித்திருக்கிறான் என்னும் சேதி அறிந்ததுமே சினந்து பொங்கிய ஆந்திர மன்னர் அவனைக் கிருஷ்ணையாற்றங் கரையருகிலேயே மடக்கி அங்கிருந்த கொட்டகாரம் ஒன்றில் சிறைக் கைதிபோல் அடைத்துப் பலத்த காவலும் போடச் செய்துவிட்டார். பிறகு ஆந்திரநாட்டு அரசியல் செயலாளரி டம் நாகோதரன் தான் வந்த விவரத்தைக் கூறி ஓலையைக் கொடுத்தபின் நிலைமை இன்னும் மோசமாகியது. மன்னரின் கட்டளைப்படி இரண்டு நாள் சிறைவாசம் அநுபவித்த அவன் இதோ இன்று விசாரணைக்காகக் கொண்டுவரப்பட்டிருக் கிறான். இந்த விசாரணைக்குப் பின் தனக்கு எத்தகைய தண்டனை கிடைத்தாலும் அதைப்பற்றி அவன் கவலைப்பட வில்லை. ஆனால் பல்லவ மன்னனின் கதி என்ன ஆகுமோ என்பதை நினைக்கும்போது அவனுக்கு மூச்சே நின்று விடுவது போன்ற மரண வேதனை உண்டாகியது.

சிறிது நேரம் அவனையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த விஷ்ணுவர்த்தனர் சட்டென்று திரும்பித் தம் அரசியல் செயலாளரை நோக்கியவாறு, “இவன்தான் ஆந்திர இளவரசிக்குச் சிவிகை தூக்கியாகச் சென்ற நாகோதரன் என்பவனோ?” என்று கடுகடுத்த குரலில் கேட்டார்.

“ஆம், அரசே! தங்கள் அருமைச் செல்வி உத்தமசீலி யாரின் தூதுவனாக வந்திருப்பவனும் இவனே!” என்று பணிவுடன் பதிலிறுத்தார் அரசியல் செயலாளர்.

தலையை மேலும் கீழுமாக ஆட்டிக்கொண்டு ஒரு கணம் மௌனமாக இருந்த விஷ்ணுவர்த்தனர் வெடுக்கென்று

தலைதூக்கி, "என் அருமைச் சகோதரர் விக்கிரமாதித்தரின் ஜன்மப் பகைவனான பல்லவ மன்னனை இங்கே அழைத்து வரத் துணிந்தவனும் இவன்தானா?" என்று கண்களை இடுக்கிக் கொண்டு வினவினார்.

"தங்கள் அன்புக் குமாரியின் ஆணையின்படியே அந்தக் காரியத்தை இவன் செய்திருக்கிறான், அரசே!" என்று அமைதியாகச் சொன்னார் அரசியல் செயலாளர்.

"ஓகோ!" என்று வெறுப்புடன் தலையசைத்துக் கொண்ட விஷ்ணுவர்த்தனர், "அப்படியானால் ஆந்திர இளவரசியின் தூதுவனாக வந்திருக்கும் அவனுக்கு ஓர் இருக்கையைக் கொடுத்து அமரச் சொல்லுங்கள்!" என்றவாறு தன் ஆசனத்தில் கம்பீரமாக நிமிர்ந்து அமர்ந்தார்.

நாகோதரன் இதைக் கேட்டுத் திடுக்குற்றான். "மன்னியுங்கள் பிரபு! அடியேனுக்கு இவ்வளவு பெரிய தண்டனை அளிக்காதீர்கள் பிரபு" என்று கைகூப்பிக் குழறிக்கொண்டே பின்னால் நகர்ந்தான். இதற்குள் அங்கு நின்ற காவல் வீரர்களில் ஒருவன் விரைந்து போய் ஒரு குரிசிலை எடுத்து வந்து அவனுக்குப் பின்னால் போடவே, அதில் தட்டுத் தடுமாறிச் சாய்ந்தான். சாய்ந்த அதே வேகத்தில் எழுந்திருக்க முயன்ற அவனை அரசியல் செயலாளர் தடுத்து, "நாகோதரா! நீ இப்போது சிவிகை தூக்கும் பணியாளன் அல்லன். எங்கள் மதிப்பிற்குரிய ஆந்திர இளவரசியாரின் தூதுவன். அதை மறந்து விடாதே!" என்றார் தணிந்த குரலில்.

நாகோதரனுக்கு ஒரே நடுக்கமாகிவிட்டது. அவனால் நிற்கவும் முடியவில்லை; உட்காரவும் இயலவில்லை. முட்டிக் கால்களை மடக்கிக் குரிசிலில் அமர்வதுபோன்ற பாவனையில் அப்படியே ஒடுங்கி முடங்கி நின்றான் அவன்.

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவராய்ச் சிறுபொழுது மௌனமாக இருந்த ஆந்திர மன்னர் தம் கையிலிருந்த ஓலைக் குழலை நாகோதரனுக்கு முன்னால் அலட்சியமாக எறிந்து, "ஏ, தூதுவனே! நீ எடுத்து வந்திருக்கும் இந்த ஓலையைப்

படித்துப் பார்க்க எனக்கு விருப்பமில்லை. அதற்குரிய பொறுமையும் இப்போது என்னிடம் இல்லை. ஆந்திர இளவரசி உன்னை இங்கு அனுப்பியதன் நோக்கத்தை எனது அரசியல் செயலாளரின் வாயிலாகக் கேள்விப்பட்டது முதலே என் மனம் வெகுவாகக் குழம்பிவிட்டிருக்கிறது. எனவே, நான் கேட்கும் கேள்விகளுக்கு உன் இளவரசியின் சார்பில் நீயே பதில் சொல்ல வேண்டும். உன்னுடைய பதில்கள் எனக்குத் திருப்திகரமாக இல்லையென்றால், நீ மட்டுமல்ல; உன்னுடன் வந்திருக்கும் என்னுடைய பகைவனும், அவனை இங்கு அனுப்பி வைத்த ஆந்திர இளவரசியும் உலகத்தில் இனி மூச்சுவிடும் உரிமையை இழந்து விடுவீர்கள். —எச்சரிக்கை!" என்று அடித்தொண்டையில் உறுமினார்.

தன் எதிரே சுழன்று வந்த ஓலைக் குழலைச் சிக்கெனப் பிடித்து மார்பில் அணைத்துக்கொண்ட நாகோதரன், ஆந்திர மன்னர் சொன்னதைக் கேட்டுக் கதிகலங்கித் திணறி விட்டான்.

முகம் கடுமை ஏறிச் சிவக்க அவனை விழித்து நோக்கிய விஷ்ணுவர்த்தனர், "ஏ, தூதுவனே! எனக்கும் என் அருமைச் சகோதரர் விக்கிரமாதித்தருக்கும் இடையே பகையையும் பிளவையும் ஏற்படுத்தக்கூடிய, இந்த ஓலையை உன் இளவரசி எழுதியனுப்பியதன் நோக்கம் என்ன?" என்று வினவினார்.

வெடவெடத்த நாகோதரன் தன் கையிலிருந்த ஓலைச் சூழலை அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்தான். பிறகு அதன்மேல் சுற்றப்பட்டிருந்த பட்டுக் கயிற்றை அவிழ்த்துப் பட்டோலையைப் பிரித்து அதிலே தன் பார்வை யைப் பரபரப்புடன் ஓட்டினான். கறுத்துக் கிடந்த அவன் முகம் இலேசாக மலர்ந்தது. "அப்பா! இந்த உலகத்தில் நிரந்தரமானவை மூன்று; தர்மம், சத்தியம், உண்மை என்பவை தாம் அவை. அவற்றை நிலைநாட்ட எந்தத் தனி மனிதனும் எத்தகைய தியாகத்துக்கும் எப்போதும் தயாராக இருக்க

வேண்டும் என்று தாங்கள் அடிக்கடி என்னிடம் சொல்லி வந்திருக்கிறீர்கள். அந்தப் புனித போதனையை நினைவில் கொண்டே இவ்வோலையைத் தங்களுக்கு எழுதத் துணிந்தேன்...” என்று வாய் குழற வார்த்தை வார்த்தையாக நிறுத்திப் படித்தான் அவன்.

விஷ்ணுவர்த்தனரின் புருவங்கள் நெரிந்தன. “ஹூம்! இந்தப் போதனை தனி மனித வாழ்க்கைக்கு உரியது; அரசியலுக்கு அப்பாற்பட்டது!” என்றார் கசப்பும் வெறுப்புமாக.

நாகோதரன் தன் பார்வையைப் பதற்றத்துடன் ஓலை மீது ஓட்டினான். “என் அருமைத் தந்தையே! தனி மனித வாழ்க்கைக்குரிய போதனைகள் அரசியலுக்கு அப்பாற் பட்டவை என்று தாங்கள் கருதலாம். அரசியல் என்பது கல்லுக்கும் மண்ணுக்கும் ஏற்பட்டதல்ல; ஒவ்வொரு மனிதனும் ஒரு கட்டுப்பாடான சமூக நியதிக்குள் நின்று அதிலே அவன் எவ்வித இடையூறுமின்றி இன்பமாக இயங்கி வர வேண்டும் என்பதற்காகவே ஏற்பட்டது. எனவேதான்...”

ஆந்திர மன்னரின் வாயிலிருந்து சீற்றத்துடன் சொற்கள் புறப்பட்டன. “அப்படித்தான் இருக்கட்டுமே! ஆந்திரம் என்ற இந்த அழகிய நாட்டையும், இதன் ஆட்சிப் பீடத்தையும், அதற்குரிய அதிகார அந்தஸ்துகளையும் எனக்கு வழங்கி, என்னை ஒரு முடி மன்னனாக வாழ வைத்திருக்கும் என் அன்புச் சகோதரர் விக்கிரமாதித்தருக்கு எதிரான நடவடிக்கையில் ஈடுபடுவது நன்றி கெட்ட செயல் அல்லவா? வாழ்வளித்த ஒருவருக்கு மனமறியத் துரோகம் செய்வது பாவமல்லவா? தனி மனித வாழ்க்கைத் தர்மத்தையே காற்றில் பறக்கவிடுவதுபோல் ஆகாதா?”

திகிலுடன் பட்டோலையைத் திருதிருவெனப் பார்த்த நாகோதரன் சட்டென்று நிமிர்ந்து படித்தான்: “...என்று தாங்கள் சொல்வீர்கள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும், அப்பா! ஆனால் உங்களுக்கு ஒருவர் வாழ்வளித்தார்

என்பதற்காக அவரது அநியாய அக்கிரமங்களுக்கும், அதர்ம வெறியாட்டங்களுக்கும் துணை நிற்பதோ, அல்லது அவற்றை எதிர்பார்க்காமல் ஒதுங்கிப் போவதோதான் தர்மம், நியாயம், நன்றி காட்டும் செயல் என்றெல்லாம் நீங்கள் நினைப்பது தவறல்லவா? பைத்தியக்காரனுக்குப் பாம்பின் விஷம் அநுகுணமாயிருந்தது என்பதற்காக அதைப் பந்தியில் பரிமாற அநுமதிக்கலாமா?”

தொண்டையில் ஏதோ அடைத்துக்கொண்டதுபோல் சிறிதே திணறலிட்ட விஷ்ணுவர்த்தனர் அவனை வெறித்துப் பார்த்தார். நாகோதரன் தான் படிப்பதை நிறுத்தாமல் மேலும் தொடர்ந்தான்: “நீங்கள் நினைப்பதுபடியே பார்த்தாலும் அது நியாயம் என்று சொல்ல முடியாது, அப்பா! ஏனென்றால், உங்கள் ஆளுகைக்குட்பட்ட ஆந்திர நாட்டை உங்களுடைய தந்தையாருக்கு அவரது சகோதரரான புலிகேசி தமது சொந்தச் சளுக்கிய சாம்ராஜ்யத்திலிருந்து வெட்டிப் பிரித்துத் தானமாக வழங்கிவிடவில்லை; பல்லவரிடமிருந்து பறித்துக் கொடுத்த அநியாய சொத்துதான் அது. பல்லவ சிம்ம விஷ்ணுவின் காலத்தில் நமது ஆந்திரநாடு அவனுக்குச் சொந்தமாயிருந்தது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. அத்துடன் நமது ஆந்திர நாட்டைச் சளுக்கியர்கள் நம் வசம் ஒப்படைத்து வைத்திருப்பது அவர்களுடைய ஆட்சி நிர்வாக சௌகரியத்துக்காகத்தானேயொழிய நமக்கு அதில் பரிபூரண உரிமை இல்லை என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது.”

“பரிபூரண உரிமை எனக்கு ஏன்? இந்த உரிமையே போதாதோ?” என்று கடுகடுத்தார் விஷ்ணுவர்த்தனர்.

நாகோதரன் அவசரமாகப் படித்தான்: “...என்று நீங்கள் நினைப்பதை அறிந்துதானோ என்னவோ அந்த அரைகுறை உரிமையையும் பறித்துவிட உங்கள் அருமைச் சகோதரர் விக்கிரமாதித்தர் இப்போது திட்டம் போட்டுவிட்டார் அப்பா!”

அடிபட்ட வேங்கைபோல் ஆசனத்தைவிட்டுத் துள்ளி யெழுந்த ஆந்திர மன்னர், "என்ன இது, அபத்தம்?" என்று சீறினார்.

"ஆம், அப்பா! ஆந்திர நாட்டின் அரச பதவியிலிருந்து தங்களை அகற்றிவிட்டு, அதைத் தமது சளுக்கிய சாம்ராஜ்யத் தின் நேர் ஆட்சியிலே வைத்துக்கொள்ள முடிவு செய்து விட்டார் விக்கிரமாதித்தர்!" என்று நிதானமாகப் படித்து நிறுத்தினான் நாகோதரன்.

"நம்ப முடியாத கட்டுக்கதை!"

நாகோதரன் குரலை உயர்த்தி வாசித்தான்: "இந்தச் சேதியை நீங்கள் நம்ப மறுத்தால் ஒரு விஷயத்தை மட்டும் இங்கு குறிப்பிட்டுக் காட்டுகிறேன், அப்பா! விக்கிரமாதித்தர் பல்லவ நாட்டின்மீது படையெடுக்க ஆயத்தமானபோது கங்க மன்னரிடமிருந்துதான் அவர் படையுதவியும் பொருள் உதவியும் பெற்றார். உங்களிடம் அத்தகைய உதவி எதையும் கோரவில்லை. இதற்குக் காரணம் என்ன என்பதை இப்போது சற்று சிந்தித்துப் பாருங்கள்."

குழப்பத்துடன் மெல்லத் தலை தூக்கினார் விஷ்ணு வர்த்தனர்.

"ஆம், தந்தையே! தாங்களும் சளுக்கியப் பரம்பரையில் வந்தவர்தாமே? விக்கிரமாதித்தரின் உடலில் ஓடும் வீரக் குருதி தானே தங்கள் உடலிலும் ஓடுகிறது? அப்படியிருக்க, அந்த அநியாயக்காரரின் பேராசைக்கு நாம் ஏன் அடிபணிந்து போகவேண்டும்? இரண்டு தலைமுறைகளாக ஆந்திர நாட்டை ஆண்டுவரும் நாம் அந்த உரிமையை நிலைநாட்டிக் கொள்ள முயற்சி செய்யக்கூடாதா? சளுக்கிய மூத்த பரம் பரைக்கு இளைய பரம்பரையினரான நாம் என்றென்றும் கைகட்டியே சேவகம் செய்ய வேண்டுமா என்ன? மமதை கொண்ட அந்த மூத்த பரம்பரையை மேலைச் சளுக்கிய ரெனப் பிரித்து ஒதுக்கிவிட்டுக் கீழைச் சளுக்கியர் என்னும் ஒரு புதிய பரம்பரையை நாம் ஏன் தோற்றுவிக்கக் கூடாது?"

''விவேகமற்ற யோசனை! சிறுபிள்ளைத்தனமான ஆசை!'' என்று சோர்வுடன் முனகினார் விஷ்ணுவர்த்தனர்.

இருக்கையை விட்டுச் சற்றே முன்னால் வந்த நாகோதரன் தன் கையிலிருந்த பட்டோலையைத் தூக்கிப் பிடித்துப் படித்தான்: "...இவ்வாறு தாங்கள் நினைக்கலாம் அப்பா! ஆனால் உங்கள் வயிற்றில் பிறந்த வீரப் புதல்வியான நான் சொல்கிறேன்: நீங்கள் இந்தக் காரியத்தைச் செய்தே ஆகவேண்டும். செய்யத்தான் வேண்டும், தந்தையே! சளுக்கிய சாம்ராஜ்யத்தின் ஆட்சிப் பொறுப்பை விக்கிரமாதித்தர் தம் இளைய தம்பியான சந்திராதித்தரிடம் ஒப்படைத்து, அவரை மேற்பார்வையிடும் பொறுப்பை உங்களிடம் கொடுத்துவிட்டு இந்தப் பல்லவ நாட்டின்மேல் படையெடுத்து வந்து அதைக் கைப்பற்றிக் கொண்டதோடு திருப்தியடையாமல் பாண்டி நாட்டின்மீதும் பாய்ந்துவிட்டிருக்கிறார். இந்நிலையில் தாங்கள் அந்த அதிகப்படியான பொறுப்பை உதறியெறிந்து விட்டு ஆந்திரநாடு இனி சுயாதிக்கமுள்ள ஒரு சுதந்தர நாடு என்பதாகப் பிரகடனப்படுத்திவிடுங்கள். சுகபோகப் பிரியரும் முழுக்கோழையுமான சந்திராதித்தர் இதைக் கேட்டுக் குலை நடுங்கிவிடுவார். அப்படியே அவர் உங்களை எதிர்த்து அடக்க முயன்றாலும் அது முடியாத காரியமாகிவிடும். ஏனென்றால் சளுக்கியப் படை பலம் முழுவதும் இப்போது பாண்டி நாட்டின் வட எல்லையில் குவிந்து கிடக்கிறது..."

"ஹூம்! அரசியல் அநுபவமற்ற பிஞ்சுத்தனமான பேச்சு இது; தென்னகத்தைக் கதிகலங்க அடித்துக் கொண்டிருக்கும் விக்கிரமாதித்தர் இச்சேதி கேட்டுத் தம் பார்வையை என்மீது திருப்பினால் நிலைமை என்ன ஆகும்?"

நாகோதரன் சடாரென்று குரலை உயர்த்திப் படித்தான். "...என்றெல்லாம் அச்சப்படுகிறீர்களா, அப்பா? இதற்குத்தான் பல்லவ மாமன்னர் பரமேசுவரவர்மரை உங்களிடம் அனுப்பி வைத்திருக்கிறேன்! அவருக்கு நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு சிறு படை கொடுத்து உதவ

வேண்டியது; அவ்வளவே! இதைத் தாங்கள் செய்தால் தங்கள் சிரத்திலிருந்து ஆந்திர நாட்டின் மணி முடியை அசைக்க எத்தனை விக்கிரமாதித்தர்களின் வீரக் கரங்களாலும் முடியாது."

கோபாவேசத்துடன் குமுறி எழுந்த விஷ்ணுவர்த்தனர், "துரோகிப் பெண்! எதிரியின் வஞ்சக வலையிலே வீழ்ந்து விட்ட நாசகாரி! என் அருமைச் சகோதரருக்கு எதிரான அரசியல் சதிகளில் ஈடுபடத்தானா இவளைப் பல்லவ நாட்டுக்கு அனுப்பினேன்? இவள் ஏற்றுக்கொண்டு போன இலட்சியம் என்ன? அதையெல்லாம் மறந்துவிட்டுத் தன் சொந்தத் தந்தையின் வாழ்வுக்கே குழி பறிக்கத் துணிந்து விட்டாளே!" என்று இரைந்து கூவினார்.

# 96

## ஒளி பிறந்தது!

குலை நடுக்கம் கொண்டுவிட்ட நாகோதரன் உடம்பைக் குறுக்கி முடக்கியவாறு பின்னால் நகர்ந்தான். அவன் கையிலிருந்த பட்டோலை வெடவெடத்துத் துடித்தது. ஆயினும் சிறிதளவு தைரியத்தை நெஞ்சில் இழுத்துப் பிடித்துக் கொண்டு வாய் குழற வாசித்தான்: "அப்பா! தங்களுக்கும் விக்கிரமாதித்தருக்கும் இடையே நிரந்தரப் பகையை உண்டு பண்ணத் தக்க இந்த யோசனையைக் கேட்டு என்மீது தாங்கள் அடங்காச் சினம் கொள்வீர்கள் என்பதை நான் அறியாமல் இல்லை. பல்லவ நாட்டுக்கு என்னைத் தாங்கள் அனுப்பிய தன் நோக்கத்துக்கு முற்றும் மாறான காரியத்தில் நான் ஈடுபட்டிருப்பதை அறிந்து என் மேல் வெறுப்பும் விரோதமும் கொள்வீர்கள் என்பதையும் உணராமல் இல்லை. பல்லவ நாட்டில் பலம் குன்றிவிட்ட நமது புனித சமண சமயத்துக்குப் புத்துயிர் அளிக்கவேண்டும் என்னும் தங்களின் உயரிய இலட்சியத்தை என் உயிரைக் கொடுத்தேனும் நிறைவேற்றி வைக்கவேண்டும் என்ற திட வைராக்கியத்தோடு தான் நானும் இங்கு வந்தேன். அப்பா! ஆனால் அந்த இலட்சியப் பணிக்குத் துணை நிற்பதாக வாக்களித்து என்னை இந் நாட்டுக்கு வரப் பண்ணிய விக்கிரமாதித்தரே அதைத் தடுத்து நிறுத்தும் பெரும் பாறையாக நின்றதைக் கண்டு நான் அதிர்ந்து போனேன் அப்பா, அதிர்ந்தே போனேன்!..."

வியப்பும் துடிப்புமாக நின்ற விஷ்ணுவர்த்தனர், "என்ன! விக்கிரமாதித்தரே என் இலட்சிய விருப்பப்பணிக்கு விரோதியாக நின்றாரா?" என்று வினவினார்.

சிறிதே தென்பு பெற்ற நாகோதரன் தெளிவான குரலில் தொடர்ந்து படித்தான்: "ஆம், தந்தையே! நமது இலட்சியத்தின் ஆணிவேரை அசைத்துப் பிடுங்கி எறிந்தவர் உங்கள் அருமைச் சகோதரர் விக்கிரமாதித்தர்தாம். இந்தக் கூற்றிலே உங்களுக்கு நம்பிக்கையில்லையென்றால், உங்களது மதிப்புக்கும் வணக்கத்துக்கும் உரியவரான சிரவண பெள்குளத்துச் சமண சங்கத் தலைவர் அகளங்க அடிகளைச் சந்தித்துக் கேளுங்கள்."

அதிர்ச்சியுற்ற ஆந்திர மன்னர், "அகளங்க அடிகளா? அவருக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?" என்று பதற்றத்துடன் வினவினார்.

"உண்மைதான் அப்பா! சாம்ராஜ்ய விஸ்தரிப்பு வெறி கொண்ட விக்கிரமாதித்தர் தமது அநியாய அரசியல் அபிலாஷைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகச் சமண சமயத்தைப் பயன்படுத்தத் திட்டமிட்டு, நம்முடைய பெயரால் அந்தத் தூய முனிபுங்கவரைப் பல்லவ நாட்டுக்கு வரவழைத்தார். அவருடைய தீய திட்டம் திடீரென்று திசை மாறிப் போகவே, நமது மாபெரும் சமண சமயத் தலைவரான அகளங்க அடிகளைக் கீழான முறையில் கொல்லத் துணிந்தார். விதியின் கருணையால் அவரது கொடிய மரணப் பிடியிலிருந்து தப்பிப் பிழைத்தார் அகளங்கர். நாமும் ஒரு பெரும் பழி பாவத்திலிருந்து தப்பினோம். இந்தப் பேருபகாரத்தை நமக்குச் செய்தவர் வேறு யாருமல்ல; நமது சமண சமயத்தின் எதிரியென இத்தனை காலமாக நாம் எண்ணியிருந்த பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர்தாம்."

நெஞ்சிலே நெருஞ்சி முள் பாய்ந்தாற்போல் பதறித் துடித்தார் விஷ்ணுவர்த்தனர்.

நாகோதரன் தழுதழுத்த குரலில் மேலும் வாசித்தான்: "ஒரு வேதனைச் சேதியைக் கேளுங்கள் அப்பா! பால் மணம் மாறாத பச்சிளம் குழந்தைப் பருவத்திலேயே அன்னையை இழந்த என்னைத் தங்கள் கண்ணின் மணிபோல் காத்துப்

போற்றி வளர்த்து எனக்காகவே இன்றுவரை உயிர் வாழ்ந்து வருகிறீர்கள்; இதை நன்கு அறிந்தவரான விக்கிரமாதித்தரே தம் தளபதி வில்வேலியின் மூலமாக, ஒரு குற்றமும் செய்யாத என்னை ஒழித்துக் கட்டி உங்களை ஆறாத்துயரின் ஆழ்த்த முயன்றார் அப்பா! அந்த மமதை கொண்ட வில்வேலி மதம் பிடித்த யானை ஒன்றின்மேல் என்னை வஞ்சகமாக ஏற்றி மரண வாசலுக்கே அனுப்பி வைத்தான் அப்பா! அவ்வளவு பெரிய ஆபத்திலிருந்தும் என்னைக் காப்பாற்றியவர் பரமேசுவரவர்மர்தாம் அப்பா!"

ஆந்திர மன்னர் தம் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு புழுப்போல நெளிந்தார். இரத்தச் சிவப்பேறிய அவர் கண்கள் அருவியென நீர் வழிந்தன.

தொண்டை கம்மிக் கரையத் தொடர்ந்து படித்தான் நாகோதரன்: "இதையெல்லாம் சொல்லி உங்கள் மனத்தைக் கரைப்பதாக நினைக்காதீர்கள், அப்பா! ஆனால் ஒன்றை மட்டும் தங்களிடம் உறுதியாகக் கூற விரும்புகிறேன்; தென்னகத்தில் சமண சமயம் வலுக்குன்றி இருக்கிறதென்னவோ உண்மைதான். ஆயினும் அதற்கு இப்போது வேண்டியது அதன் வளர்ச்சிக்குரிய உதவி அல்ல; இன்றிருக்கும் நிலையிலிருந்து இன்னும் கீழே அது இறங்கிவிடாமல் பாதுகாப்பதற்கான உதவிதான் தேவை. பல்லவ மன்னர் பரமேசுவரவர்மனின் நந்திக்கொடி இங்கு பறந்தால் அந்தப் பாதுகாப்பும் உதவியும் அதற்கு நிச்சயமாகக் கிடைக்கும். அப்படிக்கின்றி விக்கிரமாதித்தரின் ஆட்சியே வேரூன்றினால் சமண சமயம் இங்கிருந்து வேரற்றுச் சாய்ந்துவிடும்." — உணர்ச்சியாவேசத்துடன் ஓலையைப் படித்த நாகோதரன் சற்றே தயங்கிவிட்டுப் பின் தணிந்த தொனியில் வாசித்தான்: "இத்தனை கசப்பான சேதிகளைத் தங்களிடம் தெரிவித்த நான் ஓர் இனிப்பான விஷயத்தையும் இறுதியாக வெளியிடுகிறேன், அப்பா! பல்லவ மன்னர் பரமேசுவரவர்மருக்கு ஆந்திர நாட்டின் படையுதவி கிடைத்தால் உங்கள் அருமைச்

செல்வி உத்தமசீலியை வெகு விரைவிலே பல்லவ சாம் ராஜ்யத்தின் பட்டத்து ராணியாகவும் நீங்கள் பார்க்கலாம்!”

நாண் அறுந்த காண்டீபம்போல் விம்மிப் புடைத்து எழுந்த ஆந்திர மன்னர் தம் அரசியல் செயலாளரின் பக்கம் திரும்பி ஆவேசக் கொந்தளிப்புக் குரலில் கர்ஜித்தார்: “இன்றுமுதல் ஆந்திரநாடு, சளுக்கிய விக்கிரமாதித்தனுக்குத் திறை செலுத்தாது! இந்த விநாடிமுதல் அது ஒரு தனிச் சுதந்தர நாடு என அறிவிக்கிறேன்! அதன் முப்படைகளும் இன்றே திரண்டு போய், கிருஷ்ணையாற்றங்கரைக் கொட்ட காரத்தில் தங்கியிருக்கும் மாவீர மகா மன்னர் பரமேசுவரவர்மனின் தலைமையை ஏற்றுப் பல்லவ நாட்டின் மண்ணை மாசுபடுத்திக் கொண்டு நிற்கும் விக்கிரமாதித்தனை அழித்து ஒழிக்குமாக! கீழைச் சளுக்கிய சக்கரவர்த்தி விஷ்ணு வர்த்தனரின் ஆணை இது!”

வேங்கி நகரமே அதிர்ந்து குலுங்கும்படியாக முரசொலியும் கொம்பொலியும் சேர்ந்தெழுந்து முழங்கின.

# 97

## ‘அதிசயம்’

**தா**ய்த் திருநாட்டின் புனிதமான மண்ணில் காலடி வைக்கும் பகையரசரை எதிர்த்துப் போரிடப் புறப்படும் தமிழ் மன்னர்கள் காஞ்சி மாலை அணிவது வழக்கம். அந்தப் பழைமையான வீர வழக்கப்படி பல்லவ மன்னர் பரமேசுவர வர்மனும் போர்க் கவசங்கள் பூட்டிய தனது வேங்கை மார்பிலே காஞ்சி மலர் மாலை அணிந்து, கிருஷ்ணையாற்றங் கரையின் இனிய சூழலில் அமைந்த அழகிய கொட்ட காரத்தின் மேன்மாடத் தளத்தில் தன்னந்தனியே உலாவிக் கொண்டிருந்தான்.

மாலைச் சூரியன் மேற்கு வானத்தை இரத்தக் களரி யாக்கத் தொடங்கிய நேரம். மரஞ்செடி கொடிகளெல்லாம் அந்தச் செஞ்சாய ஒளியில் முக்குளித்துக்கொண்டிருந்தன. யுத்த அரக்கனின் நீச்சல் தடாகத்திலிருந்து கால் பிரிந்து வந்தாற்போல் கிருஷ்ணையாற்றின் நீர்ப்பரப்பும் அப்போது செங்குருதி வண்ணமாகவே காட்சியளித்தது.

வெறிப்புத் தன்மை வாய்ந்த இந்தக் காட்சிகளைப் பார்த்தவாறு உலாவிக்கொண்டிருந்த பரமேசுவரவர்மனின் முகமும் சிவந்தே காணப்பட்டது. முகம் மட்டுமல்ல; அவனுடைய உடம்பு, உடை, அணி மணிகள் ஆகிய அனைத்துமே செந்நிற மயமாகப் பளீரிட்டுக் கொண்டிருந்தன. இத்தனை காலமாகச் சாந்தம் தவழும் முகத்தினனாய், அமைதியே வடிவினனாய், கள்ளங் கவடற்ற பாலகக் களையுடன், தூய வெண்ணிற ஆடை புனைந்து, இன்ப துன்ப

உணர்ச்சிகளையே அறியாத முனிகுமாரன்போல் விளங்கிய அவனா இன்று இத்தகைய வீர குரூர ஆவேச உருவத்திலே தோற்றமளிக்கிறான்?

செந்நீர்ப் பரப்பாகப் பிரவகித்துக்கொண்டிருந்த ஆற்றின் மறுகரைக்கு அப்பால் அலைகடல் முழக்கம் போன்ற பேரொலி! ஆந்திர நாட்டின் முப்படைகளும் அங்கே அணிவகுத்து நின்றிருந்ததால்தான் அத்தகைய ஆரவார ஒலி கேட்டுக்கொண்டிருந்தது.

முறுக்கேறிய நடைபோட்டு உலாவிக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் மெல்லத் தன் பார்வையை மேலுயர்த்தி னான். தொலை தூரத்தில் கறுப்பும், சிவப்பும் காவி நிறமுமாக நீண்ட நெடும் மதிற்சுவர்கள்போல் அணிவகுத்து நின்ற கரி, பரி, காலாட்படைகளை ஒரு கணம் கூர்ந்து நோக்கிய அவன் முகத்தில் துயரமும் மகிழ்ச்சியும் மாறி மாறிக் கலவையிட்டன.

‘ஹூம்! என்ன துர்ப்பாக்கியமான நிலைமை இது! என் சொந்த நாட்டின் விடுதலைப் போருக்காக அந்நிய தேசப் படைகளின் உதவியை நாட வேண்டியதாகிவிட்டதே! எனது நாட்டில் ஆள் பலம் இல்லையா? ஆயுத பலம் இல்லையா? வீரம் இல்லையா? விவேகம் இல்லையா? விடுதலை உணர்ச்சி தான் இல்லையா? எல்லாம் இருந்தும் எனக்கு ஏன் இந்தப் பரிதாப நிலை ஏற்பட்டது? நாட்டின் பாதுகாப்பில் போதிய விழிப்புத் திறனை நான் காட்டவில்லை; வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பினேன். வீணரைச் சகோதரராகப் பாவித்து நட்பு கொண்டாடினேன். அளவுக்கு மீறிய சமாதான ஆர்வத்தில் நாட்டைப் பலவீனப் படுத்திவிட்டேன். சூழ்ந்து நின்றவரின் புகழுரையில் தலைக்கு மேலுள்ள ஆபத்தை உணறத் தவறிவிட்டேன். சுற்றியுள்ள நாடுகளின் அடிப்படைக் குணங்களை ஆராய்ந்து பாராமல் வாய் வேதாந்தம் பேசிக் கொண்டிருந்துவிட்டேன். அதன் விளைவு? இன்ப வாழ்வு வாழ வேண்டிய என் அருமை மக்கள் அந்நியனின் காலடியில் மிதியுண்டு நசுங்கி நரக வேதனை அனுபவித்துக்

கொண்டிருக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணமான நான், இந்த அந்நிய தேசத்துக்கு இதோ ஓடிவந்து அதன் உதவிக்குக் கையேந்தி நிற்கிறேன். என்னையும் என் நாட்டு மக்களையும் எவ்வளவு கேவலமான நிலைக்குத் தாழ்த்திக் கொண்டு விட்டேன்! என்னை நம்பியிருந்த என் குடிமக்களுக்கு எத்தனை பெரிய துரோகத்தைச் செய்துவிட்டேன்."

முஷ்டியை இறுக்கிக் குவித்துத் தன் நெற்றியில் ஓங்கிக் குத்திக்கொண்டு குமுறிப் பெருமூச்செறிந்த பரமேசுவரவர் மனின் மனத்தில் வேறோர் எண்ணம் எழுந்தது:

'யாசகமாகக் கிடைத்திருக்கும் இந்தப் படைகளைக் கொண்டு உண்மையிலேயே என்குறிக்கோளை நான் அடைய முடியுமா? வல்லமை வாய்ந்த விக்கிரமாதித்தனை இந்தக் கூலிப்படைகள் எதிர்த்து வீழ்த்தி எனக்கு வெற்றியைத் தேடித் தருமா? சளுக்கிய அரசாங்கத்தின் மேற்பார்வையிலே இவை வளர்ந்து உருவானவையாதலால் சளுக்கிய மன்னனிடம் உள்ளார்ந்த விசுவாசம் வைத்துப் போரின் இடையே எனக்கு எதிராகத் திரும்பி என்னையே வீழ்த்த முனைந்து விட்டால் என்ன செய்வது? அந்நியப் படைகளை நம்பி எதிரியின்மேல் போர் தொடுத்து அதில் தோல்வி காண நேர்ந்துவிட்டால் அதைவிடப் பேரவமானம் இன்னொன்று இருக்க முடியாதே! எனக்கு மட்டுமின்றி என் நாட்டுக்கும் அது நெடுங்காலத் தலைகுனிவைத் தேடித் தந்துவிடுமே!"

கையையும் தலையையும் வேகமாக ஆட்டிக்கொண்டு விரைந்து உலாவிய பரமேசுவரவர்மன் சட்டென்று நின்றான்.

'சே, என்ன மோசமான எண்ணங்கள் என் மனத்திலே தலை தூக்குகின்றன! எவ்விதப் பிரதி பிரயோசனத்தையும் எதிர்பார்க்காமல்—தர்ம நியாயத்தை நிலைநாட்ட வேண்டு மென்ற ஒரே நோக்கத்துடன்—தம் சொந்த சகோதரனையும் பகைத்துக்கொண்டு எனக்கு இவ்வளவு பெரிய உதவி செய்ய முன்வந்த ஆந்திர மாமன்னரைப் பற்றி இப்படியெல்லாம் நான் சந்தேகிக்கலாமா? இது மனித குலத்தின் அடிப்படை

யான நற்பண்புகளையே அவமதிப்பது போல் ஆகுமே! தம் மன்னரின் கட்டளைக்குப் பணிந்து ஓர் அந்நிய தேசத்து அரசனின் தலைமையை ஏற்றுக்கொள்ள ஆர்வத்துடன் திரண்டு வந்திருக்கும் இவ்வீரமாப் படையின் மேல் நான் அவநம்பிக்கை கொள்ளலாமா? சொந்த நாட்டின் சுதந்தரத்தை நிலைநாட்ட அந்நாட்டு மக்கள் குருதி சிந்த முன் வருவது பெரிய விஷயமல்ல; அது அவர்களுடைய பிறவிக் கடமை. ஆனால் வேற்று நாடொன்றின் விடுதலைக்காகத் தம் உயிரையே அர்ப்பணிக்கத் துணிந்து வந்திருக்கும் இந்த வீரர்களின் தியாக உள்ளம் எத்தனை விசாலமானதாக இருக்க வேண்டும்!'

அமைதியிழந்து அலைமோதிய பரமேசுவரவர்மன் இப்போது நிதான கதியில் உலாவலானான். அவனுடைய பாதுகாப்புக்காகவும் தேவைக்காகவும் ஆந்திர மன்னரால் நியமிக்கப்பெற்ற பணியாட்களும், காவல் வீரர்களும் அந்தக் கொட்டகாரத்தில் சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்த அவன் வதனத்தில் ஓர் இளநகை தவழ்ந்தது.

'என்னுடைய விஷயத்தில் விதி, தினந்தினம் நிகழ்த்திக் காட்டும் விந்தையான நாடகங்களுக்கு ஓர் அளவே இல்லையா? கடந்த இரண்டு நாட்களாக இந்தக் கொட்டகாரத்தில் நான் எப்படி இருந்தேன்? ஒவ்வொரு விநாடியும் மரணத்தை எதிர்பார்த்துக்கொண்டு சிறைக் கைதியாக அடைபட்டுக் கிடந்தேன். ஆனால் இன்றோ சர்வ சுதந்தர மனிதனாக, சகல மதிப்பு மரியாதைகளுடன் சுகபோக சௌகரியங்களோடு இதோ நிற்கிறேன், இத்தகைய திடீர் மாற்றத்தைத் தோற்றுவித்த சக்தி எது? ஒரு சிறிய பட்டோலை? என் நெஞ்சிலே நிரந்தர ஒளி வீசி நிற்கும் ஆந்திர இளவரசி உத்தமசீலி தன் அழகுக் கரத்தால் வரைந்தனுப்பிய அந்தப் பட்டோலையே என்னை இந்தக் குதூகல நிலையில்

தூக்கி வைத்திருக்கிறது! அவளுடைய எழுத்தின் வன்மைக்கு ஈடாக எதைத்தான் சொல்லமுடியும்? உடன் பிறந்த உறவை வெட்டி, வல்லமை வாய்ந்த சக்கரவர்த்தியொருவனின் பகையைத் துச்சமாக மதிக்கச் செய்து, ஒரு தனிச் சுதந்தர நாட்டைத் தோற்றுவித்து, புதியதொரு கிரீட ஜாதி பரம்பரைக்கு வித்தூன்றி, அடிமைப்பட்டுக் கிடக்கும் இன்னொரு நாட்டின் விடுதலைப் போருக்கும் வழி அமைத்துக் கொடுத்துவிட்டதே அந்த ஓலை! சின்னஞ்சிறு பெண்ணொருத்தி தன் சிறு கரத்தால் வரைந்த ஓலையைக் கொண்டு எத்தனை பெரிய காரியங்களைச் சாதித்துவிட்டாள்!"

பிரமித்து நின்ற அவன் மனத்திலே துன்பமயமான நினைப்பு ஒன்று திடீரெனத் தோன்றித் துவண்டது.

'ஐயோ! அந்தப் பட்டோலையை எடுத்து வருவதற்காகச் சேதியக் கலைஞரின் இல்லத்துக்கு ஓடிய அவளைச் சளுக்கிய வீரர்கள் வளைத்துக் கொண்டார்களே! அந்த இல்லத்தைவிட்டு வெளியேற முடியாத நிலையில் அகப் பட்டுக்கொண்ட அவள் கதி என்ன ஆகியிருக்கும்? சளுக்கிய விக்கிரமாதித்தனின் ஜன்ம எதிரியான என்னுடன் சேர்ந்து கொண்டதுமல்லாமல், தளபதி வில்வேலியைக் குத்திக் கொல்லவும் முயன்றாள் என்ற குற்றம் சாட்டி அவளை அணு அணுவாகச் சித்திரவதை செய்து சாகடித்து விடுவார்களே! இதையெல்லாம் நன்கு அறிந்திருந்தும் அவளை மீட்க முயலாமல் என்னுடைய சுயநலத்தைக் கருதிப் படை உதவி பெறுவதற்காக இங்கு வந்துவிட்டேனே! என்னைப் போன்ற ஒரு கோழை, ஈரமில்லாத நெஞ்சத்தினன் எவனேனும் இருப்பானா? எனக்காக அவள் தன் உயிரையே தியாகம் செய்யத் துணிந்தபோது அவளுடைய மீட்சிக்காக நான் ஏதும் செய்யாமல் அவளை அநாதரவாக விட்டு விட்டேனே. அவள் இல்லாத உலகத்தில் நான் ஏன் வாழ வேண்டும்? எதற்காக வாழவேண்டும்?'

வெறி பிடித்தவன்போல் வாளை உருவி ஓங்கிப் பற்றிய வாறு அந்த மேன்மாடத் தளத்திலிருந்து திமுதிமுவென இறங்கி வந்தான் பரமேசுவரவர்மன்.

"வீரத் திருக்கோலம் கண்டேன்! வெற்றி உமக்கே!"

திடுக்குற்று நின்றான் பல்லவ மன்னன். அங்கே, அப்போதுதான் தம் இரதத்தைவிட்டு இறங்கிக் கொட்ட காரத்தை நோக்கிப் புன்னகை தவழ வந்துகொண்டிருந்தார் ஆந்திர வேந்தர் விஷ்ணுவர்த்தனர்.

அவரைப் பார்த்ததுமே பரமேசுவரவர்மனின் தற்கொலையாவேசம் தணிந்தது. 'அவசரப்பட்டு என்ன காரியம் செய்யத் துணிந்தேன்? என் உயிரின் உயிரான உத்தமசீலி எனக்கு இட்ட கட்டளையை மறந்து என்னை நானே அழித்துக் கொள்ள முயன்றேனே! சளுக்கிய அரக்கர் களின் கொட்டத்தை அடக்கிப் பல்லவ நாட்டை மீட்க வேண்டும் என்றல்லவா அவள் என்னிடம் கேட்டுக் கொண்டாள்? அவளின் அந்த விருப்பத்தை நிறைவேற்ற வேண்டியது என் கடமை அல்லவா?' என்று உள்ளூற முனகிக் கொண்டே ஓங்கிப் பிடித்திருந்த வாளை உறையிலிட்டான் அவன்.

"யுத்த அரக்கனைச் சந்திக்கப் புறப்பட்டு விட்டீர்களா நண்பரே? நானும் அதற்காகத் தங்களை வழிகூட்டி அனுப்ப வந்திருக்கிறேன், வாருங்கள்!" என்று அன்பும் பரிவுமாகச் சொல்லிக்கொண்டே பரமேசுவரவர்மனின் தோளில் தம் வலக் கரத்தைப் போட்டவாறு, அணிவகுத்து நின்ற படைகளை நோக்கி நடக்கலானார் ஆந்திர மன்னர்.

குகையிலிருந்து வெளிப்பட்ட இரு சிங்கங்கள் செருக்கு நடை போட்டு வருவதுபோல் வந்த அவ்விரு மன்னர்களையும் பார்த்த முப்படை வீரர்களும், ஆந்திர-பல்லவ நாடுகளை வாழ்த்திப் பெருங் கோஷமிட்டன.

அந்த மாபெரும் படையணிகளுக்கு முன்னால் பல்லவ மன்னனின் பட்டத்து யானையான அரிவாரணம் மதமதார்ப்

புடன் நின்றுகொண்டிருக்க, அதன் அருகில், அழகும் கம்பீரமுமாக விளங்கிய ஒரு வெண்ணிறப் புரவி போர்க் கவசச் சேணங்கள் பூட்டப்பெற்று மிடுக்குடன் நின்று கொண்டிருந்தது. அக்குதிரையின் சேணக் கசையை இழுத்துப் பிடித்து நின்றான் நாகோதரன்.

முப்படைகளையும் பார்வையிட்டுக் கொண்டு வந்த பல்லவ மன்னனும் ஆந்திர மன்னரும் அவ்வெண்ணிறப் புரவியை நோக்கி நடந்தனர்.

யுத்த சன்னத்துக்களுடன் வீரமாப் பொலிவோடு நின்ற பரமேசுவரவர்மனையே விழியசைக்காமல் பார்த்துக் கொண்டு சிறுபொழுது மௌனமாயிருந்த விஷ்ணுவர்த்தனர் அடைத்த குரலில் உணர்ச்சி மேலிடச் சொன்னார்: "அன்பரே! இறுதியாக உங்களிடம் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். பல்லவ நாட்டின் விடுதலைப் போருக்காகப் படையுதவி அளித்திருக்கும் நான், அதன் பிரதியுபகாரமாகத் தங்களிடமிருந்து பொன்னையோ பொருளையோ பூமியையோ கோரவில்லை. வலிமை வாய்ந்த விக்கிரமாதித் தனைப் பகைத்துக்கொண்டு விட்ட நான், எதிர் காலத்திலே அவனது கெடுபிடித் தாக்குதலுக்கு உள்ளாக நேரும் பட்சத் தில் நீங்கள் உதவி புரிய வேண்டும் என்றும் கேட்கவில்லை. தங்களிடம் நான் கேட்பதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். எனது ஜீவனின் ஜீவனாக வைத்துப் போற்றி வரும் என் அருமைச் செல்வி உத்தமசீலியை என்றென்றும் தங்கள் அன்பின் நிழலிலேயே வைத்திருக்கவேண்டும். இது ஒன்றைத்தான் தங்களிடம் எதிர்பார்க்கிறேன்; உதவியாக அல்ல, வரமாக!" —ஆந்திர மன்னரின் கண்கள் நீரூற்றில் நீந்தின.

"மன்னிக்க வேண்டும், அரசே! தாங்கள் கோரும் இந்த வரத்தை நான் அளிக்க முடியாத நிலையில் இருப்பதற்காக என்னை மன்னிக்கவேண்டும்."

இதைக் கேட்ட விஷ்ணுவர்த்தனர், வேல் பாய்ந்த சிம்மம்போல் தம் உடம்பைச் சிலிர்த்துக் கொண்டார்.

"ஆம், அரசே! தங்கள் அருமைக் குமாரி ஆந்திர இளவரசியின் அன்பு நிழலிலே அடைக்கலமாகிவிட்ட நான் அவளுக்கு எப்படி நிழல் அளிப்பேன்? எனக்குரிய நிழலை இழந்து அவளுடைய நிழலில் நான் ஐக்கியமாகி நாட்கள் பல நடந்துவிட்டன. இந்த என் பிறவியில் அது ஒரு நிரந்தர வேதமாகவும் என்னுள் நிலைத்துவிட்டது. எனவே, நிழலற்று நிற்கும் என்னை நோக்கி, 'நிழல் கொடு' என்று தாங்கள் வரம் கோரிப் பயனில்லை."

கோபக் கனல் பறந்த விஷ்ணுவர்த்தனரின் முகத்தில் இப்போது குதூகலம் நிரம்பி வழிந்தது. "என் மகள் மகா பாக்கியசாலி!" என்று மகிழ்ச்சிப் பரவசத்தோடு சிரித்துக் கூறிக்கொண்டே அந்தப் புரவியின் அருகில் போய் நின்ற அவர், அதன் முதுகை அன்புடன் தட்டிக் கொடுத்துவிட்டுத் திரும்பிக் களிப்பேறிய குரலில் சொன்னார்: "பல்லவச் செல்வரே! இதோ நிற்கும் இந்தக் குதிரையின் பெயர் 'அதிசயம்' என்பதாகும். என் அன்பு மகள் உத்தமசீலியால் போற்றி வளர்க்கப்பெற்ற அறிவார்ந்த குதிரை இது. அவளது போர்க்கலைப் பயிற்சியின்போது இந்தக் குதிரையையே அவள் பயன்படுத்தினாள். ஆகவே, இதனை என் குமாரியின் சீதனமாகத் தங்களுக்கு அளித்து, வாழ்த்துக் கூறுகிறேன்; வீரத்துடன் சென்று, வெற்றிவாகை சூடி வாருங்கள்!"

திமிறித் துள்ளிய அந்தப் புரவி திசையதிரக் கனைத்து முழக்கமிட்டது.

விஷ்ணுவர்த்தனரை வணங்கி நிமிர்ந்த பரமேசுவர வர்மன் ஒரு கணம் கண் மூடி நின்று தியானத்தில் ஆழ்ந்தான். பிறகு சடாரென்று பாய்ந்து போய் 'அதிசயம்' என்ற அந்த அழகிய குதிரையின்மீது தாவியேறி அமர்ந்து தன் அருகில் நின்ற நாகோதரனைப் பார்த்து ஏதோ இரகசிய சமிக்ஞை செய்துவிட்டுக் குதிரையைத் தட்டிவிட்டான்.

மறுகணம், போர்ப் பறைகள் முழங்கின; அலை மோதிக் கொண்டிருந்த முப்பெரும் படைகளும் பல்லவ நாட்டை நோக்கிப் பெயர்ந்து விரைந்ததால் எழுந்த புழுதிப் படலங்கள் மண்ணையும் விண்ணையும் சாடிக் கலக்கின.

# 98

# கல்லில் ஒரு கசிவு

எட்டிக் கொட்டையை உப்பு நீரில் அரைத்துக் கத்திக் குத்துக் காயத்துக்குப் பற்றுப் போட்டுக்கொண்டு படுத்துக் கிடந்த சளுக்கியத் தளபதி வில்வேலி வேதனைச் செரும லுடன் மெல்ல எழுந்து உட்கார்ந்தார். போதிய விளக்குகள் இன்றிப் பொலிவற்றுக் கிடந்த பல்லவபுரம் அரண்மனையின் பயங்கர அமைதிக்கிடையே அவரைப் பார்க்க மிகவும் பரிதாபமாக இருந்தது.

உடம்பில் ஏற்பட்ட வெட்டுப் புண்ணுக்காகவா இப்படி அவர் வேதனையுற்றுப் பொருமுகிறார்? இல்லை; இம்மாதிரி யான கத்திக் குத்துக் காயங்கள் பலவற்றைக் கண்டு பழக்கப் பட்டுவிட்ட உடம்பு அவருடையது. அப்படியானால் அவர் ஏன் இப்போது சுடு மணலில் எறியப்பட்ட விரியன்பாம்பு போல் நெளிந்து வேதனைப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக் கிறார்?

'என் வாழ்நாளில் இதுவரை இப்படிப்பட்ட ஓர் உத்தம மனிதனை நான் சந்தித்ததே இல்லை! அந்த மகா புருஷன் பரமேசுவரவர்மனுக்கு எதிராக எத்தனை சதிகள் செய்தேன், எவ்வளவு அநியாய அக்கிரமங்கள் புரிந்தேன்! ஐயோ, அவனுடைய நாட்டை அபகரிக்க உதவி, அவனை நாடோடி யாக்கியதுமல்லாமல், மறைந்திருந்து கொல்லவும் முயன்றேனே! இத்தனை தீங்குகள் இழைத்திருந்தும் அவன் என்னிடம் எவ்வளவு கருணையுடன் நடந்துகொண்டான்! பழி பாவங்களை அஞ்சாமல் செய்து வந்த என்னை அவன்

எத்தனை பாசப்பரிவோடு நடத்திவிட்டாள்! தன் மாசற்ற மனிதப் பண்பை வெளிப்படுத்தி எனது இழிந்த தன்மையை எவ்வளவு தெளிவாக எடுத்துக் காட்டி விட்டான்! பரம எதிரியாக நடந்துகொண்ட என்னையும் ஒரு சகோதரனாகப் பாவித்து எனக்கு உயிர்ப் பிச்சை அளிக்க முன் வந்தானே. அவனது திண்ணிய தோளில் என்னைச் சுமந்து வந்து என் புரவியில் அமர்த்தி அனுப்பினானே! இத்தகைய இரக்க நெஞ்சத்தினனை என்னால் இனி எப்படி விரோதிக்க முடியும்? ஆகா, அவன்தான் என்ன அழகாக இருக்கிறான்? அவனுடைய களைபொருந்திய முகத்தை நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம்போல் இருக்கிறதே! அப்படிப் பட்ட ஒரு மனித தேவனை அழிக்க முயலும் கூட்டத்தோடு சேர்ந்து நிற்கும் நானும் ஒரு மனிதன்தானோ? சே, இந்த ஈனத் தளபதி உடையில் இனியும் இருப்பது அவமானம்! இவ்விழிந்த பதவியை உதறித் தள்ளிவிட்டு இன்றே என் உள்ளக் கடைத்தேறலுக்கான மார்க்கத்தைக் கண்டாக வேண்டும்!”

கண்ணீர் மல்கி நின்ற வில்வேலி, ஏதோ ஓர் ஆவேசம் வந்தவர்போல் தம் இடையிலே தொங்கிய நீண்ட வாளை உருவித் தூர எறிந்துவிட்டு விரைந்து போய் ஒரு பேழையைத் திறந்து மூட்டையொன்றை எடுத்தார்.

சைவ-வைணவத் திருக்கோயில்களில் கொள்ளையடிப் பதற்காகச் சளுக்கிய இளவரசன் விநயாதித்தன் உபயோகித்து வந்த சமண முனிவருக்கான ஆடையணிப் பொருட்களே அந்த மூட்டையில் இருந்தன! அவற்றில் ஒரு காவி ஆடையையும், ஒரு மயிற்பீலியையும், ஒரு மர மண்டையையும் (பிட்சா பாத்திரம்) பக்தி சிரத்தையுடன் எடுத்துக்கொண்டு சற்றுத் தள்ளி வந்து நின்று, அந்தப் புனிதப் பொருட்களையே சிறிது நேரம் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தார் வில்வேலி. அவரது கண்கள் மீண்டும் புனலாகிச் சோர்ந்தன.

“எந்த மனிதனும் தன் இதயத்தை எப்போதும் மூடிப் பிடித்துக்கொண்டே இருக்க முடியாது! இத்தனை காலம்

இறுகித் துருவேறிக் கிடந்த என் இதயக் கதவு இன்று திறந்து கொண்டது. அதிலே பல்லவ மன்னன் ஏற்றி வைத்த ஒளிச்சுடரை அணையாமல் பாதுகாப்பதுதான் இனி எனக்குரிய ஒரே வேலை!" என்று குரல் கம்மிக் கரைய, வாய் விட்டுக் குழறிக்கொண்டே தம் கையிலிருந்த மயிற்பீலியை ஆர்வமுடன் தடவிக் கொடுத்தார் வில்வேலி. அப்போது குதிரை கனைப்பது போன்ற ஒரு கோரச் சிரிப்பொலி!

அமைதியாகத் திரும்பினார் அவர். அங்கே, அலட்சிய மிடுக்குடன் சிரித்துக்கொண்டே தன் சிவந்த கண்களை உருட்டிப் புரட்டிப் பார்த்தவாறு வந்து நின்றான் சளுக்கிய இளவரசன் விநயாதித்தன். அவனுக்குப் பின்னால், உடம்பெல்லாம் குருதி வழிய நடுங்கும் நிலையிலே காணப்பட்ட சளுக்கியப் போர் வீரன் ஒருவனும் அவசரத் திகிலோடு வந்தான்.

# 99

## பழைய குருடன்

கீழே எறியப்பட்டுக் கிடந்த வில்வேலியின் உடைவாளையே வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்ற விநயாதித்தன் வெடுக்கென்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு மமதைச் செருக்கான குரலில் கரகரத்தான்: "துரோகிகள்! தொடை நடுங்கிகள்! சளுக்கியக் கொற்றத்தின் உப்பைத் தின்று உடலை வளர்த்தவர்களெல்லாம் எங்களை நட்டாற்றில் கைவிடும் நயவஞ்சகர்களாக மாறிவிட்டார்கள்!"

உணர்ச்சியற்ற மரக் கட்டைபோல் நின்றுகொண் டிருந்த வில்வேலி புன்முறுவல் பூத்தார். அவருடைய வாழ் நாளிலேயே இன்றுதான் அவர் முகத்தில் இத்தகையதோர் அமைதிப் புன்னகை அரும்பியது.

ஆனால் விநயாதித்தனோ ஆத்திரக் குமுறலுடன் கடுகடுப்பாக பேசினான்: "வெற்றிக்கு மேல் வெற்றி கிட்டிய போதெல்லாம் வாழ்த்துப்பாடி வளைய வந்தவர்கள் இந்த ஆபத்துக் காலத்திலே துணை நிற்க அஞ்சிப் பின் தங்கி விட்டார்கள்! போர்க்களத்துக்குப் போனால் எதிரியின் வாளுக்கு இரையாக நேரிடுமோ என்று பயந்து ஏதேதோ காரியங்களைச் செய்வதுபோல் போக்கு காட்டிக்கொண்டு பல்லவபுரத்திலேயே பதுங்கிக் கிடக்கிறார்கள்!"

முற்றும் துறந்த முனிவர் போல் அமைதியாக நின்றிருந்த வில்வேலி இதைக் கேட்டுச் சிறிதே சலனமுற்று நிமிர்ந்தார்.

விநயாதித்தன் மேலும் தன் குமுறல் பேச்சைத் தொடர்ந்தான்: "கடமையை மறந்தவர்கள், கட்டுப்பாட்டை

மீறியவர்கள், உயிரை வெல்லமென நினைந்து ஓடி ஒளியும் கோழைகள்—இவர்களையெல்லாம் நம்பி, சளுக்கிய சாம்ராஜ் யத்தின் மாபெரும் படைத் தளபதி பதவியையும் வேறு பல உயரிய பொறுப்புக்களையும் ஒப்படைத்ததுமல்லாமல், அவர் களது முட்டாள்தனமான யோசனைகளைக் கேட்டுப் பாண்டியருடன் பொருதுகொள்ள முற்பட்டது எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனமாகி விட்டது!"

வில்வேலியின் உடல் அதிர்ந்தது. முகம் தீக்குழம்பாகக் கனன்று சிவந்தது. சற்றுமுன் அவர் மனத்தில் ஏற்பட்டிருந்த ஞானக் கசிவு அடைபட்டு மீண்டும் அது பாறையாக இறுகியது. பழைய வில்வேலியாக மாறிய அவர் தம் கையிலிருந்த காவி ஆடையும் மயிற்பீலியும் நழுவிக் கீழே விழுந்ததைக்கூடக் கவனியாமல் அவனையே வெறித்துப் பார்த்தார்.

விநயாதித்தன் தனது வலக்கையை மேலே உயர்த்தி ஆட்டியவாறு, "ஏ, சளுக்கிய நாடே! புகழ் மண்டிய உன் வீர மண்ணில் இப்படிப்பட்ட பேடிகளும், இராஜத் துரோகிகளும் கூடப் பிறப்பது உண்டா? வெட்கம்! வெட்கம்!" என்று உரத்த குரலில் சொல்லி வாய் மூடு முன், சாட்டையடிபட்ட சிங்கம் போல் பயங்கரமாகத் தம் உடலைச் சிலிர்த்துக்கொண்டு நிமிர்ந்த வில்வேலி, "என்ன சொன்னீர்கள் இளவரசே?" என்று மூர்க்காவேசத்துடன் கர்ஜித்துக்கொண்டே துள்ளித் திமிறிப் பாய்ந்தோடிக் கீழே கிடந்த வாளைச் சடாரெனக் குனிந்து எடுத்து மின்னல் வட்டமாகச் சுழற்றியவாறு திரும்பினார்.

இதைக் கண்டு திடுக்கிற்ற விநயாதித்தன் சட்டென்று பக்கவாட்டில் ஒதுங்கிப் போய் நின்றுகொண்டு தணிந்த குரலில், "...என்றெல்லாம் நான் சொல்லவில்லை, தளபதி யாரே! தங்கள் வணக்கத்துக்குரிய சளுக்கிய மாமன்னர்தாம் தங்களைப்பற்றி இவ்வாறு வருந்திப் பேசி இந்த வீரனை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார்!" என்று விஷமச் சிரிப்புடன் குழைந்தான்.

கோபத்தால் எரிமலையாகக் குமுறிக்கொண்டு நின்ற வில்வேலி பேரதிர்ச்சியுற்றவராய்ப் பின்னால் நகர்ந்து "என்னைப் பற்றி மன்னர்பிரான் இப்படியா சொன்னார்?" என்று பயப்பிராந்தியுடன் திணறிக் கேட்டார்.

"சந்தேகம் இருந்தால், இதோ போர்க்களத்திலிருந்து நேரே இங்கு வந்திருக்கும் இந்த வீரனையே கேட்டுப் பாருங்கள்."

"உண்மைதான் ஐயா! நெல்வேலிப் போர் முனைக்குத் தாங்கள் இன்னும் வராததுபற்றி நம் பேரரசர் மிகவும் சினமுற்றிருக்கிறார்..." என்று பயந்து குழறினான் சளுக்கிய வீரன்.

அவமானத்தால் உடல் குன்றி நின்ற வில்வேலி வேதனைப் பெருமூச்சுடன் தலைநிமிர்ந்து, "ம்...சரி; போர் நிலைமை இப்போது எப்படி இருக்கிறது? நம் சளுக்கியப் படைகள் பாண்டிய மண்ணில் எவ்வளவு தூரம் முன்னேறிச் சென்றிருக்கின்றன?" என்று அடித் தொண்டையில் விளித்தார்.

"பல்லவ நாட்டின் தெற்கு எல்லையைவிட்டுப் புதுக் கோட்டை வரையில் பின்னடைந்து வந்திருக்கின்றன, நம் படைகள்."

"என்ன! மாவீர விக்கிரமாதித்தர் நெல்வேலிப் போர்க் களத்தில் இறங்கிய பின்னுமா நமது படைகள் முன்னேறவில்லை."

சட்டென்று குறுக்கிட்ட விநயாதித்தன், "இந்த எதிர்பாராத பயங்கர நிலைமைக்கு என்ன காரணம் என்பதையும் கேளுங்கள், தளபதியாரே!" என்றான் வெறுப்பும் முறைப்புமாக.

வில்வேலியைத் தயக்கத்துடன் பார்த்துக்கொண்டே நடுங்கும் குரலில் சொன்னான் சளுக்கிய வீரன்: "நெல்வேலியில் நம் படைகள் போய் இறங்கியதுமே தாங்கள் வந்து தலைமை தாங்கிப் போரை ஆரம்பித்து நடத்துவீர்கள்

என்று எண்ணி உறையூரிலேயே இருந்துவிட்டார் நம் மன்னர் பிரான். தாங்களோ போர்ப் பிரகடனம் செய்து இரண்டு நாட் களாகியும் போர்முனைக்கு வரவில்லை. இதனை அறிந்த பாண்டியப் படைகள் எடுத்த எடுப்பிலேயே நம்மீது பலத்த தாக்குதலைத் தொடங்கின. தலைமை இல்லாமல் தாறுமாறாகப் போரிடமுனைந்த நம் படைகள் எதிரியின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் சிதறிப் பின்வாங்க நேரிடவே, உறையூருக்குச் சேதி பறந்தது. மறுநாளே புயலெனப் பாய்ந்துவந்து போர்க்களத்தில் குதித்தார் நம் மாமன்னர். இதைக் கேள்விப்பட்ட பாண்டிய அரசர் நெடுமாறனும் புதிய படை பலத்துடன் போர் முனைக்கு வந்து சேர்ந்தார். போரின் உக்கிரம் உச்ச நிலையை அடைந்தது. நாம் எதிர்பார்த்தது போல் பாண்டியப் படைகள் அத்தனை பலவீனமாக இருக்க வில்லை. இதிலே இன்னோர் ஆச்சரியம் என்னவென்றால், பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனும் ஒரு பெருஞ்சேனை யுடன் வந்து நம்மைத் தாக்கத் தொடங்கினான். அவனுடைய தலைமையில் ஆவேசமாகப் போரிட்டது பாண்டியப் படை கள் அல்ல, சோழியப் படைகள். இதனால் சளுக்கிய வீரர்கள் பெருத்த கலவரமடைந்துவிட்டனர். மலை புரண்டாலும் மனம் கலங்காத நம் மன்னர்பிரானும் இந்த நிலைமையைக் கண்டு திகிலடைந்தார். எனவேதான், ஆதிக்கப் போராகத் தொடங்கியதைத் தற்காப்புப்போராக மாற்றிக் கொள்ள வேண்டிய கட்டாய நிலை நமக்கு ஏற்பட்டுவிட்டது' இவ்வளவுக்கும் காரணம்...”

“ஏனடா, பேச்சை நிறுத்திவிட்டாய்? ‘இவ்வளவுக்கும் காரணம் தளபதி வில்வேலிதான் என்று சளுக்கிய மாமன்னர் குமுறிச் சீறுகிறார் என்பதையும் சொல்லி நிறுத்து!” என்றான் விநயாதித்தன் அதட்டலாக.

வெலவெலத்து நின்ற வில்வெளி அவனைப் பயங்கர மாக விழித்துப் பார்த்தார். பிறகு சடாரெனத் தலைதூக்கி “இளவரசே! தங்கள் தந்தையார்தாம் இங்கு நடந்த விஷயங்

களை அறியாமல் என்மீது குற்றம் சுமத்திப் பேசியிருக்கிறார் என்றால் நீங்களும் அவ்வாறே என்னை இழித்துப் பேசத் துணிந்துவிட்டீர்களே! சரி; நன்றாகப் பேசுங்கள். ஆனால் சளுக்கியக் கொற்றத்தின் உப்பைத் தின்று உடலை வளர்த்த நான் இன்றுவரை அதற்கு எள்ளளவு துரோகமும் செய்த தில்லை; இனியும் செய்யப் போவதில்லை. இதோ, இக்கணமே போர் முனைக்குப் புறப்படுகிறேன்!... வாழ்க, மாமன்னர் விக்கிரமாதித்தர்! ஓங்குக, சளுக்கிய வராக பதாகை!" என்று கண்டம் வெடிப்பதுபோல் பிளிறிக் கொண்டே தம் வலக்கையை வீராவேசத்துடன் மேலுயர்த்தி ஆட்டினார். அப்படி முரட்டுத்தனமாகக் கையை ஆட்டியதால் அவரு டைய வலது புஜத்தில் அரைகுறையாக ஆறி வடுவிட்டிருந்த கத்திக் குத்துக் காயம் வெடிப்புற்றுக் கிழிந்து இரத்தப் பெருக்கு எடுத்தது. வேதனை முனகலுடன் குனிந்த அவர், இடக் கையால் உடைவாளின் பிடியை இறுகப் பற்றி அழுத்தியவாறு தள்ளாடித் தள்ளாடி வாயில் முகப்புக்கு வந்தார்.

இந்தச் சமயம், அங்கே வேர்க்க விறுவிறுக்க ஓடி வந்து வணங்கி நின்றான் சளுக்கியக் காவல் வீரனொருவன். அவனைப் பார்த்ததும் வில்லெனப் புடைத்து நிமிர்ந்த வில்வேலி, "போன காரியம் என்ன ஆயிற்று? பிடித்துக் கொண்டு வந்தீர்களா, அந்த துரோகிப் பெண்ணை?" என்று சீறிக் கேட்டார்.

"தளபதியின் ஆணைப்படி பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்தை வளைத்துக்கொண்டு ஆந்திர இளவரசியையும் பல்லவ மன்னரையும் பிடிக்க முயன்றோம். ஆனால் பல்லவ மன்னர் தம் அரிவாரணத்தில் ஏறித் தப்பிச் சென்றுவிட்டார்..."

"அந்தக் குலத் துரோகிப் பெண்ணாவது கிடைத்தாளா? எங்கே அவள்?"

"சேதியக் கலைஞரின் இல்லத்தை நாங்கள் நாலா புறமும் வளைத்துச் சூழ்ந்து சென்றபோது ஆந்திர இளவரசி

யார் அந்த இல்லத்தினுள் இருந்ததைக் கண்டோம். பிறகு அவரைச் சிறை பிடிப்பதற்காகக் கதவுகளையும் சாளரங்களை யும் உடைத்துக்கொண்டு உள்ளே சென்று பார்த்தபோது...”

“தற்கொலை செய்து மாண்டு கிடந்தாளா, என்ன?”

“இல்லை, ஐயா! அவர் எங்கோ மாயமாய் மறைந்து விட்டார்.”

“ஓ,... ஆந்திர இளவரசிக்கு மந்திர தந்திரம்கூடத் தெரியுமா? சரி; நாளை மாலைக்குள் அந்த சேதியக் கலைஞனின் இல்லத்தை இடித்துத் தரைமட்டமாக்குங்கள்! அவளுடைய மாய தந்திரம் என்ன ஆகிறதென்று பார்ப்போம்!”

சளுக்கிய வீரன் உடனே பெருவளநல்லூரை நோக்கி விரைந்தான்.

உபாதையால் தொங்கித் துவண்ட வலக் கையை அழுத்திப் பிடித்துக்கொண்டு சற்று நேரம் அப்படியே விறைத்து நின்ற வில்வேலி, “இளவரசே! தங்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லிவிட்டுப் போக விரும்பு கிறேன். நம்மைப் பல வகையிலும் ஏமாற்றி அழித்தொழிக்க முயன்றுவரும் அந்த நயவஞ்சகப் பழையாறைச் சோழன் விஷயத்தில் நீங்கள் மிகவும் எச்சரிக்கையோடு நடந்து கொள்ளவேண்டும். நம்மிடம் இங்கே எஞ்சியிருந்த படை வீரர்களை அனுப்பி அவனைப் பிடித்து வரும்படி பணித் திருக்கிறேன். அவன் பிடிபட்டுவிட்டால் உடனே எனக்குச் சேதி சொல்லி அனுப்புங்கள். அவனுக்கு அளிக்கவேண்டிய தண்டனை நானே நேரில் வந்து அளிப்பேன்” என்று நைந்த குரலில் முணுமுணுத்துக்கொண்டே துவளத் துவள நடந்து போய்த் தம் குதிரைமீது ஏறினார்.

அரண்மனை முகப்பு வாயிலுக்கு நேர் எதிரே தலை விரித்து இருளில் புதைந்து நின்ற பெரியதோர் ஆலமரத்தின் பக்கமிருந்த ஒற்றைக் கோட்டான் ஓலமிட்டுக் கூவும் ஒலி கேட்டது. அத்துடன் எங்கோ ஓர் ஆந்தை அலறும் ஒலியும் பயங்கரமாக எழுந்தது.

முகத்தைச் சுளித்து மிரண்டு நிமிர்ந்த வில்வேலி, சேணக் கசையால் தம் புரவியின் பிடரியைச் சாடினார். என்று மில்லாத வழக்கமாக அந்தக் குதிரை முரண்டு பண்ணிப் பின்னால் திரும்பிக் கனைத்துச் சுழன்றது. பிறகு முரட்டுத் திமிறலுடன் முன்னால் பாய்ந்து தறிகெட்டு ஓட ஆரம்பித்தது.

இவ்வளவையும் பார்த்துக்கொண்டு அரண்மனை சித்திர கூடத்தில் அலட்சிய நடைபோட்டு உலாவிக் கொண்டிருந்த விநயாதித்தன் ஏதோ நினைவு வரப் பெற்றவன் போல் கையொலி எழுப்பினான். உடனே இரு காவல் வீரர்கள் ஓடி வந்து நின்றனர்.

"நேற்றைக்கு முன் தினம் பழையாறைச் சோழனுடன் ஆலம்பாக்கத்துக்கு நான் போனபோது அங்கே ஓர் இடையப் பெண்ணைப் பார்த்து அவளை இழுத்துக்கொண்டு வரும்படி உங்களுக்குக் கட்டளையிட்டேன் அல்லவா? அதை இன்று நீங்கள் நிறைவேற்ற வேண்டும்; ஓடுங்கள்!" என்று உறுமினான் விநயாதித்தன்.

உதறலெடுத்து நின்ற அவ்விரு வீரர்களும் உடனே ஆலம்பாக்கத்துக்கு விரைந்தனர்.

உல்லாசமாகச் சிறிது நேரம் உலாவிக் கொண்டிருந்த விநயாதித்தன் மோகாந்தகாரமான சிரிப்புடன் திரும்பி மது பானக் கிண்ணங்கள் இருந்த இடத்தை நோக்கி நடந்தான்.

"வணக்கம், இளவரசே!"

மமதைச் செருக்குடன் சாவதானமாகத் திரும்பிய விநயாதித்தன் ஏதோ பேயைக் கண்டுவிட்டவன்போல் பதறித் துடித்துப் பின்னால் நகர்ந்தான். அளவுக்கு மீறிய பயத்தால் அவனுடல் குப்பென வியர்த்துக் கொட்டியது. கண்கள் நிலை கொள்ளாமல் படபடத்துச் சுழல, தன் எதிரே நின்ற உருவத்தை உற்று நோக்கினான்.

சந்தேகமில்லை; பழையாறைச் சோழர்தாம் அங்கு சோகமே உருவாக நின்றுகொண்டிருந்தார்!

100

## அநந்தமதியின் தியாகம்

"மதிப்புக்குரிய சளுக்கிய இளவரசே! என்னை மன்னியுங்கள்! உங்களிடம் ஒரு மாபெரும் வரத்தை மன்றாடிக் கேட்கவே இங்கு வந்திருக்கிறேன்!" — பழையாறைச் சோழரா இப்படிப்பேசினார்? ஆமாம்; நிராயுத பாணியாக வந்து நின்றிருந்த அவர்தாம் இவ்வாறு கண் கலங்கிக் கரைந்த குரலில் பரிதாபமாகக் குழறினார்.

விநயாதித்தனுக்கு ஒரு கணம் ஒன்றுமே புரியவில்லை. பல்வேறு பயங்கரச் சந்தேகங்கள் மூளையை உரசிச் சூடாக்க அவரை விழியசைக்காமல் வெறித்துப் பார்த்தான் அவன்.

இரண்டு கைகளையும் கோத்து முன்னால் தொங்க விட்டுக் கொண்டு ஓர் அடிமையைப்போல் தலைகுனிந்து நின்ற பழையாறைச் சோழர் துக்கம் தொண்டையை அடைக்கத் தணிந்த தொனியில் மேலும் சொன்னார்: "இளவரசே, உங்கள் முன்னிலையில் நின்று பேசக்கூடிய தகுதியை நான் இழந்துவிட்டாலும், இரண்டொரு வார்த்தைகள் மட்டும் பேச எனக்கு அநுமதியுங்கள். அதாவது, என்னைப்பற்றிய உண்மைகளையும் நான் எத்தனைப் பயங்கரப்பேர்வழி என்ற விவரத்தையும் வில்வேலியின் வாயிலாக நீங்கள் அறிந்திருப்பீர்கள். அவையெல்லாம் பொய் என்று மறுத்துப் பேச எனக்குத் துணிவு இல்லை; அப்படிப் பேசவேண்டிய அவசியமும் இனி இல்லை. ஆனால் நேற்றைய அந்த நிலையிலிருந்து இன்று நான் அடியோடு மாறியிருக்

கிறேன். இதை நீங்கள் நம்பினாலும் நம்பாமற்போனாலும் இதுதான் உண்மை.”

விநயாதித்தன் தன்னைச் சமாளித்துக்கொண்டு எச்சரிக்கையானான்.

நிஜமாகவே கண் கலங்கி நின்ற பழையாறைச் சோழர் அடைத்த குரலில் மேலும் சொன்னார்: “ஆமாம், இளவரசே! உண்மையில் ஒரு புது மனிதனாக மாறித்தான் இங்கு வந்திருக் கிறேன். இப்போது நான் பழையாறைச் சிற்றரசன் அல்லன்; பல்லவ மன்னனின் நண்பனுமல்லன்; சளுக்கிய அரசரின் எதிரியுமல்லன்; இவையெல்லாவற்றையும் ‘பிள்ளைப் பாசம்’ என்ற ஒரு பெரும் சக்திக்குப் பலி கொடுத்துவிட்டு, அந்தப் பிள்ளைப் பாசத்தினாலேயே பைத்திய நிலைக்கு ஆளாகிவிட்ட ஓர் எளிய தந்தையராக இங்கு வந்து நிற்கிறேன்...”

விநயதாதித்தனுக்கு ஒரே குழப்பமாகிவிட்டது.

துயரம் தாளமாட்டாமல் விம்மிய பழையாறைச் சோழர், “இளவரசே! தங்களுக்கும், தங்கள் தந்தைக்கும், தளபதி வில்வேலிக்கும் நான் இழைத்த தீங்குகளுக்கு என்னை வெட்டுங்கள், குத்துங்கள், கழுவிலேற்றிக் கிழித்தெறியுங்கள்! ஆனால், என் அருமை மகளை மட்டும் ஒன்றும் செய்யாதீர் கள்! அவளை எவ்வித அவமானத்துக்கும் உள்ளாக்காதீர் கள்!” என்று கெஞ்சிக் குமுறிக்கொண்டே சித்தப்பிரமை பிடித்தவர்போல் அங்குமிங்குமாக அலைமோதினார். பிறகு உரத்த குரலில், “இளங்கோப்பிச்சி! என ஆருயிர்க் கண்ணே! நீ எங்கே இருக்கிறாய்?” என்று பரிதாபமாக ஓலமிட்டவாறு அந்தச் சித்திரகூடத்தைச் சார்ந்த மற்றோர் அறையை நோக்கிப் பாய்ந்தோடினார்.

வெடவெடத்து நடுங்கி நின்ற விநயாதித்தன் சடாரெனத் தாவி, பழையாறைச் சோழர் புகுந்த அறையின் கதவைப் படீரென்று இழுத்துச் சாத்தினான்.

அதே சமயம், ஆலம்பாக்கத்துக்குப் புறப்பட்டுப் போயிருந்த சளுக்கியக் காவல் வீரர்கள் இருவரும், "இளவரசே, ஆபத்து!" என அலறியவாறு ஓடி வந்தனர்.

திகைத்துத் திரும்பிய விநயாதித்தன் அவர்களைத் திரு திருவெனப் பார்த்து விழித்தான்.

"அதோ பாருங்கள், இளவரசே! ஆயிரக்கணக்கான பல்லவப் போர்வீரர்கள் தீவட்டிகளுடன் இந்த அரண் மனையை நோக்கி வருவதைப் பாருங்கள்!"

குலை நடுக்கம் கொண்டுவிட்ட விநயாதித்தனும் தொலை தூரத்துக்கு அப்பால் தன் பார்வையைச் செலுத்தி அந்தப் பயங்கரக் காட்சியைப் பார்த்தான். நள்ளிரவின் காரிருளைக் கிழித்துக்கொண்டு ஆயிரக்கணக்கான தீப்பந்தங்கள் செவ்வொளி பரப்பித் திரண்டு வருவது தெரிந்தது.

"வீரர்களே, ஓடிவிடுங்கள்! இந்த அரண்மனையில் உள்ள அவ்வளவு பேரும் உடனே வெளியேறிவிடுங்கள்!" என்று உரக்கக் கூவினான் விநயாதித்தன்.

அவன் கட்டளையிடுவதற்கு முன்னதாகவே அங்கிருந்த சளுக்கியக் காவல் வீரர்கள் அவ்வளவு பேரும் தலைவிரி கோலமாக ஓடத் தொடங்கினர். சற்றைக்கெல்லாம் அந்த மாபெரும் அரண்மனை வெறிச்சென்று ஆகிவிட்டது.

திக்பிரமை பிடித்தவனாய்த் திகைத்து நின்றான் விநயாதித்தன். அவனுக்கு எங்கே, எப்படி ஓடி ஒளிவதென்றே புரியவில்லை. இந்தக் குழப்பத்திலும் அவன் மனத்திலே ஒரு பயங்கர வஞ்சம் தலை தூக்கியது. "இதெல்லாம் அந்தப் பழை யாறைச் சோழனின் வேலையாகத்தான் இருக்கவேண்டும். அவனை எப்படியும் தீர்த்துக் கட்டிவிட்டுத்தான் இங்கிருந்து போவேன்." — இவ்வாறு உறுமிக்கொண்டே பழையாறைச் சோழர் இருந்த அறையை நோக்கிப் பாய்ந்து சென்று கதவைத் தள்ளினான்.

அந்தப் பிரும்மாண்டமான கதவு உட்புறம் தாழிடப் பட்டிருந்தது. அவ்வறையினுள்ளிருந்து, "இளங்கோப்பிச்சி!

என் அருமை மகளே! நீ எங்கே இருக்கிறாய்?" என்ற அலறல் மட்டும் கேட்டுக் கொண்டேயிருந்தது.

பீதியடைந்த விநயாதித்தன் பின்னால் திரும்பிப் பார்த்தான். அந்த தீவட்டிப் படை பல்லவபுரம் அரண் மனைக்குள் நுழைந்துவிட்டது. பரபரப்புடன் தாவியோடிய சளுக்கிய இளவரசன் முகப்பு வாயில் மண்டபத்தின் பாரிய தூண் ஒன்றில் ஒடுங்கி மறைந்து நின்றுகொண்டு நடுங்கும் உள்ளத்துடன் வெளியே எட்டிப் பார்த்தான்.

என்ன ஆச்சரியம்! அங்கே மூர்க்காவேசமாகத் தீப்பந் தங்களை ஏந்தித் திரண்டு வந்தவர்கள் பல்லவப் படைவீரர் களல்லர்; கொம்புகளில் தீப்பந்தம் கட்டப்பட்ட ஒரு பெரும் மாட்டு மந்தைதான் அரண்டு மிரண்டு ஓடிவந்து திமு திமுவென உள்ளே புகுந்தது.

இந்தக் காட்சியைக் கண்ட விநயாதித்தனுக்கு ஒரே வியப்பும் திகைப்புமாகிவிட்டது. 'என்ன சாமர்த்தியமான ஏமாற்றுச் சூழ்ச்சி இது! சில நூறு மாடுகளின் இரட்டைக் கொம்புகளில் தீப்பந்தங்களைக் கட்டிப் பல ஆயிரம் போர் வீரர்கள் தீவட்டி ஏந்தி வருவதுபோன்ற ஒரு பீதியை உண்டு பண்ணுவதற்காகச் செய்த குயுக்தி அல்லவா இது? இந்த ஏமாற்றுச் சூழ்ச்சியை அறியாமல் இங்கிருந்த என் காவல் வீரர் களையெல்லாம் வெளியேறச் சொல்லிவிட்டேனே!' — தூண் மறைவிலிருந்து மெல்ல வெளியே வந்த விநயாதித்தனுக்கு மீண்டும் ஓர் ஆச்சரிய அதிர்ச்சி ஏற்பட்டது.

ஆமாம்; சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும், அநந்த மதியும்தான் மாட்டு மந்தையை ஓட்டிக்கொண்டு வெற்றிக் களிப்புடன் வந்தனர்.

'யார் இந்தப் பெண்கள்? ஆலம்பாக்கத்தில் பார்த்த அந்த இடையப் பெண்கள் அல்லவா இவர்கள்?' — ஆச்சரியத்தால் மூச்சு முட்டித் திணறிய விநயாதித்தன் தூணுக்குத் தூண் தாவி மறைந்து சென்று அவர்களைப் பின் தொடர்ந்தான்.

"என்னுடைய சபதம் நிறைவேறிவிட்டது! பல்லவ மகாராணியை இந்த அரண்மனைச் சிறையிலிருந்து மீட்பேன் என்று என் காதலரிடம் செய்த சபதத்தை இன்று நிறை வேற்றி விட்டேன்! மதுரை அரண்மனையிலிருந்து ஆலம்பாக்கத் துக்கு நான் வந்த நோக்கமும் நிறைவேறிவிட்டது!" என்று உற்சாக மகிழ்ச்சியுடன் கூவிய இளங்கோப்பிச்சி வேளப் பகுதியை நோக்கி விரைந்தாள். அவளுக்குப் பின்னால் அநந்தமதியும் தொடர்ந்தாள்.

அரண்மனை வேளத்தின் மேன்மாடத்து அறை யொன்றை அடைந்த இளங்கோப்பிச்சி தயங்கி நின்று உள்ளே எட்டிப் பார்த்தாள்.

அங்கே, கனத்த இரும்புச் சங்கிலிகளால் கை கால்கள் பிணைக்கப்பட்டிருக்கச் சோகமே வடிவாய் அமர்ந்து, அப்பர் பெருமானின் அருட்பா ஒன்றை மனமுருகிப் பாடிக் கொண்டிருந்தார் பல்லவ மன்னனின் அன்னையான மகாராணி காடவன்மாதேவி.

நெஞ்சை உலுக்கும் இந்தப் பரிதாபக் காட்சியைக் கண்டு நிலைகுலைந்துபோன இளங்கோப்பிச்சி, அன்பா வேசக் குரலில், "அத்தை!" என்று கதறிக்கொண்டே ஓடி அவரை அப்படியே சேர்த்துக் கட்டிக்கொண்டாள்.

தியானத்திலிருந்து கண் விழித்த காடவன்மாதேவிக்கு ஒருகணம் ஒன்றுமே புரியவில்லை. உள்ளார்ந்த திகைப்புடன் சோழ இளவரசியைத் தொட்டுத் தடவிப் பார்த்தார் அவர்.

இந்தச் சமயம், அறைக்கு வெளியே நின்றிருந்த அநந்தமதி ஏதோ ஒரு பயங்கரக் காட்சியைக் கண்டுவிட்டவள் போல் பாய்ந்தோடி வந்து தன் இருகரங்களையும் பரக்க விரித்துப் பல்லவ ராணியையும் சோழ இளவரசியையும் மறைத்துக்கொண்டு நடுவே நின்று நெஞ்சை நிமிர்த்தினாள்.

அடுத்த கணம், விர்ரென்று சுழன்று வந்த ஒரு குத்து வாள் அநந்தமதியின் மார்பில் பளீரெனப் பாய்ந்தது. 'ஹா' என்ற அலறலுடன் அப்படியே குப்புறக் கவிழ்ந்து வீழ்ந்தாள் அவள்!

# 101

## பின்னைப் பாசம்

பாழடைந்து கிடந்த அநந்தமதியின் இல்லத்து வெளித் திண்ணையோரம் தூணைப் பிடித்துக்கொண்டு நின்றிருந்த ஆபத்துதவி சம்புவராயன் துயரம் தாளமாட்டாமல் குலுங்கிக் குலுங்கி அழுதுகொண்டிருந்ததைக் கண்டு திகிலடைந்தவர்களாய் வேலிப்புற வாசலருகிலேயே தயங்கி நின்றுவிட்டார்கள் சேதியக் கலைஞரும், முத்தரையரும், அவர்களைப் பார்த்த சம்புவராயனுக்கு அழுகை மேலும் அடைத்துக்கொண்டு வந்துவிட்டது. 'கோ'வெனக் கதறிப் புலம்பியவாறு அவர்களிடம் ஓடி வந்தான் அவன்.

பிரமித்து நின்ற முத்தரையர், 'என்ன நடந்தது?' என்று கேட்பதுபோல் அவனை ஏறிட்டு நோக்கினார்.

"சிங்கம் தானாகவே வலையில் சிக்கிக்கொள்ளப் போய் விட்டதுஐயா! அந்தக்கொலைபாதகர்களின் இருப்பிடமான பல்லவபுரம் அரண்மனைக்கே பழையாறைச் சோழர் போய் விட்டார் ஐயா!'' என்றான் சம்புவராயன் விம்மலும் பொருமலுமாக.

துணுக்குற்ற முத்தரையர், "என்ன?" என்று கண்களை அகல விரித்தார்.

"ஆம், பிரபு! பழி பாவத்துக்கு அஞ்சாத சளுக்கிய இளவரசனால் தம் அருமைக் குமாரிக்கு ஏதேனும் மான பங்கம் ஏற்பட்டுவிடுமோ என்று பதறித் துடித்த அவர் புத்திப் பேதலித்தவராய், எல்லாவற்றையும் மறந்து, எதையும்

இலட்சியம் செய்யாமல் பல்லவபுரம் அரண்மனைக்குப் போய்விட்டார்."

"அப்படியானால் சோழ இளவரசியை விநயாதித்தன் சிறைப்பிடித்து விட்டானா என்ன?"

"இதோ, இந்த இல்லத்தைப் பாருங்கள் ஐயா! இது பாழடைந்து கிடப்பதிலிருந்தே அந்த அநியாய அக்கிரமம் நடந்துவிட்டது என்பது தெரியவில்லையா?"

"வழக்கம்போல் பழையாறைச் சோழர் இந்த விஷயத்திலும் அவசரப்பட்டுவிட்டார் என்றே எனக்குத் தோன்றுகிறது."

"இல்லை, ஐயா! நானும் எங்கெங்கோ தேடி அலைந்து விட்டேன். சோழ இளவரசியைப்பற்றியோ, அவருடன் இருந்த அநந்தமதியைப்பற்றியோ எவ்விதத் தகவலும் கிடைக்கவில்லை. ஆகவே, அவர்கள் விநயாதித்தனால்தான் கடத்திச் செல்லப்பட்டிருப்பார்கள்."

ஆழ்ந்த கவலையுடன் ஒரு கணம் மௌனமாயிருந்த முத்தரையர், "ஆமாம்; இந்த நிலைமையில் பழையாறைச் சோழர் பல்லவபுரம் அரண்மனைக்கு ஏன் போனார்? அப்படிப் போனதால் அவருக்கு ஆபத்து ஏற்படுமே தவிர பயனேதும் காண முடியாதே" என்று கரகரத்த குரலில் கேட்டார்.

"இதையேதான் நானும் பலமுறை சொல்லி அவரைத் தடுத்துப் பார்த்தேன் ஐயா! ஆனால் அதற்கெல்லாம் அவர் செவி சாய்க்கவே இல்லை. 'சளுக்கிய இளவரசனின் காலில் விழுந்து கெஞ்சிக் கடைசிவரை அவனுக்கு அடிமையாய் இருக்கச் சாசனம் எழுதிக் கொடுத்தாவது என் மகளை மீட்க முயலுவேன்; அது இயலவில்லையானால் அவன் எதிரிலேயே சோழ இளவரசியைக் கொன்று, நானும் உயிரை மாய்த்துக் கொள்வேன்" என்ற ஆவேச முடிவோடு அந்த நள்ளிரவு நேரத்திலேயே நிராயுதபாணியாகப் புறப்பட்டுப் போய் விட்டார்." — முகத்தைப் பொத்திக்கொண்டு விம்மிக் கதறினான் சம்புவராயன்.

இவ்வளவு நேரம் திகைத்து விறைத்து நின்றுகொண்டிருந்த பரவாதிமல்லர் மெல்லப் பெருமூச்சுவிட்டு நிமிர்ந்து, "அன்றைய தினம் அந்த ஜீனாலயத்திலிருந்து அவர் நம்மிடம் ஏதும் சொல்லிக்கொள்ளாமல் பித்துப் பிடித்தவர் போல் எழுந்து ஓடியபோதே இப்படி ஏதாவது ஒரு விபரீதம் நடக்கலாம் என்று நினைத்தேன். அது சரியாகவே ஆகிவிட்டது" என்றார் வேதனைக் கமறலான குரலில்.

முத்தரையர் இதைக் கேட்டு வெறுப்புடன் முகத்தைச் சுளித்தார். "ஹூம்! கோழையிலும் கோழை, கடைந்தெடுத்த கோழை அவர். கேவலம் தம் பெண்ணுக்காக மாபெரும் இலட்சியங்களைக் கைவிட்டு எதிரிகளிடம் போய்ச் சரணாகதி அடைய எப்படித்தான் மனம் துணிந்தாரோ? கடமை, இலட்சியம், தியாகம் என்றெல்லாம் சிலர் வாய் வீரம் பேசிக் கொண்டு பிரமாதமாகக் காரியமாற்றுவது போல் முன்வருவார்கள்; எதிர்பாராதவிதமாகத் தமது சொந்த நலத்தில் சிறு நஷ்டம் ஏற்பட்டுவிட்டாலோ, அந்தக் கணமே தங்கள் இலட்சிய மூட்டையை இறக்கிப் போட்டுவிட்டு ஓடி ஒளிந்துவிடுவார்கள். அப்படிப்பட்ட சுயநலக்காரர்களில் ஒருவர்தாம் இந்தப் பழையாறைச் சோழரும்."

பர்வாதிமல்லர் தலையை அசைத்துத் துயரப் புன்முறுவல் பூத்தார். "நண்பரே! பிள்ளைப் பாசத்தின் மகா சக்தியை நீங்கள் உணராமல் பேசுகிறீர்கள். பெற்ற மனத்தில் அந்தப் பாசம் முழு வலிமையோடு தலைதூக்கிவிட்டால் எந்த இலட்சியத்தாலும் அதைத் தடுத்து நிறுத்த இயலாது. அதிலும் ஓர் ஆண் பிள்ளையைப் பெற்ற தந்தையின் பாசத்தைவிடப் பெண் பிள்ளையைப் பெற்ற தந்தையின் பாசமே அதிக சக்தி வாய்ந்தது. சோழ இளவரசன் என்று ஒருவன் இருந்து, அவனைச் சளுக்கிய விநயாதித்தன் கடத்திச் சென்றிருந்தால் பழையாறைச் சோழர் இந்த அளவுக்கு மனம் பேதலித்து இருக்கமாட்டார். அவனைக் கண்ணெதிரே குத்திக் கொன்றிருந்தாலும் அவர் வருந்தியிருக்க மாட்டார். ஆனால்

கடத்திச் செல்லப்பட்டவளோ அவருடைய ஒரே மகள்; அவரது மானம், மரியாதை, கௌரவம், குலப்பெருமை ஆகிய அனைத்தின் சின்னமாகவும், அவற்றைப் பூட்டி வைத்துக் காப்பாற்றும் பொக்கிஷமாகவும் விளங்கியவள். எனவேதான் அவளுக்காக அவர் தம்மை அந்த அளவுக்குத் தாழ்த்திக் கொள்ளத் துணிந்திருக்கிறார். எந்த ஓர் ஆண் மகனும் தனக்குரிய மானத்தைத் தன்னிடமே வைத்திருப்பதில்லை; தன் தாயிடமோ, தாரத்திடமோ, மகளிடமோதான் அதை ஒப்படைத்து வைத்திருக்கிறான். அதனாலேயே அவர்களுக்கு, அல்லது அவர்களால் ஏற்படும் எத்தகைய மானபங்கத்தையும் அவனால் எள்ளளவும் சகித்துக்கொள்ள முடிவதில்லை. இந்த மாபெரும் இயற்கை விதிக்குப் பழையாறைச் சோழர் மட்டும் எப்படி விலக்காகி விடுவார்?"

வெறுப்புடன் முகத்தைச் சுளித்து வேகமாகத் தலையை ஆட்டிய முத்தரையர், "என்ன இருந்தாலும் இதைச் சரி என்று ஏற்க என்னால் இயலாது. ஏனென்றால், தேசத்தின் மானத்தைவிடத் தன் பெண்ணின் மானமே பெரிது என்று எந்த தேசபக்த வீரனும் நினைக்கமாட்டான்" என்று குரோத குரலில் கூறிக்கொண்டே அங்கிருந்து புறப்படத் திரும்பினார்.

"சந்திரலேகைச் சிற்றரசர் மீண்டும் பழையாறைச் சோழரின்மேல் தவறான முடிவையே எடுக்க ஆரம்பித்து விட்டாரே!" என்று வருத்தம் தோய்ந்த புன்சிரிப்புடன் கரகரத்தார் பரவாதிமல்லர்.

"அப்படியில்லை, கலைஞரே! அதற்கெல்லாம் அவர் இடம் வைக்காமல் தம்மைப்பற்றித் தெளிவாகவே சொல்லி விட்டுப் போய்விட்டார். நீங்கள்தாம் அதை மறந்து பேசுகிறீர்கள்."

"நண்பர் எதை எனக்கு நினைவுபடுத்துகிறார்?"

"அந்த ஜினாலயத்தில் பழையாறைச் சோழர் கடைசி யாகச் சொன்னதை மறந்துவிட்டீர்கள் போலிருக்கிறது! பல்லவ மன்னர் ஒரு துரோகி என்றும், அவரைத்தான் முதலில்

ஒழிக்கவேண்டும் என்றும் அவர் சொல்லவில்லையா? அப்படிச் சொன்னவருக்கு நான் எவ்வாறு இனி நண்பனாக இருக்க முடியும்?"

பரவாதிமல்லர் இதற்குப் பதில் ஏதும் சொல்லாமல் வாயடைத்துப் போனார். பிறகு ஒருவாறு தம்மைச் சமாளித்துக்கொண்டு, "ஓ!... அதைச் சொல்கிறீர்களா? அவருடைய நிலையில் வேறு யார் இருந்தாலும் அப்படித் தான் சொல்லியிருப்பார் என்பது என் தாழ்மையான அபிப் பிராயம்!" என்றார்.

தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு சற்று நேரம் மௌனமாயிருந்த முத்தரையர், "கலைஞரே! ஆந்திர இளவரசி உத்தமசீலியை நம் பல்லவ மன்னர் காதலிக்கிறார் என்று பழையாறைச் சோழர் சொன்னாரே, அது உண்மையாக இருக்குமா?'' என்று இரகசியக் குரலில் வினவினார்.

"கடுகளவு கற்பனையும் கலவாத உண்மை அது!" என்று இளநகையுடன் கூறினார் பரவாதிமல்லர். "ஆம், அன்பரே! ஆந்திர இளவரசி என் இல்லத்தில் வந்து தங்கியிருந்தபோதே அந்தக் காதல் அரும்பிவிட்டது என்பதை நான் அறிவேன். அதனால்தான் பழையாறைச் சோழர் அவ்விஷயத்தை நம்மிடம் தெரிவித்தபோது நான் சிறிதும் ஆச்சரியப்பட வில்லை."

"அப்படியானால், பழையாறைச் சோழர் நினைப்பது போல் இந்தக் காதலால் பல்லவ நாட்டின் விடுதலை முயற்சி பாழ்பட்டுவிட்டது என்பதும் சரிதானா?"

"நிச்சயமாக நான் அவ்வாறு நினைக்கவில்லை. என்னைக் கேட்டால், "பல்லவ நாட்டின் மகோன்னத எழுச்சிக்கு அது ஒரு சுப சூசகம்' என்றே சொல்வேன்."

"ஆந்திர இளவரசியைச் சளுக்கியர் தம் எதிரியாகப் பாவிக்கத் தொடங்கியிருப்பதால் இப்படிச் சொல்கிறீர்களா கலைஞரே?"

"ஆமாம்; இந்த எதிர்பாராத காதல் அவர்களுக்கு ஒரு பேரிடி என்பதில் ஐயமில்லை. இதை உணர்த்துதான் ஆந்திர இளவரசியைப் பழி தீர்க்க முயன்று வருகிறான் சளுக்கி வில்வேலி."

"அவ்வாறானால் பரமேசுவரவர்மர் இதையெல்லாம் முன்கூட்டியே திட்டமிட்டுத் தம் சொந்த நலத்துக்காகவே ஆந்திர இளவரசியைக் காதலிக்க முற்பட்டிருக்கிறார் என்று சொல்லுங்கள் ?"

"அப்படி நினைப்பது பல்லவ மன்னரை மட்டுமல்ல, அவருடைய பரிசுத்தமான காதலையும் நாம் அவமதிப்பது போல் ஆகிவிடும். ஏனென்றால், எந்த ஒரு சிறு நலத்துக் காகவும் அவர் யாரையும் ஏமாற்றக் கனவிலும் கருதாதவர்."

தலையை மேலுங் கீழும் ஆட்டியவாறு சிறிது நேரம் பேசாதிருந்த முத்தரையர், "கலைஞரே! எனக்கொரு சந்தேகம்..." என்று இழுத்தார்.

பரவாதிமல்லர் அவரைப் புன்முறுவலுடன் ஏறிட்டு நோக்கினார்.

"சளுக்கியத் தளபதி வில்வேலி ஆந்திர இளவரசியைப் பழி வாங்கும் எண்ணத்தோடு நமது அரிவாரணத்தின்மீது ஏற்றி அனுப்பியதாகவும், அந்த ஆபத்திலிருந்து அவளைப் பரமேசுவர வர்மர் காப்பாற்றி அவளுடன் காதல் உரையாடிக் கொண்டிருந்ததைத் தாம் பார்த்ததாகவும் பழையாறைச் சோழர் நம்மிடம் சொன்னார். பிறகு ஆந்திர இளவரசி தங்கள் இல்லத்தில் தனியே வந்து நுழைந்ததாகவும், அப்போது சளுக்கிய வீரர்கள் அந்த இல்லத்தை வளைத்துச் சூழ்ந்து கொண்டதாகவும் இளங்காரிக்குடையான் என்னிடம் கூறினான். இவ்விரண்டு தகவல்களையும் தொடர்புபடுத்திப் பார்க்கும்போது ஏதோ ஒரு விபரீத பயம் என் மனத்தில் படர்வதுபோல் இருக்கிறது..."

"நண்பரின் பயத்துக்குக் காரணம் என்ன? இரகசியப் படையணி திரட்டுமாறு தங்களிடம் சொல்லிச் சென்ற

பல்லவ மன்னர் இன்னமும் தங்களை வந்து சந்திக்கவில்லை என்பதா?”

“ஆம், கலைஞரே! அவர் கட்டளைப்படி இதுவரை ஆயிரம் பல்லவ வீரர்களைத் திரட்டிக்கொண்டு போய் என்னுடைய சந்திரலேகை அரண்மனைக் கோட்டையில் இரகசியமாக நிறுத்தி வைத்துவிட்டு அவரைச் சந்திப்பதற் காகப் பல இடங்களிலும் சுற்றியலைந்து கொண்டிருக்கிறேன். ஆனால் அவர் இருக்கும் இடமே தெரியவில்லை.”

“இதுபற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், நண்பரே?”

“ஆந்திர இளவரசியினிடம் தம் மனத்தைப் பறி கொடுத்துவிட்ட பரமேசுவரவர்மர், சளுக்கிய வீரர்களால் தங்கள் இல்லத்திலே அவள் சிறைப் படுத்தப்பட்டுவிட்டாள் என்னும் சேதி அறிந்து, அவளைக் காப்பாற்ற முடியாத நிலையில் தாம் இருப்பதால் மனம் உடைந்து ஏதேனும் விபரீத முடிவுக்குத் தம்மை உட்படுத்திக் கொண்டிருப்பாரோ என்று...”

முத்தரையர் இவ்வாறு சொல்லி முடிப்பதற்குள் பெரிதும் பரபரப்படைந்த பரவாதிமல்லர், “ஓ!... அப்படியும் நடக்கக் கூடுமா?” என்று திக்கித் திணறிக் குழறினார். பிறகு தம்மையும் மீறிய ஒரு துடிப்புடன் நிமிர்ந்து, “அன்பரே! தயவு செய்து எனக்கு விடை கொடுங்கள். இப்போதே நான் பெருவளநல்லூருக்குப் புறப்பட வேண்டும்” என்றவாறு அவருடைய பதிலுக்கும் காத்திராமல் அங்கிருந்து வேகமாக நடக்கலானார்.

“சந்திரலேகைச் சிற்றரசர் அவர்களுக்குப் பணிவன் பான வணக்கம் உரித்தாகும்.”

வற்றிய ஓலைச் சுருளென வதங்கித் துவண்டு நின்ற முத்தரையர் திடுக்குற்றுப் பின்னால் திரும்பினார். அங்கே, ஆந்திர இளவரசியின் சிவிகைதூக்கியான நாகோதரன் கை கட்டி நின்றுகொண்டிருந்தான்.

"என் பெயர் நாகோதரன். ஆந்திர இளவரசியாரின் சிவிகை தூக்கி நான். ஆனால் இப்போது பல்லவ மாமன்னரின் அந்தரங்கத் தூதுவனாக—அவர் சொல்லி யனுப்பிய ஒரு நற்சேதியுடன்—தங்களைக் காண வந்திருக் கிறேன்."

வியப்பால் கண்கள் அகல விரிய அவனை விழித்துப் பார்த்தார் முத்தரையர்.

"ஆதிக்க வெறி கொண்ட சளுக்கியரை அழித்து ஒழிப்பதற்காக ஆந்திர மன்னரிடம் படை உதவி பெற்றுப் போர்க் கோலத்தோடு புறப்பட்டு வந்துகொண்டிருக்கிறார் பல்லவ மாமன்னர் பரமேசுவரவர்மர்! இந்தச் சேதியைத் தங்களிடம் முன்கூட்டி அறிவிக்கவே என்னை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார் அவர்."

தொய்ந்து துவண்டு நின்ற முத்தரையருக்கு எங்கிருந்து தான் அத்தனை ஆவேசக் குதூகலம் அலைமோதி வந்ததோ தெரியவில்லை. மலைபோன்ற தம் உடலை உலுக்கிக் குலுக்கி ஓங்கி நிமிர்ந்து, "வாழ்க, பரமேசுவரவர்மர்! ஓங்குக, பல்லவ நாடு!" என்று மகிழ்ச்சிக் கர்ஜனை இட்டுக் கொண்டே பாய்ந்தோடிப் போய் அந்த எளிய சிவிகை தூக்கியான நாதோரனை அப்படியே சேர்த்து அணைத்துக் கட்டிக் கொண்டார்.

அதே சமயம், "வாழ்க, சோழ இளவரசி! வாழ்க, அநந்தமதி அம்மையின் தியாகம்!" என்று இன்னொரு பெருங் குரல் எழுந்து எதிரொலித்தது. ஆச்சரியத்துடன் தலை நிமிர்ந்தார் முத்தரையர்.

பல்லவபுரம் அரண்மனைக்குரிய தனிச் சாலை யொன்றின் பக்கமிருந்து அவரை நோக்கிச் சந்தோஷ ஆரவாரத்துடன் ஓடி வந்தான் இளங்காரிக்குடையான். அவனுக்குப் பின்னால், அன்றொரு நாள் இரவு ஆலம் பாக்கம் ஏரிக் கரையிலே தீப்பந்தத்துடன் வந்து சோழ இளவரசியிடம்

பேசிய அந்த முதியவனும் வெற்றிக் களிப்போடு வந்து கொண்டிருந்தான்.

"சந்திரலேகைச் சிற்றரசே! நம் சோழ இளவரசியும் என் அன்னை அநந்தமதியும் சேர்ந்து, பல்லவபுரம் அரண்மனையில் இத்தனை காலமும் கொட்டமடித்துக்கொண்டிருந்த சளுக்கிய அரக்கர்களை விரட்டியடித்துவிட்டு, அங்கே சிறைப்பட்டிருந்த மகாராணி காடவன்மாதேவியை மீட்டு விட்டனர்!" என்று மகிழ்ச்சிப் பரவசத்தோடு கூறிய இளங் காரிக்குடையான் சட்டென முகத்தைப் பொத்திக் கொண்டு, "ஆனால், பிரபு!...என் அன்னை அநந்தமதி?... ஐயோ, அதை நான் எப்படிச் சொல்வேன்?" என்று மேலே பேச முடியாமல் விம்மிப் பொருமி அழலானான்.

# 102

## புழுதித் தேர்

இருளும் ஒளியும் போர் நிகழ்த்தி உஷையரசிக்கு முடிசூட்டத் தொடங்கிய விடியற்சாம நேரம்.

கால் சோர்ந்து பின்னலிடப் பெருவளநல்லூரை வந்தடைந்த சேதியக் கலைஞர், தம் இல்லம் இருந்த இடத்தில் ஏதோ ஒரு பூகம்பக் காட்சியைக் கண்டவர் போல் நடுங்கிப் பதறி நின்றார். நிலைகொள்ளாமல் சுழன்ற அவரது கண்கள் நோக்கும் திறனை இழந்து மங்கிச் செருகலிட்டன. மார்பை இரு கைகளாலும் அழுத்திப் பிடித்தவாறு தள்ளாடித் தள்ளாடி நடந்து போய் ஒரு மரத்தின் பின்னால் சாய்ந்து நின்ற அவர் சற்று நேரம் கழித்துத் தம் கண்களைக் கசக்கி விட்டுக்கொண்டு மெல்லத் தலைநிமிர்ந்து நோக்கினார்.

எழிலும் அமைதியும் நிறைந்து சாந்தி தேவனின் சயனக் கிருகம்போல் விளங்கி வந்த அவரது இல்லம் இப்போது இருக்குமிடமே தெரியவில்லை. அது இருந்த இடத்தில் வெறும் கற்களும், தூண்களும், மரப் பலகைகளும் தாம் தாறுமாறாகச் சிதறிக் கிடந்தன. அவற்றையும் அங்கே அந்த ரூபத்தில் விட்டு வைக்க விரும்பாதவர்கள்போல் கோபாவேசத்துடன் நொறுக்கிப் பொடிப்பொடியாக்கிக் கொண்டிருந்தனர் சளுக்கிய வீரர்கள்.

நெஞ்சைப் பஞ்சாக்கும் இந்தக் காட்சியைக் கண்டு நிலைகுலைந்துபோன சேதியக் கலைஞரின் மனத்தில் வேதனை மயமான கேள்வியொன்று எழுந்தது.

'பல்லவ மாமன்னர் பரமேசுவரவர்மரின் உள்ளங் கவர்ந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி எங்கே? இந்த இல்லத்தில் தானே அவள் சளுக்கியரால் சிறைப் பிடிக்கப்பட்டதாக முத்தரையர் சொன்னார்? இவ்வழகிய இல்லத்தின் நிலையே இப்படி என்றால், அந்த எழிலரசியின் கதி என்னவாகி யிருக்கும்?'

துக்கம் தாளமாட்டாமல் பொருமிக் கண்ணீர் வடித்த பரவாதிமல்லர் ஏதோ ஒரு பயங்கர ஒலி கேட்டுப் பரபரப் புடன் பார்வையை நிமிர்த்தினார். அவருடைய இல்லத்தை இடித்துத் தரைமட்டமாக்கிக் கொண்டிருந்த சளுக்கிய வீரர்கள் ஏனோ நாலாபுறமும் தலைதெறிக்க ஓடிக் கொண் டிருந்தனர்.

அதைக் கண்டு ஒன்றும் புரியாதவராய் மரத்தின் மறைவிலிருந்து வெளியே வந்த பரவாதிமல்லர் மீண்டும் தம் பார்வையைச் சுற்றுமுற்றும் ஓட்டினார்.

மிகத் தொலைதூரத்துக்கு அப்பால் மதம் கொண்ட யானை ஒன்று தன் துதிக்கையை மேலுயர்த்திப் பயங்கரப் பிளிறலுடன் உருண்டோடி வருவது தெரிந்தது. அந்த யானைக்குப் பின்னால் வானுக்கும் பூமிக்குமாக மேலெழும்பிய புழுதித் தேர் மெல்ல மெல்ல நகர்ந்து வருவதும் புலனாகியது. அப்புழுதித் தேரைப் பொன்மலையாக்குவது போல் அப்போதுதான் கீழ்த்திசையைத் துரியத்தில் செங்கதிர்ச் சூரியன் தலை தூக்கி நிமிர்ந்தது.

# 103

## வெற்றிக் கூத்து

தேரொலிக்க, மா ஒலிக்கத் திரை ஒலிக்கும் புகழ் நகராம் காஞ்சி அன்று வெற்றித் திருக்கோலத்துடன் விளங்கியது. எங்கும் புதுப்பொலிவு! எதிலும் புதுத்தென்பு! புதிய உற்சாகம்!

நீலக்கடலின் நடுவே எழும்பி நிற்கும் வெள்ளிப் பனி மலைபோல் எழிலும் கம்பீரமுமாகத் துலங்கிய பல்லவ அரண் மனையின் கோபுரக் குடுமியில், நான்கு ஆண்டுகளுக்குப் பின் ஏற்றப்பெற்ற நந்திக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது. அந்த எழிலார்ந்த அரண்மனையின் எட்டுத் திக்கும், முகில் முட்ட உயர்ந்து நின்ற தெய்வத் திருக் கோயில்கள் கடற் பரப்பிலே முளைத்தெழுந்த மரகதக் குன்றுகள் போல் காட்சியளித்தன. இவற்றினிடையே அலங்காரப் பொலிவோடு அமைந்த மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும், கலா மண்டபங்களும், கவின்பெறு இல்லங்களும், அவ்விரிகடற் பரப்பில் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தப் பெற்ற நாவாய்கள்போல் தோற்றமளித்தன.

வானக் கூரைமீது ஏறி நின்று பார்க்குங்கால் இப்படித் தோற்றம் தந்த காஞ்சி மாநகரின் உள்ளே இறங்கிப் பார்த்தாலோ?—

மகர தோரணங்களாலும், மாவிலைச் சரங்களாலும், மலர் வளையங்களாலும், வண்ணக் கோலங்களாலும் அலங் கரிக்கப்பெற்ற விசாலமான வீதிகளில் நந்திக் கொடிகளை ஏந்தி வெற்றிக் கோஷங்களிட்டவாறு அரண்மனைக்

கோட்டைச் சதுக்கத்தை நோக்கி வீரநடை போட்டுச் சாரி சாரியாகச் சென்று கொண்டிருந்தனர் பல்லவ—ஆந்திரப் படை வீரர்கள்! வீதிகளின் இரு மருங்கிலும் திரண்டிருந்த ஆடவர் கூட்டம் மகிழ்ச்சியாரவாரத்துடன் அவர்களை வரவேற்றுப் பொன்னும் மணியும் புத்தாடைகளும் பரிசளித்து வாழ்த்துக் கூறியது. மாட மாளிகைகளின் முகப்பு வாயில் களிலும், உப்பரிகைகளின் சாளரங்களிலுமாகக் குழுமி நின்ற பெண்டிர் கூட்டம் நறுமண மலர்களையும் வண்ண வாசனைப் பொடிகளையும் வாரி இறைத்து இனிப்புப் பண்டங்களையும் இனிய மதுபானங்களையும் வழங்கி உபசரித்தது.

வெற்றி விழா ஊர்வலத்தினிடையே விதவிதமான கேளிக்கைக் களியாட்டங்களும் நடைபெற்றன. வீதிகளில் ஆங்காங்கே நிர்மாணிக்கப்பட்டிருந்த அழகிய மேடைகளில் சிலர் வெற்றிப்பண் இசைத்துக்கொண்டிருந்தனர்; மற்றும் சிலர் நடன விருந்து அளித்தனர்; இன்னும் சிலர் போர்க்கள நிகழ்ச்சிகளைக் கூத்தாக்கி நடித்துக் காண்பித்தனர்.

இந்தக் கண்கொள்ளாக் காட்சிகளைக் காணவேண்டு மென்னும் ஆவலால்தானோ என்னவோ தன் செக்கர் நிறச் சட்டையை வெகு சீக்கிரமே உரித்துப் போட்டுத் தலை தூக்கிய காலை இளஞ்சூரியன், வெள்ளிக் கவசம் புனைந்து வெதுவெதுப்பை வாரிப் பூசிக்கொண்டு வான் விசும்பில் வேகமாக ஏறத் தொடங்கியது.

உற்சாகத்தின் கரை கடந்து, குதூகலத்தின் எல்லை மீறி மகிழ்ச்சியாரவாரமிட்டவாறு போய்க் கொண்டிருந்த படை வீரர் ஊர்வலத்தில் திடீரென ஒரு கலகலப்பு. அந்த வெற்றி ஊர்வலத்தில் கலந்துகொண்டு சென்ற மக்கள் கூட்டத்தில் ஒரு பகுதி அவ்விசாலான இராஜ வீதியின் முச்சந்தியொன்றை நோக்கி அலைமோதிப் பாய்ந்தது.

அந்த முச்சந்தியின் நடுவே ஒரு கூத்து மேடை போடப் பெற்றிருக்க, அதில் அப்போதுதான் நிகழ்ச்சி ஆரம்பமாவதற்கு

அறிகுறியாக தண்ணுமை, தமருகம், கொக்கரி, உடுக்கை முதலான இசைக் கருவிகளின் முழக்க ஒலி கேட்டது.

மேடையைச் சுற்றி மக்கள் கூட்டம் வந்து மொய்த்தது. சற்றைக்கெல்லாம் அந்த மேடைமீது மூன்று பேர் தோன்றினர். இசை முழக்கம் ஓய்ந்து அமைதி நிலவியது. ஆவலால் விரிந்த ஆயிரமாயிரம் கண்கள் மேடையில் தோன்றிய அம்மூன்று நடிகர்களையும் இமைக்காமல் நோக்கின.

ஒருவன் பல்லவ வீரனைப்போல் வேடம் புனைந்திருந் தான். இன்னொருவன் பட்டயப் புலவனைப்போல் காட்சி யளித்தான். இவ்விருவருக்கும் நடுவில் நின்ற மூன்றாமவன், கிழிந்து கந்தலான ஆடையைப் போர்த்திக் கொண்டு செம்புள்ளி கரும்புள்ளி குத்தப்பெற்ற மண் பானையொன்றை முகம் தெரியாதவாறு தலையில் கவிழ்த்துக் கொண்டு கூனிக் குறுகி நின்றிருந்தான். அவன் கையில் கொடிக்கம்பு ஒன்று இருந்தது. அதிலே அழுக்கேறி நைந்த சளுக்கிய வராகக் கொடி தலை கீழாகக் கட்டப்பட்டுப் புழுதியில் புரண்டு கொண்டிருந்தது.

தண்ணுமையும் தமருகமும் சேர்ந்த ஓர் இசைக் கலவை ஒலி—

"அகோ வாரும், வீரரே! ஆதி பகவனின் அருளால் உமக்குச் சகல மங்களமும் உண்டாகட்டும்!" — தொண்டை யைக் கனைத்துக்கொண்டு பட்டயப் புலவன் புன்முறுவ லோடு இவ்வாறு பேச்சை ஆரம்பித்தான்.

"புலவரின் வாழ்த்துக்களை நன்றியுடன் ஏற்கிறேன்." —பல்லவ வீரன் தலைகுனிந்து வணங்கினான்.

"உம்மைப் பார்த்தால் ஏதோ போர் முனையிலிருந்து நேரே இங்கு வந்திருப்பதுபோலல்லவா தோன்றுகிறது?" — புருவங்களை மேலுயர்த்திக்கொண்டு வினவினான் பட்டயப் புலவன்.

"விந்தையான கேள்வி! அடுத்தபடியாகப் போர் எங்கே நிகழ்ந்தது என்றுகூடக் கேட்பீர் போலும்!" —குறும்பாக நகைத்தான் பல்லவ வீரனைப்போல் வேடமணிந்தவன்.

"ஆம், வீரனே! அதுவும் நான் அடுத்துக் கேட்கவிருக்கும் கேள்வியே."

"அப்படியானால் பட்டயப் புலவர் கடந்த ஆறு மாதங்களாகச் சோம பான மொந்தையிலேயே மூழ்கி இவ்வுலகப் பிரக்ஞையை இழந்திருந்தாரோ?"

ஜனக் கூட்டத்திலிருந்து பெருத்தசிரிப்பொலி எழுந்தது.

"என்ன? என்ன?" — கோபத்துடன் திரும்பினான் புலவன்.

"ஆம், ஐயா! புவனமே கண்டறியாத போர் ஒன்று நம் நாட்டில் நடந்து முடிந்திருப்பதுகூட உமக்குத் தெரியாமல் இருக்கிறதே? இவ்வளவு பெரிய நிகழ்ச்சியைத் தெரிந்து கொள்ளாமல் இத்தனை காலமும் எங்கே தூங்கிக் கொண்டிருந்தீர்? கணிகையர் வீதிக்குப் போய் அங்கிருந்து திரும்பி வர வழி தெரியாமல் திண்டாடினீரா? அல்லது மதுக் கடையில் நுழைந்து அங்கேயே யோக நிஷ்டையில் ஆழ்ந்து கிடந்தீரா? அல்லது கவிதா வரம் வேண்டி ககனத்தை அண்ணாந்து பார்த்துக் காலத்தை ஓட்டினீரா?"

ஜனங்கள் கை தட்டி ஆரவாரித்தனர். பட்டயப் புலவனும் கடகடவெனச் சிரித்தான். "ஓ,... புரிந்து கொண்டேன்; புரிந்துகொண்டேன். பல்லவ வீரர் பெருவள நல்லூர் போர்க்களத்திலிருந்து நேரே இங்கு வந்திருக்கிறார்; அதனால்தான் இத்தனை மிடுக்கும் செருக்குமாகப் பேசுகிறார்."

"புலவருக்கு இப்போதுதான் போதை தெளிந்திருக் கிறதோ?" —குத்தலாகக் கேட்டான் பல்லவ வீரன்.

"இல்லை, இல்லை. என் ஐயம் ஒன்றைத் தீர்த்துக் கொள்ளவே அப்படி ஒரு கேள்வியை உம்மிடம் கடாவினேன்."

"புலவருக்கு என்மீது என்ன சந்தேகமோ?"

"பெருவளநல்லூர்ப் போர்க்களத்தில் நான் ஒரு வேடிக்கையான காட்சியைப் பார்த்தேன். அதாவது, பல்லவ வீரர்களின் ஆவேசத் தாக்குதலைச் சமாளிக்க முடியாத சளுக்கிய வீரர்களில் சிலர் மரணபயம் கொண்டவர்களாய்க் குப்புற விழுந்து படுத்துத் தம் சகாக்களின் பிணங்களை வாரித் தம்மேல் போட்டுக்கொண்டு செத்தவர்கள்போல் நடித்தார்கள். அந்த மாதிரி உபாயத்தால் நீவிரும் உயிர் பிழைத்து வந்து இங்கே வாய் வீரம் பேசுகிறீரோ என்று சந்தேகித்தேன்."

ஜனக்கூட்டம் இதைக் கேட்டு இடியிடியென்று சிரித்து ஆரவாரம் செய்தது.

"அவ்வாறானால் பட்டயப் புலவரும் போர்க் களத்துக்குப் போயிருந்தாரோ?" —முகத்தைச் சுளித்துக் கொண்டு வினவினான் பல்லவ வீரன்.

"வேடிக்கை பார்க்க நான் போகவில்லை, வீரரே! நம் மாவீர மாமன்னர் பரமேசுவரவர்மரின் தலைமையிலே பல்லவ-ஆந்திரப் படைகள் நிகழ்த்திய வீரமாப் போரை நேரில்கண்டு அதை எதிர்காலத்தின் முதுகில் எழுதி வைக்கத் தான் போனேன்! இதோ, பட்டய சாசனத்துக்காக நான் எழுதிக் கொணர்ந்திருக்கும் அந்தப் போர்க்கள காட்சியின் ஒரு வர்ணனையைக் கேளும்!" —ஜனங்கள் பக்கமாகத் திரும்பி நின்ற புலவன் தன் இடுப்பிலிருந்து ஓர் ஓலை நறுக்கை எடுத்து உரத்த குரலில் படித்தான்: "அத்தியந்தகாமர், குணபாசனர், ஸ்ரீநிதி, ஸ்ரீபரர், தருணாங்குரர், காமராகர், சித்திரமாயர் என்றெல்லாம் விருதுபெயர் கொண்ட பல்லவ மாமன்னர் பரமேசுவரவர்மர் தமது 'அதிசயம்' என்ற புரவியின்மீதும், 'அரிவாரணம்' என்ற யானையின்மீதும் மாறிமாறி அமர்ந்து, பெருவளநல்லூர்ப் போர்க்களத்தில் புயலைப்போல் புகுந்து, சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் பொருது கொள்ளத் தொடங்கியபோது, அவரது கரி, பரி. காலாட்படைகள், அவரைப் பின்தொடர்ந்து வந்து போர் முனையில் குவிந்த

தால் கிளம்பிய புழுதிப்படலம் கதிரவனையே மறைத்து, அதன் ஒளி சந்திரகோட்டைபோல் மங்கியது...”

“ஆகா! அற்புதமான வர்ணனை! மேலே படியுங்கள் புலவரே! மேலே படியுங்கள்!'' என்று உற்சாகமாகக் கூவினார்கள் சுற்றி நின்ற ஜனங்கள்.

பட்டயப் புலவன் குரலை உயர்த்திப் படித்தான்: “பல்லவப் படைகள் எழுப்பியமுரசொலியைச் செவிமடுத்த சளுக்கிய வீரர்கள் இடியோசை கேட்ட நாகம்போல் நடு நடுங்கினர். பல்லவ வீரர்களின் உறையிலிருந்து வெளிப்பட்ட வாட்கள் மின்னல்போல் பளீரிட்டுச் சளுக்கிய வீரர்களின் பார்வையைப் பறித்தன. நமது யானைகள் கார் மேகங்கள் போல் அசைந்து போர் முனையில் முன்னேறியபோது மழைக் காலம் வந்துவிட்டதோ என்னும் பிரமையே உண்டாகியது. நமது போர்ப் பரிகள் அணிவகுத்துச் சென்ற காட்சி கடல் அலைகள் திரண்டு செல்வதுபோல் தோன்றியது. அவற்றி னிடையே யானைகள் புகுந்து குழப்பம் விளைவித்த காட்சி கடலின் பிரளய சூழலை நினைவூட்டியது. அந்தக் கடலி லிருந்து சங்குகள் புறப்பட்டாற்போல் நமது சேனாவீரர்கள் சங்கொலி எழுப்பினர்...”

“பிரமாதம், பிரமாதம்! படியுங்கள், படியுங்கள்!” என்று ஜனக்கூட்டம் சந்தோஷ ஆரவாரம் செய்தது.

பட்டயப் புலவன் உற்சாகமாகப் படிக்கலானான்: “சளுக்கியப் பகைவர்கள் போரிட்டு வீழ்ந்துகிடந்த நிலைமை காண்டா மிருகத்தால் முறிக்கப்பட்ட மரங்களும் செடிகளும் சாய்ந்து கிடப்பதை ஒத்திருந்தது. நம் வீரர்கள் வில்லை வளைத்து அம்புகளை விடுத்தபோது உண்டான ஓசை, காட்டிலே காற்று தடைப்படுங்கால் உண்டாகும் பேரோசை போல் கேட்டது. கரிகள் ஒன்றோடொன்று முட்டி மோதிப் பொருத, அவற்றின் தந்தங்கள் ஒன்றின்மேல் ஒன்று குத்திக் கொண்டு எடுபடாமல் நின்றன. நமது குதிரை வீரர்களின் வாட்கள் எதிரிகளின் வாட்களோடு பின்னிக்

கொண்டுவிடவே அவர்களைத் தம் காலால் எட்டி உதைத்து வீழ்த்தினர். சிலர் தலை மயிரைப் பிடித்து இழுத்துத் தாக்கினர்...”

“ஓகோகோ!” என்று குதூகலக் கும்மாளியிட்டது ஜனக் கூட்டம்.

பட்டயப் புலவன் மேலும் படித்தான்: “வீரர்களின் செந்நீரும், யானைகளின் மதநீரும் நிலத்தில் தோய்ந்து பாய்ந்த காட்சி அந்தப் போர்க் களமெங்கும் மஞ்சள் பூசினாற்போல் தோற்றமளித்தது. சளுக்கியவீரர்களுடையவும், அவர்களது கரி பரிகளுடையவும், தலைகள், கால்கள், கைகள், தொடைகள் முதலானவை வெட்டுண்டு சிதறலாயின. அவற்றிலிருந்து ஆறாகப் பெருக்கெடுத்து இரத்தத்தின்மேல் பாலம் கட்டினாற் போல் இறந்த யானை உடல்களை அடுக்கி அவற்றின்மீது நம் வீரர்கள் ஏறி நின்று போரிட்டனர். அப்போதே நம் பக்கம் விஜயலட்சுமி வெற்றி ஊஞ்சல் கட்டி ஆடத் தொடங்கினாள்...”

“ஆகாகா! அருமையான வர்ணனை!” என்று ஆர்ப்பரித்தது ஜனக் கூட்டம்.

“இன்னும் கேளுங்கள், சபையோரே! வீர சொர்க்கம் புகுந்த நம் வீரர்களின் கரங்களில் வாட்கள் அப்படியப்படியே இறுகியிருந்தன. அவர்கள் போரிட்ட நிலையிலேயே இறந்து கிடந்தார்கள். அவர்களது வீறார்ந்த கண்கள் சிவந்திருந்தன. ஆனால் அவர்கள் அணிந்திருந்த கவச அணிகள் நொறுங்கிப் போய் இருந்தன. வெட்டுண்ட தலைகளும் முண்டங்களும் நம் வீரர்கள் எழுப்பிய முரசொலிக்கு ஏற்பக் கூத்தாடின. இறுதியில் வெற்றி வீரராக நிமிர்ந்து பல்லவ நந்திக் கொடியை விண்ணிலேற்றிப் பறக்கவிட்டார், இரண ரசிகனான விக்கிர மாதித்தனை வென்ற நம் இரண ஜய பரமேசுவரவர்மன்...”

“இரண ஜய பரமேசுவரவர்மர், வாழ்க! பல்லவ நாடு வாழ்க!” என்று விண்ணதிரக் கோஷமிட்டது ஜனக்கூட்டம்.

மேடைமேல் நின்ற பல்லவவீரன் சட்டென்று முன்னால் வந்து, "அது சரி, புலவரே! பல்லவரிடம் தோற்றோடிய சளுக்கிய விக்கிரமாதித்தனைப்பற்றி உமது பட்டய வருணனையில் ஒன்றும் சொல்லவில்லையே?" என்று ஆவலுடன் கேட்டான்.

"ஓ!... அதை விடுவேனா? பல நூறாயிரம் போர் வீரர் களுடனும், பல இலட்சக் கரி பரிகளுடனும் வந்த சளுக்கிய விக்கிரமாதித்தன், போர் முடிவிலே தனியனாய்—தாங்கிப் பிடிக்க ஆளற்றவனாய்—நின்று, இதோ இங்கு நிற்கும் இவனைப்போல் கந்தையைப் போர்த்திக்கொண்டு உயிருக்கு அஞ்சித் தன் நாட்டை நோக்கி ஓடிப்போனான்!"* என்றவாறு அருகில் கந்தலாடை வேடத்திலிருந்தவனைச் சுட்டிக் காட்டினான் பட்டயப் புலவன்.

உடனே, தலையில் பானையைக் கவிழ்த்துக் கொண்டு கந்தலாடையோடு கூனிக் குறுகி நின்றவன் பயந்து நடுங்கி ஓடி ஒளிபவன்போல் மேடையில் அங்குமிங்குமாக ஓடி நடிக்கலானான்.

இதைக் கண்டு மகிழ்ச்சி ஆரவாரம் செய்த ஜனக் கூட்டம், "ஒழிந்தான் விக்கிரமாதித்தன்! அழிந்தது சளுக்கியர் ஆதிக்கம்!" என்று முழக்கமிட்டுக்கொண்டே அந்தக் கூத்து மேடையைவிட்டுக் கலைந்து சென்றது.

---

* பெருவளநல்லூரில் பல்லவ பரமேசுவரவர்மனுக்கும் சளுக்கிய விக்கிரமாதித்தனுக்கும் நடந்த போரைப்பற்றிக் கூரம் பட்டயம் கூறும் சேதிகளைக்கொண்டே மேலேயுள்ள உரையாடல்கள் அமைக்கப்பட்டிருக் கின்றன.

# 104

## இன்பமே துன்பம்!

"துங்கக் கரிமுகத்துத் தூமணியே, மாமணியே! அன்றொரு நாள் உமது சந்நிதானத்தில் வந்து வெற்றி வரம் வேண்டி நின்றேன். அப்படி நான் வேண்டிய வரத்தை அருள் கூர்ந்து எனக்கு அளித்துவிட்டீர். அதற்கு நன்றி செலுத்தவே இதோ, உமது பாதார விந்தத்தின்முன் தெண்டனிட்டு நிற்கிறேன். எனது நெஞ்சத்து நன்றி உணர்ச்சியை ஏற்றுக் கொண்டு, இப்போது நான் வேண்டும் இன்னொரு வரத்தை யும் எனக்கு அளித்தருளும் கணநாதா! என்னுடைய உரிமைக்காகப் போர் நடத்தி அதில் வெற்றி பெற்றவனாகத் தான் இங்கு வந்திருக்கிறேன். ஆனால் அந்த வெற்றி என்மனத் திலே எள்ளளவு மகிழ்ச்சியையும் ஏற்படுத்தவில்லை. மாறாக, மலையளவு துன்பத்தையே அது வளர்த்து விட்டிருக்கிறது. ஆம், ஐயனே! போர் மிகக் கொடுமையானது. ஆயிரமாயிரம் மனித உயிர்களை அது அநியாயமாகப் பலிவாங்கிக் கொள்கிறது. மண்ணாசை கொண்ட ஒரு சிலருக்காக, வாழப் பிறந்த பல்லாயிரம் மக்கள் வீணே போரிட்டு மாய்கிறார்கள். இந்த அதர்மச் செயல் உலகிலிருந்து அடியோடு ஒழிய வேண்டும். என்னுடைய ஆட்சிக் காலத்திலாவது—என்னால் என் நாட்டின் மண்ணிலே—இந்த அதர்மம் இனி நிகழாதபடி அருள் செய்யும் அத்தனே! இத்துடன், இன்று என்னிடம் தோற்றோடிவிட்ட சளுக்கிய விக்கிரமாதித்தனுக்கும் இதே வரத்தை அளித்து, அவன் மனத்திலும் நல்லொளியை ஏற்றியருளும் உமைபாலா! அவனுக்காகப் போரிட வந்து என்னால் அழிக்கப்பட்ட பல நூறு சளுக்கிய வீரர்களின்

ஆத்மாக்களும் உமது ஐயனின் திருவடி நிழலில் சாந்தி பெற கருணை புரியும் கணநாதா!”

சென்னி வாய்க்கால் கரையோரமிருந்த அந்தப் பழமை யான சிவன் கோயிலில் எழுந்தருளியிருந்த வாதாபி கணபதியின் சந்நிதியிலே நின்று மனமுருகிக் கண்ணீர் சோர இவ்வாறு வேண்டிய பரமேசுவரவர்மன் நெடுநேர தியானத் துக்குப்பின் அங்கிருந்து வெளியே வந்தான்.

நான்கு ஆண்டுக் காலமாய்ச் சாளுக்கியரின் ஆதிக்கத் தில் அடிமைப்பட்டுக் கிடந்த பல்லவ நாட்டை மீட்கும் போரில் மகத்தான வெற்றியடைந்திருக்கும் அவனிடம், அந்த வெற்றிக்கான மகிழ்ச்சி சிறிதளவும் இப்போது தென்பட வில்லை. இன்னமும் ஏதோ ஒரு மாபெரும் பொருளை இழந்து விட்ட துயரமே அவன் முகத்தில் நிழலாடிக் கொண்டிருந்தது.

ஆமாம்; ஆந்திர இளவரசி உத்தமசீலியைப்பற்றிய எண்ணமே அவனை அத்தகைய துயரத்தில் ஆழ்த்தி வைத்திருந்தது. அந்தத் துயரமே அவன் அடைந்த வெற்றியின் மகிழ்ச்சியையெல்லாம் எரித்துச் சாம்பலாக்கிக் கொண்டிருந்தது. அன்றொருநாள் இதே இடத்தில் அவளை மதங்கொண்ட அரிவாரணத்திடமிருந்து காப்பாற்றிய நினைவும் இப்போது அவன் மனத்தில் வந்து மோதவே அவனது துயரம் பன்மடங்காகப் பெருகியது.

‘அவள் கதி என்ன ஆகியிருக்குமோ! சேதியக் கலைஞரின் இல்லத்தில் சிக்கிக்கொண்ட அவளுக்குச் சளுக்கியக் கொடுங்கோலர்கள் எத்தகைய தண்டனை அளித்தார்களோ! படைகளை நடத்திக்கொண்டு நான் பெரு வளநல்லூருக்கு வரும் போதே அந்த இல்லம் இடிந்து தகர்ந்து தரைமட்டமாகக் கிடந்ததே! அப்படியானால் அவளை அந்த இல்லத்தில் பூட்டி வைத்தே இடித்துத் தகர்த்துவிட்டார் களா?...ஐயோ, சேதியக் கலைஞரும் என்ன ஆனார் என்று தெரியவில்லையே! அவர் எங்கு போனார் என்ற தகவலும் கிடைக்கவில்லையே!’

தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்து சென்ற பரமேசுவரவர்மன் சற்றுத் தொலைவில் நிறுத்தி வைத்திருந்த தனது 'அதிசயம்' என்னும் குதிரைமீது சோர்வுடன் ஏறி அமர்ந்து பெருவள நல்லூரை நோக்கி அதைச் செலுத்தலானான்.

மாலைச் சூரியன் மேலை வான் சரிவில் இறங்கி மஞ்சள் ஒளி பரவத் தொடங்கிய நேரத்தில் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லம் இருந்த இடத்தை அடைந்த அவன், அங்கே கிடந்த ஓர் உடைந்த தூணின்மேல் போய் உட்கார்ந்து சுற்றிலும் தன் பார்வையை ஓட்டினான்.

நேற்றுவரை பயங்கர யுத்த களமாக விளங்கிய அந்த இடம் இப்போது ஒரு மாபெரும் மயானம்போல் வெறிச் சோடிக் காணப்பட்டது. யுத்த அரக்கனின் கோர தாண்டவச் சின்னங்கள் அங்கிருந்து சிறிதும் மறையாமலே இருந்தன. ஆனால் அந்தச் சிற்றாறு மட்டும் இப்போது அமைதியாக ஓடிக் கொண்டிருந்தது.

அப்படி ஓடிய சிற்றாற்றையும், அதன் கரையில் மொட்டையாக நின்ற அந்தச் சவுக்கை மரத்தையுமே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மனின் கண்கள் நீர்ப் போர்வையிட்டு மங்கின.

"என் அன்புக் கோமகளே! எனது ஆத்மாவின் பொற் சுடரே! இனி உன்னை நான் இந்த ஜன்மத்தில் பார்க்கவே மாட்டேனா? இந்தப் பாவிக்கு அந்தப் பாக்கியம் கிடைக்கவே கிடைக்காதா?" என்று கம்மிக் கரைந்த குரலில் புலம்பிக் கொண்டே அங்கிருந்து தட்டுத் தடுமாறி எழுந்த அவன், எங்கோ யாரோ கலகலவெனச் சிரித்த ஒலி கேட்டு அதிர்ச்சியுற்றவனாய்த் திரும்பினான்.

# 105

## சிந்துூர மோகினி

"வெற்றிச் செல்வரே, வருக! வருக! பகைவென்ற பல்லவக் காவலரே, வருக! வருக!"

திகைப்புற்று எழுந்து நின்ற பரமேசுவரவர்மனின் செவிகளில் தேன் வந்து பாய்ந்தாற்போல் இந்த இனிய சொற்கள் இறங்கவே, தன்னைமீறிய ஒரு குதூகலத் திணறலிட்டுத் திரும்பினான்.

அங்கே, அந்தச் சிற்றாற்றங்கரையின் மணற்சரிவில் வளர்ந்தோங்கியிருந்த சவுக்கை மரத்தின் நீண்ட நிழற் கோட்டில், பிரம்ம சிருஷ்டியின் கரைகடந்த எழில் வடிவத்தினளாய் நின்றுகொண்டிருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி!

தேவ தரிசனம் கண்ட பாமர பக்தனைப்போல் பரவசத் திகிலடைந்து பின்னால் நகர்ந்த பரமேசுவரவர்மனின் மனத்தில் பீதி மயமானதோர் எண்ணம் பீறிட்டது: "யார் இந்தப் பெண்? ஆந்திர இளவரசி உத்தமசீலியா இவள்? அவள்தான் அதோ இடிந்து தகர்ந்து கிடக்கும் அந்த இல்லத்தின் அடியிலே உயிரோடு சமாதி வைக்கப்பட்டு விட்டாளே! ஒருகால் இது அவளுடைய ஆவியின் பொய்ப் பிரசன்னமாயிருக்குமோ? அல்லது அவளைப்பற்றிய ஏக்கத்தில் குழம்பிக் கலங்கியிருக்கும் என் மனத்தின் பிரமைக் காட்சியாக இருக்குமோ?" — வியப்பும் பரபரப்புமாகக் கண்ணிமைகளைத் தட்டிக் கொட்டிக்கொண்டு அவளை உற்றுப் பார்த்தான் அவன்.

மகர யாழின் இருபத்தொரு தந்திகளையும் ஒருசேரச் சுண்டி உளர்ந்தாற்போன்ற ஒலி! ஆந்திர இளவரசி உத்தம சீலிதான் அப்படிச் சிரித்தாள்.

தாள கதியில் இணைந்த ஓர் இனிய பண்போல் ஒலித்த அந்தச் சிரிப்பொலியைக் கேட்டுப் பரவசக் கிறக்கமடைந் தான் பரமேசுவரவர்மன்.

மாலைச் சூரியனின் செவ்வொளியிலே நனைந்து சிந்தூர வண்ண மோகினிபோல் நின்றுகொண்டிருந்த உத்தம சீலி அவனுடைய திகைப்பு நிலையைக் கண்டு குலுங்கிக் குலுங்கி நகைத்தாள்.

பரமேசுவரவர்மனின் உடல் சிலிர்த்தது. தன்னை மறந்த ஓர் ஆவலினால் உந்தப்பட்டவனாய் அவளெதிரே ஓடிப் போய் நின்று அரக்கப் பரக்கக் கண்களை மலர்த்தி அவளைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கினான்.

சரவணப் பொய்கையில் முகிழ்த்தெழுந்த செந்தாமரை மலர்போல் நின்றுகொண்டிருந்த உத்தமசீலியும் தன் கவிதைக் கண்களை அகலத் திறந்து அவனை ஆர்வத் துடிப்போடு ஏறிட்டுப் பார்த்தாள். எல்லையற்ற மகிழ்ச்சியால் அவளது இளந்தெங்கு நெஞ்சகங்கள் விம்மிதப் பாங்குடன் நிமிர்ந்து கூம்பின. அவனையே ஒரு கணம் பார்த்துக் கொண்டிருந்த அவள் சடாரென்று திரும்பிக் கலகலவென்று சிரித்துக் கொண்டே சிற்றாற்றங்கரையை நோக்கி ஓடலானாள்.

ஆச்சரியப் பிரமிப்புடன் வேரூன்றி நின்ற பரமேசுவர வர்மனின் மனத்தில் மீண்டும் அந்தச் சந்தேகம் வலுத்தது. 'நிஜமாகவே இவள் ஆந்திர இளவரசிதானா? அல்லது அவளின் ஆவிதான் வந்து என்னை இவ்வாறெல்லாம் அலைக்கழித்து ஏமாற்றுகிறதா?"

ஆடற் கலை பயின்ற புள்ளிமான் பொற்சிலம்பு அணிந்து ஓடுவதுபோல் கலீர் கலீரெனச் சிரித்துக்கொண்டே துள்ளித் துள்ளி ஓடிய உத்தமசீலி, ஆற்று நீர் விளிம்பைத்

தொட்டுப் புதைந்திருந்த ஒரு சிறு பாறைமேல் ஏறி நின்று அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

பரமேசுவரவர்மனுக்கு என்ன செய்வதென்றே தெரிய வில்லை. அப்படியும், இப்படியுமாக ஆடி அசைந்து நின்று கொண்டிருந்த அவன், திடுமென ஏதோ ஒரு காந்த சக்தியால் கவரப்பட்டவன்போல் அவள் இருந்த இடம் நோக்கிப் பாய்ந் தோடினான்.

அடுத்த சில விநாடிகளில் அங்கு ஓர் ஆச்சரியம் நிகழ்ந்து விட்டது. ஆமாம்; அவன் அருகில் வரும்வரையில் அந்தப் பாறைமீது பதுமைபோல் நின்றுகொண்டிருந்த அவள் சட்டென்று ஆற்றில் தாவிக் குதித்தாள். அலைத்துக் கிளர்ந் தெழுந்த ஆற்றுநீர் நாலா பக்கமும் சிதறித் தெறித்தது.

"உத்தமசீலி! உத்தமசீலி!"

கண்டம் வெடிப்பதுபோல் கதறிக் கூவிக்கொண்டே ஓடி வந்த பரமேசுவரவர்மன் அந்தப் பாறைமேல் தட்டுத் தடுமாறி ஏறி நின்று ஆற்றின் நீர்ப் பரப்பை அவசரத் திகிலுடன் வெறித்து நோக்கினான். அவள் குதித்த இடத்தில் ஒரு பெருஞ் சுழிப்பு ஏற்பட்டு நுரை பொங்கியது மட்டுமே தெரிந்தது. பிறகு அந்த நீர்ச் சுழி நுரையும் நீர்த்துப் பளிங்குப் பாயாக விரிந்துவிட்டது.

'சந்தேகமில்லை; அது அவளுடைய ஆவிதான்! என் அன்புக் கோமகள் உத்தமசீலியின் ஆவியேதான் அது!' — உள்ளார்ந்த நடுக்கத்துடன் தலையைத் தாங்கிப் பிடித்தவாறு அப்படியே தொய்ந்து துவண்டு உட்காரப்போன பரமேசுவர வர்மன் மீண்டும் சிலம்பு முரல்வது போன்ற அதே சிரிப்பொலி கேட்டுத் துணுக்குற்றவனாய்த் தலைநிமிர்ந்தான்.

என்ன ஆச்சரியம்! அதோ, ஆற்றின் மறு கரையில் நனைந்த ஆடையுடன் ஜல தேவதைபோல் நின்று கொண்டி ருக்கும் அந்தப் பெண் யார்? ஆந்திர இளவரசி உத்தமசீலி அல்லவா அவள்? ஆம்; அவளேதான்!

தடாலென ஆற்றில் தாவிப் பாய்ந்த பரமேசுவரவர்மன் மறு கரையை நோக்கி வேகமாக நீந்தலானான். அவன் நீந்திக் கரையேறும்வரை அவனையே பார்த்துக் குதூகலமாகச் சிரித்துக் கொண்டிருந்த அவள் விருட்டென்று திரும்பி ஆற்றங் கரையோரக் கொடிப் பாதையொன்றின் வழியே ஓடத் தொடங்கினாள். மூச்சு முட்டக் கரையேறி அவனும் அவளை விடாமல் பின்தொடர்ந்து ஓடினான்.

தென்றல் காற்றில் மிதவையிட்டுப் பறந்து செல்லும் பட்டுத் துகில்போல் நெளிந்து வளைந்து முன்னால் ஓடிய அவள் ஓரிடத்தில் நின்று அவனைத் திரும்பிப் பார்த்தாள். பிறகு அந்தச் சிற்றாற்றின் மருங்கே அடர்ந்து வளர்ந்திருந்த புதர் ஒன்றில் புகுந்து மறைந்துவிட்டாள்!

திகைத்து நின்றான் பரமேசுவரவர்மன். தெப்பமாக நனைந்த அவன் உடல் நிலைகொள்ளாமல் வெடவெடத்தது. உள்ளமோ ஒரேயடியாகக் குழம்பிக் கலங்கியது.

'என்ன இது மாயம்! அவள் எங்கே போனாள்? உண்மையில் நான் அவளைத்தான் பார்த்தேனோ? அல்லது அவளை இழந்த ஏக்கத்தில் என் புத்தி பேதலித்து இப்படி யெல்லாம் நிலைதடுமாறி அலைந்து கொண்டிருக்கிறேனா?'

நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்த அவன் அந்தப் புதர் அருகில் போய் நின்று தன் பார்வையை மேலுயர்த்தினான். அங்கே இன்னொரு வியப்பு அவனுக்காகக் காத்திருந்தது.

ஆமாம்; சற்றுமுன் உத்தமசீலி ஓடி வந்து மறைந்த அந்தப் புதர் வெறும் புதராக இல்லை. அது ஒரு சிறிய ஆசிரமக் குடிலாகக் காட்சியளித்தது. சுற்றிலும் செடி கொடிகள் சுவர்போல் அடர்த்தியாக வளர்ந்து கவிந்திருக்க, அப்புதரின் மேற்பரப்பையே கூரையாக்கி அதன் உட்புறக் குடைவில் மூங்கிற் பத்தைகளை வேய்ந்து ஓர் அழகிய குடிலாக அது அமைக்கப்பெற்றிருந்தது. அந்தக் குடிலின் முகப்பு வாயில் ஆற்றின் நீர்க் கரையை நோக்கி இருக்க, அதன் உள்ளும் புறமும்

அலங்கார வைப்பு முறையில் காட்டுச் செடிகொடிகளின் வர்ணவாரியான பூக்களும் வகைவகையான கனிகளும் இயற்கையாகப் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தன.

இப்படி வனதேவதையின் சிருங்கார கிருகம்போல் விளங்கிய அந்தப் பச்சைப் புதர்க் குடிலையே வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் இனம் புரியாத ஒரு நடுக்கத்துடனும், தன்னை மீறிய ஒரு துணிவுடனும் தயங்கித் தயங்கி நடந்து போய்ச் சாத்தியிருந்த மூங்கில் கதவை மெல்லத் தள்ளித் திறந்து உள்ளே எட்டிப் பார்த்தான்.

அங்கே, சிறுபொழுதுக்குமுன் பார்த்த கோலத்துக்கு முற்றும் புதிதான ஆடை அணிகள் புனைந்து, கையிலொரு ஆதொண்டை மலர் மாலையுடன் அப்ராக்ருத செளந்தர்ய வதியாய் நின்றுகொண்டிருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி!

வியப்பின் எல்லை கடந்து, அதற்கு அப்பாலும் அப்பாலும் போய்விட்ட பரமேசுவரவர்மன் இமைக்கும் சக்தியை இழந்தவனாய் அவளையே பார்த்துக்கொண்டு சிலையாகச் சமைந்து நின்றான்.

"வீரமாப் பல்லவ பேரரசர் அவர்களுக்கு என் இதய அஞ்சலிகளைச் சமர்ப்பித்து வெற்றி வாழ்த்துக் கூறி வரவேற்கிறேன்! வாருங்கள், அரசே!" — தேனின் சுவை செறிந்த தீங்குரலில் இவ்வாறு மொழிந்துகொண்டே கன்னல் ரசப் புன்முறுவல் பூத்தவளாய் ஒண்பொற் சிலையென ஒல்கி ஒசிந்து நடந்து வந்த உத்தமசீலி, தன் எதிரே நீலவண்ண மாலவன் போல் ஓங்கி உயர்ந்து நின்ற தொண்டையர்க்கோன் பரமேசுவரவர்மனின் திண்ணிய கழுத்தில் நறுமணம் பிலிற்றும் ஆதொண்டை மலர் மாலையைச் சூட்டினாள்.

அடுத்த கணம், அவளது புஷ்பக் கொடியுடல் அவனுடைய பரந்த மார்பிலே துவண்டு சாய்ந்து இணைந்து கரைந்தது!

## 106

# ஜீவ பிரசாதம்

"இளவரசி! நான் காண்பது, கேட்பது, உணர்வது யாவும் கனவல்லவே?" என்று உறக்கத்தில் உளறுபவனைப் போல் கேட்டுக்கொண்டே மெல்லப் பின்னால் நகர்ந்தான் பரமேசுவரவர்மன்.

அவனது அணைப்பிலிருந்து நழுவிச் சற்றுத் தள்ளிப் போய்த் தலைகுனிந்து நின்றுகொண்டிருந்த உத்தமசீலி அழகுப் புன்னகை பூத்தவளாய் அவனைப் பட்டும் படாதது மாகப் பார்த்தாள்.

"ஆம், இளவரசி! நீ ஜீவ தசையில்தான் இருக்கிறாய் என்று இன்னமும் என்னால் நம்பவே முடியவில்லை!" கிறக்கச் சோர்வுடன் கரகரத்தான் பரமேசுவரவர்மன்.

மகிழ்ச்சியொளி படர்ந்திருந்த உத்தமசீலியின் வதனம் சட்டென்று வாடி வெளிறியது. துயரம் கப்பிய குரலில் சொன்னாள் அவள்: "மன்னரவர்களின் மனத்தில் பதிந்த ஐயம் சரியானதே! சேதியக் கலைஞரின் இல்லத்தில் சிறைப் பட்ட நான் அந்தச் சளுக்கியச் சண்டாளர்களால் அங்கேயே சமாதியாக்கப்பட்டுத்தான் இருப்பேன். ஆனால், விதி என்னை எப்படியோ காப்பாற்றிவிட்டது."

அவளது அழகிய குவளை மலர்க் கண்கள் நீர்ப் போர்வையிட்டுப் பளபளத்தன. உள்ளார்ந்த விம்மலுடன் ஒருகணம் மௌனமாயிருந்துவிட்டு மேலும் கூறினாள்: "உண்மைதான் பிரபு! அன்றையதினம், தங்களை ஆந்திர நாட்டுக்கு அனுப்பி என் தந்தையாரிடம் படையுதவி பெற்றுத்

தருவதற்காக ஏற்கனவே நான் எழுதி வைத்திருந்த ஓலையைச் சேதியக் கலைஞரின் இல்லத்திலிருந்து எடுத்துவர ஓடிய போதே எனது வாழ்நாள் முடியப் போகிறதென்பது எனக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. ஆயினும் என் இலட்சிய சித்திக் கான அந்த ஓலையைத் தங்களிடம் எப்படியும் கொடுத்து அனுப்பிவிட வேண்டும் என்ற ஒரே ஆவேசத்துடன், முன் வைத்த காலைப் பின் வாங்காமல்— தங்களது அன்புக் கட்டளையையும் மீறி—அந்த இல்லத்துக்கு ஓடினேன். அதிர்ஷ்டவசமாக அங்கு என் சிவிகைதூக்கி நாகோதரன் வந்திருந்ததால் அவனிடமே அவ்வோலையைக் கொடுத்துத் தங்கள் வசம் அளிக்கும்படி கட்டளையிட்டேன். பிறகுதான் என்னைச் சூழ்ந்து வந்திருந்த ஆபத்தை என்னால் உணர முடிந்தது. எந்த வகையிலும் நான் தப்பிச் செல்ல முடியாத வாறு நாலா புறமும் விரைந்து வந்த சளுக்கிய வீரர்கள் அந்த இல்லத்தை வளைத்துக் கொண்டார்கள். அவர்களிடம் சிறைப்பட்டு என் பெரிய தந்தையான விக்கிரமாதித்தரின் முன்னே குற்றவாளியாகப் போய் நிற்பதைவிடத் தற்கொலை செய்துகொண்டு சாவதே மேல் என்ற முடிவுக்கு வந்தேன். அத்துடன் என்னையறியாமலே என் மனத்தில் ஓர் அற்ப ஆசை தோன்றியது. அதாவது, அந்த இல்லத்தில் தங்களை நான் முதன் முதலாகச் சந்தித்த பூசை அறைக்குப் போய்த் தங்களால் வணங்கப்பெற்ற சிவலிங்கத்துக்கு என் அன்புக் காணிக்கையாக ஒரு மலரை அர்ப்பணித்துவிட்டுப் பிறகு அதே அறையில் என் உயிரை மாய்த்துக்கொள்ள வேண்டும் என்ற ஆசைதான் அது. அவ்வாறே அந்த அறைக்குள் ஓடிக் கதவைச் சாத்திக்கொண்டு அங்கு வதங்கிச் சருகாகிக் கிடந்த ஒரு கடுக்கை மலர்க்கொத்தை எடுத்துத் தங்களது தெய்வத் திருச் சந்நிதிமுன் சாற்றிவிட்டுக் கதறி அழுதேன். இதற்குள் சளுக்கிய வீரர்கள் திமுதிமுவென உட்புகுந்து ஓடிவரும் ஓசை கேட்டது. மரண பயம் கொண்டவளாய் அங்குமிங்குமாக அலைமோதிய நான், அவ்வறையின் ஒரு மூலையில் நிறுத்தி

வைக்கப்பெற்றிருந்த பாவை விளக்குப்பதுமை ஒன்றின்மேல் போய்ப் பலமாக மோதிக்கொண்டேன். அதனால் அந்தச் சிலை கீழே சாய, அங்கு ஓர் இரகசிய வாயில் இருக்கக் கண்டு வியப்புற்றேன். சிந்திக்கும் திறனை இழந்து நின்ற நான் என்னையறியாமலே அந்த இரகசிய வாயிலின் படிகளில் இறங்கி நடக்கலானேன். சிறிது தூரம் சென்ற பிறகுதான் அது ஒரு நிலவறை என்பது எனக்குப் புலனாகியது. காரிருள் கப்பிக் கிடந்த அந்த நிலவறையின் ஏதோ ஒரு பகுதிக்குச் சென்று திரும்பிப் பார்த்தபோது நான் இறங்கி வந்த வாயிற்படி எங்கிருக்கிறதென்றே என்னால் அறிய முடியாமற் போய்விட்டது. எங்கும் ஒரே இருள் மயம். கால் வைத்த இடமெல்லாம் ஏதேதோ பொருட்கள் தட்டுப்பட்டு அவற்றின்மீது முட்டி மோதிக் கொண்டேன். கையால் தடவிப் பார்த்தபோது அவை யுத்தக் கருவிகள் என்பது புரிந்தது. ஆனால், அந்தக் கருவிகள் அங்கு ஏன் குவிக்கப் பெற்றிருக்கின்றன என்னும் விவரத்தை அப்போது என்னால் அநுமானிக்க முடியவில்லை. வெள்ளத்துக்குப் பயந்து ஓடி வந்து புயலில் சிக்கிக் கொண்டாற்போல் அந்த இருட்குகை போன்ற நிலவறையில் அகப்பட்டுக்கொண்ட நான் அலறித் துடித்தேன்; கதறிப் புலம்பினேன். இறுதியில் என் மனத்தை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு மரணத்தை அமைதியாக எதிர்நோக்க ஆரம்பித்தேன். எத்தனை இரவு, எத்தனை பகல் கழிந்தன என்பதும் எனக்குத் தெரியாது; மரணம் என்னை அணுஅணுவாக நெருங்கிக் கொண்டிருந்தது. அதுவும் போதாதென்று அந்த நிலவறைக்கு மேலே ஏதோ பூகம்ப நிகழ்ச்சி நடைபெறுவதுபோன்ற பயங்கர ஒலிகள் கேட்கலாயின. என்னைச் சிறைப்பிடிக்க முடியாமல் ஏமாந்த சளுக்கிய வீரர்கள் அந்த இல்லத்தையே இடித்துத் தகர்க்கிறார்கள் என்பதைப் புரிந்துகொண்டேன். நிலவறை யின் மேல் தளம் எந்த விநாடியும் சரிந்து என்மீது சரிந்து விழும்போல் தோன்றியது. அளவுக்கு மீறிய பயத்தால் எனது

பிரக்ஞை சிறிது சிறிதாக மெலிந்து தேய ஆரம்பித்தது. ஏதோ ஒன்றின்மேல் துவண்டு சாய்ந்தேன். மறுகணம், பூமியை விட்டு எங்கோ நழுவி, எதன் மீதோ படுத்துப் பறந்து செல்வது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. வெகு நேரத்துக்குப் பின் கண் திறந்து பார்த்தேன். என்னையே என்னால் நம்ப முடியவில்லை. ஏனென்றால், இந்தப் புதரின் அருகே நான் படுத்துக்கிடக்க, என் எதிரில் கண் கலங்கி அமர்ந்திருந்தார் சேதியக் கலைஞர் பரவாதிமல்லர். அவர் தாம் அந்த நிலவறை யிலிருந்து என்னைக் காப்பாற்றிக் கொண்டு வந்தார் என்ற விவரத்தைப் பிறகு தெரிந்து கொண்டேன். அன்றிலிருந்து இன்றுவரை நானும் என் ஞானத் தந்தையாரான சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும் இந்தப் புதர்க் குடியில்தான் தங்கி யிருந்து வருகிறோம்."

இவ்வாறு அவள் சொன்ன விவரங்களைக் கேட்டு நெஞ்சம் குமுறித் துடித்த பரமேசுவரவர்மன் அன்பாவேசத் தோடு பாய்ந்துபோய் அவளை அப்படியே அணைத்துச் சேர்த்துக் கொண்டு, "என்பொருட்டு நீ எவ்வளவு துன்பங் களை அநுபவித்துவிட்டாய், கண்ணே!" என்று உணர்ச்சி விம்மலுடன் கூறிக் கண்ணீர் வடித்தான். அவனுடைய கண்ணீரில் நனைந்து நின்ற உத்தமசீலியோ சொர்க்க சுகானந்த அமுதக் கடலில் நீந்துபவள்போல் உள்ளம் பூரித்துக் குதூகலித்தாள்.

சிறுபொழுதுக்குப்பின் ஏதோ நினைவுவரப் பெற்ற வனாய் நிமிர்ந்து, "அது சரி, இளவரசி! நம் சேதியக் கலைஞர் எங்கே?" என்று அவசரமாக வினவினான் பரமேசுவரவர்மன்.

"என்னைப்பற்றிய தகவலைத் தங்களிடம் தெரிவிப்ப தற்காக இன்று காலை புறப்பட்டுச் சென்றார். இன்னமும் திரும்பி வரவில்லை" என்று இதமாகப் பதிலிறுத்தாள் உத்தமசீலி.

அனற் புயல் வீசிக்கொண்டிருந்த பரமேசுவரவர்மனின் மனம் ஆழ்ந்த அமைதி பெற்றுக் குளிர்ந்தது. நீண்ட காலத்

துக்குப் பின் இன்றுதான் அவன் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டுச் சுந்தரக் களை வழியப் புன்னகை பூத்தான்.

**கோ**மேதக வண்ணத் தண்மதியாள் கோலப் பொற்தாழி வடிவாய்க் குணதிசை வானச் சாளரத்தைத் திறந்து கொண்டு வெளியே எட்டிப் பார்க்கத் தொடங்கிய மோகன இரவின் மூன்றாம் சாம வேளை.

அன்று நிறைமதி நன்னாள். அந்த முழு நிலவின் தண் ணொளியிலே விரிந்து கிடந்த சிற்றாற்றங்கரையும் அதன் மருங்கே அமைந்த பச்சைப் புதர்க் குடிலும் பிரம்ம ஓவியன் வரைந்த வழிபாட்டுச் சித்திரங்கள்போல் காட்சியளித்துக் கொண்டிருந்தன.

சீதளக் காற்றின் சிறுசிலுப்பு; சிற்றாற்றின் கலகலப்பு; புள்ளினங்களின் காதல் முணுமுணுப்பு—இவை தவிர அந்தப் பிரதேசமெங்கும் ஆழ்ந்த அமைதியே பூத்துக் கிடந்தது.

இப்படி அமைதி கூடி வளர்ந்து சென்ற அந்த இரவின் மாசுபடா எழிலைத் தன் மெல்லிய புலன்களால் ஸ்பரிசித்து ரசித்தவாறு ஆற்றின் மணற் சரிவில் படுத்திருந்தான் பல்லவ மாமன்னன் பரமேசுவரவர்மன். தனக்குச் சொந்தமான மண்ணில்—அதன் சகல உரிமைகளோடு—தன் உடலைச் சாய்த்துப் படுத்துக் கிடப்பது அவனுக்கு எல்லையற்ற பேரானந்தமாக இருந்தது. அத்துடன், அவன் மனத்திலே வேறு பல எண்ணங்களும் சுழித்தெழுந்து நுரைத்துப் பொங்கிக் கொண்டிருந்தன. இன்னும் இரண்டொரு தினங்களில் அவன் காஞ்சிமாநகர் அரண்மனைக்குள் பிரவேசிக்கப் போவது, அதன்பின் அவனது அன்னையுடையவும், தம்பியுடையவும், நண்பர்களுடையவும், நாட்டு மக்களுடையவும் அநுமதி பெற்று ஆந்திர இளவரசி உத்தமசீலியைத் தன் அன்பு மனைவியாகவும், பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டத்தரசி யாகவும் ஆக்கிக் கொள்ளப் போவது—முதலான இனிய நிகழ்ச்சிகளை அவன் மனம் இப்போது கற்பனை செய்து பார்த்துக் களிப்பெய்தியது.

அவனுடைய இன்பக் கனவுகளின் மூலக் கருவான உத்தமசீலி எங்கே?

நீல வான் சரிவிலிருந்து விரைந்து மேலேறிக்கொண் டிருந்த வெள்ளி நிலவையே விழியசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன் வலப்புறமாக மெல்லப் புரளவே, 'ஹா' என்று குயில் அகவுவது போன்ற இனிய மென்குரல் கேட்டுத் திடுக்குற்று எழுந்து உட்கார்ந்து திரும்பினான். அங்கே அவனது தலைமாட்டில் கந்தர்வ தச்சனால் செதுக்கி உருவாக்கிய சந்தனப் பதுமைபோல் அமர்ந்திருந்தாள் உத்தமசீலி.

"இளவரசி! இன்னமும் நீ உறங்கப் போகவில்லையா?" வியப்புடன் வினவினான் பரமேசுவரவர்மன்.

"மன்னரவர்களை இங்கே தனியாக விட்டுவிட்டு நான் மட்டும் எப்படி உறங்கப் போவேன்?"—பரிமளப் பன்னீர்க் குரலில் இவ்வாறு பகர்ந்தாள் உத்தமசீலி.

ஆவல் பொங்க அவளையே பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன், "இளவரசி! உன் பவள வாயிலிருந்து வெளிவரும் ஒவ்வொரு சொல்லும் என் நெஞ்ச மலரிலே தேன் துளியாக இறங்கித் தித்திக்கிறதே, ஏன்?" என்று குறும்பாகக் கண் சிமிட்டிக் கேட்டான்.

"தேன் என்ற சொல்லைத்தான் நான் கேள்விப்பட்டிருக் கிறேனே தவிர, அதைச் சுவைத்து அறியேன் பிரபு?"

"ஓ,... சமணர்கள் தேன் அருந்துவதில்லை என்பதை எனக்குச் சொல்லாமல் சொல்லிக் காட்டுகிறாயோ?"

அவளுடைய அந்தத் தூய ஒழுக்க நெறிப் பேச்சைக் கேட்ட மாத்திரத்தில் ஏற்கனவே அவன் மனத்தில் பதிந்திருந்த அவளது எழில் வடிவம் வானுக்கும் பூமிக்குமாக வளர்ந் தோங்கி வேர்விட்டு விசாலித்து அவனையே அதனுள் ஐக்கியப்படுத்திக் கொண்டாற்போன்ற உணர்ச்சியால் திக்கித் திணறினான். பிறகு தழுதழுத்த குரலில், "என் இதயப் பேரரசி! உனது தெய்வீக அன்பிலே திளைக்கக் கொடுத்து வைத்த நானே பாக்கியசாலி!" என்றான்.

"என் ஜீவனின் ஜீவ ஊற்றாக விளங்கும் தங்களது இமயப் பேரன்புக்கு எளியவளான நான் பாத்திரமானது என்னுடைய ஏழேழு கோடிப் பிறவிகளின் தவப் பயனே என்று எண்ணிப் பூரிக்கிறேன், பிரபு!" என்று கூறிய உத்தமசீலி, தன்னை மறந்த ஒரு தளர்ச்சியால் துவண்டு வளைந்து அவனது மடியிலே போய்க் கொடியெனச் சாய்ந்தாள்.

விண்ணின் விதானத்துக்கு ஏறி வந்த வெண்ணிலா தன் பால் போன்ற ஒளியை அமிர்த வர்ஷமாகப் பொழிந்தது. சீதளப் பாங்குடன் சில்லென வீசிய இளங்காற்றில் புத்தம் புது மலர்களின் பரிமள கந்தம் செறிந்து கனத்தது. ரதி வர்ணச் சிற்றாறு சங்கீதச் சிரிப்புடன் விரைந்தோடியது.

பிரக்ஞை இழந்தவள்போல் தன் மடியில் சாய்ந்து கிடந்த உத்தமசீலியின் பனிமலர் வதனத்தையே வைத்த விழி வாங்காமல் வாஞ்சை பொங்க நோக்கினான் பரமேசுவர வர்மன். அவளது செவ்விய அதரங்களும் கூம்பிய விழிச் சிமிழ்களும் மிக மென்மையாக மூடித் துடித்துக்கொண் டிருந்தன. ஆனந்த மிகுதியால் அவனுடைய கண்களிலிருந்து உருண்டு திரண்ட இரு சொட்டு நீர் அவளது கொவ்வைக் கனிவாயில் உதிர்ந்து தெறித்தன. அவளால் அவனுக்கு அணிவிக்கப்பெற்ற ஆதொண்டை மலர் மாலையைக் கழற்றி அவளின் சங்குநிறக் கழுத்தில் சூடிய அவன் அவளுடைய கனியதரங்களை நோக்கி மெல்லக் குனிந்தான். அவனது கண்ணிதழ்கள் அவளின் நயனங்களோடு ஒற்றின.

சில்லெனத் தவழ்ந்துகொண்டிருந்த காற்று திடுமெனப் புயலாகச் சீறிச் சுழன்று வீசி, தேன் சுமந்த கன்னிப்பூக்களை யெல்லாம் மண்ணில் உதிர்த்துவிட்டு மறைந்தது. தெள்ளிய வானக் கடலில் ஒளி வீசி நடந்துகொண்டிருந்த நிலவுப் பெண் ஏனோ கருமுகில் போர்வைக்குள் ஓடி மறைந்தாள்.

அவ்விருவரது வாழ்க்கையிலும் வந்துபோன பல்லாயிர இரவுகளுக்குப்பின், அன்று வந்த இரவு, ஒரு மகா இரவாகிப் புனிதம் பெற்றது!

107

# பகை வித்து

இன்பப் புழுக்கமிட்டுச் சோர்ந்திருந்த உடலும் உள்ளமும் தண்மைக் குளிரேறி வீறுபெற நீராடி எழுந்த பரமேசுவரவர்மன் அந்தச் சிற்றாற்றின் கரை மேட்டில் அநங்க சொரூபனாக வந்து கொண்டிருந்தான். அவனைப் பூரண கும்ப மரியாதையுடன் வரவேற்பதுபோல் அப்போது தான் அடிவானச் செஞ்சதுக்கத்திலிருந்து பொன்னொளிக் குழம்பு பொங்கும் புதுப் பானையாக ஆரோகணமாகியது காலை இளஞ்சூரியன். அதன் மாசுபடாக் கனக ஒளி படர்ந்த அந்தப் பிரதேசம் ஒரு கந்தர்வ காவியத்தை அரங்கேற்றினாற்போல் காட்சியளிக்க ஆரம்பித்தது.

அந்நிய ஆதிக்கத்தை அழித்தொழிக்க வாளேந்திப் போர்க்களம் புகுந்து வீரம் விளைத்து வெற்றியை அறுவடையாக்கித் தந்துவிட்டுத் திரும்பியிருந்த உழவர் பெருமக்கள் இப்போது உள்நாட்டில் உலவிவரும் வற்கட அரக்கனை விரட்டியடிக்கும் பொருட்டுக் கலப்பையும் கையுமாகக் காளை மாடுகளை ஓட்டிக்கொண்டு தத்தமது நிலங்களை நோக்கி உற்சாகத்துடன் சென்றுகொண்டிருந்தனர். மற்றும் சில குடியானவர்கள் இராஜப் பிளவை நோய் கண்டாற்போல் வெடிப்புற்றுக் கரம்பாகிக் கிடந்த விளை நிலங்களைப் பண்படுத்திச் செப்பனிடும் வேலையில் வெகு மும்முரமாக ஈடுபட்டிருந்தனர். இன்னும் சிலர் ஆற்று நீர்ப் பாய்ச்சலால் வெல்லப் பாகென இளகித் தளதளத்திருந்த சதுப்பு நிலங்களில் தமது ஏர் முனைகளைக்கொண்டு ஜீவ கோலம் போட்டுப் பூமாதேவியின் கர்ப்ப பிராந்தியத்தில் ரசவாதம் நிகழ்த்திக்

காட்டுவதிலே தீவிரமாக முனைந்திருந்தனர். இவை தவிர, சளுக்கிய ஆட்சியின் கொடுமைகளைத் தாளமாட்டாமல் குடிபெயர்ந்து சிதறியோடிய கிராம மக்கள் சுதந்தரப் பொலிவு பெற்றவர்களாய்த் தத்தம் இல்லங்களை நோக்கிச் சாலைகளிலும் சிறு வழிகளிலும் கும்பல் கும்பலாகத் திரும்பி வந்துகொண்டிருப்பதும் தெரிந்தது. இந்த நெஞ்சினிக்கும் காட்சிகளையெல்லாம் மகிழ்ச்சிப் பெருமிதத்துடன் பார்த்துக் கொண்டே மெல்ல நடந்துவந்த பரமேசுவரவர்மன் சட்டென்று நின்றான். இவ்வளவு நேரம் அவனது நெஞ்சில் நிறைந்து முகத்தில் வழிந்துகொண்டிருந்த மகிழ்ச்சியொளி மறைந்து துயரப் புகை சூழ்ந்தது. சோர்வுடன் பார்வையை நிமிர்த்தி அந்தச் சிற்றாற்றின் மறு கரைக்கு அப்பால் செலுத்தினான்.

அங்கே, சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் இல்லமும் அதனைச் சார்ந்த அழகிய பூந்தோட்டமும், தென்னஞ் சோலையும் இடிந்து தகர்ந்து அழிந்த நிலையில் பார்க்கவே மிகவும் பரிதாபமாகத் தோற்றமளித்தன. கண்களைக் கசப்பாக்கும் அந்தக் காட்சிகளைக் காணச் சகியாமல் தன் பார்வையை வேறு பக்கம் திருப்பினான் பரமேசுவரவர்மன். அங்கேயும் முதலில் அப்புதர்க் குடிலே கண்ணில் பட்டு அவனது வருத்தத்தை மேலும் வளர்த்தது.

'எல்லாவற்றிற்கும் உரிமையாளனான உலகநாயகனுக்கு எத்தனையெத்தனையோ அழகுக் கோயில்களைச் சமைத்துக் கொடுத்த சேதியக் கலைஞர் இப்போது தமக்குரிய ஒரே சிறு இல்லத்தைப் பறி கொடுத்துவிட்டுத் தலை சாய்த்துப் படுக்கவும் இடமின்றி இந்தச் செடிகொடிப் புதரடியில் வந்து தங்கியிருக்கிறார் என்றால் இதைவிடப் பரிதாபகரமான விஷயம் வேறொன்று இருக்க முடியுமோ?'— வேதனையால் நெஞ்சம் விம்மலிடப் பெருமூச்சு விட்டான் பரமேசுவர வர்மன்.

'உங்களையும் என்னையும் ஒன்று சேர்த்து, உங்களுக்கும் எனக்கும் புகலிடமாக விளங்கி, உங்கள் உயிரையும் என்

உயிரையும் காப்பாற்றிக்கொள்ள உதவிய அந்த அழகிய இல்லம் அழிக்கப்பட்டதை எண்ணும்போதெல்லாம், என் மனம் சொல்லொணா வேதனையடைகிறது, அரசே! அவ்வற்புதக் கலை இல்லம் இடிக்கப்பட்டதற்கு நாம்தாம் காரணம். நமக்காகவே தமது ஒரே சொத்தான அந்த இல்லத்தையும் தியாகம் செய்துவிட்டு இப்போது காட்டிலும் மேட்டிலுமாகக் கிடந்து தவிக்கிறார் சேதியக் கலைஞர். அதனாலேயே, அவருக்கென ஒரு வாசஸ்தலம் அமையும் வரையில் அவருடனேயே இந்தச் சிறு புதர்க் குடிலில் தங்கி அவர் அநுபவிக்கும் இன்னல்களை நானும் அநுபவிப்பது என்ற முடிவுடன் இங்கே இருந்து வருகிறேன்!'—நேற்றிரவு ஆந்திர இளவரசி உத்தமசீலி மனம் உருகிச் சொன்ன இந்தச் சொற்களும் இப்போது நினைவில் வந்து மோதவே, அவனுடைய நெஞ்சத் துயரம் பன்மடங்காகப் பெருகியது. நெற்றி மேட்டை வருடியவாறு ஆழ்ந்த சிந்தனையில் வேரூன்றி நின்ற அவன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய் அந்தப் புதர்க் குடிலை நோக்கி நடக்கலானான்.

அவன் எதிர்பார்த்தது போலவே உத்தமசீலி அங்கு இல்லை. விடிந்தது முதல் அவனுடைய கண்ணில் படாமல் எங்கோ அவள் மறைந்திருந்தாள். அவனெதிரே வந்து அவன் முகத்தைக் காண அவளுக்கு ஏனோ அத்தனை வெட்கமாகி விட்டிருந்தது அன்று!

தனக்குள் மெல்லச் சிரித்தவாறு புதர்க் குடிலினுள் பிரவேசித்து அங்குமிங்குமாகத் தன் பார்வையை ஓட்டினான். நேற்றைக் காட்டிலும் இன்று அதன் உட்புறத் தோற்றம் மிகுந்த வனப்புடன் விளங்கியது. புத்தம் புதிய பூக்களாலும் பசிய இலைக் கொடிகளாலும் பாங்குடன் அது அலங்கரிக்கப் பட்டிருந்தது. அவன் உண்பதற்காக ஒரு மரத்தட்டில் கனிகளும், கிழங்கு வகைகளும் வைக்கப்பெற்றிருந்தன. மற்றோர் இடத்தில் அவனுடைய ஆத்மாவுக்கு உணவு அளிக்கும் வகையில் சைவ சித்தாந்த நூற்சுவடிகள் சில,

அழகிய பட்டுத் துணியால் பொதிந்து வைக்கப்பெற்றிருந்தன. ஆனால் பரமேசுவரவர்மன் அவற்றிலெல்லாம் தன் கவனத்தைச் செலுத்தாமல் வேறேதோ ஒன்றைத் தேடிச் சுற்றுமுற்றும் பார்த்தான்.

குடிலின் கூரைப்பகுதியில் கட்டப்பெற்ற ஒரு சிறு பரண் மீது சேதியக்கலை சம்பந்தமான நூற்சுவடிகள் சிலவும் கோயில் அமைப்புகளுக்கான சித்திரக் குறிப்புச் சீலைகள் சிலவும் அடுக்கி வைக்கப்பெற்றிருந்தன. அவற்றுடன், எழுதப் பெறாத ஏட்டோலைகள், எழுத்தாணிகள், வண்ணக் கிண்ணங்கள், தூரிகைகள் முதலானவையும் இருந்தன.

அவற்றைப் பார்த்து முகம் மலர்ந்த பரமேசுவரவர்மன் ஓர் ஏட்டோலையையும் எழுத்தாணியையும் எடுத்துக் கொண்டு வந்து இருக்கையில் அமர்ந்தான். ஒரு கண நேர சிந்தனை. அவன் முகத்தில் மகிழ்ச்சியொளி பரவியது. கையிலிருந்த எழுத்தாணி ஏட்டோலைமீது மிகவும் நிதான மாக ஊர்ந்து செல்ல ஆரம்பித்தது.

"வளமார் பல்லவ பூபதி அவர்களுக்கு எங்கள் வணக்கமும் வாழ்த்தும் உரித்தாகும்!"

சிந்தனை வயப்பட்டவனாய்த் தனிமையில் அமர்ந்து எழுதிக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் சட்டென்று நிமிர்ந்தான். சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும், சந்திரலேகைச் சிற்றரசர் பெரும்பிடுகு முத்தரையரும் அந்தக் குடிலின் வாயிலில் மகிழ்ச்சி பொங்க வந்து நின்று கொண்டி ருந்தனர். அவர்களுக்குப் பின்னால், சிவிகைதூக்கி நாகோதரனும் உள்ளார்ந்த குதூகலத்துடன் தலை வணங்கி நின்றுகொண்டிருந்தான்.

நீண்ட நாட்களுக்குப் பின், தன் அன்புக்கும் மதிப்புக்கும் உரிய சேதியக் கலைஞரைச் சந்தித்ததால் ஏற்பட்ட மகிழ்ச்சியுடன் துள்ளியெழுந்து விரைந்துபோய் அவரை அப்படியே ஆரத் தழுவி அணைத்துக்கொண்டான்

பரமேசுவரவர்மன். உணர்ச்சிக் கொந்தளிப்பால் ஒருசில விநாடிகள்வரை ஊமையாகி நின்ற அவன், "நலம்தானே கலைஞரே"என்று அடைத்த குரலில் வினவினான்.

"பரம ஈசுவரரின்அன்பால் நன்னலமே!" என இரு பொருள்படக் கூறிப் புன்னகை புரிந்தார் பரவாதிமல்லர். "மன்னரவர்களைச் சந்திக்கத்தான் நேற்றுக் காலை இங்கிருந்து காஞ்சிக்குப் பிறப்பட்டுப் போனேன். நடுவழியில் முத்தரையரைப் பார்க்க நேர்ந்தது. மன்னர்பிரான் இன்னமும் காஞ்சி நகருக்குச் செல்லவில்லைஎன்ற விவரமும் தெரிந்தது. எனவே....."

"வெண்முகில் நிலவைத்தான் நாடிச் சென்றிருக்கும் என்ற முடிவோடு நேரே இங்கு வந்து சேர்ந்தோம்!" சேதியக் கலைஞரின் பேச்சை முடித்த முத்தரையர் கலகலவெனச் சிரித்தார்.

நாணக் குதூகலத்தால் முகம் சிவந்த பரமேசுவரவர்மன் சில விநாடிகளை மௌனத்தில் தோய்த்துக் கரைத்துவிட்டு நிமிர்ந்து, "சரி, நாம் புறப்பட வேண்டியதுதானே?" என்றவாறு முத்தரையரைப் பார்த்தான்.

"ஆம், அரசே! தங்கள் வருகையை எதிர்நோக்கிக் காஞ்சிமாநகர் அலைமோதிக்கொண்டிருக்கிறது!" என்று உற்சாகத்துடன் பதிலிருத்தார் முத்தரையர்.

"என் அருமை அன்னையார் பல்லவபுரம் அரண் மனையிலிருந்து காஞ்சிக்கு வந்து விட்டார்கள் அல்லவா?"

"நேற்று மாலையே மகாராணியாரைப் பல்லவபுரத்தி லிருந்து சகல மரியாதைகளுடன் அழைத்துப் போய்க் காஞ்சி அரண்மனையில் சேர்ப்பித்துவிட்டேன். ஆனால்...நம் மதிப்புக்குரிய பழையாறைச் சோழரும், அவருடைய குமாரி இளங்கோப்பிச்சியும், நம் இளவல் கோவிந்தவர்மரும் தாம் இன்னும் வந்து சேரவில்லை."

உள்ளார்ந்த வியப்புடன் அவரை உற்று நோக்கிய பரமேசுவரவர்மன், "ஏன் அவர்கள் வரவில்லை? பல்லவ

புரத்திலிருந்து பழையாறைக்குப் போய்விட்டார்களா என்ன?" என்று அவசரமாக வினவினான்.

"ஆலம்பாக்கம் இளங்காரிக்குடையானின் இல்லத்தில் அவர்கள் தங்கியிருக்கிறார்களாம்..." என்று கவலை தோய்ந்த குரலில் கரகரத்தார் முத்தரையர்.

"தாங்கள் அவர்களைக் காஞ்சிக்கு வரும்படி அழைப்பு விடுத்தீர்கள் அல்லவா?"

"இரத கஜ துரகங்களுடன் நமது விசேஷப் படை வீரர் களையும் அனுப்பி அவர்களைச் சகல மரியாதைகளோடு அழைத்து வருமாறு பணித்தேன். அத்துடன் நானே எதிர் சென்று வரவேற்கக் காஞ்சிநகர் எல்லையிலும் காத்திருந்தேன். ஆனால் அவர்கள் என் அழைப்பை ஏற்காமல் நமது பரிவாரங்களைத் திருப்பி அனுப்பி விட்டார்களாம்."

பரமேசுவரவர்மன் இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தான். "சமய சந்தர்ப்பம் பாராமல் எப்போதும் எல்லா வற்றிலும் குறும்பு செய்து குதூகலிப்பவர் பழையாறைச் சோழர். இதுவும் அந்த வகையைச் சேர்ந்த ஒரு விளையாட்டுப் பதிலாகத்தான் இருக்கும். நீங்கள் வேண்டுமானால் பாருங்கள்; நமக்குமுன் அவர் காஞ்சிக்குப் போய் நம்மை வரவேற்கக் காத்திருப்பார்."

"நான் அப்படி நினைக்கவில்லை, அரசே! மெய்யாகவே பழையாறைச் சோழரின் மனம் ஏதோ ஒரு வகையில் இருண்டு விட்டிருக்கிறதென்றே எனக்குத் தோன்றுகிறது." —முகத்தைச் சுளித்து முணுமுணுத்த முத்தரையர் மேலும் சொன்னார்: "ஆம், அரசே! பெருவள்நல்லூர்ப் போரில் நமக்கு உதவியாகப் பழையாறைச் சோழரோ, கோவிந்தவர்மரோ வந்து சேர வில்லை அல்லவா? அதனால்தான் அவர்கள் நாம் பெற்ற வெற்றியில் பங்குகொண்டு தங்களின் வீராபிஷேக முடிசூட்டு விழா வைபவத்தில் கலந்துகொள்ள மறுக்கிறார்கள் என்று நினைக்கிறேன்."

"வேடிக்கையான காரணம்! பெருவளநல்லூர்ப் போரில் நான் சளுக்கிய விக்கிரமாதித்தனை வென்று வாகை சூடுவதற்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்தவர்களே அவர்கள் தாமே? விக்கிரமாதித்தனைப் பாண்டியருடன் போர் தொடுக்கத் தூண்டியது பழையாறைச் சோழர் செய்த முதல் தரமான இராஜதந்திரம் அல்லவா? பிறகு அவர் தம்முடைய சோழியப் படைகளை என் இளவல் கோவிந்தவர்மனிடம் ஒப்படைத்து அவனை நெல்வேலிப் போரில் ஈடுபடுத்தியது அதைவிடப் பெரிய யுத்த தந்திரமாகும். எவ்வாறெனில், விக்கிரமாதித்தன் நெல்வேலிப் போரில் தனது படைபலத்தில் பாதியை இழந்து பின்வாங்கி வந்த சமயம் நான் அவனைப் பெருவளநல்லூரில் இழுத்துப் போரிட்டதாலேயே என்னிடம் அவன் தோற்றோட வேண்டிய நிலைக்கு ஆளானான். அதுவும் தவிர, மாவீரனான சளுக்கியத் தளபதி வில்வேலியைப் பழையாறைச் சோழர் மறைந்திருந்து தாக்கி அவனை ஊனப்படுத்தி விட்டிருந்ததால் போர் முனையில் அவனால் தன் முழுப் புஜ பலத்தையும் காட்டிப் போரிட முடியாமல் ஆகிவிட்டது. அத்துடன், ஏராளமான போர்க்கருவிகளைச் சேதியக் கலைஞரின் இல்லத்து நிலவறையில் சேமித்து வைத்து நமக்கு உரிய தருணத்தில் உதவும்படியும் செய்தார். இப்படி என்னுடைய வெற்றியின் ஒவ்வொரு முனையிலும் அவருடைய உதவிகளே மூல பலமாக நின்றிருக்கின்றன. உண்மை இவ்வாறிருக்க, அவர் பெருவளநல்லூர்ப் போரில் நேரிடையாக வந்து கலந்துகொள்ளாதது பற்றி யார்தாம் என்ன நினைக்க முடியும்?"—கண்களில் நன்றியுணர்ச்சி பளபளக்க இவ்வாறு சொன்ன பரமேசுவரவர்மன் அடைத்த குரலில் மேலும் கூறினான்: "இவற்றையெல்லாம்விட அந்தச் சின்னஞ்சிறு பெண் இளங்கோப்பிச்சி எனக்காகவும் என் நாட்டுக்காகவும் செய்த மாபெரும் உதவிகளை எண்ணும்போது அவள் இருக்கும் திசை நோக்கிக் கையெடுத்துக் கும்பிட வேண்டும் போல் தோன்றுகிறது அன்பரே! அவள் மட்டும் அந்தக் கடைசி நேரத்தில் அத்தனை வீறார்ந்த சாதுரியத்துடன் என்

அன்னையை மீட்க முயன்றிராவிட்டால் இப்போது பல்லவ நாடு தன் மகாராணியைச் சளுக்கிய இளவரசன் விநயாதித்தனின் கத்திக்குப் பலி கொடுத்த நிலையில் பரிதவித்து நிற்க வேண்டி நேரிட்டிருக்கும்."

திகைத்துத் திணறலிட்ட முத்தரையர் தம்மைச் சமாளித்துக்கொண்டு தணிந்த குரலில் கரகரத்தார்: "மன்னரவர்களின் கூற்று முற்றும் சரியே! ஆனால், நமக்காகப் பல வகையிலும் உதவி செய்த பழையாறைச் சோழர், பெருவளநல்லூரில் போர் தொடங்கியதும் அதில் நேரிடையாகக் கலந்துகொள்ளாமல் ஒதுங்கியிருந்துவிட்ட காரணம் என்ன? அவர் ஒதுங்கி நின்றதுமல்லாமல் நம் இளவரசர் கோவிந்தவர்மரையும் அல்லவா நம்முடன் சேரவிடாமல் தடுத்துவிட்டார்?"

"அப்படி அவர்கள் ஒதுங்கியிருந்ததற்கு நமது நன்மையை உத்தேசித்த வேறு ஏதேனும் ஓர் இராஜதந்திர — யுத்த தந்திர — காரணமாகவும் இருக்கலாம். அதை நேரில் கேட்டு அறியாமல் அவர்களைப்பற்றி நாம் எவ்வித அவசர முடிவுக்கும் வரக்கூடாது. சரி; நானே ஆலம்பாக்கம் சென்று அவர்களை அழைத்து வருகிறேன். நீங்கள் காஞ்சிக்குப் போய் மற்ற காரியங்களைக் கவனியுங்கள்."

இதைக் கேட்டுப் பரபரப்படைந்த முத்தரையர், "வேண்டாம், அரசே! நான் அந்தப் பணியை ஏற்று இப்போதே ஆலம்பாக்கத்துக்குப் புறப்படுகிறேன். தாங்கள் போர்க்களத்திலிருந்து நேரே தலைநகருக்குத்தான் போக வேண்டும். அதுதான் வெற்றிபெற்ற மன்னர்க்குரிய சம்பிரதாயம்" என்று படபடத்தார்.

பரமேசுவரவர்மன் அவரைக் குறும்பாக ஏறிட்டுப் பார்த்து அழகாகச் சிரித்தான். "ஓ,... இப்போது நான் சம்பிரதாயச் சிறையில் சிக்கிக்கொண்டிருப்பவன் அல்லவா? சரி; தங்கள் யோசனைப்படியே ஆகட்டும்."

பல்லவ மன்னனிடமும் பரவாதிமல்லரிடமும் விடை பெற்றுக்கொண்ட முத்தரையர் ஆலம்பாக்கத்தை நோக்கிப் புறப்பட்டார்.

# 108

## மங்கலக் கனவு

"கலைஞரே! தாங்கள் எனக்குச் செய்த பேருதவிகளை யும், பெரும் தியாகங்களையும் நான் என்றென்றும் மறக்க மாட்டேன். தங்களை விரைவில் காஞ்சியிலே சந்திப்பேன் என்ற நம்பிக்கையுடன் இப்போதைக்குத் தங்களிடமிருந்து விடைபெற விரும்புகிறேன்" என்று அன்பின் ஆழ்ந்த உணர்ச்சியோடு கூறியவாறு தன் இரு கரங்களையும் அவரெதிரே நீட்டினான் பரமேசுவரவர்மன்.

பரவாதிமல்லரின் கண்கள் மகிழ்ச்சியால் பனித்துப் பளபளத்தன. பாசப் பரிவுடன் அவனுடைய கரங்களைப் பற்றித் தம் கண்களில் ஒற்றிக்கொண்டு, "பல்லவப் பேரரசர் அவர்களுக்குச் சகல மங்களமும் உண்டாக வாழ்த்துகிறேன்!" என்று குரல் தழுதழுக்கக் கூறிக் கரம் கூப்பினார்.

அவரது அன்பு மொழியில் ஒருகணம் மெய்ம்மறந் திருந்த பரமேசுவரவர்மன் மெல்லத் தலைநிமிர்ந்து தன்னை மீறிய ஓர் ஆவலுடன் அங்குமிங்குமாகப் பார்வையை ஓட்டினான். சிற்றாற்றங்கரையின் சரிவிலிருந்த ஒரு தாழம்புத ருக்குப் பின்னாலிருந்து அவனுடைய புரவியான 'அதிசயம்' கனைக்கும் ஒலி கேட்டது. அவன் அவ்விடத்தை நோக்கித் தயங்கித் தயங்கி நடந்து சென்றான்.

அங்கே, சேணக் கசைகள் பூட்டப் பயணத்துக்குத் தயாரான நிலையில் கம்பீரமாக நின்றிருந்தது அந்த வெண்ணிறப் புரவி. அதன் அருகில் நாணம், மகிழ்ச்சி, சோகம் ஆகிய மூன்று உணர்ச்சிகளையும் திரையாகப் போர்த்திக்

கொண்டு ஒண்பொற் சிலையெனத் தலைகுனிந்து நின்றிருந்தாள் உத்தமசீலி.

"இளவரசி! நான் சென்று வரலாமா?"

பூந்தென்றலில் அசைந்தாடும் இளம் பசலைக் கொடி போல் உள்ளார்ந்த நடுக்கத்துடன் நின்ற உத்தமசீலி, மிரட்சியால் சுழலும் கண்களை மேலுயர்த்தி அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்தாள்.

இளநகை புரிந்த பரமேசுவரவர்மன் அவளது தளிர்க் கரங்களை இதமாகப் பற்றித் தன் மார்பில் புதைத்துக் கொண்டு, இளநுங்கு போன்ற அவளின் மோவாயைத் தனது முகத்துக்கு நேரே நிமிர்த்தித் தூக்கிக் கவிதையெழில் வழியும் அவளது கருநீலக் கண்களை இமைக்காமல் நோக்கினான். அவற்றில் எதையோ இழந்த துயரமும், எதையோ அடைந்த மகிழ்ச்சியும் இரண்டறக் கலந்து மிதப்பதைத் தன் இதயத்தின் இதயத்தால் ஸ்பரிசித்து உணர்ந்து கொண்ட அவன் மெய்சிலிர்த்து நெட்டுயிர்த்தான்.

"கண்ணே! கடுகளவு கவலைக்கும் உன் மனத்தில் இனி இடம் தரலாகாது. இன்னும் சில தினங்களில் உன்னைக் காஞ்சிக்கு அழைத்துப் போக எனது பரிவாரங்கள் இங்கு வரும். அதுவரையில் அந்த நன்னாளை எதிர்பார்த்து உனது நேரங்களை மகிழ்ச்சியுடன் கழிப்பாய் என்று நம்புகிறேன்."

அவள் முகம் அன்றலர்ந்த செங்கமலமாக மலர்ந்தது. அவனது அணைப்பிலிருந்து நழுவிப்போய் 'அதிசயத்தின்' மேல் ஒய்யார ஒயிலுடன் சாய்ந்தவாறு அவனை ஓரக்கண்ணால் பார்த்தாள். அவனுடைய திண்மையான கழுத்தில் அந்தச் சவுக்கைக்காய் மாலை தவழ்ந்து கொண்டிருப்பதைக் கண்டதும் அவளுக்குச் சிரிப்புப் பொத்துக்கொண்டு வந்து விட்டது. "இன்னும் சில நாட்களில் விலைமதிப்பற்ற பல நவரத்தின மாலைகளை அணியப்போகும் தங்கள் கழுத்தில் இந்த எளிய சவுக்கைக்காய் மாலை ஏன் பிரபு?" என்று இனித்த குரலில் விளித்தாள் அவள்.

பரமேசுவரவர்மனின் முகத்தில் ஓர் அபூர்வ அழகொளி படர்ந்தது. சுகானந்தக் கனவில் லயித்தவனாய் மெல்லக் கண்மூடிய அவன் அமைதியாகச் சொன்னான்; "எத்தனை யெத்தனை விலையுயர்ந்த நவரத்தின மாலைகளை நான் அணிந்து கொண்டாலும் அவற்றைவிட அதிக மதிப்பு வாய்ந்த மாலையாக இது எப்போதும் என் கழுத்திலேயே இருந்து வரும், கண்ணே! ஏனென்றால், இதில் என் ஆத்மாவின் ஆத்மா உறைந்திருக்கிறது. அத்துடன் நான் நம்பிப் போற்றிக் கடைப்பிடித்து வரும் எனது சமயத்தின் ஒரு புனித சின்ன மாகவும் இது விளங்குகிறது."

அவள் அவனை ஆர்வம் பொங்க அதிசயப் பரவசத் தோடு பார்த்தாள். அந்தப் போதைக் கிறக்கத்திலே, அவளது அதரக் கனியிதழ்களை அவன் கொத்திச் சுவைத்ததையும் அறியாமல் நின்றாள்.

பரமேசுவரவர்மன் தன் இதயத்தை அவளிடம் இறக்கி வைத்துவிட்டு வெறும் உடலை மட்டும் புரவிமேல் ஏற்றிப் போட்டுக்கொண்டு அங்கிருந்து காஞ்சிக்குப் புறப்பட்டுச் சென்றான்.

"இளவரசி! இதோ, இந்த ஏட்டோலையைப் பார்த்தீர்களா இளவரசி?" என்று மகிழ்ச்சி துள்ளும் குரலில் கேட்டுக்கொண்டே ஓடிவந்தார் பரவாதிமல்லர்.

பிரிவின் துயரால் வாடித் துவண்ட பூமாலையாக நின்று கொண்டிருந்த உத்தமசீலி திடுக்குற்று நிமிர்ந்தாள்.

"இந்த ஓலையைப் படித்துப் பாருங்கள், இளவரசி!" என்றவாறு தம் கையிலிருந்த ஓர் ஏட்டோலையைப் பரபரப் புடன் அவளிடம் நீட்டினார் பரவாதிமல்லர். அவள் அதை வாங்கிப் படித்தாள்.

"காஞ்சிமா நகருக்கு அண்மையிலுள்ள கூரம் என்று ஊரில் ஐந்து காணி நிலத்தைச் சேதியக் கலைஞர் பரவாதிமல்லருக்கு முற்றூட்டாகச்

*சாஸனம் செய்து, அந்த நிலத்திலே அவர் பிரியப்படி ஒரு மாளிகையும் அமைத்துக் கொள்ள எல்லாப் பொருளுதவிகளுடனும் அநுமதி வழங்கப் படுமாக! —இது ஸ்ரீநிதி அத்தியந்தகாம பல்லவ பரமேசுவரவர்மனின் ஆணை.”*

*ஆந்திர இளவரசியின் மனம் ஆனந்தத்தால் பூரித்து மலர்ந்தது.*

# 109

# வீரக் கல்

மண்ணுக்கு அடியிலே மறைந்திருக்கும் மலர்ச் செடியின் வேர்கள் ஒவ்வொரு கணமும் எத்தனை யெத்தனையோ சோதனைகளுக்கு உள்ளாகின்றன. எவ்வளவோ எதிர்ப்புக்களையும், ஏமாற்றங்களையும், கொடுமைகளையும், வஞ்சனைகளையும் சமாளிக்கின்றன. செடியின் வாழ்வுக்காகப் பூமிக்கு அடியில் அவை இடை விடாது ஒரு பெரும் போராட்டமே நிகழ்த்துகின்றன. ஆனால் செடியின் கொண்டையில் மலரும் பூக்களுக்கு அதெல்லாம் தெரிகிறதா? அல்லது அதையெல்லாம் பொருட்படுத்து கின்றனவா? இல்லை. பச்சைப் பசுந்தளிர்ப் பரப்புக்கிடையே அவை விதத்துக்கொரு வர்ண ஜாலம் காட்டுவதும், வேளைக்கொரு புன்னகை சிந்துவதும், நளின இளங்காற்றில் நாணிக் கோணி நர்த்தனிப்பதும், நறுமணத்தை வாரி இறைப்பதும், உணர்ச்சிப் போதையில் தேனைச் சொரிவது மாக உல்லாச வாழ்க்கை வாழ்கின்றன. தாம் சார்ந்து நிற்கும் பூமிக்கு அடியிலே என்ன நிகழ்கிறது என்பது பற்றியோ, தம்மைத் தாங்கி நிற்கும் வேர்கள் என்ன செய்கின்றன என்பதைப்பற்றியோ அவற்றுக்குக் கவலையே இருப்பதில்லை.

இப்படித்தான், தமது நாட்டிலே தம்மைச் சார்ந்தவர் களிடையேயும் தாம் சார்ந்துள்ளவர்களிடையேயும் என்ன நடக்கிறதென்றே தெரியாமல்—தெரிந்துகொள்ள நாட்டமும் இல்லாமல்—தம்முடைய காதல் சாம்ராஜ்யத்தின் கதவுகளைப் பரக்கத் திறந்துகொண்டு பிரவேசித்து, அங்கே இனித்த பேச்சாலும், பனித்த பார்வையாலும், கன்னல் ரசப்

பண்ணாலும், கனிச்சாற்றுச் சரிப்பாலும், கனவாலும், கற்பனையாலும் இன்பப் பேராட்சி நடத்தி, அதனால் விளைந்த சுகானுபவங்களை அறுவடை செய்வதிலேயே பல தினங்களைக் கடத்திக்கொண்டிருந்த பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனும் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும் அன்று மாலைதான் அந்த மாயப் பிரேம வாசத்திலிருந்து விடுபட்டவர்களாய் வெளியே வந்தார்கள்.

வானம் மப்பும் மந்தாரமுமாக இருண்டு கிடந்தது. தண்ணென்று வீசிய தென்றல் காற்று வறண்டு போய் எங்கும் ஒருவிதப் புழுக்கம் செறிந்தது. இடியும் மின்னலுமாக எந்த விநாடியும் மழை பொழிந்து கொட்டலாம் என்பதற்கான அறிகுறிகள் தோன்றலாயின.

ஆலம்பாக்கம் இளங்காரிக்குடையானின் இல்லத்துப் பின்புறத்தே அமைந்த சிறியதொரு பூந்தோட்டத்தில் சிந்தனைவயப்பட்டவனாய் தனிமையில் அமர்ந்திருந்த கோவிந்தவர்மன் மெல்லத் தலைதூக்கி அந்தக் கார் பருவச் சூழலை வெறித்து நோக்கினான்.

எங்கோ, சோக மயமான பண்ணொலியொன்று மிக மென்மையாக எழுந்து ஒலிப்பது கேட்டது- அவனைப் போலவே சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும் அந்த எளிய இல்லத்தின் ஏதோ ஓர் அறையில் அமர்ந்து கடந்த காலத்தின் துன்பகரமான எண்ணங்களில் மூழ்கி அதனால் ஏற்பட்ட துயரப் புழுக்கத்தில் தன்னை மறந்து பாடிக்கொண் டிருக்கிறாள் போலும்!

நெல்வேலிப் போர் முடிவடைந்த உடனேயே பெருவள நல்லூரில் பரமேசுவரவர்மன் சளுக்கியருடன் போர் தொடுத்த சேதி கேட்டுப் பெரிதும் பரபரப்படைந்த கோவிந்த வர்மன், மேற்கொண்டு தான் என்ன செய்வது என்று குழம்பித் தவித்தபோது, பழையாறைச் சோழரிடமிருந்து சம்புவராயன் எடுத்துவந்த சேதி அவனைத் திக்குற வைத்துவிட்டது.

'பெருவளநல்லூர்ப் போரில் ஈடுபடுத்த பாண்டியப் படைகளைக் கொண்டுவர வேண்டாம்; அத்துடன் எனது சோழியப் படைகளையும் கலைத்துவிட வேண்டியது.'— பழையாறைச் சோழரின் இந்தத் திடீர் உத்தரவைக் கேட்டுக் குழப்பமும் கோபமும் அடைந்த அவன் நேரே பல்லவபுரத்துக்கு விரைந்து வந்தான். அங்கே, பழையாறைச் சோழர் தம்முடைய அந்த உத்தரவுக்கான காரணத்தை விளக்கிச் சொன்னதைக் கேட்டதும் அவனது கோபமெல்லாம் பரமேசுவரவர்மன்மேல் திரும்பியது. 'தீய நோக்கம் கொண்ட துரோகி! நன்றி கொன்ற சுயநலக்கார பாவி!' என்றெல்லாம் அவனை மனத்துக்குள் வசை பாடிக் குமுறிப் பொங்கிய அவன் பழையாறைச் சோழரின் யோசனைப்படி பெருவள நல்லூர்ப் போர்முனைக்குப் போகாமல் இந்த ஆலம்பாக்கம் இல்லத்திலேயே தங்கியிருந்து விட்டான். பிறகு பல்லவ—சளுக்கியப் போரில் பரமேசுவரவர்மன் வெற்றி பெற்ற சேதியை அறிந்து உள்ளூற மகிழ்ச்சியடைந்தான் என்றாலும், அந்த மகத்தான வெற்றியில் தனக்குப் பங்கு இல்லாமல் போய் விட்டதே என்ற வருத்தம் அவனை வெகுவாக வாட்டிப் பிழியலாயிற்று. தன் சகோதரனே தன்னைச் செல்லாக் காசாக்கித் தனக்கு நிரந்தரமான அவமானத்தைத் தேடித் தந்து விட்டானே என்று அவன்மீது முன்னிலும் அதிகமான வெறுப்பையும் குரோதத்தையும் வளர்த்துக்கொண்ட அவனுக்கு வாழ்க்கையே கசந்து விட்டது. அதனால் வெளியே தலைகாட்டவும் வெட்கி இந்தச் சிறு இல்லத்திலேயே அடைந்து கிடந்த அவனை, சோழ இளவரசி இளங்கோப்பிச்சி மெல்ல மெல்லத் தேற்றித் தன் அன்பின் காந்த வட்டத்துக்குள் ஐக்கியப்படுத்திக்கொண்டாள். அவளது காதல் அரவணைப்பிலே தன் துயரங்களையெல்லாம் மறந்து— அவற்றின் அடிப்படைகள் அனைத்தும் அற்பமானவை என்ற போக்கில்—உல்லாசமாக நாட்களைக் கடத்தி வந்த அவனுக்கு இன்று மீண்டும் பழைய கவலைகள் தோன்றி விட்டன. அந்தத் துன்ப மயமான கவலைகளில் தோய்ந்து தான் இதோ, துவண்டு உட்கார்ந்திருக்கிறான்.

இத்தனை காலமும் தன் சகோதரனான பரமேசுவர வர்மன் மீது அளப்பரிய அன்பும், பாசமும், பக்தியும், பணிவும், மதிப்பும், மரியாதையும் வைத்து நேசித்து வந்த அவன் இப்போது அந்த அளவுக்கு அவனை வெறுத்து விரோதிக்கும் படியாக, பழையாறைச் சோழர் அவனிடம் அப்படி என்னதான் சொல்லியிருப்பார்?

அந்த விஷயத்தை அவன் மனத்தால் நினைத்துப் பார்க்கவே கூசினான். அப்படி நினைத்துவிட்டாலோ அவனுடைய நெஞ்சம் எரிமலையாகக் குமுறும். இப்போது அத்தகைய குமுறல் ஏற்பட்டுவிடவே, "இருக்கட்டும், இருக்கட்டும்! எல்லாவற்றுக்குமாகச் சேர்த்து அவரைப் பழி வாங்காமல் விடமாட்டேன்!" என்று ஆவேசக் கொந்தளிப் புடன் வாய்விட்டுக் கறுவினான்.

"பல்லவ இளவரசர் யாரைப் பழி வாங்க இத்தனை பயங்கர சபதம் ஏற்கிறார்?"

துணுக்குற்றுத் தலைநிமிர்ந்த கோவிந்தவர்மன் அங்கே இளநகையுடன் வந்து நின்ற இளங்கோப்பிச்சியைப் பார்த்துச் சினம் நீங்கியவனாய் எழுந்து சென்று அவளது மலர்க் கரத்தை மிருதுவாகப் பற்றி, "உன் தந்தையார் வந்துவிட்டாரா, இளவரசி?" என்று ஏதோ ஓர் அவசர உணர்ச்சியுடன் வினவினான்.

"அவரை ஏன் இவ்வளவு ஆர்வத்தோடு எதிர்பார்க் கிறீர்கள்?" என்று மெல்லச் சிரித்துக் கேட்டாள் இளங்கோப் பிச்சி.

"என்னுடையவும் அவருடையவும் எதிர்காலத்தைப் பற்றிய முடிவு ஒன்றை என்னிடம் இன்று தெரிவிப்பதாகச் சொல்லிச் சென்றார். எனவேதான் அவரை ஒவ்வொரு விநாடியும் எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறேன்."

ஆழ்ந்த கவலையுடன் அவலப் புன்முறுவல் பூத்துப் பெருமூச்சுவிட்ட இளங்கோப்பிச்சி, "சிலருடைய வாழ்க்கை யில் விதி குறுக்கிட்டுத் துன்பங்களை விதைக்கிறது; சிலர் தம்

வாழ்க்கையில் தாமே குறுக்கிட்டு வேதனைகளை விளைவித்துக் கொள்கிறார்கள்!" என்று எங்கோ பார்த்தவாறு தணிந்த குரலில் முணுமுணுத்தாள்.

"அப்படியானால் நானும் பழையாறைச் சோழரும் தவறான முடிவில் இருக்கிறோம் என்பது உன் எண்ணமா, இளவரசி?" என்று ஆத்திரத்துடன் படபடத்துக் கேட்டான் கோவிந்தவர்மன்.

''உண்மைகளைச் சிலர் தாமே தேடிச் சென்று அறிவார்கள்; மற்றும் சிலருக்குக் காலம்தான் அவற்றை எடுத்துக்காட்டி உணர்த்தும்!'' என்று இதமாகக் கூறிப் புன்னகை புரிந்த இளங்கோப்பிச்சி, ''என் தந்தையார் வந்திருக்கிறார். அதைத் தெரிவிக்கத்தான் இங்கு வந்தேன்" என்றவாறு அவன் கரத்தைப் பற்றி அழைத்துச் சென்றாள்.

அந்த அழகிய இல்லத்தின் முன்வாசல் வேலியோரம் பச்சைக் குடை விரித்தாற்போல் வளர்ந்து நின்ற பவழமல்லி மரமொன்றின் அடியில் சிறியதொரு குழி பறித்திருக்க, அதன் எதிரே சோகமே வடிவாக ஒற்றை முழந்தாளிட்டு அமர்ந்திருந்த பழையாறைச் சோழர், நீண்ட சதுரப் பலகை போன்ற கல் ஒன்றை நிமிர்த்திப் பிடித்தவாறு அதையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார். அவருக்குச் சற்று அப்பால் ஆபத்துதவி சம்புவராயன் கையில் ஒரு மண்வெட்டி யுடன் தலைகுனிந்து நின்றுகொண்டிருந்தான்.

ஆவலும் பரபரப்புமாக விரைந்துவந்த கோவிந்த வர்மன் இந்தக் காட்சியைக் கண்டு திகைப்புற்றவன .ய் அப்படியே சமைந்து நின்றுவிட்டான். அவனுக்குப் பின்னால் வந்த இளங்கோப்பிச்சியும் அவனது கரத்தை இறுகப் பற்றிக் கொண்டு நின்றாள். அவ்விருவரின் கண்களும், பழையாறைச் சோழர் நிமிர்த்திப் பிடித்திருந்த கல்லை வியப்புடன் நோக்கின.

அது ஒரு வீரக் கல். கடமை தவறாது அரிய வீரச் செயல் நிகழ்த்தி உயிர் துறந்தோருக்காக அவரது பெயரும் பீடும் எழுதி

நாட்டப்படும் நினைவுச் சின்னம் அது. அந்தக் கல்லில் ஆபத்துதவி இளங்காரிக்குடையானின் அன்னையான மூதாட்டி அநந்தமதியின் உருவம் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பெற்றிருந்தது. அவ்வுருவத்தின் இரு பக்கமும் இரண்டு குத்து விளக்குகள்; பின்னால் ஒரு பழக்கூடையும், ஒரு பானையும், ஒரு கத்தியும்; அவள் வீரசொர்க்கம் அடைந்தாள் என்பதற்கு அறிகுறியாக அவளது தலையின் இருபுறமும் இரண்டு கவரிகள்—இவை யாவும் அந்தக் கல்லில் அழகுறச் செதுக்கப்பெற்றிருந்தன. அவற்றின் கீழே, 'சளுக்கிய விநயாதித்தனின் வாளுக்குப் பலியாகவிருந்த பல்லவக் காடவன்மாதேவியையும், சோழ இளங்கோப்பிச்சியையும் காப்பதன் பொருட்டுத் தன் உயிரை நீத்த அநந்தமதி அம்மை இங்கே அதீதகரம் செய்விக்கப்பட்டாள்' என்னும் வரிகள் வெட்டப்பெற்றிருந்தன. கண் கலங்கி நீர் துளிக்க அவ்வீரக் கல்லையே பார்த்துக்கொண்டிருந்த பழையாறைச் சோழர், அதனைக் குழியில் நிமிர்த்தி வைத்துத் தம் கையாலேயே மண்ணைத் தள்ளி நட்டுவிட்டு நிமிர்ந்து, சுற்றிலும் பாயாக உதிர்ந்து கிடந்த பவழமல்லிப் பூக்களை வாரித் தூவியவாறு, "வீரத்தாயே! உன் வீரம் செறிந்த மணித் திரு வயிற்றில் நான் மைந்தனாகப் பிறக்கவில்லையே என்பதற்காக ஏங்குகிறேன்! ஆயினும் நீ பிறந்த வீரத் தமிழ்மண்ணில் நானும் பிறந்திருக்கிறேன் என்பதை எண்ணி ஆறுதல் அடைகிறேன்! வாழ்க, உன் வீரம், வாழ்க, உன் தியாகம்!" என்று குரல் தழுதழுக்கக் கூறிக்கொண்டே எழுந்து நின்றார்.

"பழையாறைச் சோழரின் வீர வழிபாட்டில் பங்குபெற வாய்ப்புக் கிடைத்தது பற்றி மகிழ்ச்சியடைகிறேன்."

சட்டென்று திரும்பினார் பழையாறைச் சோழர். அங்கே, அப்போதுதான் தம் குதிரையைவிட்டு இறங்கிப் புன்னகையுடன் வந்துகொண்டிருந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

# 110

## பிணக்கு ஏன்?

"வெற்றி வீரர் வந்திருக்கிறாரோ? வரவேண்டும், வரவேண்டும்!" என்று குத்தலாகக் கூறி விஷமச் சிரிப்புச் சிரித்த பழையாறைச் சோழர் அலட்சிய மிடுக்குடன் நடந்துபோய் அந்த இல்லத்தின் சித்திரத் திண்ணைமீது சாய்ந்து நின்றார். கோவிந்தவர்மனோ வெறுப்பும் கோபமுமாக முகத்தை வேறுபக்கம் திருப்பிக் கொண்டான். இந்தத் தர்மசங்கடமான நிலையைக் கண்டு திகிலடைந்து தவித்த இளங்கோப்பிச்சிக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை; அம்மூவரையும் பயப்பிராந்தியுடன் பார்த்தவாறு பின்னால் நகர்ந்து ஒரு தூணின் மறைவில் போய் ஒடுங்கி நின்றாள்.

இதையெல்லாம் கவனியாத முத்தரையர் அந்த வீரக் கல்லின் எதிரே சென்று நின்று அதில் செதுக்கியிருந்த அநந்த மதியின் உருவத்தையே விழியசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தார். துக்கத்தால் அவர் முகம் வெளிறியது. கண்கள் இலேசாகக் கலங்கி நீர் கோத்தன. இரத்தினப் பரல்கள் போல் கொட்டிக் கிடந்த பவழமல்லிப் பூக்களை இரு கைகளாலும் வாரி அவ்வீரக் கல்லின் அடியில் பக்தி பூர்வமாக வைத்துவிட்டு ஆழ்ந்த பெருமூச்சுடன் திரும்பினார். அங்குள்ள சூழ்நிலையைக் கண்டு அவர் எவ்விதப் பரபரப்பும் அடைந்ததாகத் தெரியவில்லை. 'எல்லாம் எதிர்பார்த்த மாதிரியே இருக்கிறது' என்பது போன்ற ஒரு புன்னகைதான் அவர் முகத்தில் அரும்பியது. ஒவ்வொருவரையும் வெகு அக்கறையாக கூர்ந்து கவனித்தவாறு கம்பீரமாக நடந்து வந்த

அவர், "என் மதிப்புக்குரிய சோழ இளவரசியார் நலம் தானே என்று அன்பும் பாசமும் பரிமளித்த குரலில் வினவினார்.

அழகாகக் கரம்கூப்பி வணங்கிய அவள், "சந்திரலேகைச் சிற்றரசரின் அன்பாசியால் நன்னலமே!" என்று மென்மையாகப் பதிலிறுத்தாள்.

"தம்முடையவும் தமது நாட்டின் மக்களுடையவும் அன்னையாரான காடவன்மாதேவியை மீட்டுக் காத்துக் கொடுத்த சோழ இளவரசியாருக்கு மாமன்னர் பரமேசுவர வர்மன் தம் மனப்பூர்வமான நன்றியை என்மூலம் சமர்ப்பித் திருக்கிறார்.

"கிடைக்கப்பெறாத பெரும் பேறாக இதை ஏற்கிறேன் ஐயா!" என்று உள்ளார்ந்த குதூகலத்துடன் முகம் மலர்ந்து கூறினாள் இளங்கோப்பிச்சி.

கோவிந்தவர்மனும், பழையாறைச் சோழரும் அவளைச் சுட்டெரித்து விடுவதுபோல் விழித்துப் பார்த்துவிட்டு வெடுக்கென்று முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொண்டனர்.

முத்தரையர் மெல்லச் சிரித்தார். பிறகு சற்றுப் பின்னால் நகர்ந்து வந்து அவ்விருவரையும் மாறி மாறிப் பார்த்தவாறு அமைதியாகச் சொன்னார்: "அடிமைத் தளையிலிருந்து விடுபட்டுள்ள பல்லவ நாட்டின் சுதந்தர மண்ணில் நின்று என் அருமை நண்பர் பழையாறைச் சோழரையும், என் அன்புக்குரிய பல்லவ இளவரசரையும் இன்று சந்திக்க நேர்ந்ததுபற்றி நான் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்!"

எங்கும் ஆழ்ந்த நிசப்தம் சூழ்ந்தது. மெல்லத் தொண்டையைக் கனைத்துக்கொண்ட முத்தரையர் மேலும் சொன்னார்: "ஆனால், அந்த மகிழ்ச்சியில் திளைக்கவிடாத படி விதியின் கொடிய கரம் குறுக்கிட்டு என்னைத் தடுத் திருப்பதை எண்ணி வருந்தவும் செய்கிறேன். ஆம், அன்பர் களே! பழம்பெருமை வாய்ந்த பல்லவ சாம்ராஜ்யத்தின் வீழ்ந்துபட்ட நந்திக் கொடி மீண்டும் விண்முட்ட எழுந்து நின்று பட்டொளி வீசிப் பறக்கும் இந்த நன்னாளைப்

பொன்னாளாகக் கொண்டாடிக் களிக்க முழு உரிமைபெற்ற மூலவர்களை மூன்றாம் மனிதனான நான் அந்த உரிமையை நினைவுபடுத்தி அழைக்கவேண்டிய நிலைக்கு ஆளாகி நிற்பதை எண்ணியே அப்படி மனம் நைந்து வருந்துகிறேன்."

பாறை வெடித்தாற்போன்ற ஒலி; பழையாறைச் சோழர்தாம் அவ்வாறு சிரித்தார். "நல்ல நாடகம் இது! இந்த வேடிக்கை நாடகத்தைக் காண விரும்பாமல்தான் முதலிலேயே எங்கள் முடிவைத் தெரிவித்து அனுப்பினோம். மீண்டும் அதே நாடகத்தை இங்கு நடத்த வந்திருப்பது எங்களை மேலும் அவமானப்படுத்துவதாகவே எனக்குத் தோன்றுகிறது" என்று கோபமும் வெறுப்புமாகக் கூறி மீண்டும் சிரித்தார் அவர்.

முத்தரையரின் முகம் சுண்டிச் சிறுத்தது. ஆயினும் தம்மைச் சமாளித்துக்கொண்டு மிகவும் நிதானமாகச் சொன்னார்: "நாடகம் அல்ல, நண்பரே! நல்ல மனங்களின் அன்புக் குரலே தங்களது செவிகளில் இப்போது ஒலிக்கிறது. காஞ்சியில் நடைபெறவிருக்கும் வீராபிஷேக முடிசூட்டு விழா வைபவத்தைத் தாங்களும் தங்கள் மருகரும் முன்னின்று நடத்திச் சிறப்பிக்க வேண்டும் என்பது மாமன்னர் பரமேசுவர வர்மரின் பெருவிருப்பம். இந்த விருப்பத்தைத் தம் வாய்மொழி களாலேயே வெளிப்படுத்தி அவற்றைத் தங்களிடம் சேர்ப்பிக்கவே என்னை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார்."

பழையாறைச் சோழர் இதைக் கேட்டு ஒரு பயங்கர உறுமலுடன் தலையை வேகமாக ஆட்டினார்: "வெற்றியா? வீராபிஷேகமா? அப்படி யாருக்காவது, ஏதாவது நடந்தால் அதற்கும் எங்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை! அதிதல் கலந்து கொள்ளக்கூடிய எந்த உரிமையும் எங்களுக்கு இல்லை! இதைப் போய்த் தங்கள் மாமன்னரிடம் கூறுங்கள்!"

111

# உரிமைப் புயல்

ஆச்சரியத்தால் பிரமித்து நின்ற பெரும்பிடுகு முத்தரையருக்கு நெஞ்சு அடைத்துக்கொண்டது போன்ற வேதனை உண்டாகியது. 'பல்லவ நாடு அடைந்துள்ள மகத்தான வெற்றியையும், அதைத் தேடித் தந்த மாமன்னர் பரமேசுவரவர்மரையும் இந்த மனிதர் எத்தனை எளிதாக இழித்துப் பழித்துப் பேசுகிறார்!'—பொங்கிக் குமுறிய கோபத்தைச் சிரமப்பட்டு அடக்கிக்கொண்ட அவர் அமைதியாகக் கேட்டார்: "ஆமாம், அன்பரே! உங்களின் இந்த உறவு—உரிமை முறிவு பேச்சுக்கான காரணத்தை நான் அறியலாமா?"

பழையாறைச் சோழர் தம் புஜங்களை அலட்சியமாகக் குலுக்கி முகத்தைச் சுளித்துக்கொண்டு வெடித்த குரலில் சொன்னார்: "எங்கள் உறவையும் உரிமையையும் வெட்டி முறித்துக்கொள்ளப் பலகாலம் திட்டமிட்டு அதில் வெற்றியும் பெற்றுவிட்ட பல்லவ மன்னரிடமே போய்க் கேட்க வேண்டிய கேள்வி இது!"

கண்களை மூடிச் சிறுபொழுது மௌனமாயிருந்த முத்தரையர், "என் அருமை நண்பர் சொல்வதுபோல் பரமேசுவரவர்மர் அப்படி எந்தத் திட்டமும் போட்டு எவருடைய உறவையும் உரிமையையும் முறித்துப் பறித்துக்கொண்டதாக எனக்குத் தெரியவில்லையே?" என்றார் நிதானமாக.

இவ்வளவு நேரம் வெறுப்பும் முறைப்புமாக விறைத்து நின்றுகொண்டிருந்த கோவிந்தவர்மன் சடாரென்று திரும்பி

அவரைச் சுட்டெரித்து விடுவதுபோல் விழித்து நோக்கி ஆத்திரச் செறுமலுடன் கூவினான்: "மெய்யாகவே உமக்கு ஒன்றும் தெரியாதா? அந்த நயவஞ்சக மனிதர் எங்களுக்குச் செய்த துரோகம்பற்றி உமக்கு ஒன்றுமே தெரியாதா?"

அவனுடைய ஆத்திரத்துக்கு அணைபோட முயலுகிறவர் போல் தலையையும் கையையும் வேகமாக ஆட்டியவாறு கடகடவெனச் சிரித்தார் பழையாறைச் சோழர், "கோபப்படாதீர்கள், இளவரசே! பாவம், இந்த அப்பாவி மனிதரின்மேல் கோபப்பட்டுப் பயனில்லை. ஏனென்றால், நம்மைப்போலவே இவரும் பல்லவ மன்னரின் வஞ்சனைக்கு உள்ளாகியிருப்பவர். நாம் அந்த வஞ்சனையைப் புரிந்துகொண்டு விட்டோம். இவர் இன்னமும் அதைப் புரிந்து கொள்ளாமல் இருக்கிறார். அல்லது தெரிந்தும் தெரியாத மாதிரி நடிக்கிறார். இதுதான் நமக்கும் அவருக்கும் உள்ள வித்தியாசம்" என்றார் குத்தலான குறும்புக் குரலில்.

"உண்மைகளை உண்மையாகவே புரிந்துகொள்ளாத வர்களை நம்பிவிடலாம்: ஆனால் அவை தெரிந்தும் தெரியாதது போல் நடிப்பவர்களைத்தான் நம்பவே கூடாது!" என்று வெறுப்புடன் முணுமுணுத்த கோவிந்தவர்மன் வெடுக்கென்று முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொண்டான்.

முத்தரையருக்கு நிஜமாகவே இப்போது ஒன்றும் புரியவில்லை. அவ்விருவரையும் மாறி மாறிப் பார்த்து விழித்தார் அவர்.

விஷமச் சிரிப்புடன் ஓரடி முன்னால் வந்து அவரை உற்று நோக்கிய பழையாரைச் சோழர்,"நண்பரே! பல்லவ நாட்டின் வெற்றியில் பங்கு பெற்ற வீறாப்போடு வந்து நிற்கும் உங்களிடம் ஒரு கேள்வி கேட்கிறேன்: அதற்கு நேரான பதிலை உங்களால் சொல்ல முடியுமா?" என்று அடித் தொண்டையில் விளித்தார்.

இடுப்பின்மேல் இரு கைகளையும் ஊன்றி நின்ற முத்தரையர் மௌனமாக அவரை ஏறிட்டுப் பார்த்தார்.

"வீழ்ந்துபட்ட பல்லவ நாட்டின் விடுதலை ஒன்றையே குறிக்கோளாகக்கொண்டு, என் எதிர்காலத்தைப் பற்றியோ என்மீது ஏற்படக்கூடிய இழிப்புப் பழிப்புக்களைப்பற்றியோ, சிறிதும் கவலை கொள்ளாமல், எனது உடல் பொருள் ஆவி மூன்றையும் பணயமாக வைத்துச் சளுக்கிய சர்ப்பங்களோடு வஞ்சகமாகச் சேர்ந்து, அவர்கள் நம்மை நிரந்தரமாக நசுக்கி வைக்கப் போட்டிருந்த ஆலகால விஷத் திட்டங்கள் பலவற்றையும் தகர்த்து, அவர்களைக்கொண்டே அவர்களது அழிவுக்கு வழி வகுக்கும் வகையில் அவர்களைப் பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கத் தூண்டியதுடன் நில்லாமல், அவர்களுக்கு எதிராக நான் போர்க்கருவிகளையும் சேகரித்து வைத்தேன்; என்னுடைய இரகசிய வேண்டுகோளுக்கு இணங்கிப் பாண்டிய மன்னன் நெடுமாறரும் தமது நாட்டின் பாதுகாப்புக்காக மட்டுமல்லாது பல்லவ நாட்டின் விடுதலையையும் மனத்தில் கொண்டே சளுக்கியருடன் நெல்வேலியில் போர் தொடுத்தார்: இதே இலட்சியத்துக்காக நான் திரட்டி அனுப்பியிருந்த சோழியப் படைகளுக்குத் தலைமை தாங்கி நெல்வேலிப் போரில் குதித்தார் பல்லவ இளவரசர் கோவிந்தவர்மர்; என்னைப் போலவே என் வீர மகளும் தன் உயிரைத் திரணமாக மதித்துப் பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருந்த காடவன் மாதேவியை மீட்டதோடல்லாமல், அங்கே கொட்டமடித்துக் கொண்டிருந்த சளுக்கிய விநயாதித்தனையும் அவனது அரக்க வீரர்களையும் வெகு சாமர்த்தியமாக விரட்டியடித்தாள்; நீங்களும் பல இன்னல்-இடுக்கண்களுக்கு உட்பட்டு ஓர் இரகசியப் படையணியைத் திரட்டிக் கொண்டிருந்தீர்கள். இப்படியெல்லாம் நாம் பல வகையிலும் முயன்று பல்லவ நாட்டின் விடுதலைப் போருக்கு அடித்தளம் அமைத்துக் கொண்டிருந்த வேளையில், பரமேசுவரவர்மர் நமக்குத் தெரியாமல்—நம்மிடம் ஒரு வார்த்தையும் சொல்லாமல்—நமது யோசனையையும் கேளாமல்—ஆந்திர மன்னன்

விஷ்ணுவர்த்தனனிடம் போய்ப் படையுதவி பெற்று வந்து பெருவளநல்லூரில் தனித்து நின்று போர் தொடுக்கக் காரணம் என்ன? இதற்குக் காரணம் என்ன நண்பரே?"

கோபக் குமுறலுடன் இவ்வாறு கேட்ட பழையாறைச் சோழரை அநுதாபத்தோடு பார்த்த முத்தரையர் தணிந்த குரலில் கூறினார்: "இராஜ தந்திர—யுத்த தந்திரக் கலைகளில் வல்லவரெனப் புகழ்பெற்ற பழையாறைச் சோழரா இப்படிக் கேட்கிறார் என்று ஆச்சரியப்படுகிறேன். ஆயினும் இந்தக் கேள்விக்கு என்னுடைய ஒரே பதில் என்னவென்றால், பரமேசுவரவர்மர் அவ்வாறு செய்தது சரி என்பதே! அதாவது, நமது முயற்சிகளால் உருவான நல்ல சந்தர்ப்பத்தைச் சரியாகப் பயன்படுத்திக்கொள்ளவே அவர் ஆந்திர மன்னரிடம் படையுதவி பெற்று வந்தார். இந்த மாபெரும் இராஜ தந்திரத் திட்டத்தை நம்மிடம் தெரிவிப்பதற்கு அப்போதைய சூழ்நிலை அவருக்கு இடம் தரவில்லை. இதுதான் நடந்த உண்மை."

"இல்லை! இல்லை!" என்று திடீரெனக் கூவினான் கோவிந்தவர்மன். "பல்லவ நாட்டின் விடுதலைக்காகப் பழையாறைச் சோழரும் நானும் முயற்சி செய்ததைப் பரமேசுவரவர்மர் விரும்பவில்லை. அந்த முயற்சி பலனளித்தால் அதன் பெருமையெல்லாம் எங்களைச் சார்ந்து விடுமே என்பதுதான் அதற்குக் காரணம். அதனால்தான் அவர் ஆரம்ப முதலே எங்கள் நடவடிக்கை எதற்கும் அநுமதியோ ஆதரவோ தராமல் மௌனம் சாதித்து வந்தார். இதுவும் தவிர, நாங்கள் ஏதோ உள் நோக்கம் கொண்டு அந்த முயற்சியில் ஈடுபடுவதாகவும் அவர் கருதினார். அதாவது, பாண்டிய மன்னரின் உதவியோடு சளுக்கிய ஆதிக்கத்தி லிருந்து பல்லவ நாட்டை விடுவித்து நாங்கள் இருவரும் அதைக் கூறுபோட்டுக் கொண்டு விடுவோமோ என்று பயந்தார். இதையெல்லாம் உத்தேசித்துத்தான் எங்களை அவர் உதாசீனப்படுத்திவிட்டு எங்களுக்குத் தெரியாமலே ஆந்திர நாட்டுக்குப் போய்ப் படையுதவி பெற்று வந்து சளுக்கியரைத்

தாமே எதிர்த்துப் போர் நடத்தி அதில் வெற்றியும் பெற்று விட்டார். இதுதான் உண்மை; இதுவே முற்றும் உண்மை."

"இப்படியெல்லாம் நீங்களாக நினைத்துக்கொண்டு தான் பெருவளநல்லூர்ப் போரில் கலந்துகொள்ளாமல் இருந்து விட்டீர்களோ?"

"ஆம், ஐயா! அந்தச் சுயநலக்கார—சூதுமதி கொண்ட வஞ்சக மனிதரின் உறவே இனி வேண்டாம் என்று நாங்கள் ஒதுங்கியிருந்து விட்டோம்."

"இளவரசே! உங்கள் மதிப்புக்குரிய தமையனாரைப் பற்றி நன்கு அறிந்தவரான நீங்களே இப்படிப் பேசலாமா? பெருவளநல்லூர்ப் போரில் நீங்கள் கலந்துகொள்ளாததற்காக அவர் சிறிதும் வருந்தவில்லை. ஏதோ போர்த் தந்திர முறையில் அப்படி ஒதுங்கியிருந்ததாகவே இன்றும் நம்பிக் கொண்டிருக் கிறார். பல்லவ நாடு பெற்ற வெற்றியின் முழுப் பெருமையும் உங்கள் இருவரையுமே சாரும் என்று அவர் நன்றிப் பெருக்குடன் மனப்பூர்வமாகச் சொல்கிறார். அத்தகைய ஓர் உத்தமரின்மேல் இவ்வளவு பெரிய அவதூறுகளை நீங்கள் சுமத்துவதை என்னால் பொறுக்கவேமுடியவில்லை."

"எல்லாம் வேஷம்! ஏமாற்றுப் பேச்சு!"

முரட்டுக் காளைபோல் திமிறலிட்டுக் கூவிய கோவிந்த வர்மனை வியப்புடன் பார்த்துக்கொண்டு நின்ற முத்தரையர், "பல்லவ இளவரசரா இப்படிப் பேசுகிறார்? இந்த அளவுக்கு அவரால் கற்பனை செய்ய முடியும் என்பது இந்நாள்வரை எனக்குத் தெரியாதே!" என்றார் வேதனை செறிந்த கேலிக் குரலில்.

"பொய்யான பெருமையில் திளைத்திருக்கும் முத்தரை யருக்கு நாங்கள் சொல்வதெல்லாம் கேலிக்குரிய கற்பனை யாகத் தோன்றுகிறதோ?"

"இளவரசே! இனியும் உங்களுடன் வாதிட்டுக்கொண் டிருக்க நான் விரும்பவில்லை. தயவுசெய்து உங்கள் கோப தாபங்களையெல்லாம் மறந்துவிட்டு என்னோடு காஞ்சிக்குப்

புறப்படுங்கள்" என்று அன்பும் பணிவுமாக வேண்டினார் முத்தரையர்.

"முடியவே முடியாது! எங்களுக்கு உரிமையும் உறவுமற்ற அந்த வெற்றி விழாவில் கலந்துகொள்ள நாங்கள் ஒரு போதும் சம்மதியோம்!" என்று பழையாறைச் சோழரும் கோவிந்த வர்மனும் ஏககாலத்தில் இரைந்து கூவினர்.

முத்தரையரின் முகம் கறுத்தது. "அப்படியானால் உங்கள் இருவரின் தேச பக்தியும் ஒரு தனி மனிதரின்மீது கொண்ட விருப்பு—வெறுப்புக்களைச் சார்ந்துதானோ?" என்று மிடுக்காகத் தலைநிமிர்ந்து கேட்டார்.

"இல்லை, நண்பரே! எங்கள் மாசற்ற தேசபக்தி அவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்டது- அதனால்தான் இந்தப் போலியான வெற்றி விழாவில் கலந்துகொள்ள மறுக்கிறோம்" என்று கடுகடுப்புடன் பதிலிறுத்தார் பழையாறைச் சோழர்.

"போலியான வெற்றியா? இது என்ன, புதிய புதிர்?"

"ஆம், அன்பரே! பெருவளநல்லூர்ப் போரில் நாங்கள் கலந்துகொள்ளாத காரணத்தைச் சொல்லிவிட்டோம்; அதை மறந்து மன்னிக்கவும் தயாராக இருக்கிறோம். ஆனால் இந்த வெற்றி விழாவிலும், வீராபிஷேக முடிசூட்டு வைபவத்திலும் கலந்துகொள்ள மறுப்பதற்குக் காரணமே வேறு!" என்று கசந்த குரலில் கூறிப் பெருமூச்சு விட்டார் பழையாறைச் சோழர்.

## 112

# உறவும் பிளவு

திடுக்குற்ற முத்தரையர், "என்ன! இதற்கென்று ஒரு தனிக் காரணமும் உண்டா?" என்று மிகுந்த வியப்புடன் வினவினார்.

"ஆம், நண்பரே! அதுவே தலையாய காரணம்!" என்று எங்கோ பார்த்தவாறு அலட்சியமாகச் சொன்னார் பழையாறைச் சோழர்.

"அதனை நான் அறியலாமோ?"

"உங்கள் மூலமாகப் பரமேசுவரவர்மருக்கும் அதை அறிவிக்க விரும்புகிறேன்!" என்று சினத்துடன் கரகரத்த குரலில் பழையாறைச் சோழர் சிறுபொழுது மௌனத்துக்குப் பின் திடுமெனத் தலைதூக்கி அழுத்தந் திருத்தமாகக் கேட்டார்: "சளுக்கிய விக்கிரமாதித்தனிடம் அடிமைப்பட்டுக் கிடந்த பல்லவ நாட்டை மீட்பதற்காகப் பரமேசுவரவர்மர் யாரிடம் படையுதவி பெற்று வந்தார்?"

"ஆந்திர மன்னரிடம் என்பது உலகத்துக்கு மட்டுமல்ல, உங்களுக்கும் தெரிந்த விஷயமே!"

"அந்த ஆந்திர மன்னன் விஷ்ணுவர்த்தனன் யார்?"

"சளுக்கிய விக்கிரமாதித்தனின் ஒன்றுவிட்ட சகோதரன்; சளுக்கியப் பேரரசின் மேலாதிக்கத்துக்கு உள்ளடங்கிய ஒரு குறுநில மன்னர்."

"அப்படிப்பட்ட ஒருவன் தனது சகோதரனுக்கு எதிராகவும், தான் திரை செலுத்திவரும் நாட்டுக்கு விரோத மாகவும் தன் ஜன்மப் பகைவரெனக் கொண்டிருந்த பரமேசு

வரவர்மருக்குத் திடீரென்று படையுதவி அளிக்கக் காரணம் என்ன?"

"அவருடைய அருமை மகளான உத்தமசீலியின் வேண்டுகோளுக் கிணங்கியே அவ்வுதவியை அவர் அளித்தார் என்பது நாடறிந்த இரகசியம்!"

"அந்த ஆந்திர இளவரசி, பரமேசுவரவர்மருக்கு ஏன் படையுதவி பெற்றுத் தந்தாள்?"

"அவரை அவள் காதலித்தது உள்ளார்ந்த காரணம்; பல்லவ நாட்டில் சளுக்கியர் நடத்திய பேயாட்சியைக் காணச் சகியாமற்போனது வெளிப்படையான காரணம்."

"அவளைப் பல்லவ நாட்டுக்கு வரவழைத்தது யார்?"

"சளுக்கிய விக்கிரமாதித்தன்."

"அவள் இங்கு வந்த நோக்கம்?"

"சமண சமயத்தைப் பல்லவ நாட்டில் பரப்ப வேண்டும் என்பது அவளுடைய நோக்கம்; அதைக் கொண்டு தன் ஆட்சியதிகாரத்தை நிலைநாட்டிக்கொள்ள வேண்டும் என்பது விக்கிரமாதித்தனின் திட்டம்."

"அவளுடைய நோக்கம் நிறைவேறியதா?"

"இருவரின் நோக்கமும் நிறைவேறவில்லை."

"இதை நினைவில் வைத்துக்கொண்டு இப்போது நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் கூறுங்கள், நண்பரே!" என்று ஒரு கணம் பேச்சை நிறுத்திய பழையாறைச் சோழர் உரத்த குரலில் கேட்டார்: "ஆந்திர மன்னரிடம் படையுதவி பெற்ற பரமேசுவரவர்மர் அதற்குப் பிரதியுபகாரமாக என்ன செய்வதாய் வாக்களித்தார்? அல்லது அவரிடமிருந்து அவன் எப்படிப்பட்ட பிரதிபலனை எதிர்பார்த்தான்?"

"அந்த மாபெரும் தார்மீக உதவியில் பிரதியுபகாரம் என்ற பேச்சே எழவில்லை. அதில் எத்தகைய வாக்குறுதியும் கோரிக்கையும் இடம் பெறவில்லை. பல்லவ மன்னருக்குப் படையுதவிஅளித்ததன் மூலம் ஆந்திரநாடு இப்போது 'கீழைச்

சளுக்கிய நாடு' என்னும் பெயரில் ஒரு தனிச் சுதந்தர நாடாக விளங்குகிறது. அவ்வளவே."

"இத்தனைக்கும் காரணமான ஆந்திர இளவரசி உத்தம சீலியும் பரமேசுவர்மரிடம் எந்தப் பிரதிபலனையும் எதிர் பார்க்காமல்தான் தன் தந்தையிடம் படையுதவி பெற்றுத் தந்தாளோ?"

"அப்படிச் சொல்ல முடியாது. ஆனால் அரசியல் ரீதியில் எந்தப் பிரதிபலனையும் அவள் எதிர்பார்க்கவில்லை என்பது மட்டும் நிச்சயம். இடக் கண், வலக் கண்ணுக்கு உதவுவது போன்ற விஷயம் அது."

"அதாவது...?"

"ஆந்திர இளவரசியின் இதயம் பரமேசுவரவர்மருக்குச் சொந்தமானது. அவள் அவரைக் காலிக்கிறாள்."

"அவரை அவள் காலிப்பதன் நோக்கம்?"

"காதலுக்கு எத்தகைய நோக்கமும் இருப்பதில்லை!"

"திருமணம் என்ற நோக்கம் கூடவா?"

"காதலின் முதிர்ச்சி நிலையே திருமணம்! அதை அதன் நோக்கம் என்று சொல்ல முடியாது."

"அதாவது... பல்லவ மன்னரைத் திருமணம் செய்து கொள்வதற்காக அவள் காதலிக்கிறாள்?"

"திருமணத்துக்காக யாரும் காதலிப்பதில்லை; காதலித்த தற்காகவே தான் திருமணம் ஏற்கப்படுகிறது!"

"அதாவது...பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர், ஆந்திர இளவரசியைக் காதலித்ததற்காக அவளைத் திருமணம் செய்து கொண்டு தமது பட்டமகிஷியாக்கிக் கொள்ளப் போகிறார்; அப்படித்தானே?"

# 113

## 'எதற்கும் தயார்!'

**உ**ற்சாக மகிழ்ச்சியுடன் நிமிர்ந்த முத்தரையர் கலகலப் பான குரலில், "ஆம் அன்பரே! வீராபிஷேக முடிசூட்டு விழா வைபவத்துக்குப் பின் நிகழவிருக்கும் அந்த மாபெரும் புனித நிகழ்ச்சியை நான் மட்டுமல்ல, இந்த நாடே ஆவலுடன் எதிர் பார்க்கிறது" என்றார்.

"அப்படி ஓர் அநியாய நிகழ்ச்சி நிகழவிருப்பதை அறிந்து தான் நாங்கள் அந்த வீராபிஷேக முடிசூட்டு விழா வைபவத்தில் கலந்துகொள்ள மறுக்கிறோம் நண்பரே! அது தான் நாங்கள் காஞ்சிக்கு வர மறுப்பதன் இரண்டாவது காரணம்!" என்று இடிபோல் முழங்கினார், பழையாறைச் சோழர்.

முத்தரையர் இதைக் கேட்டு வெலவெலத்துவிட்டார். ஒரு கணம் ஒன்றுமே தோன்றாமல் திகைப்புற்று நின்ற அவர், "நீங்கள்....நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று குழறினார்.

"பல்லவ மன்னர் ஆந்திர இளவரசியை மணக்கப் போவதை நாங்கள் வன்மையாக எதிர்க்கிறோம்" என்று சீறினார் பழையாறைச் சோழர்.

"திருமணம் என்பது ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் மட்டுமே உரிய சொந்த விஷயம்; அதில் மூன்றாம் மனிதர் தலைடுவது நியாயமல்லவே!"

"இது சாதாரண குடிமக்களுக்குப் பொருந்திய நியாயம்; ஒரு மாபெரும் நாட்டின் மன்னரது திருமணம் அப்படிப்

பட்டதல்ல. ஏனென்றால், அதிலே அந்த நாட்டின் எதிர் காலத் தலைவிதி அடங்கியிருக்கிறது.”

“உத்தமசீலியைப் பரமேசுவரவர்மர் மணப்பதால் பல்லவ நாட்டுக்கு அப்படி என்ன பாதகம் ஏற்பட்டுவிடும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?”

“இதில் மாபெரும் சதி ஒன்று அடங்கியிருக்கிறது நண்பரே! நீங்களே நன்றாக சிந்தித்துப் பாருங்கள்; சமண சமயத்தைப் பரப்பவேண்டும் என்ற நோக்கத்துடன் பல்லவ நாட்டுக்கு வந்தவள் உத்தமசீலி. அதே இலட்சியத்துக்காகத் தன் பொக்கிஷம் முழுவதையும் திறந்து கொட்டத் தயாராக இருப்பவன் ஆந்திர மன்னன். ஆனால் அந்த முயற்சி பலிக்க வில்லை. அதற்குப் பிறகுதான் ஆந்திர இளவரசி பரமேசுவர வர்மரைக் காதலித்திருக்கிறாள். விஷ்ணுவர்த்தனனும் அவருக்குப் படையுதவி அளித்திருக்கிறான். இவற்றின் நோக்கம் என்னவாக இருக்கும்? பங்காளியின் மூலம் சாதிக்க முடியாத காரியத்தைக் காதலனின் வாயிலாகச் சாதிக்கலாம் என்பது இதிலிருந்து புலப்படவில்லையா? ஆந்திர இளவரசி ஒரு சாதாரணப் பெண் அல்ல; அவள் பயங்கர சதிகாரி. சமண சமய வெறி கொண்டவள். பல்லவ நாட்டை முழுக்க முழுக்கச் சமண சமயச் சார்புள்ளதாக்கிவிட வேண்டும் என்று அவள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாள். அதற்காகவே பரமேசுவரவர்மரின் மனத்தை மயக்கி அவரைக் காதலிக்கவும் முற்பட்டிக்கிறாள்; அவளுடைய காதல் உண்மையானதல்ல; அது வெறும் சதி நாடகம். சமண சமய வளர்ச்சிக்காக நடத்தப்படும் சூழ்ச்சி நாடகம். அதிலே அவள் பெரும் பகுதி வெற்றியடைந்துவிட்டாள். பல்லவ மன்னர் ஏமாந்து விட்டார். அவளை அவர் மணந்து கொண்டால் பல்லவ நாட்டிலே வெகு விரைவாகச் சமணம் பரவிவிடும்; சைவ வைணவம் பூண்டற்றுப் போகும். அத்துடன், இப்போது விடுதலை பெற்றிருக்கும் பல்லவநாடு சளுக்கியரிடம் மீண்டும் நிரந்தரமாக அடிமைப்பட்டும்விடும். இந்தப் பரிதாப

நிலைமை ஏற்பட நாங்கள் ஒருபோதும் அனுமதிக்க மாட்டோம். இத்தனை காலமும் நான் பல்லவ மன்னருக்குப் பக்கபலமாக இருந்து வந்ததற்கும், அவரை அரியணையில் அமர்த்தப் பாடுபட்டதற்கும் அடிப்படைக் காரணமே இங்கு சைவம் தழைத்து ஓங்க வேண்டும் என்பதற்காகத்தான். சிவநேசச் செல்வரான பாண்டிய மன்னர் நெடுமாறர் பல்லவ நாட்டின் விடுதலைக்கு அநுகூலமாக நெல்வேலியில் சளுக்கியரை எதிர்த்துப் போரிட்டதற்கும் இதுதான் காரணம். எனவே, எங்களின் அந்த அடிப்படை இலட்சியம் சிதைவுறுவதற்கான எந்தக் காரியமும் நடைபெற நாங்கள் ஒருகாலும் சம்மதிக்க மாட்டோம்." — அனல் துண்டங்களைக் கக்குவதுபோல் இவ்வாறு பேசி நிறுத்தினார் பழையாறைச் சோழர்.

முத்தரையரின் உடல் வேர்த்துக் கொட்டியது. முகமோ சவமாக வெளுத்துச் சிறுத்தது. நெருஞ்சி முள் குவியலில் நிற்பதுபோல் நெளிந்து தவித்த அவர், "நண்பரே! ஆந்திர இளவரசியைப்பற்றி ஏதும் அறியாமல் இப்படிப் பேசுகிறீர்கள். அவள் பெயரில் மட்டும் உத்தமசீலி அல்லள்; பெண் குலத்தின் புனித குண சீலங்களெல்லாம் ஒருங்கு சேர்ந்து உருவான உத்தமமங்கை அவள்" என்று கண்கலங்க நாக்குழறக் கூறினார்.

பழையாறைச் சோழர் இதைக் கேட்டு உரக்கச் சிரித்தார். "என் அருமை நண்பர் சந்திரலேகைச் சிற்றரசரிட மிருந்து இத்தகைய பதிலே வரும் என்பது எனக்கு ஏற்கனவே தெரியும். ஆனால் அந்த விஷயத்தில் உங்களுடைய பேச்சையோ, என் மதிப்புக்குரிய சேதியக் கலைஞர் பரவாதி மல்லரின் கருத்தையோ நான் ஏற்க முடியாது. ஏனென்றால் நீங்கள் இருவருமே சமணர்கள் என்பதை நான் மறப்பதற் கில்லை."

வேல் பாய்ந்த சிங்கம்போல் சிலிர்த்துத் திமிறி நிமிர்ந்தார் முத்தரையர். அவரது கண்கள் தீப்பிழம்பாகச் சிவந்தன. "அன்பரே! உங்கள்மீது நான்அளவற்ற மதிப்பு

வைத்திருக்கிறேன். இனியும் உங்களுடன் பேசி அந்த மதிப்பை அழித்துக்கொள்ள விரும்பவில்லை. ஆயினும் ஒரு விஷயத்தை உங்களுக்கு நினைவுபடுத்திவிட்டுச் செல்கிறேன்: பெருவள நல்லூர்ப் போரில் புறமுதுகிட்ட சளுக்கிய விக்கிரமாதித்தன் மட்டும்தான் கந்தலாடையைச் சுற்றிக்கொண்டு உயிர் தப்பி ஓடிப் போனானே தவிர, அவனுடைய மைந்தனான இளவரசன் விநயாதித்தனும் தளபதி வில்வேலியும் இங்கேதான் இன்னமும் தலைமறைவாகத் திரிந்துகொண்டிருக்கிறார்கள். இந்நிலையில் உங்களின் இந்தப் போக்கு எத்தகைய விபரீதத்தை விளைவிக்கும் என்பதை நீங்களே நன்கு சிந்தித்துப் பாருங்கள்."

சரேலென்று திரும்பிய முத்தரையர் தம் புரவிமீது ஏறி அதைப் புயலெனச் செலுத்திச் சென்றார்.

இருண்ட வானத்தின் எங்கோ ஒரு மூலையிலிருந்து குமுறல் ஒலி கேட்டது. அவ்வப்போது மின்னற்கொடிகள் நெளிந்தோடி வானப் படுதாவைக் கிழித்துத் தைத்தன. யானைக் கூட்டம் போன்ற கருமுகில் அங்குமிங்குமாக அலைந்து மின்னல் பிளக்கும் திசைநோக்கி உருண்டு சென்று குவிந்தன. திடீரென்று கிளம்பி வீசிய சூறைக்காற்று உயரமான மரங்களை உலுக்கிச் சுழற்றி இரண்டொரு கிளைகளை முறித்துச் சாய்த்துவிட்டு ஓய்ந்தது.

இவையெல்லாம் பழையாறைச் சோழரின் கவனத்தைச் சிறிதும் ஈர்க்கவில்லை. சாலையின் தொலைதூரத்துக்கு அப்பால் முத்தரையருடைய குதிரை ஓடி மறைந்த பின்னும் அந்தத் திசைப் பக்கமே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த அவர், 'ஹூம்! எல்லாம் முன்கூட்டியே திட்டமிட்டு நடத்தப் படும் நாடகம்; இதற்கெல்லாம் நானா ஏமாறுவேன்?" என்று அலட்சியமாகத் தோளைக் குலுக்கிக் கொண்டு திரும்பி, அங்கே திகைத்துத் தலைகுனிந்து நின்று கொண்டிருந்த கோவிந்தவர்மனைப் பார்த்து, "கேட்டீர்களா, இளவரசே? உங்களிடம் நான் சொன்ன மாதிரிதான் நடக்கப் போகிறது!

வீராபிஷேக முடி சூட்டலுக்குப் பின் அந்தச் சூழ்ச்சிக்காரி ஆந்திர இளவரசியைத்தான் பல்லவ மன்னன் மணந்து கொள்ளப் போகிறாராம்!” என்றார் வெடித்த குரலில்.

“அநியாயம்! அக்கிரமம்!'' என்று பொங்கிவந்த ஆத்திரத்துடன் படபடத்தான் கோவிந்தவர்மன். “இந்த அநியாய காரியம் நடைபெற நாம் ஒருபோதும் இடம் தரலாகாது. எதற்கும் துணிந்து அந்தத் திருமணத்தைத் தடுத்தே ஆகவேண்டும்.”

அவனுடைய துடிப்பு நிறைந்த பேச்சை ஆமோதிப்பவர் போல் பலமாகத் தலையாட்டிய பழையாறைச் சோழர் எதைப் பற்றியோ ஆழ்ந்து சிந்தித்தவாறு வேலிப்புற வாயிலை நோக்கி நடந்தார். கோவிந்தவர்மனும் அவரைப் பின் தொடர்ந்தான்.

“இளவரசே! உங்களுக்கு இந்தப் பல்லவ நாட்டின் தேசீய நலனிலும் ஆன்மீக நலனிலும் அக்கறை உண்டு அல்லவா?'' என்று திடுமெனத் திரும்பிக் கேட்டார் பழையாறைச் சோழர்.

“அவற்றில் எப்போதுமே எனக்குப் பரிபூரண ஆர்வமும் அக்கறையும் உண்டு ஐயா!” என்று திண்மை வாய்ந்த குரலில் பதிலிறுத்தான் கோவிந்தவர்மன்.

“அவற்றுக்காக நீங்கள் எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருப்பீர்கள், அல்லவா?”

“உயிர்த் தியாகத்தைவிடப் பெரிய தியாகம் என்ன இருக்கிறது? அதற்கும் நான் தயாராகவே இருக்கிறேன்.”

“இல்லை, இல்லை, அந்த மாபெரும் நலன்களைக் காக்க அதனிலும் பெரிய தியாகம் ஒன்றைச் செய்ய வேண்டி நேரிடலாம்'' என்று அடித்தொண்டையில் கரகரத்த பழையாறைச் சோழர் அவனைக் கூர்ந்து நோக்கியவாறு மேலும் சொன்னார்: “ஆம், இளவரசே! அந்தப் பணியில் நீங்கள் முனைவீர்களானால் தேசத் துரோகி என்ற பட்டத்துடன் உங்களுக்கு ஆருயிர்ச் சகோதரரான

பரமேசுவரவர்மரின் இரத்த சொந்தத்தையும் நிரந்தரமாக இழக்கும்படி நேரிடலாம்.”

இதைக் கேட்டதும் கோவிந்தவர்மனின் உடல் அவனையும் அறியாமல் ஓர் அதிர்ச்சியுற்றுக் குலுங்கியது. தொண்டையில் ஏதோ வந்து அடைத்துக்கொண்ட மாதிரி திக்குமுக்காடித் திணறிய அவன், பின்னால் திரும்பி அந்த இல்லத்தின் சித்திரத் திண்ணைப் பக்கமாகத் தன் பார்வையை ஓட்டினான். இந்நேரம்வரை அங்கே தூணின் மறைவில் ஒடுங்கி நின்றுகொண்டிருந்த இளங்கோப்பிச்சி அப்போது தான் விருட்டென்று உள்ளே ஓடுவது தெரிந்தது. அந்தக் காட்சியைக் கண்ட அக்கணமே அவனுக்கு ஏற்பட்ட திக்கு முக்காடலெல்லாம் மறைந்து ஒருவித மூர்க்காவேசம் முறுக் கேறவே, “என் தாய்த் திருநாட்டின் அகப்புற நலன்களுக்காக எத்தகைய சொந்த பந்தத்தையும் இழக்க நான் தயாரா யிருக்கிறேன்!” என்று தன் அகன்ற மார்பை நிமிர்த்திக் கொண்டு செருக்குடன் கூறினான்.

# 114

## 'சம்புவராயா, நில்!'

மகிழ்ச்சிப் பெருக்கால் கடகடவென்று நகைத்த பழையாறைச் சோழர் கம்பீரமாக நிமிர்ந்து, "சம்புவராயா!" எனக் குரல் கொடுத்தார்.

சற்றுத் தொலைவில் நின்றிருந்த ஆபத்துதவி சம்புவராயன் பணிவும் குழைவுமாக ஓடி வந்தான்.

"நான் சொன்ன காரியம் என்ன ஆயிற்று?"

"சோழ இளவரசியார் பயணப்படுவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்துவிட்டேன், பிரபு!"

"ஆமாம்; இளங்கோப்பிச்சியைப் பத்திரமாகப் பழையாறை அரண்மனையில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டியது உன் பொறுப்பு."

"உத்தரவு அரசே!"

உற்சாகத்துடன் திரும்பிய பழையாறைச் சோழர், "இளவரசே புறப்படுங்கள்!" என்றவாறு தம் புரவியை நோக்கி நடந்தார்.

"தங்கள் திட்டம் என்ன என்பதுபற்றி என்னிடம் எதுவும் சொல்லவில்லையே!..."என்று அடைத்த குரலில் இழுத்தான் கோவிந்தவர்மன்.

"அந்தப் பயங்கரத் திட்டத்தை வெளிப்படுத்த இது தருணமல்ல; அதற்கு இந்த இடமும் தோதுப்படாது. என்னோடு புறப்படுங்கள். உரிய இடத்தில் உரிய நேரத்தில் அதை உங்களிடம் தெரிவிப்பேன்" என்றவாறு குதிரைமேல் ஏறி அமர்ந்தார் பழையாறைச் சோழர்.

தயங்கி நின்ற கோவிந்தவர்மன் தன்னை மீறிய ஓர் ஆவலுடன் பின்னால் திரும்பிப் பார்த்தான். இளங்கோப் பிச்சியின் நிழல்கூட அங்கே தென்படவில்லை. துயரப் பெரு மூச்சு விட்டவனாய் தன் புரவி மீதேறிப் பழையாறைச் சோழருடன் புறப்பட்டான்.

விளக்கேற்றும் நேரத்தில் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி. நெடுந் தூரப் பயணத்துக்குத் தயாராக வந்திருக்கிறாள் என்பதை அவள் அணிந்திருந்த ஆடை அணிமணிகள் புலப்படுத்தின. ஆனால் இந்நாள்வரை அவளது முகத்தில் குடிகொண்டிருந்த உல்லாச மகிழ்ச்சிக் களை இப்போது சிறிதும் காணப்பட வில்லை. அழுது சிவந்த கண்களுடன் ஆழ்ந்த துயரமும், பீதி மயமான பரபரப்புமே அதில் தடம் காட்டின. அவற்றுடன் ஏதோ ஒரு திடமான முடிவு மட்டும் அவள் மனத்தில் உருவாகியிருப்பதுபோல் தோன்றியது.

வாசலில் சிவிகையொன்று இறக்கி வைக்கப்பெற்றிருக்க அதன் பின்னால் பணியாட்கள் அறுவர் நின்றிருந்தனர்.

வானத்தைக் கவலையுடன் அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த சம்புவராயன், சோழ இளவரசியைக் கண்டதும் விரைந்து வந்து அவளெதிரே பணிவுடன் நின்றான்.

"என்ன சம்புவராயா! பயணத்துக்கு எல்லாம் தயார் தானே?"

"தயார் அம்மணீ!...ஆனால்?..."

"என்ன விஷயம்?"

"இடியும் மின்னலுமாக வானம் இருண்டு கிடப்பதைப் பார்த்தால் இன்றிரவுக்குள் பலத்த மழை பெய்யும்போல் தோன்றுகிறது. எனவே, இளவரசியார் தம் பயணத்தைத் தள்ளிவைத்து நாளைக் காலை புறப்படுவது நலமாயிருக்கும் என்று கருதுகிறேன்.

ஒரு கணம் தயங்கிய இளங்கோப்பிச்சி சட்டென்று நிமிர்ந்து, "கூடவே கூடாது; இன்றே இப்போதே பயணப் பட்டாக வேண்டும்!" என்று பரபரப்புடன் கூறிக்கொண்டே அவனுடைய பதிலுக்குக் காத்திராமல் சரேலெனச் சிவிகையில் ஏறி அமர்ந்தாள்.

சிவிகை புறப்பட்டது.

இப்போதோ இன்னுங் கொஞ்ச நேரத்திலோ மழை வந்துவிடலாம் என்ற அச்சம் அந்தச் சிவிகை தூக்கிகளின் கால்களில் ஒரு விறுவிறுப்பை ஏற்றிவிடவே, அவர்கள் தம் சக்திக்கு மீறிய வேகத்துடன் விரைந்தனர். இடையிலே நீண்ட வாள் தொங்கலாட, வலக் கையில் தீப்பந்தமும், இடக் கையில் ஈட்டியுமாகச் சிவிகைக்கு முன்னால் வழிகாட்டி ஓடிக்கொண் டிருந்தான் ஆபத்துதவி சம்புவராயன்.

எதிர்பார்த்த நேரத்துக்கு இரண்டு நாழிகை முன்னதாகவே, அந்தப் பல்லவபுரம் சாலையிலிருந்து தவத் துறைக்கு ஒரு சாலையும் பெருவளநல்லூருக்கு ஒரு சாலையும் காஞ்சிக்கு ஒரு சாலையுமாகப் பிரியும் நாற்சந்தியொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது சிவிகை.

அது இரவின் இரண்டாம் சாம நேரம். சந்திரலேகை—தஞ்சை மார்க்கமாகப் பழையாறைக்குச் செல்வதென்ற அவர்களுடைய பயணத் திட்டப்படி அந்த நாற்சந்தியை அடைந்ததும் தவத்துறைச் சாலைப் பக்கமாகச் சிவிகை திரும்பியது.

"சம்புவராயா நில்!"

ஈட்டி வளையங்கள் 'ஜல், ஜல்' என்று ஒலியெழுப்பத் தீவட்டியைத் தூக்கிப் பிடித்தவாறு முன்னால் ஓடிக்கொண்டிருந்த சம்புவராயன் சட்டென்று நின்று சிவிகையை நோக்கிப் பரபரப்புடன் விரைந்து வந்தான்.

115

# மழையில் வந்த மறலி

**சி**விகையின் நூலாக் கலிங்கத் திரையை விலக்கிவிட்டு வெளியே தலை நீட்டிய இளங்கோப்பிச்சி, “இது தவத்துறைச் சாலை அல்லவா? ஏன் இந்தப் பக்கம் போகிறாய்?” என்று கடுகடுத்த குரலில் கேட்டாள்.

“ஆம், அம்மணீ! பழையாறைக்குப் போக இதுதான் நேர்ப்பாதை” என்று மூச்சு இரைக்கக் குழறினான் சம்புவராயன்.

“நான் பழயாறைக்குப் போவதாக யார் உன்னிடம் சொன்னது?”

திடுக்குற்ற சம்புவராயன், “என்ன இளவரசி?...” என்று திகிலுடன் வினவினான்.

“பெருவளநல்லூருக்குப் பயணமாகியிருக்கிறேன்; அந்தச் சாலையில் சிவிகையைத் திருப்பிப் போக விடு!”

“தங்களைப் பழையாறை அரண்மனைக்கு அழைத்துச் செல்லுமாறு தங்களின் தந்தையார் எனக்குக் கட்டளை யிட்டிருக்கிறார், தாயே!”

“அது அவருடைய கட்டளை; இது என்னுடைய விருப்பம்.”

“இளவரசியார் பெருவளநல்லூரில் எங்கே செல்ல விரும்புகிறார்?...”

“சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் இல்லத்துக்குப் போக வேண்டும்.”

"யுத்தத்துக்கு முன்னதாகவே அந்தக் கலைஞரின் இல்லம் சளுக்கியரால் இடித்துத் தகர்த்தப்பட்டு விட்டதை இளவரசியார் கேள்விப்படவில்லையா?"

"எனக்கு அது தெரியும்! ஆனால் சேதியக் கலைஞர் அந்த ஊரில்தானே இருக்கிறார்?"

"அப்படித்தான் கேள்விப்பட்டேன், அம்மணீ!"

"ஆந்திர இளவரசி உத்தமசீலியும் இப்போது அவருடன் தானே தங்கி இருக்கிறாள்?"

"அந்த விஷயம் எனக்குத் தெரியாது, தாயே!"

"சரி; அங்கு போய்க் கலைஞரின் இருப்பிடத்தை விசாரித்துத் தெரிந்துகொள்ளலாம். புறப்படு."

"மன்னிக்கவேண்டும், இளவரசி!..." என்று தயங்கித் தடுமாறினான் சம்புவராயன்.

"பெருவளநல்லூருக்கு என்னை அழைத்துப்போக மாட்டாய்; அப்படித்தானே?" என்று சீற்றத்துடன் வினவினாள் இளங்கோப்பிச்சி.

"இந்த ஏழையைக் கோபிக்காதீர்கள், தாயே! தங்கள் தந்தையாரின் ஆணைப்படி நடந்துகொள்ள என்னை அநுமதியுங்கள் அம்மணீ!"

"ஓகோ!... ம்...உன் அரசரின் ஆணைப்படியே நீ நடந்து கொள்ளலாம்; ஆனால், என் விருப்பப்படி நான் செல்வதை நீ தடுக்கக் கூடாது. சோழ இளவரசியின் ஆணை இது. சிவிகையைக் கீழே இறக்கி வைக்கச் சொல்."

"வேண்டாம், இளவரசி!" என்று பயந்து நடுங்கிய சம்புவராயன் ஒரு கண யோசனைக்குப் பின், "ஆகட்டும், தாயே! ஆனால்... பெருவளநல்லூருக்குப் போய்ச் சேதியக் கலைஞரைப் பார்த்த பிறகு அங்கிருந்து பழையாறைக்குப் பயணமாகி விடுவீர்கள் அல்லவா?" என்ற திணறிக் கேட்டான்.

"அதைப்பற்றி இப்போது ஒன்றும் சொல்ல முடியாது!" —திரையை இழுத்து மூடினாள் இளவரசி.

கவலையுடன் தலையசைத்துக்கொண்ட சம்புவராயன், பெருவளநல்லூர்ச் சாலையில் திரும்பிச் செல்லுமாறு சிவிகை தூக்கிகளுக்குக் கட்டளையிட்டுவிட்டு, ஈட்டியும் தீப்பந்தமு மாக முன்னால் நடக்கலானான்.

இரண்டாம் சாமம் முடிவடைந்து மூன்றாம் சாமமும் ஆரம்பமாகி விட்டது. வெறிச்சோடிக் கிடந்த அந்த விசாலமான நெடுஞ்சாலையில் வெகு வேகமாகச் சென்று கொண்டிருந்தது சிவிகை. பெருவளநல்லூரை அடைய இன்னும் மூன்று குரோசத் தூரம் கடந்தாக வேண்டும்.

ஆனால் அதற்குள்ளாகவே இருண்டு கிடந்த வானத்தில் வரிப் புலிகள் பாய்ந்தன; வேழங்கள் வெருண்டோடின; பல நூறு பொதிய மலைகள் திரண்டு உருண்டு குவிந்தன. கீழ்த் திசை வான்வெளி போர்க்களமாக மாறியது. அங்கே ஒரு நீண்ட நெருப்பு வாளின் வேக வீச்சு!

வானம் குமுறிக் கும்மாளியிட்டது. இடியும் மின்னலும் முட்டி மோதி வெட்டிப் பிளந்தன. சூறைக் காற்று கழன்றடித்தது.

சற்றைக்கெல்லாம் வருண தேவனின் வயிறு வெடித்து விட்டது! வானம் திடீரென்று பொத்துக்கொண்டு விட்டது! மழை! பலத்த மழை!

சிவிகையின் திரைச்சீலை படபடத்தது. சிவிகை தூக்கிகள் தடுமாறினர். சம்புவராயனின் கையிலிருந்த தீப்பந்தம் மழையில் நனைந்து அணைந்தது.

"சீக்கிரம் போங்கள்! விரைந்து செல்லுங்கள்!"—கீச்சுக் குரலில் கூவினாள் இளங்கோப்பிச்சி.

ஆயிரமாயிரம் அசுரர்கள் அனந்தகோடி ஜலக் கயிறு களைத் தொங்கவிட்டுப் பூமாதேவியை இறுக்கிப் பிணைத்து மேலே தூக்க முயலுவது போன்ற அத்தனை பயங்கரமான

மழை பெய்ய ஆரம்பித்தது. அவ்வப்போது இடியும் மின்னலும் வெடித்துப் பிளந்து விண்ணையும் மண்ணையும் கிடுகிடுக்கச் செய்தன. அறுபடாத மழைக் கம்பிகளை அறுக்க முயன்று தோல்வியுற்ற சுழற்காற்று தன் கோபத்தைப் பெரிய பெரிய மரங்களின்மீது காட்டத் தொடங்கியது. எங்கும் சடசடாரென்ற பேரொலி! மளமளாரென்ற முறிவுப் பெருமுழக்கம்!

தெப்பமாக நனைந்துவிட்ட சிவிகைதூக்கிகள் மேலே நடக்க முடியாமல் திணறித் தடுமாறினர். வெடவெடத்தவாறு ஓடி வந்த சம்புவராயன், "இளவரசி! மழை வலுத்து விட்டது. சாலையிலுள்ள மரங்கள் முறிந்து சாய்கின்றன. இனியும் பயணத்தைத் தொடர்வது ஆபத்து" என்று பதறினான்.

திகிலால் பிரமித்து உட்கார்ந்திருந்த இளங்கோப்பிச்சி, "ஆமாம், சம்புவராயா! எங்கேயாவது சற்றுநேரம் தங்கியிருக்க இடம் இருக்கிறதா, பார்!" என்று உள்ளார்ந்த நடுக்கத்துடன் சொன்னாள்.

சம்புவராயன் அங்குமிங்குமாகத் தன் பார்வையைச் செலுத்தினான். சாலையின் வலப் பக்கம் ஒரு புன்னை மரத் துக்குப் பின்னால் ஏதோ தென்பட்டது. அவன் பரபரப்புடன் அங்கே ஓடிப் பார்த்தான். மின்னல் ஒளியில் அது ஒரு பாழடைந்த மண்டபம் என்பது புலனாகியது. ஆனால் அதிலே மனிதர் தங்கி நிற்க முடியுமா என்ற சந்தேகமும் எழுந்தது.

அவன் அந்த மண்டபத்தை நோக்கி விரைந்து சென்றான். இடிந்து பாழ்பட்டுக் கிடந்த மண்டபத்தின் முன் பகுதி ஓரளவு நல்ல நிலைமையிலேயே காணப்பட்டது. ஐந்தாறு பேர் மழைக்கு ஒதுங்கி நிற்கலாம். அங்கே சோழ இளவரசியை அழைத்து வந்து இருக்கப் பண்ணத் தோதான ஓர் இடத்தைப் பார்ப்பதற்காகப் படிகளில் ஏறிய சம்புவராயன் திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்தான். காரணம், அந்த மண்டபத் தாழ்வாரத்தில் யாரோ இருவர் சுருண்டடித்துப் படுத்துக் கிடப்பது தெரிந்தது.

வழிப் போக்கர்கள் யாரேனும் மழைக்கு ஒதுங்கியிருப் பார்களோ?—

"ஏய், யார் இங்கே தூங்குவது?" என்று அதிகாரக் குரலில் அதட்டினான் சம்புவராயன்.

சட்டென்று அவ்விருவரும் எழுந்து உட்கார்ந்தனர். இச்சமயம் ஒரு மின்னல் பளிச்சிடவே அந்த ஒளியில் அவ்விரு வரது முகங்களும் தெரிந்தன. சந்தேகமில்லை; சளுக்கிய இளவரசன் விநயாதித்தனும், சளுக்கிய வீரன் ஒருவனும் தாம் அங்கே குளிரில் நடுங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்! ஆனால் அவர்களுடைய தோற்றம் இப்போது முற்றும் வேறு விதமாக இருந்தது; பஞ்சத்தில் அடிபட்ட ஏழைக் குடியானவர்கள்போல் காட்சியளித்தார்கள்.

சம்புவராயனுக்கு விநயாதித்தனின் முகம் பரிச்சயமான தல்ல; ஆகவே, அவன் அலட்சியமாக அவர்களைப் பார்த்து, "நான் சொல்வது உங்கள் காதில் விழவில்லையா? சீக்கிரம் எழுந்து போங்கள்!" என்று மீண்டும் கூவினான்.

"மழைக்கு ஒதுங்கியிருக்கும் எங்களை ஏனய்யா விரட்டு கிறீர்கள்?" என்று பயப்பிராந்தியுடன் பரிதாபமாகக் கேட்டான் அவ்விருவரில் ஒருவன்.

"எங்கள் சோழ இளவரசியார் இங்கே மழைக்கு வந்து தங்கப் போகிறார்! உடனே வேறு இடம் பார்த்து ஓடிப் போங்கள்!"

காரிருள் கப்பிக் கிடந்த அந்த மண்டபத்தில் இரண்டு நெருப்புத் துண்டங்கள் பளிச்சிட்டு மறைந்தன. விநயாதித்தனின் கண்கள்தாம் அப்படித் தீக் கங்குகளாக எரிந்து அணைந்திருக்க வேண்டும்.

அவன் தன் பக்கத்தில் இருந்த வீரனின் முதுகைச் சீண்டி அவனிடம் ஏதோ கிசுகிசுத்துவிட்டு எழுந்து, "அப்படியா ஐயா? நாங்கள் இதோ போய்விடுகிறோம்!" என்று முனகினான்.

அதே சமயம், படியில் நின்ற சம்புவராயன் தன் உடம்பைத் திமிறி நெம்பினான். அவனுடைய வாயை ஓர் இரும்புக்கரம் இறுகப் பொத்தியது. சளுக்கிய வீரன்தான் அவனை அவ்வாறு பாய்ந்து சென்று வாயைப் பொத்தி இறுக்கிப் பிடித்துக்கொண்டு அவனது கையிலிருந்த ஈட்டியையும் பந்தக் கோலையும் பிடுங்கி எறிந்தான். விநயாதித்தன் விரைந்து போய் அவனுடைய வாயில் துணியை வைத்து அடைத்து இருகைகளையும் பின்னுக்குச் சேர்த்து ஒரு தூணில் கட்டினான். பிறகு தன் வீரனிடம் ஏதோ இரகசியமாகச் சொல்லி அவனை மண்டபத்துக்குப் பின்புறமாக வெளியேற்றிவிட்டு, சம்புவராயனிடமிருந்து பிடுங்கப்பட்ட ஈட்டியையும் தீவட்டிக் கம்பையும் எடுத்துக் கொண்டு கொட்டும் மழையில் சாலையிலே நின்றிருந்த சிவிகையை நோக்கி நடந்தான்.

குரல் எழுப்பவும் முடியாமல் மூச்சுத் திணறிய சம்புவ ராயன் தூணிலே கட்டுண்ட நிலையில் புழுப்போல் நெளியலானான்.

“என்ன சம்புவராயா! தங்குவதற்கு எங்கேனும் இடம் கிடைத்ததா?'' என்று அவசரமாக வினவினாள் இளங் கோப்பிச்சி.

இருட்டில் தலையைக் குனிந்துகொண்டு மழையிலே நனைந்துவந்த விநயாதித்தன் சிவிகைக்குச் சற்றுத் தொலை விலேயே நின்று, “இங்கே அப்படி எந்த இடமும் இல்லை, இளவரசி!” என்று அடித் தொண்டையில் கரகரத்தான்.

“பின்னே ஏன் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக் கிறாய்? மேலே செல்! வேறெங்காவது இடம் இருக்கிறதா, பார்ப்போம்!” என்று சீறினாள் இளங்கோப்பிச்சி.

சிவிகை புறப்பட்டது. அதன் பக்கவாட்டில் நடந்துவந்த விநயாதித்தன், “ஏன் இளவரசி, நாம் போகவேண்டிய இடத்துக்குத்தானே போகிறோம்?” என்று இருமிக் கொண்டே கேட்டான்.

வெகுண்டு நிமிர்ந்த இளங்கோப்பிச்சி, "என்ன சம்புவ ராயா! இந்த மழையிலும் உனக்குத் தூக்கக் கலக்கமா? நாம் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரைப் பார்க்கப் போகிறோம்! வழியைத் தவற விடாமல் முன்னே நடந்து செல்" என்று கூவினாள்.

விநயாதித்தனின் நடையில் திடீரென்று ஓர் உற்சாகம் ஏற்பட்டது. அந்தக் காரிருள் கப்பிய சாலையில், கனத்த மழையையும் பொருட்படுத்தாமல், சிவிகையைத் திரும்பித் திரும்பிப் பார்த்தவாறு வேகமாக நடந்தான் அவன்.

# 116

## பின் தொடர்ந்த பேய்

**ச**ல்லடைக் கண்களாகிவிட்ட வானம் அன்றிரவெல்லாம் சலிப்பின்றி மழையைச் சலித்துக் கொட்டிக் கொண்டிருந்தது. கடந்த மூன்றாண்டு காலமாக நிலக் குழந்தைக்குப் பாலூட்டாமல் மாற்றாந்தாய்க் கொடுமை புரிந்து பட்டினிபோட்டுக் காயச்செய்த வானத் தாய், இன்று திடீரென்று அளவுகடந்த அன்பும் அளவுக்கு மீறிய பரிவும் கொண்டு, இறுக்கிக் கட்டி வைத்திருந்த தன் அமுதத் தனங்களைப் பரக்கத் திறந்து ஆவேச கதியில் பாலூட்ட முனைந்ததால், இளைத்துப் பசித்துக் கிடந்த நிலக் குழந்தை அந்தப் பாலமுதத்தை வேகமாக உறிஞ்சிக் குடிக்க மாட்டாமல் திக்கித் திணறி அவஸ்தைப்படலாயிற்று. ஆயினும் வானத்தாய் வலுக்கட்டாயமாகத் தன் குழந்தைக்குப் பாலூட்டிக் கொண்டேதான் இருந்தாள்.

சளுக்கிய ஆட்சியின் கொடுமைகளால் மட்டுமின்றி மழையின்மையாலும் வற்கடத்தின் வாய்ப்பட்டுச் சீரழிந்த பல்லவ நாடு இந்தப் பெருங்கோரப் பேய் மழையால் ஒரேயடியாக அழிந்து ஒழிந்து சூன்யமாகிவிடுமோ? விடுதலை பெற்ற மகிழ்ச்சியையும் பூரணமாக அநுபவிக்காமல், 'வருணன் வருவானா? தங்கள் வாழ்வு மலருமா?' என்று ஏக்கத்துடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் பல்லவக் குடிமக்களைத் தன் கொடிய பிரளயக் கரங்களை விரித்துக் கூண்டோடு வாரிக்கொண்டு போகத்தான் வருணதேவன் இப்படிக் குதியாட்டம் போட்டுக் கொண்டிருக்கிறானோ?

இல்லை; விடியற்சாமம் நெருங்கநெருங்க, திசை திறந்து அண்டம் கீறிப் பொழிந்து கொட்டிய வானம் வசியறுந்து ஓய்ந்து நின்றது. அந்த இடைவிடாத மழையால் இரவின் கருமை கரைந்து வெளுப்பது மாதிரி காலைப்போதும் மெல்ல மெல்லப் புலர ஆரம்பித்தது.

தன் வாழ்நாளில் ஒரு புதிய அநுபவத்தை அடைந்த பிரமிப்புடன் பெருவளநல்லூர் சிற்றாற்றங் கரையில் அமைந்த புதர்க் குடிலைவிட்டு வெளியே வந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

நேற்று மாலைவரை வெண் மணல் பரப்புக்கிடையே சுருட்டி நீட்டிய நீலச்சோலைபோல் சலசலத்து ஓடிய அந்தச் சிற்றாறு இப்போது கரைமட்டத்துக்கு வெள்ளம் உயர்ந்து விசாலித்து ‘ஹோ’வென்ற இரைச்சலுடன் அலைத்து நுரைத்துப் பாய்ந்தோடிக் கொண்டிருந்தது. கரையின் சரிவில் மண்டிக் கிடந்த செடி கொடிகளும், தாழம் புதர்களும், நாணற் போத்துக்களும் நீரில் மூழ்கிப் போயிருந்தன. கரையோரம் வளர்ந்து நின்ற சில பெரிய மரங்கள் வேரோடு சாய்ந்து விட்டிருந்தன.

இந்தக் காட்சிகளையெல்லாம் வியப்பும் பிரமிப்புமாகப் பார்த்தவாறு கரைமேட்டில் ஏறி நின்ற உத்தமசீலியின் மனத்தில் பீதி மயமானதோர் எண்ணம் தோன்றியது. ‘இன்னுங் கொஞ்ச நேரம் தொடர்ந்து மழை பெய்திருந்தால் ஆற்றின் நீர் மட்டம் உயர்ந்து கரையை உடைத்துக் கொண்டு மறுபக்கத்தையும் வெள்ளக் காடாக்கி விட்டிருக்கும்போல் இருக்கிறதே! அப்படி ஒரு நிலைமை ஏற்பட்டிருந்தால் இந்தச் சின்னஞ்சிறு புதர்க் குடிலில் தங்கியிருந்த என்கதி என்ன ஆகியிருக்கும்?’ —அவளை அறியாமலே உடல் நடுங்கிக் குலுங்கியது. பொங்கிப் பிரவகித்து ஓடிய ஆற்றையும், அந்தப் புதர்க் குடிலையும் உள்ளார்ந்த பயத்துடன் மாறி மாறிப் பார்த்தாள் அவள்.

சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் இப்போது அங்கு இல்லை. பல்லவமன்னன் தமக்கு அளித்த முற்றூட்டு சாசன ஓலையுடன் அவர் கூரத்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டிருந் தார். அவளுக்குப் பாதுகாப்பாகவும், அவளது அன்றாடத் தேவைகளைக் கவனித்துப் பணி புரியவும் நாகோதரன் மட்டும்தான் அங்கே இருந்து வந்தான். குடிலின் தாழ்வாரத் தில் முடங்கிக் கிடந்த அவன் விடியலுக்கு முன்பே எழுந்து தன் அலுவல்களைக் கவனிப்பதில் முனைந்திருந்தான்.

பொழுது நன்றாக விடிந்துவிட்டது. புள்ளினங்கள் கனிரசக் குரலெடுத்துக் காலை ஆராதனை செய்தன. இரவெல்லாம் மழையில் குளித்துத் தம் இலைப் போர்வை களைச் சலவை செய்துகொண்ட மரஞ்செடிகொடிகள் பசுமை நிறப் பளபளப்புடன் இளங்காற்றில் தலையசைத்து ஈரம் உலர்த்தின. துலாம்பரமாக வெளுத்துக்கிடந்த வானப் பந்தலில் வெள்ளையும் பச்சையும் கறுப்புமான தோரண வளைவுகளைக் கட்டிவிட்டாற்போல் கொக்குகளும் கிளி களும் காக்கைகளும் வரிசை வரிசையாகப் பறந்துசென்றன. கீழ்த்திசை தூரியத்தில் செவ்வரி படர ஆரம்பித்தது.

இந்த இனிய காட்சிகளின் லயிப்பிலே தன் மனப் பிராந்தியை மறந்து உற்சாகமடைந்த உத்தமசீலி, ஆற்றில் இறங்கி நீராடிவிட்டுத் திரும்பி வந்து புத்தாடை புனைந்து கொண்டு, அன்றொருநாள் இரவு பரமேசுவரவர்மன் குதூகலக் கிறக்கமிட்டவனாய்ப் படுத்திருந்த அந்தக் கரை மேட்டின் மணற் சரிவுக்குச் சென்று அமர்ந்தாள். அவ்விடத்தில் அமர்ந்ததுமே அவள் மனம் ஏதேதோ இன்ப நினைவுகளில் ஆழ்ந்து மிதவையிடத் தொடங்கியது. அவ்வினிய நினைவுகளின் புறச்சுழிப்புகளாக அவளது அழகிய வதனத்தில் நாணச் சிவப்பு படர்வதும், நளினப் புன்னகை மலர்வதுமாக இருந்தன.

"இளவரசி!"

அவள் மெல்லப் பின்னால் திரும்பினாள். தயக்கத் துடன் சற்றுத் தொலைவில் வந்து நின்றான் நாகோதரன்.

"நேற்றிரவு எவ்வளவு பலத்த மழை பெய்திருக்கிறது பார்த்தீர்களா' அம்மணீ?"

"ஆமாம்; விடுதலை பெற்ற பல்லவ நாட்டில் பழைய வளம் கொழிக்கப் பண்ணுவதற்காக இயற்கையன்னை தன் கருணைக் கண்களைத் திறந்திருக்கிறாள்" என்று மகிழ்ச்சிப் பரவசத்துடன் சொன்னாள் உத்தமசீலி.

ஒரு கணம் தயங்கிய நாகோதரன், "இன்றிரவும் அம்மாதிரி பெருமழை பெய்தால் இந்தச் சிற்றாறு உடைப் பெடுத்துவிடுமோ என்று அஞ்சுகிறேன், தாயே!" என்றான் தணிந்த குரலில்.

உத்தமசீலி அவனை நிமிர்ந்து நோக்கினாள்.

"தங்களைக் காஞ்சி அரண்மனைக்கு அழைத்துப் போவதற்காகப் பல்லவ மன்னரது பரிவாரம் இங்கு வர விருக்கிறது என்பதை நான் மறந்து பேசவில்லை அம்மணீ! ஆனால் அதுவரையில் இந்தச் சிறு குடிலிலே தங்கியிருப்பது அத்தனை பாதுகாப்பாக இராது என்றே எனக்குத் தோன்றுகிறது."

"இந்த நிலையில் நான் எங்கே போக முடியும்?" என்று மெல்லிய குரலில் இழுத்தாள் உத்தமசீலி.

"இப்போதைக்கு இளவரசியார் திருப்பருத்திக் குன்றத்தில் போய்த் தங்கியிருக்கலாம் என்று நினைக்கிறேன். ஏனென்றால், அங்கேதான் நம் ஞானத் தலைவரான சமந்தபத்திரர் தம்முடைய திரமிள சமண சங்கத்தை ஸ்தாபித் திருக்கிறார். சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும் இப்போது அந்த ஊரில்தான் தங்கியிருக்கிறார்."

"சேதியக் கலைஞர் கூரம் என்னும் ஊருக்குப் போவதாக அல்லவா என்னிடம் சொல்லிச் சென்றார்?"

"ஆம், தாயே! ஆனால் கூரத்தில் அவர் தமக்கு ஒரு மாளிகை அமைத்துக்கொள்ளும் வரையில் திருப்பருத்திக் குன்றத்தில்தான் தங்கியிருப்பாராம். நேற்றுத்தான் அந்த மாளிகைக்கு அஸ்திவாரம் இடப்பட்டதாம். பெருவள நல்லூரிலிருந்து ஏராளமான சிற்பிகளும், சேதியக் கலைஞர் களும் அங்கு புறப்பட்டுப் போயிருக்கிறார்கள். அவர்களில் ஒருவரின் வாயிலாகவே இவ்விவரங்களை அறிந்தேன்."

சற்று நேரம் சிந்தனையிலாழ்ந்திருந்த உத்தமசீலி, "சரி, இதைப்பற்றிப் பிறகு என் முடிவைத் தெரிவிக்கிறேன்" என்றாள்.

அப்பொழுது உத்தமசீலியின் பார்வை சற்றுத் தூரத்தில் சென்று லயித்தது. மறுகணம் அவள் முகத்தில் வியப்புக் குறி தோன்றியது. மிகவும் கவனமாகப் பார்வையை ஒரே இடத்தில் செலுத்திய வண்ணம் நின்றாள் அவள்.

இந்தச் சமயம், ஆற்றங்கரை மேட்டின் தொலைதூரத் துக்கு அப்பால் ஒரு சிவிகை வருவது தெரிந்தது.

அந்தச் சிவிகைக்கு முன்னால் வெகு வேகமாக வந்து கொண்டிருந்த ஓர் ஆடவன் சட்டென்று நின்று யாரையோ கூர்ந்து கவனிப்பதுபோல் பார்த்தான். உத்தமசீலியையும் நாகோதரனையும்தான் அப்படி அவன் பார்த்திருக்க வேண்டும். பிறகு பின்னால் திரும்பிப் பார்த்துவிட்டுச் சரேலெனக் கரைமேட்டிலிருந்து இடது புறமாக இறங்கிச் செடி கொடிப் புதர்களுக்கிடையே ஓடினான். அப்புறம் அவன் எங்கு சென்றான் என்றே தெரியவில்லையே!

இவ்வளவையும் வியப்போடு பார்த்துக்கொண்டு சிலை போல் நின்றாள் உத்தமசீலி. நாகோதரனோ அங்கிருந்து மெல்ல நழுவி எங்கோ விரைந்து செல்லலானான்.

சற்றைக்கெல்லாம் அந்தச் சிவிகை உத்தமசீலியின் புதர்க் குடிலுக்கு எதிரே வந்து நின்றது. அதிலிருந்து சோழ இளவரசி இளங்கோப்பிச்சி பயத்தால் உடல் நடுங்க அவசரப் பரபரப்புடன் கீழே இறங்கினாள்.

# 117

# நேசம் மாறவில்லை

கடந்த சில தினங்களாகக் கந்தர்வப் பட்டணம்போல் குதூகலச் சோபையுடன் விளங்கிய காஞ்சி மாநகர் அன்று பொலிவிழந்து உற்சாகம் குன்றிக் காணப்பட்டது. எங்கும் எதிலும் ஒருவித ஏமாற்றமும் குழப்பமுமே விரவிப் பிரதி பலித்தன. மக்களிடையே மகிழ்ச்சி இல்லை, தென்பு இல்லை. எதிர்பாராத ஆசாபங்கத்துக்கு உள்ளானவர்கள் போல் விரக்தியும் கவலையுமாக நடமாடிக் கொண்டிருந்த அவர்கள் ஆங்காங்கே கும்பல் கும்பலாகக் கூடி நின்று ஒருவரோடு ஒருவர் ஏதோ இரகசியம் பேசிக் கொள்வதும், தகவல் விசாரித்துக் கொள்வதும், பிறகு திகிலுடன் கலைந்து செல்வதுமாக இருந்தனர்.

இந்த விசித்திர நிலைமைகளுக்கெல்லாம் ஒரு மொத்த வடிவமாய்க் காட்சியளித்த காஞ்சி அரண்மனையின் மேன் மாடத்து அறை ஒன்றிலே—

அடர்ந்து நெளிந்து அழகுறப் படிந்த கேசம்; வெண்ணீறணிந்த விசாலமான நெற்றி; வைரமணிக் குண்டலங்கள் பளிச்சிட்ட செவிகள்; நெஞ்சத்து உணர்ச்சி களைப் பிரதிபலித்துக் காட்டுவதற்கென்றே அமைந்தாற் போன்ற நீண்ட புருவங்கள்; அருள் ஒளி வீசிய பெரிய கண்கள்; அறிவின் ஓவிய வடிவமாக அமைந்த கூரிய நாசி; பொற் குழம்பால் பூசி மெழுகினாற்போன்ற கன்னங்கள்; நிதான நடை பழகிய மெல்லிய உதடுகள்; தீர்க்கமாகக் குவிந்து நிமிர்ந்த மோவாய்; உறுதியான அறுகைப் பிடரி; உருண்டு

திரண்ட உயர்திண் தோள்கள்; நவமணி ஹாரங்களுடன் ஓர் எளிய சவுக்கைக் காய் மாலையும் சேர்ந்து புரண்ட வச்சிர விரிமார்பு; உள்ளடங்கிக் குறுகிய புலி வயிறு, வேழ மருப்பொத்த நீண்ட கரங்கள்; வணக்கமற்ற திண்மையான கால்கள்—என்றிவ்வாறான இராஜ லட்சணங்களின் பரிபூரண பொலிவோடு, இடையிலே மஞ்சள் நிறப் பட்டாடையும், தோளிலே நீல வண்ணப் பட்டுத் துகிலும் தொங்கித் துவள, கடம்பவனப் பதியின் வெள்ளியம்பலத்திலிருந்து சாட்சாத் சுந்தரேசப் பெருமானே எழுந்தருளி வந்தாற்போல் சிந்தனை வயப்பட்டவனாய் அமர்ந்திருந்த பல்லவ பரமேசுவரவர்மன், அங்கு நீண்ட நேரமாக நிலைத்திருந்த நிசப்தம் கலைய மெல்லப் பெருமூச்சு விட்டவாறு எழுந்து, "ம்...இனி நாம் என்ன செய்ய முடியும்? எல்லாம் இறைவனின் சித்தப்படியே நடக்கட்டும்?" என்று சோகம் கப்பிய குரலில் கூறிக்கொண்டே ஒரே சீராகப் பாதங்களைப் பெயர்த்துப் போட்டு உலாவலானான்.

இந்நேரம்வரை அவன் அமர்ந்திருந்த ஆசனத்துக்குப் பக்கத்து ஆசனமொன்றின்மேல் ஒருக்களித்துச் சாய்ந்தவாறு நின்றுகொண்டிருந்த பெரும்பிடுகு முத்தரையர் சட்டென்று ஓரடி முன்னால் வந்து, "மன்னரவர்கள் வழக்கமாகச் சொல்லும் பதிலைத்தான் இப்போதும் சொல்கிறார்! ஆனால்?..." என்று உள்ளார்ந்த சோர்வுடன் இழுத்தார்.

"ஆம், ஐயா! நம் அருமை நண்பர் பழையாறைச் சோழரும், என் அன்புச் சகோதரன் கோவிந்தவர்மனும் என்னைப்பற்றி அப்படியொரு தீர்மானத்தில் இருக்கும்போது நான் வேறென்ன சொல்ல முடியும்?" என்று விரக்தியுடன் கூறிக்கொண்டே மீண்டும் உலாவினான் பரமேசுவரவர்மன்.

"என்னைப் பொறுத்தவரை இந்தப் பதிலில் திருப்திப் பட்டுவிட முடியும், அரசே! ஆனால் நாட்டு மக்கள் தங்களிட மிருந்து எதிர்பார்க்கும் விஷயம் வேறு."

"அதாவது, என் வீராபிஷேக முடிசூட்டு விழா வைபவத்தை நான் நடத்தப் போகிறேனா, இல்லையா என்பதை அவர்களுக்குத் திட்டவட்டமாகத் தெரிவித்துவிட வேண்டும் என்கிறீர்கள்?"

"பல்லவக் குடிமக்கள் ஒவ்வொரு விநாடியும் அதைத் தான் வெகு ஆவலோடு எதிர்நோக்கிக் கொண்டிருக் கிறார்கள்."

சிறுபொழுது மௌனமாக உலாவிய பரமேசுவர வர்மன் அவரை இதமாக ஏறிட்டுப் பார்த்து, "இப்போதைக்கு அந்த வைபவம் நடைபெறாது என்பதை என் நாட்டு மக்களுக்கு அறிவித்துவிட விரும்புகிறேன்" என்றான்.

அதிர்ச்சியுற்றவர்போல் நிமிர்ந்த முத்தரையர், "அவசரப்பட வேண்டாம், அரசே!" என்று தம்மை மீறிய படபடப்புடன் சொன்னார்.

"இல்லை; நன்கு ஆலோசித்துப் பார்த்த பிறகே நான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன். எனது வீராபிஷேக முடிசூட்டுவிழா வைபவத்தில் பாண்டிய மன்னர் தம் தேவியாரோடு வந்து கலந்துகொள்ள வேண்டுமென அழைப்பு அனுப்பியதற்கு அவர் கொடுத்த பதிலும் சேர்ந்துதான் என்னுடைய இந்த எண்ணத்தை உறுதிப்படுத்திவிட்டது" என்று எங்கோ பார்த்தவாறு அமைதியாகக் கூறினான் பரமேசுவரவர்மன்.

முத்தரையர், சற்றுத் தொலைவில் கைகட்டித் தலை குனிந்து நின்றுகொண்டிருந்த ஆபத்துதவி இளங்காரிக் குடையானைப் பார்த்து, "இளங்காரி! நம் மாமன்னரின் தூதுவனாகச் சென்ற உன்னிடம் பாண்டிய மன்னர் நெடுமாறர் என்ன சொன்னார்? அதை மீண்டும் ஒரு முறை சொல்!" என்று அடித் தொண்டையில் விளித்தார்.

"பழையாறைச் சோழரும், பல்லவ இளவரசரும் தங்களிடம் என்ன சொன்னார்களோ அதே பதிலைத்தான்

பாண்டிய மன்னரும் சொன்னார் ஐயா!" என்று பயந்து குழறினான் இளங்காரி.

"அதாவது, பல்லவ மாமன்னர் பாண்டிய அரசரின் உதவியை நாடாமல் ஆந்திர மன்னரிடம் படைபலம் பெற்றுச் சளுக்கியரோடு தனித்துப் போரிட்டுத் தம் நாட்டை மீட்டது அவருக்குப் பெரிய துரோகச் செயலாகப் பட்டுவிட்டது; அதனால் நமது வெற்றி விழாவிலும் வீராபிஷேக முடிசூட்டு வைபவத்திலும் கலந்துகொள்ள மறுக்கிறார்: அப்படித் தானே?"

"ஆம் ஐயா!...ஆனால் அதற்கு அவர் வெளிப்படை யாகச் சொன்ன காரணம்..." என்று தயக்கத்துடன் இளங்காரி இழுத்தான். உடனே முத்தரையர் குறுக்கிட்டு, "சரி, சரி; போதும், நிறுத்து!" என்று சீறினார். பிறகு வெகு அலட்சிய மாகத் தோளைக் குலுக்கிக்கொண்டு, "அரசே! இந்தப் பாண்டியர்கள் எப்போதுமே பல்லவ நாட்டினிடம் உண்மை யாக நேசம் கொள்ள விரும்புவதில்லை. சமயம் கிடைக்கும் போதெல்லாம் நம்மை மட்டம் தட்டி மடக்கி வைக்கவே அவர்கள் முயலுவார்கள். ஆகவே, நெடுமாறரின் அந்தப் பகிஷ்கரிப்புப் பதிலுக்காக நாம் அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை" என்றார்.

பரமேசுவரவர்மன் இதைக் கேட்டு மென்முறுவல் பூத்தான். "அரசியல் நோக்கத்துக்காக என்னை யார் பகைத்துக் கொண்டாலும் அதைப்பற்றி நான் எள்ளளவும் கவலைப்பட மாட்டேன் ஐயா! ஆனால் பாண்டிய மன்னரின் அந்தப் பகிஷ்கரிப்பு சமயத்தை முகாந்திரமாகக் கொண்டிருக்கிறது. அதை எண்ணித்தான் பெரிதும் வேதனையடைகிறேன்."

"ஒரு மாபெரும் தேசத்து மன்னரின் திருமண ஏற்பாட்டை இன்னொரு நாட்டு மன்னர் பகிஷ்கரிப்பதே பச்சையான அரசியல் கெடுபிடிதான். அதற்குச் சமய முலாம் பூசிக் காட்டுவது வெறும் ஏமாற்று வித்தை."

புருவங்களை நெரித்துக்கொண்டு திரும்பிய பரமேசுவர வர்மன் படபடத்த குரலில், "என் மதிப்புக்குரிய பாண்டிய மன்னரை இந்த அளவுக்குக் குறைத்துப் பேசாதீர்கள் ஐயா! புத்தி தெரிந்த நாள்முதல் அவரைத்தான் எனது ஆன்மீக வாழ்க்கையின் வழிகாட்டியாகவும் ஞான குருவாகவும் ஏற்றிப் போற்றி வருகிறேன். என்மீது அவர் ஏதேனும் தப்பபிப்பிராயம் கொண்டிருந்தால் அது அவருடைய தவறாக இருக்க முடியாது" என்றான்.

முத்தரையர் முகத்தைச் சுளித்துக்கொண்டு, "அப்படி யானால் மன்னரவர்களின் முடிவான தீர்மானம்தான் என்ன?" என்று கேட்டார்.

"முன்னர் நான் கூறியதுபோல் என்மீது ஏற்பட்டுள்ள சந்தேகங்களும் தப்பபிப்பிராயங்களும் நீங்கும் வரையில் எனது வீராபிஷேக முடிசூட்டுவிழா வைபவத்தைத் தள்ளி வைத்துவிட வேண்டும் என்பதே!"

"சத்தியத்தின் அடிப்படையில் எழும் நியாயமான சந்தேகங்கள் தீர்க்கப்படுவதும் தீர்ந்துபோவதும் சாத்தியமாக லாம்; ஆனால் தாழ்வு மனப்பான்மையினாலும் பொறாமை யினாலும் ஏற்படுகிற சந்தேகங்களைத் தீர்த்து வைக்க யாராலும் முடியாது; எக்காலத்திலும் அவை தீரா!" என்று உள்ளடங்கிய ஆத்திரத்துடன் முணுமுணுத்த முத்தரையர் ஒரு கண மௌனத்துக்குப் பின் திடுமெனத் தலைநிமிர்ந்து சொன்னார்: "அரசே! நல்ல காரியம் எது செய்தாலும் அதற்கு எங்கேனும் ஒரு மூலையிலிருந்து ஏதேனும் எதிர்ப்பு எழத்தான் செய்யும். அதையெல்லாம் பொருட்படுத்திக் கொண்டு நமது நடவடிக்கைகளிலிருந்து பின்னடைவது விவேகமாகாது. அடிமைப்பட்ட ஒரு நாட்டைப் போரிட்டு மீட்டதும் அதன் மன்னர் வீராபிஷேகம் செய்து புதிதாக முடிசூட்டிக்கொண்டு அரியணையில் அமரவேண்டியது நெடுங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் ஓர் அரசியல் சம்பிரதாயமாகும். அத்துடன், பல்லவப் பேரரசின் புகழ் பெற்ற சிம்மாசனத்தை

அதிக காலத்துக்குப் பிரமசரியத்தோடு தனித்து வைத்துப் பார்க்கவும் மக்கள் விரும்பமாட்டார்கள். எனவே, இவ்விரண்டு காரியங்களையும் தாமதமின்றி நடத்தியே தீர வேண்டும். இவை விக்கினமின்றியும் வெற்றி கரமாகவும் நடந்தேற நான் ஒரு யோசனை சொல்வேன்...”

உலாவிக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் மெல்லத் திரும்பி அவரை ஆவலுடன் ஏறிட்டுப் பார்த்து, “சந்திர லேகைச் சிற்றரசரின் அந்த மேலான யோசனை என்னவோ?” என்று வினவினான்.

உற்சாகத்தோடு நிமிர்ந்த முத்தரையர் உறுதியான குரலில் சொன்னார்: “ஆம், அரசே! நம்மையும் நாட்டையும் வீணான குழப்பத்தில் ஆழ்த்தியிருக்கும் அந்தப் பழையாறைச் சோழரையும், பல்லவ இளவரசரையும் இன்றே கைது செய்து சிறையில் அடைக்கவேண்டும். தங்களது வீராபிஷேக முடிசூட்டு விழாவும் திருமண வைபவமும் நடந்து முடிந்த பின் அவர்களை விடுதலை செய்துவிடலாம். இது ஒன்றுதான் எனக்குத் தெரிந்த ஒரே வழி.”

“நல்ல வழி! நயமான யோசனை!” என்று அமைதியாகக் கூறி அழகாகப் புன்னகை பூத்தான் பரமேசுவரவர்மன். “ஆனால், அதிலே ஒரு சிறு சங்கடம் இருக்கிறது; அதாவது, நானே என்னுடைய வலக் கரத்துக்கும் இடக் கரத்துக்கும் விலங்கு பூட்டிக் கொண்டபின் என்னால் எப்படி முடிசூட்டிக் கொள்ளவும் திருமணம் செய்து கொள்ளவும் இயலும்?”

முத்தரையரின் முகம் பேயறைப்பட்டதுபோல் வெளிறிச் சிறுத்தது. மூச்சு விடவும் முடியாமல் திக்கித் திணறினார் அவர்.

வாடாத புன்முறுவலுடன் மேலும் சொன்னான் பரமேசுவரவர்மன்: “நண்பரே! பழையாறைச் சோழரும் கோவிந்தவர்மனும் என்மீது துவேஷம் பாராட்டுவதை இன்னமும் என்னால் நம்ப முடியவில்லை. வீராபிஷேக முடி சூட்டு விழாவையும், எனது திருமணத்தையும் உள்ளடக்கிய

ஏதோ ஒரு மாபெரும் நலனுக்காகவே அவர்கள் இப்படி எனக்கு எதிராகச் செயல்படுகிறார்களோ என்றும் நினைக்கத் தோன்றுகிறது. எனவே, இன்னுங் கொஞ்ச காலத்துக்குப் பொறுமையைக் கடைப்பிடிப்பதென்று நான் தீர்மானித்து விட்டேன்."

மலையடிவாரத்துக்குச் சென்ற ஒட்டகத்தின் மன நிலையை அடைந்த முத்தரையர் அவனை நிமிர்ந்து பார்க்கவும் திராணியின்றித் தலைகுனிந்தார்.

பரமேசுவரவர்மன் மெல்லப் பெருமூச்செறிந்தான். அவனுடைய ஒளி பொருந்திய கண்கள் இலேசாகப் பனித்தன. ஆயினும் அதே இளநகையுடன் அமைதியாகச் சொன்னான்: "நான் இப்போது வருந்துவதெல்லாம் ஒரே ஒரு விஷயத்துக் காகத்தான் அன்பரே! அதாவது, என் அன்புத் தம்பியான கோவிந்தவர்மனையும், என் அருமை நண்பரான பழையாறைச் சோழரையும் சளுக்கியப் படையெடுப்புக்குப் பின் நேரில் பார்க்கும் வாய்ப்பே எனக்குக் கிடைக்கவில்லை. அதனால் அவர்களைச் சந்திக்கவேண்டும் என்று நான் அளவு கடந்த ஆவலுடன் காத்திருந்தேன். வெற்றிக்குப் பின்னும் அந்த நல்ல வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லையே என்ற வருத்தம்தான் என் மனத்தை வெகுவாக வாட்டிப் பிழிகிறது."

பதிலேதும் சொல்லாமல் அங்கிருந்து அகன்றார் பெரும் பிடுகு முத்தரையர்.

# 118

## நெஞ்சம் மறக்கவில்லை

பிறர் முன்னிலையில் மனிதன் தன் உணர்ச்சிகளை எளிதில் கட்டுப்படுத்திக்கொள்ள முடிகிறது. ஆனால் தனிமையில் இருக்கும்போது அந்த அளவுக்கு அவனால் அவற்றை வெல்லமுடிவதில்லை. நெருப்பில் கொட்டிய நெய்யாகத் தனிமை அவனுடைய உணர்ச்சிகளைக் கொழுந்து விட்டெரியத் தூண்டிவிடுகிறது. பல்லவ மன்னன் பரமேசுவர வர்மனும் இப்போது அவ்விதிக்கு விலக்காக முடியாமல் வெய் துயிர்த்துக் கொண்டிருந்தான்.

எதிர்பாராதவிதமாக எதிர்கொள்ள வேண்டி நேரிட்டு விட்ட அநுசிதமான பிரச்சினைகளைப்பற்றி முத்தரையரிடம் அவன் எவ்வளவுக்கெவ்வளவு அமைதியாகவும் நிதானமாக வும் பேசினானோ அவ்வளவுக்கவ்வளவு இப்போது அமைதி யிழந்து மனம் பேதலித்துத் தவித்தான். அதனால் இரவு வெகு நேரமாகியும் அவனுக்கு உறக்கம் பிடிக்கவில்லை. அரண் மனை மேன்மாடத்தில் சலிப்பின்றி உலாவிக்கொண்டே இருந்தான்.

தான் அடைந்த மகத்தான வெற்றிக்குப் பின் வீராபிஷேக முடிசூட்டு விழா நடைபெறாமல் நின்று போனதைப் பற்றிக்கூட அவன் அவ்வளவாகக் கவலைப்பட வில்லை. தன் ஆருயிர்க் காதலி உத்தமசீலியை உலகமறியக் கரம் பற்றித் தனக்குரியவளாக்கிக் கொள்வதில் அநாவசிய எதிர்ப்பும் கால தாமதமும் ஏற்பட்டுவிட்டதை எண்ணித்தான் பெரிதும் கலக்கமடைந்தான்.

முத்தரையர் சொன்னதுபோல் அந்த எதிர்ப்பையும் தடங்கலையும் ஒரு நொடியில் தகர்த்துத் தன் திட்டப்படி காரியங்களை நடத்திக்கொள்ள அவனால் இயலும் என்றாலும் அப்படிச் செய்ய அவன் சிறிதும் விரும்பவில்லை. காரணம், அவனது உன்னதமான காதல் திருமணத்தை எதிர்ப்புப் புழுதிகளுக்கிடையே அவசரக் கோலத்தில் முடித்துக்கொள்ளக்கூடாது என்பதுதான்! அவ்வாறு செய்தால், தான் கொண்ட காதலுக்கு மட்டுமல்ல, தன்னால் காதலிக்கப்பட்டவளுக்கும் அது ஏதோ ஒரு வகையில் இழிவை ஏற்படுத்திவிடும் என்று உயரிய பண்பில் ஊறிய அவனது உள்ளம் சஞ்சலப்பட்டது. தன் காதலையும் தன்னால் காதலிக்கப்படுபவளையும் அத்தனை புனிதமாகப் போற்றினான் அவன்.

இதுவும் தவிர, அவனுடைய திருமணத்துக்கு எதிர்ப்புக் காட்டி நிற்பவர்களும் சாதாரண மனிதர்கள் அல்லர். ஒருவன் அவனது ஒன்றுவிட்ட சகோதரன்; இன்னொருவர் பல்லவ சாம்ராஜ்யத்தைத் தாங்கி நிற்கும் தூண்களில் பிரதானமான வர்; மற்றவர் அண்டையில் உள்ள பெரியதொரு நாட்டின் பேரரசராகவும், சைவ உலகில் வணக்கத்துக்குரிய சிவநேசச் செல்வராகவும் விளங்குபவர். தமிழ் மக்களிடையே மதிப்பும் செல்வாக்கும் பெற்றுள்ள இவர்கள் தங்களது எதிர்ப்புக்கு எடுத்துச் சொல்லும் காரணமோ சமயத்தை அடிப்படை யாகக் கொண்டது. இவர்களைப் பகைத்துக் கொள்வது எளிது; ஆனால் அதிலிருந்து எழும் இன்னல்களைச் சமாளிப்பது என்பது அத்தனை எளிதாயிருக்க முடியாது. ஏனென்றால், அவர்கள் சமயத்தின் பெயரால் நாட்டு மக்களிடையே வெகு வேகமாக வெறுப்பையும் துவேஷத்தையும் வளர்த்துவிட முடியும். வல்லமைகளும் அதிகாரங்களும் படைத்த ஒரு மாபெரும் நாட்டின் மன்னனாக இருந்தாலும், மக்களின் அபிப்பிராயத்துக்கு முன்னால் அவன் தலை வணங்கிப் போகவேண்டியவனாகத்தானே இருக்கிறான்?

இதைப்பற்றிக்கூட அவன் இப்போது அதிகம் கவலைப் படவில்லை. இவ்வளவுக்கும் காரணமான ஆந்திர இளவரசி உத்தமசீலிக்கு—அவளை அடியோடு வெறுப்பவர்களான பழையாறைச் சோழராலோ, கோவிந்தவர்மனாலோ, அல்லது போரில் தோற்ற பின்னும் இங்கே தலைமறைவாகத் திரிந்து வரும் வில்வேலியாலோ, விநயாதித்தனாலோ—ஏதேனும் இன்னல்கள் ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது என்ற அச்சம்தான் அவனை வெகுவாக அலைத்துக் குலைத்துக் கொண்டிருந்தது.

'சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் இப்போது பெருவள நல்லூரில் உத்தமசீலிக்குத் துணையாக இல்லை: அவர் தம் மாளிகையைக் கூரத்தில் நிர்மாணிப்பதற்காகத் திருப்பருத்திக் குன்றத்துக்கு வந்துவிட்டிருக்கிறார். உத்தமசீலி மட்டும்தான் இன்னமும் அந்தச் சின்னஞ்சிறு புதர்க் குடிலில் தன்னந் தனியே இருந்து வருகிறாள். என்னுடைய அழைப்பையும், நான் அனுப்புவதாகச் சொன்ன பரிவாரத்தையும் எதிர் பார்த்துக்கொண்டு அவள் காத்திருப்பாள். இந்நிலையில் அவளுக்கு எவ்விதத் தகவலும் தெரிவிக்காமல் அவளைத் தனியே அங்கு இருத்தி வைத்திருப்பது ஆபத்து அல்லவா?'

பரமேசுவரவர்மனுக்கு இருப்புக் கொள்ளவே முடியவில்லை. அங்குமிங்குமாக அலைமோதித் தவித்த அவன், நீண்ட நேர யோசனைக்குப்பின் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய், அரண்மனையில் யாரிடமும் ஏதும் சொல்லிக் கொள்ளாமல் அந்த இருண்ட இரவின் இரண்டாம் சாம நேரத்திலேயே எங்கோ புறப்பட ஆயத்தமானான்.

# 119

## மகேந்திரமங்கலத்தில்?

**வி**ழுதுவிட்டு விரிந்திருந்த நடுச்சாம இரவின் இருட் செறிவை அதிரடித்துக் கிழித்துக்கொண்டு விரைந்து சென்ற 'அதிசயம்' சேணக் கசையின் திடீர் இறுக்கலால் திமிறலிட்டுக் கனைத்தவாறு நின்றது.

நெற்றியில் வழிந்த வியர்வையை வழித்துவிட்டுக் கொண்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன் சுற்றிலும் தன் பார்வையை ஓட்டிப் பார்த்தான். காஞ்சிக்குத் தெற்கே இரண்டு குரோசத் தொலைவுக்கப்பால் குரங்கணின்முட்டம் என்னும் ஊரைக் கடந்து மாமண்டூர் என்ற ஊரின் பிறிதொரு பகுதியான மகேந்திரமங்கலத்தை நெருங்கி வந்திருப்பது தெரிந்தது. அவ்வூர்களுக்கிடையே மேற்கிலும் தெற்கிலுமாக அமைந்த தூசி, நரசபுரம் முதலான சிற்றூர்கள் இருப்பதும் புலனாயின. மகேந்திரமங்கலத்துக்குச் செல்லும் சாலையை விட்டுப் பெருவளநல்லூருக்குப் போகும் நேர்ச் சாலையில் தன் குதிரையைத் திருப்பிச் செலுத்தினான் அவன். களைப் படைந்த குதிரை முன்போல் நாலுகால் பாய்ச்சலிடாமல் பெருநடையிட்டுச் செல்ல ஆரம்பித்தது.

மாமண்டூர் எல்லையில் சித்திரலேகத் தடாகம் என்பதாக ஓர் ஏரி இருந்தது. அந்த ஏரிக் கரையில் உள்ள பாறைக் குன்றில் மகேந்திரவர்மனால் உருவாக்கப்பெற்ற அழகிய இரு குகைக் கோயில்கள் இருந்தன. ஒன்று திருமால் கோயில்; மற்றொன்று சிவபெருமானுக்கு உரியது. அவ்விரு கோயில்களின் பக்கமாகச் சித்திரமேகத் தடாகத்தின்

கீழண்டைக் கரையைச் சுற்றிக்கொண்டுதான் அந்த நெடுஞ் சாலை செல்லவேண்டும்.

சாலையின் வளைவை அடைந்து தடாகக் கரையோரம் சென்றுகொண்டிருந்த குதிரை ஏனோ மிரட்சியுற்று நின்று அங்குமிங்குமாகத் திரும்பி முரண்டு செய்தது. சிந்தனையில் ஆழ்ந்தவனாய்ப் பழக்கப்போக்கில் புரவியைச் செலுத்தி வந்த பரமேசுவரவர்மன் விழிப்படைந்து நிமிர்ந்து நோக்கினான்.

சித்திரமேகத் தடாகக் கரையில் அமைந்த குகைக் கோயில்களுக்கு எதிரே நூற்றுக்கணக்கான தீப்பந்தங்கள் எரிவதும், அவ்வொரு வெள்ளத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் குழுமியிருப்பதும் புலப்பட்டன. அந்தக் காட்சியைக் கண்டு தான் குதிரைமேலே செல்லாமல் மிரண்டு முரண்டி நின்றது.

'இந்த நடுச்சாம நள்ளிரவு நேரத்தில் அங்கே மக்கள் வந்து குழுமியிருக்கக் காரணம் என்ன?"

பல்லவ நாட்டின் மாபெரும் யானைப் படையும், குதிரைப் படையும் மாமண்டூரில்தான் வைக்கப்பட்டிருந்தன. தூசி என்னும் ஊரில் பல்லவ தூசிப் படை இருந்தது. அதனாலேயே அவ்வூர்மக்களுக்கு மா (குதிரை, யானை) மண்டூர் தூசி என்னும் பெயர்கள் வழங்கலாயின. மேலும், பல்லவ சளுக்கியப் போரில் பரமேசுவரவர்மனுக்கு மகத்தான வெற்றியைத் தேடித் தந்த ஆந்திரப் படை வீரர்களில் பெரும் பாலோர் போர் முடிந்ததும் தமது சொந்த நாட்டுக்குத் திரும்பிப் போய்விட, சிலர் மட்டும் அவ்வாறு போகாமல் பல்லவ அரசாங்கத்தின் அநுமதியோடு இந்த மாமண்டூர், தூசி முதலான ஊர்களில் வந்து குடியேறித் தங்கள் தாய் மொழியான தெலுங்குடன் தமிழையும், தமிழ்க் கலை, கலாசாரப் பண்பாடுகளையும் தமதாக்கிக்கொண்டு தமிழர் களோடு தமிழர்களாகக் கலந்து வாழத் தலைப்பட்டு விட்டிருந்தார்கள். தமது நாட்டின் இளவரசியான உத்தம சீலி பல்லவ நாட்டின் பேரரசியாக ஆகப் போகிறாள் என்ற

உரிமையுணர்வே அவர்களை அப்படி இங்கே தங்கி வாழ வைத்துவிட்டது.

எனவே, அவர்களெல்லாம் சேர்ந்த அவ்வூர்களின் குடி மக்கள் ஒன்றுகூடி, பல்லவ நாடு பெற்ற மாபெரும் வெற்றியில் தமக்கு அதிகம் பங்கு உண்டு என்ற பெருமையைக் காட்டிக் கொள்வதற்காகத் தனிப்பட்ட முறையிலே வெற்றிக் கொண்டாட்டக் கேளிக்கைகள் நடத்துகிறார்களோ என்று எண்ணினான் பரமேசுவரவர்மன். அப்படியில்லையென்றால் அங்குள்ள குகைக்கோயில்களில் ஏதாவது ஒன்றின் திருவிழா வைபவம் நடைபெறலாம் என்றும் அவனுக்குத் தோன்றியது.

இந்நிலையில் தான் அப்பக்கம் போவது உசிதமாக இராதே என்ற யோசனையுடன் ஒரு கணம் தயங்கி நின்ற அவன், வேறு திசையில் திரும்பிச் செல்ல வழியேதும் புலப்படாததால், தன் குதிரையைச் சாலையோரமாக மெல்ல நடத்திக்கொண்டு மேலே சென்றான்.

சற்றுத் தூரம் சென்ற பிறகுதான் தன் ஊகங்கள் அனைத்தும் தவறானவை என்பது அவனுக்குப் புலனாகியது. ஆமாம்; அங்கே எவ்வித கேளிக்கைக் களியாட்டங்களோ திருவிழா வைபவமோ நடைபெறவில்லை. ஆண்களும் பெண் களுமாக ஆயிரக்கணக்கில் குழுமியிருந்த அந்தப் பெருங் கூட்டத்தினிடையே ஆழ்ந்த அமைதி நிலவிக் கிடக்க, அவர்கள் தனிமனிதனின் பேச்சை உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நள்ளிரவின் அடர்த்தியான நிசப்தத்தில் அந்த மனிதனின் கோபாவேசப் பேச்சுக் குரல் பாறைக் குன்றிலும் ஏரிக் கரையிலுமாக மோதிச் சிம்ம கர்ஜனை போல் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

தன்னை மீறிய வியப்பால் திகைத்து நின்ற பரமேசுவர வர்மன் தன் குதிரையைச் சாலையோரமிருந்த ஒரு மரத் தடியில் நிறுத்திவிட்டுப் புதர்களுக்கிடையே மறைந்து சித்திர மேகத் தடாகத்தை நோக்கி விரைந்தான்.

ஐந்தாறு தினங்களுக்கு முன் பெய்த பெரு மழையால் அந்த ஏரி, கரை மட்டத்துக்கு நீர் நிறைந்து தளும்பிக் கொண்டிருந்தது. கண்களுக்கு எட்டிய தூரம்வரை கருநீலப் பாய் விரித்தாற்போல் பரந்திருந்த ஏரியின் கரையோரம் சிற்றலைகள் வீங்கிச் சுருண்டு வெண்ணுரைகளை வாரி இறைத்துக் கொண்டிருப்பது அந்தக் காரிருள் சாமத்திலும் பளிச்செனப் புலனாகியது. நாலாபுறமும் திறந்துவிடப் பட்டிருந்த மதகுகளில் 'ஹோ'வென்ற இரைச்சலுடன் நீர் பாய்ந்து கொண்டிருந்தது.

அவசரப் பரபரப்புடன் ஏரிக்கரை மேட்டில் ஏறி நின்ற பரமேசுவரவர்மனுக்கு இந்த இரைச்சலால் அந்த மனிதனின் ஆவேசப் பேச்சைச் செவிமடுத்துப் புரிந்துகொள்ள முடிய வில்லை. அவன் யார் என்பதையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள இயலவில்லை. சுற்றுமுற்றும் பார்த்தவாறு வந்த வழியே மீண்டும் இறங்கி ஓடிப் பாறைக் குன்றின் அடி வாரத்தை அடைந்து, அங்கிருந்து மெல்ல மெல்ல ஊர்ந்து போய் வலப்புறமிருந்த குகைக்கோயிலின் பக்க வாட்டில் ஒடுங்கி நின்றுகொண்டு புறங்கைகளைப் பாறைமேல் ஊன்றி நிமிர்ந்து தலையைத் தூக்கி எட்டிப் பார்த்தான்.

ஆட்டு மந்தைபோல் குழுமி நின்ற ஜனக்கூட்டத்தின் முன் வரிசையில் மாமண்டூர், மகேந்திரமங்கலம், தூசி, நரசபுரம், குரங்கணின்முட்டம் முதலான ஊர்களின் உள்படு கருமத் தலைவர்கள், வரிகூறு செய்வார், வரித் தண்டல் அதிகாரிகள், அதிகரணம்—தருமாசனம் எனப்படும் அறங்கூர் அவையத்துத் தலைவர்களான அதிகரண போஷகர்கள், ஊராட்சி மன்றத் தலைவர்களான ஆளுங்கணத்தார், ஊரவை பெருமக்கள், அவர்களுக்குக் கீழ்ப்பட்ட பலதுறை வாரியங்கள், கோயில் நிர்வாகிகளான அமிர்த கணத்தார், ஆவணக் களரிகளின் தலைவர்கள், ஆதுர சாலைகளின் காப்பாளர்கள், மாணிக்கப் பண்டாரம்—பஞ்ச பண்டாரம்

முதலானவற்றின் கொடுக்கப் பிள்ளைகள், வடமொழிப் பண்டிதர்கள், கல்விக் கூட ஆசான்மார்கள், பட்டயங்கள் எழுதும் காரணிகர்கள் ஆகியோர் அமர்ந்திருக்க, அவர்கள் எதிரே—அவ்விரு குடை வரைக் கோயில்களின் இடையில் கிடந்த ஒரு சிறு பாறை மேல் ஏறி நின்றிருந்த—ஆஜானுபாகுவான வாலிபன் ஒருவன் கைகளை அப்படியும் இப்படியுமாக வீசி ஆட்டியவாறு உணர்ச்சிக் கனல் பறக்க உரத்த குரலில் பேசிக்கொண்டிருப்பது தெரிந்தது. ஜனக் கூட்டத்தின் பக்கம் அவன் திரும்பி நின்றிருந்ததால் அவனுடைய முகத்தைப் பரமேசுவரவர்மன் பார்க்க முடிய வில்லை. ஆனால் பேச்சுக் குரல் மட்டும் தெளிவாகக் கேட்டது.

"...ஆகையால், பெருமக்களே! குடிமக்களே! நாம் அரசியல் விடுதலைதான் அடைந்திருக்கிறோமே தவிர நமது ஆன்மீக வாழ்க்கைக்கு ஏற்பட்ட ஆபத்திலிருந்து இன்னமும் மீளாமல்தான் இருந்து வருகிறோம். அந்த ஆபத்து நம்மை அடியோடு அழித்துவிடக் கூடியது. அதை நீங்கள் உணர வேண்டும். பொக்கிஷத்தின் தாழ்க்கோலைத் திருடனிடம் ஒப்படைக்கக் கூடாது. களஞ்சியத்தில் எலியைக் குடியேற்றி வைக்கக் கூடாது. அப்படிச் செய்தால் பொக்கிஷம் பறிபோய் விடும்; களஞ்சியம் சூறையாடப்பட்டுவிடும். இராஜ பக்தி, தேசபக்தி என்ற பெயரால் நமது சமய பக்தியை இழக்க ஒருபோதும் சம்மதிக்கலாகாது. கண்ணை விற்று ஓவியம் வாங்கிப் பயனில்லை. அந்த அநியாய ஏற்பாட்டுக்கு உடன்படுவோமானால் நம் ஆத்மாவின் கண்ணை நிரந்தரமாக இழந்துவிடுவோம். அதனால் இன்று கிடைத்திருக்கும் அரசியல் சுதந்தரத்தையும் பறிகொடுத்து விடுவோம். எனவேதான் அந்த ஏற்பாட்டை நம் உடலில் உயிர் உள்ளவரையில் எதிர்க்கவேண்டும் என்கிறேன். பழம் பெருமை வாய்ந்த பல்லவ நாட்டின் அகப்புற நலன்களுக்காக நாம் இந்தக் காரியத்தைச் செய்தே ஆகவேண்டும். இதில் தேசத்

துரோகமோ இராஜத் துவேஷமோ எதுவும் இல்லை. தேசத்தின் எதிர்கால நன்மைக்காகவே நாம் இந்தப் புனிதமான எதிர்ப்பைக் காட்ட வேண்டியவர்களாக இருக்கிறோம்...”

இந்நேரம்வரை எழுதி வைத்த சித்திரங்களாக நின்றிருந்த ஜனக்கூட்டத்தினிடையே திடீரென்று கலகலப்பு ஏற்பட்டது. “உண்மை! உண்மை! உயிரைக் கொடுத்தேனும் எதிர்ப்போம்! தலையைக் கொடுத்தாவது அத்திட்டத்தைத் தகர்ப்போம்!” என்ற கோஷம் கூட்டத்தின் ஒரு பகுதியிலிருந்து குபீரெனக் கிளம்பி ஒலித்தது. உடனே மற்றொரு பகுதியிலிருந்து, “அநியாயப் பேச்சு! அதர்மத் தூண்டுதல்! இதை நாங்கள் ஏற்கமாட்டோம்! விடுதலைப் போரில் கலந்து கொள்ளாமல் ஓடி ஒளிந்த கோழைகளின் பேச்சைக் கேட்க மாட்டோம்!” என்ற ஆவேச எதிர்ப்புக் குரல்கள் புறப்பட்டன. அத்துடன், “பல்லவ மக்களின் மானம் காத்த பரமேசுவர வர்மர் வாழ்க! அவருக்குப் பக்க பலமாக நின்ற ஆந்திர இளவரசி உத்தமசீலி வாழ்க, வாழ்க!” என்ற கோஷமும் குமுறிக்கொண்டு எழுந்தது.

“அவர்களை வெட்டுங்கள்! குத்துங்கள்!”

“அவர்களை நொறுக்குங்கள்! புதையுங்கள்!”

ஜனக் கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டு இரண்டாகப் பிரிந்து ஒன்றையொன்று நோக்கிப் பாய்ந்தன. ஒரே கூச்சல், குழப்பம், கூக்குரல். இரு பகுதிகளிலிருந்தும் தீப்பந்தங்கள் வீசப்பட்டன. கம்புகள் சுழன்று பறந்தன. ஜனங்கள் தலைவிரிகோலமாகச் சிதறிக் கலைந்து ஓடினர்.

பாறைமேல் பதைபதைத்து நின்ற வாலிபனைக் கீழேயிருந்து எழுந்த ஒரு மனிதர் வெடுக்கெனப் பிடித்து இழுத்துக் கொண்டு குகைக் கோயிலின் பக்கவாட்டை நோக்கி விரைந்து சென்றார். அங்கேதான் பரமேசுவரவர்மனும் இருளில் மறைந்து நின்றுகொண்டிருந்தார்.

*சந்தேகமில்லை; இந்நேரம்வரை அங்கே பேசியவன் பல்லவ இளவரசனான கோவிந்தவர்மன்தான். அவனுக்குப் பின்னால் நின்றிருந்து அவனை இழுத்துக்கொண்டு வந்தவரோ பழையாறைச் சோழர்!*

*“என்ன ஐயா? நீங்கள் சொல்லிக் கொடுத்தபடியேதான் பேசினேன்; எதிர்பாராத விதமாகக் குழப்பம் ஏற்பட்டு விட்டதே?”*

*“கவலைப்படாதீர்கள், இளவரசே! நமக்கு வேண்டியது அதுதான்.”*

*“நம்முடைய கருத்தை மக்கள் ஒப்புக்கொள்ள வேண்டாமா?”*

*“அது தேவை இல்லை; சிலர் ஏற்கவேண்டும், சிலர் எதிர்க்க வேண்டும். அப்போதுதான் நமது இலட்சியம் ஈடேறும்.”*

*“அதாவது?......”*

*“ஒன்றுபட்ட எதிர்ப்போ, ஒன்றுபட்ட ஆதரவோ பயனற்றது. எதிர்ப்பும் ஆதரவும் இரண்டாகப் பிரிந்து ஒன்றுடன் ஒன்று முட்டி மோதிக்கொண்டு குழப்பம் விளை விக்கவேண்டும். குழப்ப நிலைதான் யாரையும் எதையும் அச்சுறுத்திப் பணிய வைக்கும். சரி; இனி நாம் இங்கிருப்பது ஆபத்து. அடுத்த ஊர்களுக்குப் போய் நமது பணியைத் தொடர்வோம். வாருங்கள்.”*

*பழையாறைச் சோழரும், கோவிந்தவர்மனும் அங்கிருந்து புறப்படத் திரும்பியபோது அவர்களை நோக்கி ஒருவன் தலைதெறிக்க ஓடி வந்தான்.*

## 120

# அரிய வாய்ப்பு

"யார், சம்புவராயனா?" என்று வியப்பும் திகைப்புமாக அடித் தொண்டையில் விளித்தார் பழையாறைச் சோழர்.

"ஆம், பிரபு!" என்று குழறிக்கொண்டே அருகில் வந்து நின்ற ஆபத்துதவி சம்புவராயன், ஆலம்பாக்கம் இளங்காரிக் குடையானின் இல்லத்திலிருந்து சோழ இளவரசி இளங் கோப்பிச்சியைப் பழையாறைக்கு அழைத்துப் போனதையும், அவள் நடுவழியில் பெருவளநல்லூருக்குப் போகுமாறு கட்டளையிட்டதையும், அப்படிப் போனபோது மழையின் காரணமாகச் சளுக்கிய இளவரசன் விநயாதித்தனிடம் ஏமாந்துவிட்டதையும், தன்னை அவன் கட்டிப் போட்டு விட்டு இளங்கோப்பிச்சியின் சிவிகையைப் பின்தொடர்ந்து சென்றதையும் விவரமாகக் கூறியபின் மேலும் சொன்னான்: "பொழுது விடியும்வரையில் அந்தப் பாழடைந்த மண்டபத்தி லேயே கட்டுண்டு கிடந்த என்னை அவ்வழியே வந்த சிலர் விடுவிடுத்தார்கள் ஐயா! உடனே பெருவளநல்லூருக்கு விரைந்து ஓடி, அங்கு நம் இளவரசியார் வந்தாரா என்று விசாரித்தேன். யாருக்கும் அவரைப்பற்றிய விவரம் எதும் தெரியவில்லை. சேதியக் கலைஞரும் அவ்வூரைவிட்டுத் திருப்பருத்திக் குன்றத்துக்குப் போய் விட்டாராம்..."

நடுக்கத்துடன் இவ்வாறு இழுத்து நிறுத்திய சம்புவ ராயனை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த பழையாறைச் சோழர், "இளங்கோப்பிச்சி ஏன் பெருவளநல்லூருக்குப் போனாள்?" என்று கடுகடுத்த குரலில் கேட்டார்.

"சேதியக் கலைஞரைப் பார்ப்பதற்காக, பிரபு!"

"இல்லை; ஆந்திர இளவரசி உத்தமசீலியைச் சந்திப்பதற்காகத்தான் அவள் அங்கு சென்றிருக்க வேண்டும்."

"ஆம், அரசே! நானும் அப்படித்தான் நினைத்தேன்."

"ஆந்திர இளவரசி இப்போது அந்த ஊரில்தானே இருக்கிறாள்?"

"அந்த விவரம் எனக்குத் தெரியாது, பிரபு!"

தலையை மேலுங் கீழுமாக ஆட்டிக்கொண்டு சிறு பொழுது பேசாதிருந்த பழையாறைச் சோழர் அடைத்த குரலில், "ம்... என் மகளுக்கு மட்டுமல்ல, ஆந்திர இளவரசி உத்தமசீலிக்கும் சேர்த்தேதான் ஆபத்து தேடிப் போய் இருக்கிறது" என்றார்.

துடித்துப் பதறிய கோவிந்தவர்மன், "அப்படியானால் சீக்கிரம் புறப்படுங்கள், ஐயா! இளங்கோப்பிச்சியின் கதி என்ன ஆயிற்றோ!" என்று திணறிப் படபடத்துக்கொண்டே அங்கிருந்து துள்ளிப் பாய்ந்து ஓடினான். பழையாறைச் சோழரும் சம்புவராயனும் அவனுடன் சேர்ந்து விரைந்து சென்றார்கள்.

இவ்வளவு நேரமும் அவர்களுக்குப் பின்னாலிருந்த பாறைச் சரிவில் மறைந்து நின்றுகொண்டிருந்த பரமேசுவர வர்மன் புண்ணான மனத்துடன் பெருமூச்சு விட்டவாறு வெளியே வந்து தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு சற்று நேரம் அப்படியே நின்றான். அவனுக்கு எல்லாம் புரிந்து விட்டன. முத்தரையர் வந்து சொன்ன தகவல்களின் படியேதான் பழையாறைச் சோழரும் கோவிந்தவர்மனும் தங்கள் எதிர்ப்பு நடவடிக்கையைத் தீவிரமாக ஆரம்பித்து விட்டார்கள்!

ஆனால் அதைப்பற்றி அவன் அதிகம் சிந்திக்காமல், சம்புவராயன் வந்து சொன்ன சேதியை நினைத்தே பெரும் குழப்பத்துக்கு உள்ளானான். 'பழையாறைச் சோழராலோ

கோவிந்தவர்மனாலோ மட்டுமல்ல; தலைமறைவாகத் திரிந்து வரும் சளுக்கிய விநயாதித்தனாலும் ஆந்திர இளவரசிக்கு ஆபத்து நெருங்கிக்கொண்டிருக்கிறது! ஒருகால் அந்த ஆபத்து இந்நேரம் ஏற்பட்டுவிட்டே இருக்குமோ?' — அதிர்ந்து நடுங்கிய நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டு தன் குதிரையை நோக்கி ஓடினான் பரமேசுவரவர்மன்.

இரவின் நான்காம் சாம நேரம்.

"எழுந்திருங்கள், தளபதியாரே! இனியும் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்க வேண்டாம்" என்று அவரசப் பர பரப்புடன் கரகரத்தான் சளுக்கிய விநயாதித்தன்.

அன்றொரு நாள் பல்லவபுரம் அரண்மனைக் கோட்டைச் சிறையிலிருந்து தப்பி ஓடிவந்த கோவிந்தவர்மன் உறையூர்ச் சாலையோரம் இருந்த ஒரு சுமைதாங்கிக் கல்லின் மேல் படுத்திருந்தானே, அதே இடத்தில்—அதே போன்ற நிலையில்—அவனை விட மோசமான கோலத்தில்—பஞ்சைப் பராரிபோல் இளைத்துக் களைத்துப் படுத்துக் கிடந்த சளுக்கியத் தளபதி வில்வேலி சோர்வுடன் எழுந்து உட்கார்ந்து விரக்தியுடன் மெல்லச் சிரித்தார்.

"நல்ல சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது, எழுந்திருங்கள் ஐயா!" என்று படபடத்த விநயாதித்தன் உள்ளார்ந்த சினத்துடன் மேலும் சொன்னான்: "நமக்குக் கிடைத்த அரிய வாய்ப்பை அன்றிரவே இந்த வீரனிடம் தெரிவித்து உங்களைப் பெருவளநல்லூர் சிற்றாற்றங்கரைக்கு அழைத்து வரும்படி அனுப்பினேன். ஆனால் நீங்கள் விவரம் தெரிந்த பின்னும் வரவில்லை. அன்றெல்லாம் நான் அங்கேயே மறைந்திருந்து காத்துப் பார்த்துவிட்டுப் பிறகு உங்களைத் தேடிக்கொண்டு எங்கெங்கோ சுற்றியலைந்து கடைசியில் இங்கு வந்து கண்டு பிடித்தேன்."

மையிருட்டை மருட்சியுடன் பார்த்துக்கொண்டு மௌனமாயிருந்த வில்வேலி மெல்லத் தலை நிமிர்ந்து,

"இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள், இளவரசே?" என்று அமைதியாக வினவினார்.

"என்ன செய்யச் சொல்கிறேனா? இவ்வளவு நேரம் நான் சொன்னதெல்லாம் உங்கள் காதில் விழவில்லையா? நமது மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தைச் சிதைத்துக் குலைத்து நம்மை இந்தக் கதிக்கு ஆளாக்கி வைத்திருக்கும். சண்டாளியான அந்த உத்தமசீலி இருக்குமிடத்தைக் கண்டு பிடித்துவிட்டேன்; போதிய பாதுகாப்பற்ற ஒரு சிறு புதர்க் குடிலில் இருந்துவரும் அவளோடு, நம் குடியைக் கெடுத்த பழையாறைச் சோழனின் பேய் மகள் இளங்கோப்பிச்சியும் இருக்கிறாள். அவ்விருவரையும் பழிவாங்க நமக்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. அதை உங்கள் கையாலேயே செய்து முடிக்கவேண்டும். அந்தக் காட்சியைக் கண்டு நான் ஆனந்தப்பட்டு மனம் குளிரவேண்டும். இத்தனை நாட்களாக இங்கே நாம் நாயாகவும் பேயாகவும் திரிந்துகொண்டிருந்ததன் பயனாக இந்த ஒரு காரியத்தையாவது செய்து முடித்துவிட்டுத் தான் இந்நாட்டைவிட்டு அகலவேண்டும்" என்று வெறிக் குரலில் கூவினான்.

எங்கோ தொலைதூரத்தில் ஓர் ஆந்தை அலறிய ஒலி கேட்டது. குழி முயலொன்றைத் துரத்திக்கொண்டு சாலையின் குறுக்கே பாய்ந்து ஓடியது ஒரு குள்ள நரி. உணர்ச்சியற்ற மரக்கட்டைபோல் உட்கார்ந்திருந்த வில்வேலி உயிரற்ற சிரிப்புடன் எழுந்து தொய்ந்து துவண்டு நடக்கலானார். விநாயதித்தனும் சளுக்கிய வீரனும் அவரைப் பின் தொடர்ந்தார்கள்.

பொழுது புலர இன்னும் ஒரு நாழிகை நேரமே இருந்தது. பெருவளநல்லூர் சிற்றாற்றைக் கடந்து, ஆந்திர இளவரசி தங்கியிருந்த புதர்க்குடிலை நோக்கிச் செடி கொடி மரங்களுக்கு இடையே ஒளிந்து மறைந்து வந்துகொண்டிருந்த விநயாதித்தனும் வில்வேலியும் பலத்த அதிர்ச்சியுற்றவர் களாய் அப்படியே திகைத்து நின்றார்கள். ஆனால் மறுகணமே

விநயாதித்தனின் முகம் மலர்ந்து விரிந்தது. பரபரப்புடன் தன் சிவந்த கண்களைக் கசக்கி விட்டுக்கொண்டு பார்த்தான்.

அங்கே, பெருமழையால் அழிந்து சிதைத்த நிலையில் கிடந்த அந்தப் புதர்க் குடிலின் எதிரே, ஆற்றங் கரை மேட்டின் சரிவில், திக்பிரமையுற்றவனாய் அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் லயித்திருந்தான் பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன்!

# 121

## விநயாதித்தனின் கோபம்

**வீ**ங்கிச் சுருளும் வெண்ணுரைகளுடன் சீறிச் சுழன் றோடிய சிற்றாற்றின் நீர்ப் பரப்பையே வெறித்துப் பார்த்த வாறு கரைமேட்டின் சரிவில் அமர்ந்திருந்த பரமேசுவர வர்மன் தனக்குப் பின்னால் எமகிங்கரர்கள்போல் வந்து நின்றவர்களையும் அறியாமல் தன் குழப்பச் சிந்தனைகளி லேயே மேலும் மேலும் மூழ்கிப் போய்க் கொண்டிருந்தான்.

'பெரு மழையின் வெள்ளப்பெருக்கு இந்தப் புதர்க் குடிலையே இப்படி அழித்துச் சிதைத்துவிட்டதென்றால், இதில் தங்கியிருந்த ஆந்திர இளவரசியின் கதி என்ன ஆகி யிருக்கும்? முன்னெச்சரிக்கையுடன் அவள் வேறெங்கேனும் புறப்பட்டுச் சென்றிருப்பாளா? அல்லது?...'

நெஞ்சிலே நெருப்புச் சுட்டாற்போல் நெளிந்து குமைந்தவன் வேகமாகத் தலையை ஆட்டிக்கொண்டே விருட்டென்று துள்ளி எழுந்தான். அளவு கடந்த குழப்பத்தால் அவன் உடல் தொய்ந்து கால்கள் தடதடவென்று நடுங்கின. நிமிர்ந்து நிற்கவோ, அங்கிருந்து பெயர்ந்து செல்லவோ முடியாமல் தவிப்படைந்து நின்ற அவன் தன்னை மீறிய தளர்ச்சியினால் முன்போலவே மணற்சரிவில் உட்கார்ந்து முழங்காலில் முட்டிக் கையை ஊன்றி முகத்தைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

சந்தனப் பலகையில் முத்துக்களைப் பரப்பினாற்போல் வியர்வைத் துளிகள் அரும்பியிருந்த அவனது அகன்ற முதுகுக்கு நேர்ப் பின்னாக—ஆற்றங்கரைமேட்டில் மறுபக்கச்

சரிவுக்கு அப்பால், சுமார் இரண்டு பாடகம் தொலைவில்—பச்சைத் தேர்போல் வளர்ந்திருந்த எட்டி மரமொன்றின் அடியில் மறைந்து நின்று கொண்டிருந்த சளுக்கிய விநயாதித்தன் கொலை வெறியால் கொவ்வைப் பழமாகச் சிவந்த தன் பெரிய விழிகளை உருட்டிப் புரட்டி, பக்கத்தில் நின்ற வில்வேலியை விறைத்துப் பார்த்து, "தயங்க வேண்டாம், தளபதியாரே! மான்களை வேட்டையாட வந்த நமக்கு வரிப் புலியே கிடைத்துவிட்டது. இந்த அரிய சந்தர்ப்பத்துக்காக நாம் எத்தனை நாட்கள் அலைந்து திரிந்தோம்? இதுபோன்ற வாய்ப்பு இனி கிடைக்கவே கிடைக்காது! விநாடிகளை வீணாக்காமல் அவனை வெட்டி வீழ்த்துங்கள்! அவனுடைய செங்குருதியிலே நீந்திப் புரள என் உடலும் உள்ளமும் துடி துடிக்கின்றன! ஊம், சீக்கிரம்! ஆகட்டும்!" என்று அடக்கிக் குறுக்கிய இரகசியக் குரலில் படபடத்தான்.

ஆனால், வில்வேலியோ, காணக் கிடைக்காத தெய்வமாக் காட்சியொன்றைக் கண்டுவிட்டாற் போன்ற மெய்ச் சிலிர்ப்புடன், கண்களில் மகிழ்ச்சியொளி வீச, முகம் மலர்ந்து விரிய, ஆடாமல் அசையாமல் அப்படியே சிலை போல் நின்று, தொலைவிலே அமர்ந்திருந்த பரமேசுவர வர்மனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

விநயாதித்தன் அவரை வெடிப்பும் துடிப்புமாக ஏறிட்டு நோக்கினான். அவன் முகம் விகாரமடைந்து கறுத்தது. விழிகளிலே கோபக் கனல் கொப்புளித்தது. "என்ன ஐயா, பேசாமல் நிற்கிறீர்களே? யோசனைக்கே இனி இடமில்லை; உருவி எடுங்கள் குறுவாளை! நம் ஜன்மப் பகைவனின் முதுகைக் குறி வைத்து வீசியெறிந்து என் நெஞ்சத்தின் வஞ்சப் பசியுணர்ச்சிக்குச் சாந்தி அளியுங்கள்! நேரம் தீய்கிறது; நடத்துங்கள், ஐயா!" என்று தணிந்த குரலில் சிடுசிடுத்துக் கூறிக் கொண்டே அவருடைய புஜங்களைப் பற்றிக் குலுக்கினான் அவன்.

அன்றொரு நாள்—நெல்வேலிப் போர் முனைக்குப் புறப்படுமுன்—பரமேசுவரவர்மனின் உதார குணத்தையும்

கருணை மனத்தையும் எண்ணிக் கசிந்து உருகி உள்ளொளி பெற்றவராய்ப் பல்லவபுரம் அரண்மனை முன்றிலிலே காவி யாடையும் கையுமாக ஒரு துறவிபோல் நின்றுகொண்டிருந் தாரே, அதே போன்ற நிலையில் இப்போது தோற்றமளித்த வில்வேலி விரக்திப் புன்முறுவலுடன் திரும்பி, "இளவரசே! தாங்கள் விரும்பினால் அந்தக் காரியத்தைத் தங்கள் கையாலேயே செய்து கொள்ளுங்கள். தயவுசெய்து என் உதவியை எதிர்பார்க்காதீர்கள்" என்றார் அமைதியாக.

தீயை மிதித்தவன்போல் துடித்துப் பதறி நிமிர்ந்த விநயாதித்தன், "என்ன சொன்னீர்கள் ஐயா? நானே செய்வதா? நீங்கள் ஏன் செய்யக் கூடாது? எதற்காக இப்படிப் பயந்து பின்னடைகிறீர்கள்?" என்று குரலை அடக்கிக் கொண்டு வினவினான்.

"மன்னியுங்கள், இளவரசே! இதற்குமேல் என்னை எதுவும் கேட்காதீர்கள்!" என்று அதே அமைதியுடன் பதிலிறுத்தார் வில்வேலி.

பரபரப்படைந்த விநயாதித்தன் அவருடைய முதுகுப் பக்கம் போய் உராய்ந்தபடி நின்றுகொண்டு, "நான் சொல்வதைக் கேளுங்கள், ஐயா! எனக்கு அத்தனை குறிப்பாகக் கத்தியை வீசி எறியத் தெரியாது. குறி தப்பினால் நமக்கே உயிராபத்தாகிவிடும். தூங்கும் சிங்கத்தை தட்டி யெழுப்பிய கதையாகிவிடும். முன்னொருமுறை இப்படித் தான் சோழ இளவரசியைக் குறிபார்த்து நான் எறிந்த கத்தி அவளுடைய பணிப் பெண்ணான அநந்தமதி என்பவளின் உயிரைக் குடித்து என் முயற்சியைத் தோல்வியுறச் செய்து விட்டது. அதனால்தான் உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். மறுக்காதீர்கள். இந்த நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள்" என்று அடித் தொண்டையில் கரகரத்தான்.

வில்வேலி அமைதியாகத் தலையசைத்தார். 'தம்மால் முடியாது' என்பதுபோல் உறுதியாகத் தலையாட்டினார் அவர்.

விநயாதித்தனின் மனம் எரிமலையாகக் குமுறியது. “முடியாதெனச் சொல்லும் நீங்கள் என்னோடு ஏன் புறப்பட்டு வந்தீர்களாம்?” என்று கடுகடுப்புடன் கேட்டான்.

“பல்லவ மன்னனைக் கொல்வதற்காக நான் இங்கு வரவில்லை, இளவரசே!”

“அப்படியானால் உத்தமசீலியோ, இளங்கோபிச்சியோ இருந்திருந்தால் அவர்களைக் கொன்றிருப்பீர்களோ?”

“சென்ற சில விநாடிகளுக்கு முன்வரையில் மிருகமா யிருந்த நான் அந்தப் பாதகச் செயலைச் செய்தாலும் செய்திருப்பேன்.”

“இப்போது மட்டும் உங்களுக்கு என்ன நேர்ந்து விட்டதாம்?”

“நான் மனிதனாக மாறியிருக்கிறேன். அதோ, அங்கே சத்தியத்தின் வடிவமாய், அன்பின் மறு உருவமாய் வீற்றிருக்கும் அந்த மகா புருஷனின் தரிசனமே என்னை இப்படி மாறிவிட்டது” என்று உணர்ச்சிப் பெருக்குடன் முணு முணுத்துக் கொண்டே தம் குதிகாலை உயர்த்தி நிமிர்ந்து, தொலைவில் அமர்ந்திருந்த பரமேசுவரவர்மனைப் பக்தி பூர்வமான ஆவலுடன் எட்டிப் பார்த்த வில்வேலி அடைத்த குரலில் மேலும் சொன்னார்: “முன்னொருமுறை இந்த மகா புருஷனை மனத்தால் எண்ணிப் பார்த்தபோதே இது போன்ற மாற்றத்தை என்னுள் நான் கண்டிருக்கிறேன். அதன் உத்வேகத்தால் எனது இழிந்த பதவிகளையும், படுகொலைப் போர்த் தொழிலையும் விட்டொழித்துத் துறவியாகவும் துடித்திருக்கிறேன். ஆனால் அந்த ஒளி பொருந்திய புது மனத்தைப் பல காலம் இருட்டில் கிடந்தே வளர்ந்து உரம் பெற்ற மிருகமனம் எளிதில் வென்று அடக்கிவிட்டது. அதனாலேயே நான் நெல்வேலிப் போர்முனைக்குப் புறப்பட்டுப் போனேன். ஆயினும் அந்தப் புதிய மனம் என்னுள் அடிக்கடி தலைதூக்கி என்னை அலைக்கழித்துக் கொண்டேதான் இருந்தது. போர்க் களத்தில் என் வீறார்ந்த

திறனை வெளிப்படுத்திவிடாமல் அது இடறிவிட்டுக் கொண்டேயிருந்தது. நெல்வேலியிலும் பெருவளநல்லூரிலும் நான் முழுமூச்சுடன் போரிடாமல் கோழைபோல் பின்னடைந்ததற்கும், என்னுடைய தலைமையில் தோல்வியே கண்டறியாத சளுக்கியப் படைகள் தோல்விக்கு மேல் தோல்வியாகச் சுமந்துகொண்டு ஓட நேரிட்டதற்கும் இது தான் காரணம். இதைப்பற்றி நான் சிறிதும் கவலைப்பட வில்லை. இப்போது அதற்காகப் பெருமையே கொள்கிறேன். ஏனென்றால், நான் மனிதனாக மாறியிருக்கிறேன். அன்பையும் சத்தியத்தையும் தர்மத்தையும் உணர்ந்த ஓர் எளிய மனிதனாகிவிட்டிருக்கிறேன்."

அக்கினிக் குழம்பில் புரட்டியெடுக்கப்பட்டவன் போல் துடிதுடித்து நின்ற விநயாதித்தன் குரூரமாக அவரை விழித்துப் பார்த்துப் பற்களை நறநறவெனக் கடித்தான். "பச்சைத் துரோகம்! நன்றி கொன்ற நயவஞ்சகம்!" என்று குமுறிப் பொருமிய அவன் அவரது தோளை வெடுக்கெனப் பற்றி ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டு அடக்கியொடுக்கிய குரலில் உறுமினான்; "ஹூம்! உள்ளொளி பெற்றாராம்! கட்டுக் கதை! இத்தனை காலமாக எங்களுக்குச் செய்து வந்த துரோகங்களை மறைப்பதற்காகப் போடப்படும் ஏமாற்று வேஷம்!"

எவ்விதச் சலனமுமின்றி அமைதியாக நின்ற வில்வேலி புன்முறுவல் பூத்துக்கொண்டார். வெறியாவேசப் பதற்றத் துடன் மேலும் கரகரத்தான் விநயாதித்தன்: "ஆதிநாள் முதலே சளுக்கிய சாம்ராஜ்யத்தின் அழிவுக்கும், மாவீர மகாசக்ர வர்த்தி விக்கிரமாதித்தரின் வீழ்ச்சிக்கும் அடிகோலி வந்த உட் பகைவர் இருவரில் நீங்களும் ஒருவர் என்பதை நான் நன்கு அறிவேன். இன்னொருவன் ஆந்திர மன்னன் விஷ்ணு வர்த்தனன். அவன் தன் துரோகச் செயலைப் பகிரங்கமாகவே நடத்தி முடித்துக்கொண்டான். ஆனால் நீங்களோ, அகந்தை யான பேச்சாலும், ஆணவத் திமிரான உத்தரவுகளாலும், அதிகாரப் போதையால் தீர ஆலோசியாமல் செய்த முடிவுகளாலும், முட்டாள்தனமான செயல்களாலுமே

எங்கள் அழிவுக்கு வழி வகுத்து வந்திருக்கிறீர்கள். அதை மூடி மறைக்கவே இப்போது இந்தப் பகல் வேஷம் போட்டு நடிக்கிறீர்கள்.”

வில்வேலியின் முகத்தில் ஓர் அலட்சியப் புன்னகை நெளிந்தது. விநயாதித்தனோ பொங்கிப் புளித்த சினத்துடன் மேலும் படபடத்தான்:

“சிரிக்கிறீர்களா? சிரித்துச் சிரித்தே எங்களைச் சீரழித்த உங்களின் மூடச் செயல்களை ஒவ்வொன்றாகச் சொல்கிறேன், கேளுங்கள் ஐயா! பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்த கோவிந்தவர்மன் தப்பியோடும்படி விட்டதுமல்லாமல், அவனை நேருக்கு நேர் பார்க்க நேர்ந்த போதும் அவனுடைய பொய் வேஷத்தைக் கண்டு ஏமாந்து அவனைச் சிறைப் பிடிக்காமல் விட்டு விட்டீர்கள். அந்த மாபெரும் தவறுதான் நமது அழிவுக்கெல்லாம் அஸ்திவாரமாக அமைந்தது. பிறகு பல்லவ நாட்டில் சளுக்கியர் ஆட்சிக்கு எதிராக சைவர்கள் கொதித்தெழும்படியான ஒரு விவேகமற்ற காரியம் செய்தீர்கள். அதாவது, ஆந்திர இளவரசி உத்தமசீலியைச் சமண சமயப் பிரசாரம் செய்வதற்காகப் பல்லவ நாட்டுக்கு வரவழைக்கும்படி விக்கிரமாதித்தருக்குத் துர்ப்புத்தி சொல்லிக் கொடுத்தீர்கள். அவள் வந்தபின் அவளுடைய நடத்தைகளில் போதிய கவனம் செலுத்தாமல், எதிரிகளின் கையாளான சேதியக் கலைஞனின் இல்லத்துக்கு அந்த நாசகாரியை அழைத்துப்போய் அங்கு தலைமறைவாகத் தங்கியிருந்த பல்லவ மன்னனைச் சந்திக்க வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தீர்கள். அதன் பிறகு அவ்விருவருக்கு மிடையே பிறந்த காதலை உறுதிப்படுத்தும் விதமாக அவனைப் பல்லவபுரம் இலவந்திகைப்பள்ளிக்கு வரும்படி செய்து, அங்கே அவன் தன்னையே ஓவியமாக வரைந்து கொடுத்ததையும் கவனியாமல் அவனைத் தப்பி செல்ல விட்டுவிட்டீர்கள்...”

அமைதி பூத்து வெளுத்திருந்த வில்வேலியின் முகத்தில் சிறிதளவு கருமை படர்ந்தது. இதைக் கவனித்துக் கொண்ட விநயாதித்தன் அவருடைய தோளுக்குமேல் தலையை நீட்டிச் செவியருகில் வாயை வைத்துக்கொண்டு குரலை வெளிப் படுத்தாமல் வெறும் காற்றுக் குதப்பலிலேயே சொற்களைக் கலக்கி வீசினான்: “உங்களுடைய அறிவற்ற செயல்களால் எங்களுக்கு ஏற்பட்ட பாதகங்கள் இன்னும் பல உண்டு. ஆந்திர இளவரசிக்கும், என் தந்தையார் விக்கிரமாதித்தருக்கும் வன்மப் பகை ஏற்படும்படியாக அவளுடைய சிவிகைதூக்கி நாகோதரனை நீங்கள் சித்திரவதை செய்ததாலும், அவனுக்குத் தெரியும்படியாக நம் திட்டங்களைப் பேசியதாலுமேதான் ஆந்திர மன்னன் நமக்கு எதிராக மாறும்படி ஆயிற்று. எங்கள் சாம்ராஜ்யச் சரிவுக்கு இதுவே அடிப்படைக் காரணம் என்று நான் சொல்வேன். இதுவுமல்லாமல் இங்குள்ள திரமிள சமண சங்கத் தலைவரை நீங்கள் மிரட்டி உருட்டி விக்கிரமாதித்தரின் மேல் அவருக்கு வெறுப்பு ஏற்படும்படி செய்துவிட்டீர்கள். அதை மேலும் வளர்ப்பதே போல் சிரவண்பெள் குளத்து அகளங்க அடிகளை வீணாக வரப்பண்ணி, காஞ்சிக் கோட்டையைக் காவல் காத்துக் கொண்டிருந்த என் மூலம் அவரை வழி மடக்கிக் கொல்ல முயன்றீர்கள். இதனால் நமக்கு எதிராகப் பல்லவ நாட்டுச் சமணர்கள் பொங்கியெழும் படியான ஒரு சூழ்நிலை ஏற்பட்டது. இத்துடன், எதிரிகளுக்கு அநுசரணையாகக் காஞ்சிக் கோட்டையைப் பாதுகாப்பின்றி யும் விட்டுவிட்டீர்கள்...”

வில்வேலியின் முகம் பாறையாக இறுகிக் கறுத்தது. தம் இடைக் கச்சையில் செருகி வைத்திருந்த குறுவாளின் கைப் பிடியை மெல்லத் தொட்டுத் தடவினார் அவர்.

# 122

## வில்வேலியின் முடிவு

**கோ**பத்தால் கொதிப்படைந்து நின்ற விநயாதித்தன் அவரைக் கொத்திக் குதறிவிடத் துடிப்பவன்போல் முறைத்துப் பார்த்துக்கொண்டே தன் குற்றச் சாட்டுகளைத் தொடர்ந்து சொன்னான்: "இன்னும் கேளுங்கள், தளபதியாரே! உங்களை ஒரு பெரிய இராஜதந்திர மேதாவி என்று எங்களுக்குக் காட்டிக் கொள்வதற்காக நீங்கள் ஒன்றல்ல. இரண்டல்ல; பலப்பல தவறுகள் செய்திருக்கிறீர்கள், அவற்றில் முழு முட்டாள்தனமான தவறு என்னவென்றால், பழையாறைச் சோழனோடு தொடர்பு கொண்டதும், அவனுடைய சதித் தூண்டுதலை நம்பிப் பாண்டிய நாட்டின் மேல் படை யெடுத்ததுமே ஆகும். இத்துடன் இன்னோர் இமயத் தவற்றை யும் நீங்கள் செய்தீர்கள். அதாவது, சளுக்கியச் சக்கரவர்த்தி யின் அனுமதியின்றி அவருடைய தம்பி மகளான ஆந்திர இளவரசி உத்தமசீலியைப் பல்லவனின் பட்டத்து யானைமீது ஏற்றி அனுப்பிக் கொல்ல முயன்றது. இம் முப்பெரும் தவறுகளே இன்று சளுக்கிய சாம்ராஜ்யத்தைச் சரித்துச் சீரழித்துவிட்டன. இவ்வளவுக்கும் காரணமான நீங்களோ இவற்றையெல்லாம் மறைப்பதற்காக இப்போது உள்ளொளி பெற்றுவிட்டேன் என்றும், மனிதனாக மாறிவிட்டேன் என்றும் கதை அளக்கிறீர்கள். இப்படியெல்லாம் சொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லை? இவ்வாறெல்லாம் வேஷம் போட நீங்கள் நாணப்படவில்லை? அவமானம்! அவமானம்!"

வில்வேலி தம் மலைபோன்ற உடலைப் பயங்கரமாக ஓர் உலுக்கு உலுக்கிக்கொண்டு வலக் கையால் தமது குறுவாளை இறுகப் பற்றியவாறு முன்னோக்கி ஓரடி எடுத்து வைத்தார்.

"வீர பரம்பரையில் உதித்த மாவீரரே! உங்கள் உடலில் உண்மையாகவே சளுக்கிய இரத்தம் ஓடுமானால், நீங்கள் இதுவரை செய்த தவறுகளுக்கெல்லாம் பிராயச் சித்தமாக, இதோ இந்த நல்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்வதுதான் ஒரே வழி! இது ஒன்றே நீங்கள் இனி எங்களுக்குச் செய்யக் கூடிய பேருபகாரமாகும்!" என்று ஆத்திரச் செருமலுடன் கடு கடுத்துக்கொண்டே பின்னால் நகர்ந்தான் விநயாதித்தன்.

வில்வேலியின் உடல் அதிர்ந்தது. அவர் தம் குறுவாளை வெடுக்கெனப் பிடுங்கி உறுதியாகப் பற்றிக்கொண்டு மேலும் இரண்டடி முன்னால் சென்றார்.

சிற்றாற்றின் கரை மேட்டில் அமர்ந்திருந்த பரமேசுவர வர்மனோ இன்னமும் தன் சிந்தனை மோனத்திலேயே ஆழ்ந்து கிடந்தான்.

"தீரப் பெருங்குடியில் பிறந்த வில்வேலியாரே! சளுக்கிய மண்ணைத் தாயாகவும், அதன் கொற்றத்தைத் தந்தையாகவும் நீங்கள் நேசித்து வழிபட்டது உண்மையானால், நம் ஜன்மப் பகைவனை வெட்டி வீழ்த்தி, நலிந்துபோன சளுக்கிய வராகக் கொடிக்குப் புத்துயிர் அளியுங்கள்!" என்று குமறிக்கொண்டே மேலும் பின்னால் நகர்ந்தான் விநயாதித்தன்.

வில்வேலியின் முகத்தில் சவக்களை படர்ந்தது. கண்களில் அருவியென நீர் வழிந்தது. உடலோ நிலை கொள்ளாமல் நடுங்கிப் பதறியது. ஓங்கிப் பற்றிய குறுவாளுடன், பரமேசுவரவர்மனையே இமைக்காமல் பார்த்தவாறு அடிமேல் அடி வைத்து நடந்தார் அவர்.

அடுத்த கணம் 'சதக்' என்ற ஒலி! 'ஹா' என்னும் பயங்கர அலறல்!

*சிந்தனையில் ஆழ்ந்தவனாய்ச் சிலைபோல் அமர்ந்தி ருந்த பரமேசுவரவர்மன் இவ்வொலி கேட்டுப் பேரதிர்ச்சி அடைந்தவனாய்த் துள்ளியெழுந்து திரும்பினான். அதே சமயம், அந்தச் சிற்றாற்றின் கரைமேட்டிலிருந்து சாளுக்கியத் தளபதி வில்வேலியின் அதிகாயபாகுவான உடல் கடகட வென உருண்டு வந்து அவனது காலடியில் வீழ்ந்தது! தமது குறுவாளைத் தாமே தம் விலாப்புறத்தில் பாய்ச்சிக் கொண்ட நிலையிலே, குருதி கொப்புளிக்கத் துடிதுடித்தார் அவர்.*

*இந்தக் காட்சியைக் கண்டு பெரும் பீதிக்குள்ளான விநயாதித்தனும் அவனுக்குத் துணையாக நின்ற சளுக்கிய வீரனும் அங்கிருந்து விழுந்தடித்துக்கொண்டு தலைதெறிக்க ஓடலாயினர்.*

## 123

# சத்தியத்தின் வெற்றி

மிரட்சியுற்று நின்ற பரமேசுவரவர்மனின் உள்ளமும் உடலும் அதிர்ந்து நடுங்கின. ஒன்றும் செய்யத் தோன்றாமல் ஒரு கணம் திகைத்து நின்ற அவன் சடாரெனக் குனிந்து தன் காலடியில் வீழ்ந்து கிடந்த சளுக்கியத் தளபதி வில்வேலியைப் பரபரப்புடன் நோக்கினான். பிறகு அவரது விலாவில் இரத்தப் பீறலுடன் குத்திட்டு நின்ற குறுவாளை வெடுக்கெனப் பிடுங்கி எறிந்துவிட்டு அவசரமாகத் தண்ணீர் அள்ளி வர ஆற்றை நோக்கித் திரும்பினான்.

வில்வேலியின் கரம் அவனைத் தடுப்பதுபோல் மேலே உயர்ந்தது. 'என்னைக் காப்பாற்ற எந்த முயற்சியும் செய்ய வேண்டாம்; இனிமேல் அது வீண்' என்பதுபோல் அசைவு காட்டிவிட்டுத் துவண்டு மண்ணில் சாய்ந்தது.

பரமேசுவரவர்மன் அவருடைய தலைமாட்டில் ஒற்றை முழந்தாளிட்டு அமர்ந்து அவர் முகத்தையே உற்றுப் பார்த்தான். உண்மையில் மரணம் வெகு வேகமாக அவரை அணுகிக் கொண்டிருப்பது தெளிவாகவே புலனாகியது. உடலின் வேதனைத் துடிப்பு மெல்ல மெல்ல அடங்கி வந்தது. பிழிந்து காய்ந்த கடற் பஞ்சுபோல் முகம் சிறுகச் சிறுக வெளிறிச் சிறுத்தது. நாசி நிமிர்ந்து புருவக் கொடிகள் நீண்டன.

அவர் மெல்லக் கண் திறந்தார். விலைமதிப்பற்ற பொக்கிஷம் ஒன்றைப் பார்ப்பதுபோல் அவனை ஆவல் பொங்கப் பார்த்தார். "நான் பாக்கியசாலி! என்னுடைய இறுதி நேரம் இத்தனை சுகமாக இருக்கும் என்று நான்

கனவில்கூட எதிர்பார்க்கவில்லை."—அவரது முகத்தில் ஒரு பயங்கரக் கலவரம் சூழ்ந்தது. பீதியுடன் அங்குமிங்குமாக விழிகளை உருட்டினார். "மாமன்னரே, இங்கிருந்து போய் விடுங்கள்! அதோ, அவன் வருகிறான்! அந்த நல்ல பாம்பின் குட்டி உங்களைக் கொல்ல வருகிறது! ஓடிப் போங்கள்! சீக்கிரம் ஓடிப் போய்விடுங்கள்!"—வில்வேலி திடீரென அலறினார்.

பரமேசுவரவர்மன் அமைதியாகத் திரும்பி நாலா புறமும் தன் பார்வையை ஓட்டினான். எங்கும் யாருமே இருப்பதாகத் தெரியவில்லை. வில்வேலியின் அந்த அலறலுக் குரிய காரணத்தை அவன் ஓரளவு புரிந்துகொண்டான். 'என்னைக் கொல்வதற்காகச் சளுக்கிய இளவரசன் விநயாதித் தன் இவரை இங்கு அழைத்து வந்திருக்கிறான். ஆனால் இவரோ தம்மையே கத்தியால் குத்திக்கொண்டு விட்டிருக் கிறார். அதைக் கண்டு அவன் பயந்து ஓடியிருக்கிறான். அதனால்தான் இவர் இப்படி என்னை எச்சரித்து அலறுகிறார். ஆமாம்; இவர் ஏன் என்னைக் கொல்வதற்குப் பதிலாகத் தம்மையே குத்திக் கொண்டார்?'—வியப்பும் துடிப்புமாக அருகில் நெருங்கி அவர் முகத்தையே கூர்ந்து நோக்கினான் அவன்.

வில்வேலியின் வதனத்தில் மீண்டும் அமைதி நிலவியது. அதே சமயம் அதில் இன்னும் அதிவேகமாகச் சவக் களை படரத் தொடங்கியது. ஆயினும் ஒருவிதத் தெளிவு பெற்றவர் போல் தமக்குள் மெல்ல முணுமுணுத்தார்: "அறம் கொன்று சத்தியத்தைத் தின்று ஈன வாழ்க்கை நடத்திய என் இருண்ட மனத்தில் இப்படி ஒரு ஞான தீபம் ஏறிச் சுடர்விடும் என்று நான் நினைக்கவேயில்லை. எனக்கு இப்போது நன்றாகப் புரிகிறது, இந்தப் பிறவியில் நான் மனித வாழ்க்கையே வாழவில்லை; மனிதக் கூட்டத்தோடு உறவு பூணவும் இல்லை. இரத்த வெறி கொண்ட ஒரு மகா பயங்கரப் புலியின் குகை யிலே இருந்து அதன் கோரப் பசிக்கு உணவாக மண்ணையும்,

மணிமுடி சிம்மாசனங்களையும் விலைமதிப்பற்ற மனித உயிர் களையும் பறித்து வந்து படைக்கும் ஓர் ஏவல் மிருகமாகவே வாழ்ந்திருக்கிறேன். அந்தப் புலியைத் திருப்திப்படுத்துவதற் காக அதனால் சிருஷ்டித்து விடப்பட்ட ஒரு கொடிய வேங்கையாகவே நடமாடியிருக்கிறேன். சே, என்ன மோச மான பிறவி எடுத்துவிட்டேன்! இதற்கு நானா பொறுப்பு? ஆம்; இந்த இழிபிறவிக்கு நானேதான் பொறுப்பேற்க வேண்டும். ஏனென்றால் எனக்கு மனம் இருந்தது. அந்த மனத்தை என் விலாக் கூட்டுக்குள்ளே வைத்துக்கொள்ளாமல் எனது கால் பாதங்களிலே அதைப் பொருத்திக்கொண்டு கல்லிலும் முள்ளிலுமாகக் குருடன்போல் நடந்திருக்கிறேன். வெறுமனே இருண்டு கிடந்த அவ்விலாக் கூட்டிலே அறிவென்னும் மிருகம் குடியேறி, அகந்தை—ஆணவம் என்னும் கொம்புகளை வளர்த்துக்கொண்டு என்னை முட்டி மோதி ஆட்டிப் படைக்க விட்டுவிட்டேன். இது என்னால் எனக்கு நானே ஏற்படுத்திக்கொண்ட கபோதி மார்க்கம் அல்லவா? எனவே, இதன் முழுமைக்கும் நானேதான் பொறுப்பேற்க வேண்டும்...”

வில்வேலியின் விலாப்புறத்திலிருந்து குபீரெனப் பீறிட்டுக் கொட்டியது இரத்தம். அதன் வேதனையைத் தாள மாட்டாமல் புழுப்போல் நெளிந்து துடித்த அவர் உதட்டைக் கடித்து முகத்தை முறுக்கிக்கொண்டு முனகினார்.

இந்த நெஞ்சுறுத்தும் காட்சியைக் காணச் சகியாமல் கண்களை இறுக மூடிக்கொண்டான் பரமேசுவரவர்மன்.

சிறுபொழுதுக்குப் பின் வில்வேலியின் வறண்ட உதடுகள் மீண்டும் அசைவுற்றுச் சொற்களை ஹீனஸ்தாயியில் குழைத்தன: “ஆனாலும் அதற்காக வருந்திப் பயனில்லை. அது என் விதி. அந்த விதியே என்னை அவ்வாறெல்லாம் சீரழித்து நடத்தியது. ஆகவே நான் இப்போது வருந்துவதெல்லாம் ஒன்றே ஒன்றுக்காகத்தான். அன்றொரு நாள் இதே சிற்றாற்றின் மறுகரையில் பழையாறைச் சோழனின் கத்திக் குத்துக்கு

இலக்காகிப் புத்துயிர் பெற்று எழுந்தபோது என் உள்ளத்தில் ஏறிச் சுடர்விட்ட இந்த ஞான தீபத்தை அப்படியே அணையாமல் காப்பாற்றி அது சுட்டிக் காட்டிய வழியைப் பின்பற்றிச் செல்லாது விட்டுவிட்டு மீண்டும் பழைய நரக வழிக்கே திரும்பிப் போனேனே, அதை நினைத்துத்தான் ஆறாத் துயரம் அடைகிறேன். இந்த ஜன்மத்தில் எனக்குக் கிடைத்த அந்தக் கடுகளவு சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு தினையளவு நல்வினைகளையாவது ஆற்றிச் சேர்த்துக் கொள்ளாமல் போய்விட்டேனே என்ற வருத்தம் தான் என் இதயத்தை வாள் கொண்டு அறுக்கிறது. இனி என்ன செய்வது? காலம் கடந்துவிட்டதே!" — அவர் விம்மிப் பொருமினார். அவரது வெளுத்த விழிகளில் கண்ணீர் கசிந்து செவிக் குழிகளில் இறங்கியது.

உணர்ச்சிப் பிழம்பாக வெலவெலத்து உட்கார்ந்திருந்த பரமேசுவரவர்மன் அவருடைய நீர் சிந்தும் நேத்திரங்களை இதமாகத் துடைத்துவிட்டான்.

நிலை கொள்ளாமல் அலைத்துப் புரளும் தம் பார்வையை வெகு சிரமத்துடன் அவன் பக்கமாகத் திருப்பினார் வில்வேலி. அவனும் அவரையே இமைக்காமல் நோக்கினான்.

"நேரம் நெருங்கிவிட்டது! எனக்கென்று விதி வகுத்த நேரம் இதோ நெருங்கி வந்துகொண்டிருக்கிறது!..." என்று முணுமுணுத்த வில்வேலி தமது உலர்ந்த உதடுகளில் ஓர் அவலப் புன்முறுவலைத் தூவிக்கொண்டு அடைத்த குரலில் மேலும் சொன்னார்: "என் ஆத்மாவின் ஜீவ நாதத்தைத் தட்டி யெழுப்பிய ஞான குமாரரே! இந்தக் கடைசி விநாடியில் உங்களிடம் ஒரு வரம் கோருகிறேன்; அதை இல்லை யென்னாமல் எனக்கு அளிப்பீர்களா?"

பரமேசுவரவர்மன் அவரை ஆழ்ந்த அன்பின் கனிவோடு குனிந்து பார்த்து 'அளிப்பேன்' என்பதற்கு அறிகுறியாக மெல்லத் தலையசைத்தான்.

"உங்களுக்கும் உங்கள் நாட்டுக்கும் நான் இழைத்த எண்ணிறந்த கொடுமைகளை மறந்து மன்னித்து, உங்களுடைய அன்பு பரிமளிக்கும் வாயால் என்னை என் பெயரிட்டு ஒரு முறை—ஒரே ஒரு முறை—என் செவிபட நீங்கள் அழைப்பீர்களா?"

வில்வேலியின் வலக் கரத்தை இதமாகப் பற்றி யெடுத்துத் தன் விரிந்த மார்பிலே அணைத்துக்கொண்ட பரமேசுவரவர்மன் தழுதழுத்த குரலில், "அண்ணா! இந்த விநாடி முதல் தங்களை என் இரத்த பந்தமுள்ள சொந்தச் சகோதரராகவே ஏற்று, இவ்வுறவை எனது இறுதி மூச்சு உள்ளவரையில் மதித்துப் போற்றி வருவேன், அண்ணா!" என்றான்.

சளுக்கியத் தளபதியின் முகத்தில் ஆனந்தக் களை அலை மோதியது. நிம்மதிப் பெருமூச்சுடன் அவனையே பார்த்துக் கொண்டிருந்த அவர் திடீரென்று தம் உடலை முறுக்கி நெளித்தார். விலாப் புறத்திலிருந்து பச்சை இரத்தம் வழிந்து உறைந்தது. அவர் பயங்கரமாகச் சுற்றிலும் விழித்துப் பார்த்தார். "என் அருமைச் சகோதரரே! இன்னுமோர் இறுதி விருப்பம். வீரனாகப் பிறந்து, வீரனாக வளர்ந்து, வீரனாகவே வாழ்ந்தவன் நான். எனவே, என் இறுதி மூச்சு ஒரு மாவீரரின் மடியில் தலைசாய்த்தே பிரிய வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். இந்த எனது எளிய ஆசையைத் தயைகூர்ந்து நிறைவேற்றுங்கள்!" —வில்வேலியின் குரல் உடைந்து தொண்டைக்குள் சிக்கிக்கொண்டது.

எல்லையற்ற பேரன்புடன் அவரது மலைபோன்ற உடலை அணைத்துத் தூக்கித் தலையைத் தன் மடியில் வளர்த்திக் கொண்டு கண்ணீர் மல்கிய கண்களால் அவரைப் பாசப் பரிவோடு பார்த்தான் பரமேசுவரவர்மன்.

வில்வேலியின் முகத்தில் சாந்தி மயமான மகிழ்ச்சிப் புன்னகையென்று மலர்ந்தது. மறுகணமே அது உலர்ந்து மறைந்தது. வான் நோக்கி நிமிர்ந்திருந்த அவரது தலை மண் நோக்கிச் சாய்ந்து சரிந்தது!

# 124

## ஜல சமாதி

உடன் பிறந்த சகோதரர் ஒருவரை இழந்தாற் போன்ற உண்மையான துயரப்பொருமலுடன் உளம் கசிந்து கண்ணீர் உகுத்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் மெல்ல எழுந்து நின்றான். அண்ணாந்த நிலையில் கண் மூடிச் சிறிது நேரம் தியானத்தில் ஆழ்ந்து இருந்த அவன், வெட்டிச் சாய்த்த வாழை மரம்போல் கிடந்த சளுக்கியத் தளபதி வில்வேலியின் பூதவுடலை இரு கைகளாலும் ஏந்தித் தூக்கியவாறு, அலைத்துச் சுழித்துப் பாய்ந்தோடிக் கொண்டிருந்த சிற்றாற்றை நோக்கி அமைதியாகச் சென்றான்.

ஆற்றின் இடுப்பளவு ஆழத்துக்கு இறங்கி நின்று கொண்டு ஏந்தித் தூக்கியிருந்த வில்வேலியின் நெடிய உடலை நீர்பரப்பில் மெல்ல இறக்கிக் கிடத்தினான். மறுகணம், அந்த மாவீர மாமனிதரின் உடல் நீரோட்டத்தின் வேகப் பாய்ச்சலோடு மிதந்து செல்ல ஆரம்பித்தது.

கண்களை இறுக மூடிக்கொண்டு சிலைபோல் நின்றிருந்த பரமேசுவரவர்மன் ஆழ்ந்த பெருமூச்சு விட்டவனாய்த் திரும்பி, ஆற்று நீரில் அப்படியே மும்முறை மூழ்கி எழுந்து கரையை நோக்கி நடந்தான்.

இப்போதுதான் அவனுக்குத் தன்னைப்பற்றிய நினைவு திரும்பியது. தான் இங்கு வந்த காரணத்தையும் அவன் அவசர உணர்ச்சியோடு மனத்தில் இழுத்துக்கொண்டான்.

‘உத்தமசீலி எங்கே போயிருப்பாள்? பெருமழையின் காரணமாய் அவள் இங்கிருந்து புறப்பட்டுத் திருப்பருத்திக்

குன்றத்தில் தங்கியிருக்கும் சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் போய் இருப்பாளா? அல்லது அவளைப் பார்ப்பதற்கென்று ஆலம்பாக்கத்திலிருந்து பயணமாகி வந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சியுடன் சேர்ந்து வேறு எங்கேனும் இடம் மாறிச் சென்றிருப்பாளா? அவள் ஏன் இவளைப் பார்க்க வந்தாள்? தன் தந்தையாலோ, அல்லது தன் காதலனாலோ ஆந்திர இளவரசிக்கு ஏதேனும் ஆபத்து நேரலாம் என்பதை அறிந்து அவளை எச்சரித்துக் காப்பாற்றுவதற்காக வந்திருப்பாளோ? அவ்விரு இளவரசிகளும் ஒருவரையொருவர் சந்தித்திருப்பார்களா? அல்லது அந்தச் சந்திப்பு ஏற்படுமுன்னே அவர்கள் வெவ்வேறு இடங்களுக்குப் பிரிந்து போய்விட்டிருப்பார்களா?"

நெற்றி நரம்புகள் புடைத்துப் பின்னிவிட இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டிருந்த பரமேசுவரவர்மனின் மனத்தில் மற்றொரு பீதி மயமான நினைப்புப் பளீரென முட்டிக்கொண்டு எழுந்தது; 'சோழிய ஆபத்துதவி வீரனான சம்புவராயன் தன் சிற்றரசரிடம் வந்து தெரிவித்த சேதியிலிருந்து இளங்கோப்பிச்சிக்கும் உயிராபத்து நேர்ந்திருக்கலாம் என்று தோன்றுகிறதே! ஏனென்றால், இரவு வேளையில் சளுக்கிய விநயாதித்தன் அவளுக்குத் தெரியாமலே அவளுடைய சிவிகையைப் பின்தொடர்ந்து சென்றானாமே? அப்படிச் சென்றவன் அவளைப் பழிவாங்காமல் சும்மா விட்டிருப்பானா? ஒருகால் அவள் மூலம் உத்தமசீலி இருந்த இடத்தைக் கண்டுபிடித்து அவ்விருவரையுமே அவன் வஞ்சம் தீர்த்துக்கொண்டிருப்பானோ? அப்படி ஏதேனும் நடந்திருந்தால் அந்த விஷயம் வில்வேலிக்குத் தெரிந்திருக்குமே! தெரிந்திருந்தால் மனம் திருந்திய அவர் அவ்விஷயத்தைத் தமது கடைசி நேரத்திலாவது என்னிடம் வெளியிட்டிருப்பாரே? கொலை வெறி கொண்டு திரியும் விநயாதித்தன், தானே அந்தப் பழிவாங்கலை நடத்திவிட்டு அதை வில்வேலியிடம் சொல்லாமல் மறைத்திருந்தால்?... இல்லை; ஆந்திர

இளவரசியையும், சோழ இளவரசியையும் ஒரே சமயத்தில் தீர்த்துக்கட்ட வேண்டும் என்பதற்காகத்தான் வில்வேலியை இவ்விடத்துக்கு அவன் அழைத்து வந்திருக்கிறான். எதிர் பாராதவிதமாக நான் இங்கே இருப்பதைக் கண்டதும் என்னை முதற்பலி வாங்குமாறு அவரைக் கட்டாயப்படுத்தித் தூண்டியிருக்கிறான். ஆனால் அவரோ திருவருளின் பெருங் கருணையால் மனமாற்றம் பெற்று என்னைக் கொல்ல விரும்பாமல் தம்மையே குத்திக்கொண்டுவிட்டார். இதை எள்ளளவும் எதிர்பார்க்காத விநாயதித்தன் அதிர்ச்சியடைந்து ஓடிவிட்டிருக்கிறான். அப்படி ஓடியவன் நேரே வாதாபிக்கோ, கல்யாணபுரத்துக்கோ பயணமாகி விடுவானா? நிச்சயமாக அவ்வாறு சொல்ல முடியாது. தன் தந்தையின் தோல்விக்குக் காரணஸ்தர்களாக இருந்தவர்களில் ஒருவரையாவது பழி தீர்த்துக்கொள்ளாமல் இந்த நாட்டைவிட்டு அவன் ஒரு போதும் வெளியேறமாட்டான். அப்படியானால் அதிர்ஷ்ட வசமாக இதுகாறும் ஆந்திர இளவரசியோ, சோழ இளவரசியோ உயிர் தப்பி எங்கேனும் போயிருந்தாலும் இப்போது ஆபத்து நெருங்கிக்கொண்டிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஏனென்றால் என்னைக் கொல்லும் முயற்சியில் தோல்வியடைந்து ஓடியிருக்கும் விநயாதித்தன் நேரே அவ்விரு இளவரசிகள் இருக்குமிடத்தை நோக்கித்தான் விரைந்திருப்பான். ஐயோ, அந்தப் பேதைப் பெண்கள் எங்கு சென்றார்கள் என்றே தெரியவில்லையே! அவர்களை எவ்விடம் போய்த் தேடிக் கண்டுபிடிப்பது?'

குழம்பிக் கலங்கி நின்ற பரமேசுவரவர்மன் தெளிவற்ற ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய்த் தன் புரவிமீது ஏறித்தான் வந்த வழியாகவே திருப்பருத்திக்குன்றத்துக்குப் பயணப்பட ,லானான்.

**ம**றுநாள் மாலைப்போது மயங்கிச் சுருளும் நேரத்தில் காஞ்சியிலிருந்து ஒரு குரோசத் தொலைவுக்கு அப்பால்—வேகவதி ஆற்றங்கரையில் அமைந்த—சிற்றூரான திருப்

பருத்திக் குன்றத்தை அடைந்த பரமேசுவரவர்மன், அங்கு பழைமைச் சிறப்புடன் திருப்பருத்திக்குன்றாழ்வார் என்னும் பெயரோடு விளங்கிய அருகப் பெருமானின் திருக்கோயி லொன்றுக்குச் சென்று அவ்விடத்திலிருந்த ஒரு குரா மரத்தடியில் சிறுபொழுது களைப்பாறுவதற்காக அமர்ந்தான்.

களைப்பு நீங்கியபின் மெல்ல எழுந்து நின்று அந்தத் திருக்கோயிலின் எழிலார்ந்த புறத்தோற்றத்தை உள்ளார்ந்த பக்தியுடனும் ஆவலுடனும் பார்த்துக்கொண்டிருந்த பரமேசு வரவர்மனின் கண்கள் சட்டென்று கீழ் நோக்கித் தாழ்ந்து வியப்பால் அப்படியே நிலைகுத்தி நின்றன.

ஆமாம்; அது சமணர்கள் நிறைந்த ஊரானதால் அந்தக் கோயிலுக்கு ஏராளமான ஆண்களும் பெண்களும் வந்து போய்க்கொண்டிருந்தனர். அப்படி வழிபாட்டை முடித்துக் கொண்டு அப்போதுதான் கோயிலைவிட்டு வெளியேறிய சமணப் பெண் துறவிகளான ஐந்தாறு கௌந்திகளுக்கு முன்னால் பூக்கூடையும் கையுமாகத் தன்னந்தனியே கந்தர்வலோகத்துக் காரிகைபோல் அழகு கொழிக்கச் சென்று கொண்டிருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

# 125

# திடீர் விஜயம்

சுகந்த கனவுகளில் மனத்தைச் சுகிக்க விட்டவாறு திருப்பருத்திக்குன்றாழ்வார் கோயிலைச் சார்ந்த குரா மரத்தடியில் நின்று, வீதியின் கடைக்கோடிக்குச் சென்றுவிட்ட உத்தமசீலியையே கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன், "மாமன்னர் அவர்களுக்கு என் மனம் கனிந்த வாழ்த்துக்கள்!" என்ற இதமான குரல் கேட்டுச் சட்டென்று திரும்பினான்.

அருகப் பெருமானைத் தரிசித்ததால் ஏற்பட்ட ஆனந்த மலர்ச்சியுடன் அப்போதுதான் கோயிலிலிருந்து வெளியேறிய திரமிள சமண சங்கத் தலைவரான சமந்தபத்திரர் மகிழ்ச்சி மேவிய புன்முறுவலோடு அவனை நோக்கி வந்தார்.

கண்ணின் வழியாக நெஞ்சத்தில் புகுந்து நறுமணம் பரப்பிக்கொண்டிருந்த இனிய உணர்ச்சிகளைக் கலைத்துக் கொண்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன், "வாருங்கள், அடிகளே! நன்னலம்தானே?'' என்று அகமும் முகமும் மலர வரவேற்றான்.

யானைத் தந்தம் போன்ற அவனது அழகிய கரங்களை மிருதுவாகப் பற்றித் தம் கண்களில் ஒற்றிக்கொண்ட சமந்த பத்திரர், "மன்னரவர்களை இந்தப் புனிதமான இடத்தில் சந்திக்க நேர்ந்ததுபற்றிப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்" என்றார். அவருடைய மனத்தில், 'முன்னறிவிப்போ பக்கத்துணை பாதுகாப்போ இன்றித் திடீரென இவ்வூருக்கு

இவன் விஜயம் செய்யக் காரணம் என்னவாயிருக்கும்?' என்ற கேள்வி எழுந்தது.

அதைப் புரிந்துகொண்டவன்போல் மெல்லச் சிரித்த பரமேசுவரவர்மன், “அடிகளார் என் வருகையைப் பற்றிப் பெரிதாக ஏதும் நினைக்க வேண்டாம். பெருவளநல்லூரி லிருந்து காஞ்சிக்குப் போகிற வழியில் தங்களையும் சேதியக் கலைஞர் பரவாதிமல்லரையும் சந்திக்க வேண்டும் என்று விரும்பினேன். அவ்விருப்பத்தில் ஒன்று எளிதாகவும் விரைவாகவும் இப்போது நிறைவேறிவிட்டது” என்றான். “ஆம். அடிகளே! தாங்களும் தங்களைச் சார்ந்த சமணப் பெரியார்களும் பல்லவ நாட்டின் விடுதலைக்காக ஆற்றிய பெருந்தொண்டுகளையும் மகத்தான தியாகங்களையும் முத்தரையரின் வாயிலாகக் கேள்விப்பட்டு மனம் பூரித்தேன். எதிரிகளால் ஏற்படவிருந்த உயிராபத்துக்களையும் பொருட் படுத்தாமல் சிவரணபெள்குளத்து அகளங்க அடிகளுடன் தாங்களும் சேர்ந்து விடுதலைப் போருக்கான எழுச்சியை என் நாட்டு மக்களிடையே ஊட்டினீர்கள் என்பதை அறிந்து இதயம் நெகிழ்ந்து மகிழ்ந்தேன். அந்தப் பயன் கருதாப் பணிகளுக்கெல்லாம் எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்ளவே இங்கு வந்தேன்.”

அவனுடைய அன்பு மொழிகளைக் கேட்டுச் சமந்தபத்திரரின் உள்ளம் குளிர்ந்தது. ஆயினும் அவனது திடீர் விஜயத்துக்கு அவன் சொன்னது மட்டுமே காரணமா யிருக்கும் என்று அவர் கருதவில்லை. ஏனென்றால், விடுதலைப் போருக்குப் பின் பல்லவ நாட்டில் ஏற்பட்டுள்ள குழப்ப நிலையையும் அதற்குரிய காரணங்களையும் அவர் நன்கு அறிந்தே இருந்தார். எனவே, பல்லவ மன்னனின் இப்போதைய ஒவ்வொரு செயலும் பொருள் படைத்ததாகவே இருக்கும் என்றும், அந்த வகையில் இங்கு அவன் வந்திருப்ப தற்கு வேறு முக்கிய காரணமும் இருக்கலாம் என்றும் அவருக்குத் தோன்றியது. இவ்வூகத்தைச் சிறிதும் வெளியே காட்டிக்கொள்ளாமல், “மன்னர் அவர்களின் பேரன்புக்கு என் இதயம் நிறைந்த நன்றி!” என்றார் இனிய மென்குரலில்.

சற்றுமுன் உத்தமசீலி சென்ற வீதிப்பக்கம் தன் பார்வையை ஓட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பிய பரமேசுவர வர்மன், "அடிகளாரிடம் ஒரு விஷயம். நம் சேதியக் கலைஞர் இப்போது இவ்வூரில்தானே தங்கியிருக்கிறார்?'' என்று தன்னை மீறிய ஆவலுடன் வினவினான்.

"ஆம், அரசே! எங்கள் சங்கப் பள்ளியைச் சார்ந்த ஒரு தனி இல்லத்தில்தான் தங்கியிருக்கிறார். ஆனால் தற்சமயம் அவர் இவ்வூரில் இல்லை. கூரத்தில் நிர்மாணமாகிக் கொண்டிருக்கும் அவரது புதிய இல்லத்தைப் பார்வையிடு வதற்காகப் போயிருக்கிறார்" என்று சொன்ன சமந்தபத்திரர் புன்முறுவலுடன் மேலும் கூறினார்: "ஆந்திர இளவரசி உத்தம சீலியார்கூட அவரைப் பார்ப்பதற்காக இவ்வூருக்கு வந்து அவருடைய இல்லத்தில்தான் தங்கியிருக்கிறார். அதனால் கலைஞர் இன்றோ நாளையோ திரும்பி வந்துவிடலாம்."

இதைக் கேட்டுத் தன் மனத்திலிருந்த பெருங் கவலை நீங்கினாற்போல் முகம் மலர்ந்த பரமேசுவரவர்மன் பதில் ஏதும் சொல்லாமல் மெல்லத் தலையசைத்துக் கொண்டான்.

சமந்தபத்திரர் அவனைக் கூர்ந்து நோக்கியவாறு, "மன்னரவர்களுக்கு இன்னொரு விஷயமும் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். அதாவது, ஆந்திர இளவரசியாருடன் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும் இப்போது இங்குதான் இருக்கிறார்..." என்று இழுத்தாற்போல் கூறினார்.

இதையும் மௌனமாகக் கேட்டுக்கொண்டே பரமேசுவரவர்மனின் வதனத்தில் ஓர் ஆழ்ந்த அமைதி நிலவியது. ஆயினும் அவன் எதைப்பற்றியோ தீவிரமாகச் சிந்திக்கிறான் என்பதற்கு அறிகுறியாக அவனது புருவக் கோடுகள் நெளிந்து வளைந்தன.

சில விநாடிகளுக்குப் பின், "வாருங்கள் அடிகளே, போவோம்!" என்றவாறு தன் புரவியை நடத்தி அழைத்துக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அவன் இப்போது உத்தமசீலி தங்கியிருக்கும் இல்லத்துக்குப் போகிறானா, அல்லது சமண சங்கப் பள்ளிக்கு வருகிறானா என்ற விவரம் புரியாமல் அவனோடு சேர்ந்து நடந்தார் சமந்தபத்திரர்.

**கா**ஞ்சியிருந்து சுமார் மூன்று குரோசத் தொலைவுக்கு அப்பால் வளம் கொழிக்கும் சிற்றூராக அமைந்து, சாந்தி தேவனின் தவச்சாலைபோல் விளங்கி வந்த கூரம், கடந்த சில மாதங்களாகத் திருவிழாக் கோலம் பூண்ட மாதிரி சுறு சுறுப்பும் உற்சாகமுமாகக் காணப்பட்டது. அவ்வூர் மக்கள் ஒவ்வொருவரும் தமக்கு ஏதோ கிடைக்கப்பெறாத பெரும் பேறு ஒன்று கிடைத்துவிட்டாற்போன்ற மகிழ்ச்சிப் பெருமிதத்தில் திளைத்துக் கொண்டிருந்தனர்.

பல்லவ நாட்டின் கீர்த்தி வாய்ந்த சேதியக் கலைஞரான பரவாதிமல்லர் தம் வாசஸ்தலமாக இந்தச் சின்னஞ்சிறு கிராமத்தைத் தேர்ந்தெடுத்துக்கொண்டிருக்கிறார் என்னும் விஷயமே அவர்களை அவ்வாறு குதூகலக் களிப்பில் குளிப்பாட்டிவிட்டிருந்தது.

கூரம் கிராமத்தின் மேலண்டைப்புறத்தே இயற்கை வனப்பு நிறைந்த ஓரிடம். அங்கே கீற்றோலைகளால் வேயப் பெற்ற உயரமான கூரைப் பந்தல் ஒன்று காணப்பட்டது. அந்தப் பந்தலைச் சுற்றிச் சிறுசிறு கூடாரங்கள் போடப் பட்டிருந்தன. அவற்றில் நூற்றுக்கணக்கான சிற்பிகள் அமர்ந்து எழில்மிக்க சிற்பங்களையும், கலைச் சிறப்பு வாய்ந்த கல் தூண் களையும் செதுக்கி உருவாக்குவதில் மும்முரமாக ஈடுபட்டி ருந்தனர். மற்றோர் இடத்தில் கல்தச்சர்கள் வரிசை வரிசை யாக உட்கார்ந்து கருங்கற்களை அழகிய சதுரப் பலகைகளாக இழைத்து மலைபோல் அடுக்கிக்கொண்டிருந்தனர். பிறிதோர் இடத்தில் விதான ஓடுகள் அறுத்துச் சூளையிடும் பணி வெகு சுறுசுறுப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தது.

இவ்வளவும் சேதியக் கலைஞரின் இல்லத்தை அமைப்பதற்குத் தேவைப்படும் உபகரணங்களா? அப்படி யானால் அந்த இல்லம் எங்கே உருவாகிக்கொண்டிருக்கிறது?

அதோ, உயரமாகத் தென்படும் அவ்வோலைக் கூரைப் பந்தலின் உள்ளேதான்.

இது என்ன, விந்தை! வெளியிலிருந்து பார்த்தால் ஒன்றுமே தெரியவில்லையே? ஆமாம்; உள்ளே உருவாகிக் கொண்டிருக்கும் அந்த இல்லம் முழுமையாகிறவரை யாரும் பார்க்கக்கூடாது என்பதற்காகவே அதனைச் சுற்றி அவ்வளவு உயரமான கூரைப் பந்தல் வேய்ந்து மறைக்கப்பட்டிருந்தது.

இதுகாறும் எளியதோர் இல்லத்தில் இருந்து எளிய வாழ்க்கையே வாழ்ந்து வந்தவரான பரவாதிமல்லர் இப்போது ஏன் இவ்வளவு பிரம்மாண்டமான திட்டத்துடன் கூடிய பெரிய மாளிகையைக் கட்டுவதில் முனைந்திருக் கிறார்? அதுவும் பல்லவ மன்னனிடம் முற்றூட்டாகப் பெற்ற நிலத்தில், பல்லவ அரசாங்கத்தின் நிதி உதவியோடு தம் சொந்த உபயோகத்துக்காக எழுப்பப்பெறும் இல்லத்தைப் பிறர் பார்க்காதவாறு இத்தனை இரகசியமாக அவர் மூடி மறைத்து வைத்திருக்கிறார்?—

இதிலே இன்னோர் அதிசயமும் இருந்தது. அதாவது, இந்நாள்வரை இறைவனுக்குரிய கோயில்களாகட்டும், மாட மாளிகை கூட கோபுரங்களாகட்டும்—இவை எல்லாமே மரம், மண், செங்கல், சுண்ணம் முதலானவற்றைக் கொண்டு கட்டப்பெறுவதுதான் வழக்கம். குடைவரைக் கோயில் வகையைத் தவிர மற்றச் சேதியக் கலை வகைகள் அனைத்துக்கும் இந்தப் பொருட்களையே உபயோகப் படுத்தப்பட்டு வந்தன. ஆனால் இங்கோ, மரம் இல்லை, மண் இல்லை, செங்கல் இல்லை; எல்லாம் கல், கருங்கல்!

நிஜமாகவே பரவாதிமல்லர் தம் குடியிருப்புக்கான இல்லத்தைத்தான் அமைக்கிறாரா? அல்லது ஏதேனும் மந்திர மாயப் பரிசோதனை நடத்திக்கொண்டிருக்கிறாரா?

# 126

## புதிய கிருகம்

"ஆமாம், புஷ்பசேனரே! இது நமக்கு ஒரு சோதனை தான். இந்தப் புதிய சோதனையில் நாம் பெறும் வெற்றி தோல்வியைக் கொண்டே நமது திறமை மட்டுமல்ல, தமிழகதத்தின் எதிர்கால சேதியக்கலையின் தலைவிதியும் நிர்ணயமாக இருக்கிறது. எனவே, இதன் ஒவ்வோர் அணுவிலும் நம்முடைய உயிர்த்திறனைச் செலுத்தி இப்பெரும் பணியை நம் பிறவிக் கடமையாக ஆற்றி முடிக்க முயலவேண்டும்..."

அந்த உயரமான கூரைப் பந்தலின் ·அருகிலிருந்த சிறியதொரு கூடாரத்தினுள் சிந்தனை வயப்பட்டவராய் உலாவிக்கொண்டே இவ்வாறு சொல்லி நிறுத்திய சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் தம் எதிரில் பணிவும் பக்தியுமாகக் கைகட்டி நின்றுகொண்டிருந்த ஓர் அழகிய வாலிபரை ஏறிட்டு நோக்கினார்.

அவருடைய பிரதம சீடரான புஷ்பசேனர் என்னும் அந்த வாலிபர், "கலைஞர் பெருமானின் ஆலோசனைகளை அணுவும் பிறழாமல் ஏற்று இவ்வற்புத 'கிருகத்தை'க் கட்டி முடிக்க, நான் வணங்கும் கலைத் தேவியின் பெயரால் இன்று சபதம் ஏற்கிறேன்'' என்று உணர்ச்சிப் பெருக்குடன் கரகரத்தார்.

''மகிழ்ச்சி! மெத்த மகிழ்ச்சி!'' எனப் பெருமிதப் புன்னகையுடன் தலையசைத்துக்கொண்ட பரவாதிமல்லர் தம் கையில் சுருட்டி வைத்திருந்த ஒரு நீண்ட பட்டுச்

சீலையைப் புஷ்பசேனரிடம் கொடுத்து, "இந்தாருங்கள், கலைஞரே! இதுதான் எனது பல்லாண்டுக் காலப் பெருங் கனவின் மூல பொக்கிஷம். நாம் அமைத்து வரும் புதிய கிருகத்தின் முழுத்தோற்றமும், அதற்குரிய எல்லாச் சேதியக் குறிப்புக்களும் இந்தப் பட்டுச் சீலையிலே அடக்கமாகி யுள்ளன. இதை உங்கள் உயிர்போலப் பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு இதிலே காட்டியுள்ள அளவுகள், வடிவங்கள், கணக்குகள் ஆகியவற்றில் மயிரிழைப் பிசகும் நேராமல் அவற்றை அப்படியே சேதிய உருவாக்கி முடிக்க வேண்டியது உங்கள் பொறுப்பு. அவ்வப்போதும் ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்தி செய்ய நான் தயாராக இருப்பேன். எனினும் இப்போதைக்கு இந்த மூல சித்திரச் சீலையில் குறிப்பிடப்படாத ஒரு முக்கிய விஷயத்தை மட்டும் சுருக்கமாகக் கூறுகிறேன். கவனமாகக் கேளுங்கள்" என்றவர் சில விநாடி சிந்தனைக்குப் பின் தெளிவான குரலில் மேலும் சொன்னார்:

"நாம் எடுக்கவிருக்கும் இந்தக் கிருகத்தின் அமைப்பு முறை தமிழ் நாட்டுக்குத்தான் புதிதே தவிர சளுக்கிய நாட்டில் பிறந்தவர்களான நமக்குப் புதிதல்ல. வாதாபியிலும் வேறு பல இடங்களிலும் சளுக்கிய சிற்றரசனான மங்களேசன் என்பான் எடுப்பித்த இம்மாதிரி கிருகங்கள் பலவற்றை நாம் பார்த்திருக்கிறோம். குறிப்பாக நான் அவற்றில் பங்கு பெற்றுப் பணியாற்றியும் இருக்கிறேன். அந்த அநுபவத்தால் ஏற்பட்ட ஓர் அற்புதக் கனவை என் தாய் நாடாகக்கொண்டுவிட்ட இந்தப் பல்லவ நாட்டில் நிறைவேற்றி வைத்துவிட வேண்டும் என்பது எனது நெடுநாளைய விருப்பமாயிருந்து வந்தது. அவ்விருப்பம் நிறைவுபெற இப்போதுதான் எனக்கு வாய்ப்பும் வசதியும் கிடைத்துள்ளன. வாதாபியில் இருக்கும் இம்மாதிரி கிருகங்களில் பெரும்பாலானவை 'ருத்ரகாந்தப் பாணி'யில் அமைந்தவை. ஒரு சில கிருகங்கள் மட்டுமே 'பிரம்ம காந்தப் பாணி'யில் எடுப்பிக்கப் பெற்றுள்ளன. ருத்ர காந்தம் என்பது கிருகத்தின் எல்லா அம்சங்களையும் வட்டவடிவத்தில்

அமைப்பதாகும்; பிரம்ம காந்தம் என்பது சதுர வடிவில் சமைப்பதாகும். எனக்குப் பிரம்ம காந்தப் பாணியில்தான் நாட்டமும் பயிற்சியும் மிகுதி. எனவேதான் இந்தக் கிருகத்தைப் பிரம்ம காந்தப் பாணியில்—அடிமுதல் சிகரம்வரை எல்லா அம்சங்களிலும் ஒரு சதுரத் தன்மை பொருந்துமாறு—அமைக்க விரும்புகிறேன். இதை நீங்கள் மனத்தில் கொண்டு இனி வேலைகளைத் தொடர்ந்து நடத்தலாம்."

ஆசானின் கட்டளையைத் தலை தாழ்த்தி ஏற்றுக் கொண்டார் சீடர்.

ஏதோ நினைவு வரப் பெற்றவர்போல் சட்டென்று நிமிர்ந்த பரவாதிமல்லர் உறுதியான குரலில், "புஷ்ப சேனரே! ஒரு முக்கியமான விஷயத்தை மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூறவிரும்புகிறேன். உங்களிடம் நான் கொடுத்திருக்கும் இந்த மூல சித்திரச் சீலை உங்களைத் தவிர வேறு எவர் கண்ணிலுமே படக்கூடாது. நாம் நிர்மாணிக்கும் புதிய கிருகத்தின் தோற்றத்தை—அது உருவாகி முடியும் வரையில்—யாருமே அறியக்கூடாது. உங்களுக்குத் துணையாக இங்கே பணிபுரியும் சிற்பிகளோ, கல் தச்சர்களோ எடுபிடி சிற்றாட்களோ இந்த இரகசியத்தை எக்காரணத்தைக் கொண்டும் எவரிடமும் தெரிவிக்கக்கூடாது. இது என் கண்டிப்பான உத்தரவு" என்றார்.

"அப்படியே ஆகட்டும், ஐயா!" என்று மிகுந்த பணிவுடன் பதிலிறுத்தார் புஷ்பசேனர்.

"சரி; நான் ஓர் அவசர காரியமாகத் திருப்பருத்திக் குன்றத்துக்குப் போய் வருகிறேன். கவனப் பொறுப்போடு காரியத்தைத் தொடருங்கள்" என்றவாறு அந்தக் கூடாரத்தை விட்டு வெளியேறினார் பரவாதிமல்லர்.

* * *

புள்ளினங்களின் அநுராக ஒலி கேட்டுத் துயில் நீங்கி எழுந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி தன் அருகேயிருந்த மற்றொரு மஞ்சத்தைப் பார்த்தாள். அதிலே துயின்று

கொண்டிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சியைக் காணோம். அதிகாலையிலேயே அவள் எழுந்து அந்த இல்லத்துக்குப் பின்புறத்தே ஓடும் வேகவதி ஆற்றில் நீராடி வரப் போய்விட்டாள் போலும்!

எழுந்திருக்கும்போதே என்றுமில்லாத விதமாக இன்று ஏதோ ஒருவித உற்சாகமும் மகிழ்ச்சியும் தன் மனத்தில் நிறைந்திருப்பதை உணர்ந்து வியந்து நின்ற உத்தமசீலி, தானும் ஆற்றங்கரைக்குப் போய் இளங்கோப்பிச்சியுடன் சேர்ந்து நீராடிவிட்டு வர வெளியே வந்தாள். அங்கே அத்தனை அதிகாலையில் நாகோதரன் வந்து நின்றுகொண்டிருந்ததைக் கண்டு அவளுக்கு ஒரே வியப்பாகிவிட்டது.

"என்ன, நாகோதரா! ஏதேனும் விசேஷ சேதி உண்டா?" என்று தன் விற்புருவங்களை வளைத்துக் கொண்டு கேட்டாள்.

"ஆம், அம்மணீ! மகிழ்ச்சிக்குரிய பல சேதிகளுடன் தங்களைக் காண வந்திருக்கிறேன்" என்றான் நாகோதரன் முக மலர்ச்சியுடன்.

வாசற்கூடத்தின் அழகிய தூண் ஒன்றில் சாய்ந்தவாறு அவனைக் கூர்ந்து நோக்கினாள். உத்தமசீலி.

"பல்லவ மன்னர் முன்னறிவிப்பு ஏதுமின்றித் திடீரென்று நேற்று மாலை இந்தத் திருப்பருத்திக்குன்றத்துக்கு விஜயம் செய்திருக்கிறார், தாயே!"

"என்ன? என்ன?" என்று தன்னை மீறிய துடிப்புடன் ஒரு துள்ளுத் துள்ளி நிமிர்ந்தாள் உத்தமசீலி.

"ஆம், இளவரசி! நம் ஞானத் தலைவர் சமந்தபத்திரரின் சங்கப் பள்ளியில்தான் அவர் இப்போது தங்கியிருக்கிறார்" என்றான் நாகோதரன்.

உத்தமசீலியின் நெஞ்சம் ஒரேயடியாக விம்மிப் பூரித்தது. அளவுகடந்த மகிழ்ச்சியின் பாரத்தைத் தாளமாட்டாமல் மாதவிக் கொடியென ஒசிந்து வளைந்த அவள் உணர்ச்சியலைகளின் இன்பக் கொந்தளிப்பால் தான் என்ன செய்கிறோம் என்பதையும் உணராமல் முத்துச் சிலம்பு முரல்வதுபோல் கலகலவெனச் சிரித்துக்கொண்டே சாய்ந்திருந்த தூணை வேகமாக ஒரு சுற்று சுற்றிச் சுழன்று வந்து நின்றாள்.

## 127

# கசப்பில் ஓர் இனிப்பு

**நா**கோதரன் அடுத்தபடியாகச் சொன்ன அந்தப் பயங்கரச் சேதியைக் கேட்டதும் ஆந்திர இளவரசி உத்தம சீலியின் மகிழ்ச்சிக் குறுகுறுப்பெல்லாம் எங்கோ ஓடி மறைந்தன. அளவு கடந்த பீதிப் படபடப்புடன், "உண்மை தானா, நாகோதரா? சளுக்கியத் தளபதி வில்வேலியின் முடிவு அப்படியா ஆயிற்று?" என்று நடுங்கிய குரலில் வினவினாள்.

"ஆம், அம்மணீ! நம் பல்லவ மாமன்னரவர்கள் சமபந்த பத்திரரிடம் அப்படித்தான் சொன்னார்" என்று தலை குனிந்து பதிலிறுத்தான் நாகோதரன்.

உத்தமசீலியின் உடலும் மனமும் வியப்பால் சிலிர்த்துச் சில்லிட்டன. 'எத்தனை அற்புதமான சேதி இது! வாழ் நாளெல்லாம் அதர்மக் குடை விரித்து, அநீதிகளையும் அசத்தியங்களையுமே பக்கத் துணைப் பாதுகாவலாக வைத்துக்கொண்டு, மண்ணுக்காகவும் பொன்னுக்காகவும் பொருளுக்காகவும் புகழுக்காகவும் பதவிக்காகவும் எண்ணற்ற பஞ்சமாப் பாதகங்களைத் துணிந்து செய்து, அரசியலை ஒரு சூதாட்டமாக நடத்திவந்த வில்வேலி, கடைசிக் காலத்தில் எங்கோ எப்போதோ கழற்றியெறியப்பட்டுச் சிதைந்து புதைந்து கிடந்த தம் இதயத்தைத் தேடியெடுத்துச் சுத்தப் படுத்தி அதன் திவ்விய ஞான ஒளியிலே வழி நடக்க முற்பட்டார் என்றால் இந்த அதிசயத்தை என்னென்பது?'

வில்வேலியின் திடீர் மனமாற்றத்துக்குரிய காரணம் என்னவாயிருக்கும் என்பது பற்றியும் அவள் இப்போது

நெஞ்சு வியர்க்க நினைத்துப் பார்த்தாள்: 'ஆமாம்; அன்றொரு நாள் பெருவளநல்லூர் சிற்றாற்றங்கரையருகே தனித்திருந்த என்னையும் பரமேசுவரவர்மரையும் மறைந்து நின்று அவர் கொல்ல முயன்றபோது, பழையாறைச் சோழரின் கத்திக் குத்துக்கு இலக்காகி உயிராபத்தான நிலையில் வீழ்ந்து கிடந்த சமயம், அவரால் ஜன்மப் பகைவரெனக் கொண்ட பரமேசுவரவர்மரே ஓடோடியும் வந்து அவருக்கு உதவி செய்து உயிர்ப்பிச்சை அளித்து அனுப்பினாரே, அந்த மனிதாபிமானக் கருணை உள்ளப் பேரன்பை உணர்ந்துதான் அவர் அப்படி மனம் திருந்திய மாமனிதராக மாறியிருக்க வேண்டும். இல்லையென்றால், சளுக்கிய விநயாதித்தனின் வெஞ்சின வேண்டுதலையும் தூண்டுதலையும் ஏற்காமல், நிராயுதப்பாணியாகத் தனியே இருந்த பல்லவ மன்னரைக் கொல்ல மறுத்துத் தம்மைத் தாமே குத்திக் கொண்டு அவரது காலடியில் போய் விழுந்து சாகத் துணிந்திருப்பாரா? தாம் சாகுந்தறுவாயில், தம்மால் பல காலம் விரோதியெனப் பகைத்து வெறுத்த அவரின் மடியில் தலை சாய்த்துப் படுக்கவும், அவருடைய வாயால் தம் பெயரை ஒரு முறை அன்போடு அழைத்துக் கேட்கவும் விரும்பியிருப்பாரா? வாழ்நாள் முழுதும் அதர்மத்தின் பிரதிநிதியாகவே இருந்து வந்த பயங்கரவாதியான அவரை இப்படி அரை நொடியில் ஒரு மாபெரும் மனிதராக மாற்றியமைப்பதென்றால் அது எளிதான காரியமா என்ன? அதைச் சாதித்த பரமேசுவரவர்மரின் அன்புச் சக்திதான் எத்தனை அகண்டாகாரப் பலம் வாய்ந்ததாக இருக்கவேண்டும்!'

இவ்வளவு நாட்களாக வில்வேலியின்மேல் தீராப் பகையும் சோராக் கோபமும் கொண்டிருந்த உத்தமசீலி இப்போது அவருடைய மறைவுக்காக உள்ளம் கசிந்து வருந்திக் கண் கலங்கினாள். அவரை ஒரு மாபெரும் ஞானியாக மதித்துத் தன் நெஞ்சாரப் போற்றி வணங்கினாள். இப்படி வியப்பில் ஆழ்ந்து வருத்தத்தில் நெகிழ்ந்து நின்ற அவளது மனம் திடுமென்று ஒரு திகிலுக்குள் சிக்கி அதிர்ந்தது.

சோழ இளவரசி இளங்கோப்பிச்சியின் சிவிகையைப் பின் தொடர்ந்து வந்த சளுக்கிய விநயாதித்தன், தன்னை அந்தப் புதர்க் குடிலில் பார்த்ததும் அவசரமாகத் திரும்பிப் போய் வில்வேலியை அழைத்துக்கொண்டு வந்தபோது, தானும் அவளும் அங்கேயே இருந்திருந்தால் நிலைமை என்ன ஆகியிருக்கும் என்பதை நினைத்தே அவள் அவ்வாறு அதிர்ச்சி யுற்று நடுங்கினாள். அத்துடன் சோழ இளவரசியினுடையவும் நாகோதரனுடையவும் வற்புறுத்தலுக்கிணங்கிப் பெருவள நல்லூரைவிட்டுத் திருப்பருத்திக்குன்றத்துக்குப் பயணமாகி வராமல் இருந்திருந்தால், அங்கே அந்தச் சிற்றாற்றில் பெருக்கெடுத்த வெள்ளத்துக்குப் பலியாக நேர்ந்திருக்குமே என்ற எண்ணமும் தோன்றி அவளை மிரட்சியுற வைத்தது. இவையெல்லாவற்றையும்விட இன்னொரு பயங்கர நினைப்பே அவளைப் பெரிதும் அலைத்துக் குலுக்கியது. 'என்னைப் பார்க்க வேண்டிப் பெருவளநல்லூருக்குப் போன பரமேசுவரவர்மரை வில்வேலியின் மூலம் கொல்ல முயன்ற விநயாதித்தன், அதற்கு மாறாகத் தானே அந்தக் காரியத்தைச் செய்ய முனைந்திருந்தால்?...' என்ற நினைப்புத்தான் அது.

சண்டமாருதத்தில் சிக்குண்ட பூங்கொடிபோல் வெட வெடத்து நடுங்கிய உத்தமசீலி, "நாகோதரா! பல்லவ மாமன்னர் நன்னலத்தோடுதானே இருக்கிறார்? அவரை நீ நேரில் பார்த்தாய் அல்லவா?" என்று அவசரத் துடிப்புடன் கேட்டாள்.

"அதிர்ஷ்டவசமாக மாமன்னரவர்களைத் தரிசிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்ததால்தான் இவ்வளவு விஷயங் களையும் என்னால் அறிந்து வர முடிந்தது, தாயே! ஆனால்..." என்று முகம் மலர இழுத்தான் நாகோதரன்.

"என்ன விஷயம்? சீக்கிரம் சொல்!"

"நம் மன்னர்பிரான் நன்னலத்தோடு மட்டுமல்ல, முன்னைவிடப் பன்மடங்கு அழகுக் களையோடும் ஆபரணப் பொலிவோடும் விளங்குகிறார், அம்மணீ! ஆயினும் அவர்

முகத்தில் ஏதோ ஓர் ஆழ்ந்த கவலை சூழ்ந்து அவரைப் பெரிதும் வாட்டத்துடன் காட்டுவதாகவே எனக்குத் தோன்றியது. அது ஒன்றைத்தான் என்னால் தெரிந்து கொள்ளவும் முடிந்தது."

உத்தமசீலி இதைக் கேட்டு மென்னகை புரிந்தாள். தன்னைப் பார்க்காததால் ஏற்பட்ட துயரத்தினால்தான் பல்லவ மன்னன் அவ்வாறு மனம் சோர்ந்து முகம் வாடிக் காணப்படுவான் என்று எண்ணியே அவள் அப்படித் தனக்குள் சிரித்துக்கொண்டாள். தன் காதலன் தன்னுடைய பிரிவைத் தாளாது வருந்தி வாட்டமுற்றிருக்கிறான் என்னும் சேதி எந்தக் காதலிக்கும் ஓர் இன்ப வேதனையாகவும் கசப்பான ஆறுதலாகவும் இருப்பது இயற்கைதானே?

"என்னைப் பற்றிப் பல்லவ மன்னர் உன்னிடம் ஏதாவது கேட்டாரா, நாகோதரா?" என்று நாணம் தேங்கிய ஆர்வக் குரலில் மெல்ல வினவினாள் உத்தமசீலி.

"அப்படி ஏதும் விசாரிக்கவில்லை, இளவரசி! சமந்த பத்திரரிடம் எதைப்பற்றியோ தீவிரமாக விவாதிப்பதிலேயே மன்னரின் முழுக் கவனமும் லயித்திருந்தது. அதைத் தெரிந்து கொண்டு நான் சமணப் பள்ளியைவிட்டு வெளியேறி வந்து விட்டேன்."

இதைக் கேட்டு அனிச்ச மலரென முகம் வாடிய உத்தம சீலி தணிந்த குரலில், "பரவாயில்லை; அவர் மனம் சோர்ந்து இருக்கும்போதெல்லாம் சமந்தபத்திரரிடம் வந்து நேசப் பான்மையுடன் சைவ-சமணத் தத்துவ விவாதங்களில் ஈடுபடுவது வழக்கம் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த வகையில் அவருடைய கவனம் இப்போது திரும்பி விட்டிருக்கும்" என்று சொல்லித் தனக்குத் தானே புன் முறுவல் பூத்தவாறு மேலும் கூறினாள்: "ஆயினும் அவர் சமணப் பள்ளியில் அதிக நேரம் தங்கியிருக்க மாட்டார். இப்போதோ இன்னுங் கொஞ்ச நேரத்திலோ இந்த இல்லத்துக்கு வருகை தருவார்."

குதூகலத்துடன் இவ்வாறு கூறிக்கொண்டே உள்ளே செல்லத் திரும்பிய அவள் எதையோ நினைத்துக் கொண்டவள்போல் நின்று, "நாகோதரா! நேற்று நான் உன்னிடம் சொன்ன அந்தக் காரியம் என்ன ஆயிற்று?" என்று அவசரமாகக் கேட்டாள்.

"இளவரசியாரின் கட்டளையை நிறைவேற்றிக் கொண்டு வருகிற வழியில்தான் நம் மன்னர்பிரானைச் சமணப் பள்ளியில் தரிசித்தேன், தாயே! அதைவிட இது முக்கியம் என்பதால் இதை முதலில் தெரிவித்தேன்....." என்று கூறிய நாகோதரன் பின்னால் திரும்பி மெல்லக் கைதட்டினான்.

உடனே அந்த இல்லத்து முகப்பு வாயிலுக்கு வெளியே ஒதுங்கி நின்று கொண்டிருந்த ஒரு நடுத்தர வயதான மனிதன் பணிவும் குழைவுமாக உள்ளே வந்து ஆந்திர இளவரசியை வணங்கி நின்றான்.

"இவர்தாம் அந்தப் பொற்கொல்லர், அம்மணீ! பொன்னாபரணக் கலைத் தொழிலில் மிகவும் தேர்ச்சியுள்ளவர் என்று கேள்விப்பட்டே இவரை அழைத்து வந்திருக்கிறேன். மற்ற விவரங்களைத் தாங்களே இவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்" என்றவாறு ஓரடி பின்னால் நகர்ந்து நின்று கொண்டான் நாகோதரன்.

"இந்த மனிதனை நான் எங்கோ எப்போதோ பார்த்த ஞாபகம் இருக்கிறதே!..." என்று மெல்லிய குரலில் இழுத்தாள் உத்தமசீலி.

"பார்த்திருப்பீர்கள், இளவரசி! அடியேன் தங்கள் ஆந்திர நாட்டுப் பிரஜைகளில் ஒருவன். வேங்கி அரண்மனைப் பொற்கொல்லனாகப் பணிபுரிந்தவன். இந்த எளிய கலைஞனின் கையால் உருவான ஆபரணங்களில் சில இப்போதும் இளவரசியாரின் திருமேனியை அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன" என்று உள்ளார்ந்த மகிழ்ச்சிப் பெருமிதத்துடன் சொன்னான் அந்தப் பொற்கொல்லன்.

"ஓ... உன் பெயர் மல்லிநாதன் அல்லவா?" என்று புன்னகை புரிந்தாள் உத்தமசீலி.

"ஆம், தாயே! ஆந்திர மாமன்னரின் உத்தரவுப்படி ஆபரணக் கலைத் தொழிலைத் தாற்காலிகமாகக் கைவிட்டு ஆந்திர காலாட்படையில் சேர்ந்து பல்லவ நாட்டின் விடுதலைப் போரில் ஈடுபட்டேன். வெற்றிக்குப் பின் இந்த அழகிய பல்லவநாடு என்னை வெகுவாக வசீகரித்துவிட்டது. அதனால் நம் நாட்டுக்குத் திரும்பிய ஆந்திரப் படைவீரர் களோடு சேர்ந்து பயணப்படாமல், பல்லவ அரசாங்கத்தின் அநுமதியோடும் ஆதரவோடும் பல்லவப் பிரஜையாக இவ்வூரிலேயே தங்கி என் குலத் தொழிலில் ஈடுபட்டு இனிதே வாழ்ந்து வருகிறேன். இந்நிலையில் எனது மதிப்புக்குரிய ஆந்திர இளவரசியாரை இன்று சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்ததுபற்றி நான் எல்லை கடந்த பேரானந்தத்தில் திளைத்து நிற்கிறேன்" என்றான் பொற்கொல்லன் அகமும் முகமும் மலர.

"மெத்த மகிழ்ச்சி! உன்னால் எனக்கு ஒரு பெரிய காரியம் ஆகவேண்டியிருக்கிறது. அதை முடித்துத் தரும் தகுதியும் திறமையும் உன்னிடம் இருக்கின்றன என்பதை நான் அறிவேன். உன்னைத் தேர்ந்தெடுத்து அழைத்து வந்த நாகோதரனுக்கு என் பாராட்டுக்கள்" என்று கூறிக் கொண்டே உற்சாகத்துடன் உள்ளே ஓடிய உத்தமசீலி, சிறு பொழுதுக்குப்பின், தந்தத்தாலான அழகிய பேழையொன்றை எடுத்துக்கொண்டு வெளியே வந்தாள்.

நாகோதரனும், பொற்கொல்லன் மல்லிநாதனும் அவளை ஆச்சரியத்துடன் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர்.

# 128

## பேழையில் ஒரு புதிர்

தந்தப் பேழையைக் கீழே வைத்து அதன் எதிரில் அமர்ந்துகொண்ட உத்தமசீலி ஏதோ ஓர் இன்பமயமான கனவில் ஆழ்ந்தவள்போல் சற்று நேரம் மௌனமாயிருந்தாள். பிறகு முகத்தில் ஓர் அபூர்வப் புன்னகை ஒளிவிட அந்தத் தந்தப் பேழையை மெல்லத் திறந்து மூடியை நிமிர்த்தி வைத்து விட்டுத் தான் அதிகப் பிரியத்தோடு அணிந்திருந்த சில பொன்னாபரணங்களை ஒவ்வொன்றாகக் கழற்றிப் பேழைக்குள் வைத்தாள். சந்திர வட்டமாகத் திகழ்ந்த அவளது வதனத்தில் இப்போது முன்னிலும் பன்மடங்கு எழிலான புன்சிரிப்பு தவழ்ந்தது.

"மல்லிநாதா! இங்கே வந்து இந்தப் பேழைக்குள் என்ன இருக்கின்றன, பார்!" என்றாள் தணிந்த குரலில்.

பணிவுடன் கைகட்டிக்கொண்டு ஓசைப்படாமல் மெல்ல நடந்து வந்த பொற்கொல்லன் சற்றுத் தள்ளியே நின்று உடம்பை வளைத்துக் கழுத்தை நீட்டிக் குனிந்து பார்த்தான். அவனுடைய கண்கள் வியப்பால் விரிந்து மலர்ந்தன.

ஆமாம்; இரண்டு அறைகளாகத் தடுக்கப்பெற்றிருந்த அந்தப் பேழையின் ஒரு பகுதியில் கருஞ்சிவப்பான புத்தம் புதிய உருத்திராக்கக் காய்கள் நிறைந்திருந்தன. அவை ஒவ்வொன்றும் மிகக் கவனமாகத் தேர்ந்தெடுத்துப் பொறுக்கிச் சேர்த்த அழகிய மணிக் காய்களாக விளங்கின. அடுத்த அறைப் பகுதியில் ஆந்திர இளவரசிக்குச் சொந்தமான பலவகை அணிகலன்கள் நிறைந்திருந்தன. விலை மதிப்பற்ற

நவரத்தினங்களாலும், மாற்றுக் குறையாத பசும் பொன்னாலும் உருவான அந்த எழிலார்ந்த ஆபரணங்கள் கண்ணைப் பறிக்கும் வண்ணம் ஒளிகளுடன் திகழ்ந்தன.

பேழையை மூடிவிட்டு நிமிர்ந்த உத்தமசீலி, "பார்த்துக் கொண்டாயா மல்லிநாதா? சரி; இப்போது நான் சொல்லப் போவதைக் கவனமாகக் கேள்!" என்றவாறு எழுந்தாள்.

உடம்பைக் கூனிக் குறுக்கிச் செவியைத் தாழ்த்திக் கொண்டு நின்றான் பொற்கொல்லன்.

உத்தமசீலி தன் கையில் சுருட்டி வைத்திருந்த ஒரு சிறிய பட்டுச் சீலையைப் பொற்கொல்லனிடம் நீட்டி, "இதோ பார், மல்லிநாதா! இந்தச் சீலையில் மதிப்பு வாய்ந்த பொருள் ஒன்றின் வரைகோட்டுச் சித்திரத்தை என் கைப்படத் தீட்டி யிருக்கிறேன். சிறு வயதில் நான் கற்ற ஓவியக் கலை இப்போது தான் முதன்முதலாக எனக்கு உதவியிருக்கிறது. இதுவே நான் எழுதிய முதல் சித்திரம். இந்தச் சித்திரத்தை மாதிரியாகக் கொண்டு இதில் உத்தேசமாகக் குறித்துள்ள அளவின்படி இப்பேழையில் இருக்கும் உருத்திராக்க மணிகளால் அந்த உயரிய மதிப்பு வாய்ந்த பொருளை நீ உருவாக்கித் தர வேண்டும். அதற்குத் தேவையான பொன்னுக்கும் நவரத்தினங்களுக்கும் இதிலே உள்ள எனது அணிகலன்களை அழித்துப் பிரித்தெடுத்துக்கொண்டு உபயோகப்படுத்திக் கொள்ளலாம். எனக்குச் சொந்தமான இந்தப் பொன்னையும் மணிகளையும் தவிர, நான் உருவாக்கச் சொல்லும் அந்தப் பொருளில், உனக்கோ அல்லது வேறு யாருக்குமோ உரித்தான ஒரு குன்றிமணி எடைப் பொன்னையோ மணியையோ கண்டிப்பாகச் சேர்க்கக் கூடாது. உன் வாழ்நாளில் நீ செய்யக்கூடிய மிக உயர்ந்த உன்னதப் பொருள் ஆனதால் இதற்கு ஊதியமாக நான் உனக்கு ஒரு மஞ்சாடிப் பொன்னும் தரமாட்டேன்; பல்லவ சாம்ராஜ்யத்தின் எதிர்காலப் பட்டத்துப் பேரரசியின் மனப்பூர்வமான பாராட்டு ஒன்று தான் கிடைக்கும். எனவே, உன் முழுத் திறமையையும் காட்டி

இதனை எழிலுறப் படைத்துத் தருவாய் என்று நம்புகிறேன்" என்று கண்டிப்பும் கனிவுமான குரலில் கூறி நிறுத்தினாள்.

அளவு கடந்த உற்சாகத்துடனும் குதூகலத்துடனும் பரவசமாகி நின்ற பொற்கொல்லன், "எனது ஈரேழு ஜன்மத்துக்கும் கிடைக்கப்பெறாத பெரும் பேறாக இப்பணியினை ஏற்று என்னால் இயன்றவரை சிறப்பாகவே முடித்துத் தருவேன் என்பதற்கு உறுதியளிக்கிறேன், அம்மணீ!" என்று உணர்ச்சிச் செருமலிட்டுக் கூறினான்.

ஒரு கணம் ஏதோ சிந்தனையில் நின்ற உத்தமசீலி சட்டென்று நிமிர்ந்து, "இன்னொரு விஷயம், மல்லிநாதா! என்னுடைய உத்தரவின் பேரில் நீ உருவாக்கப்போகும் இந்தப் பொருளைப்பற்றிய விவரம் உன்னைத் தவிர வேறு யாருக்குமே தெரியக்கூடாது. அத்தனை பரம இரகசியமாகச் செய்து ஒரே வாரத்தில் என்னிடம் கொண்டுவந்து ஒப்படைத்துவிட வேண்டும். நீ வரும்போது நான் இந்த இல்லத்தில் இல்லையென்றால், நேரே காஞ்சி அரண்மனைக்கு வந்து என்னைச் சந்திப்பாயா!" என்றாள் தன்னை மீறிய மகிழ்ச்சியுடன்.

"அப்படியே ஆகட்டும், இளவரசி!" என்று வணங்கிய பொற்கொல்லன், அந்தப் பேழையைப் பயபக்தியுடன் ஒரு பட்டுத் துணியில் கட்டி எடுத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அவனுக்குத் துணையாக அவன் இல்லம்வரை போய் வருமாறு நாகோதரனை அனுப்பிவிட்டு, அந்த இல்லத்தின் பூங்காப் பொய்கையிலே நீராடி எழுந்து வந்த உத்தமசீலி, அணிகலன்கள் இன்றியே தன்னை அலங்கரித்துக் கொள்வதில் முனைந்தாள்.

அவளுக்கு இப்போதுதான் இளங்கோப்பிச்சியைப் பற்றிய நினைவு எழுந்தது. அதிகாலையில் மஞ்சத்தைவிட்டு எழுந்து வேகவதி ஆற்றில் நீராடி வருவதற்காகப் போனவள் இவ்வளவு நேரமாகியும் இன்னும் திரும்பவில்லையே!...

உண்மையில் அவள் நீராடத்தான் போயிருக்கிறாளா, வேறெங்கேனும் சென்றிருக்கிறாளா என்ற சந்தேகம் தோன்றி விட்டது உத்தமசீலிக்கு. ஏனென்றால், காலையில் துயில் நீங்கி எழுந்து பார்த்தபோது பக்கத்து மஞ்சம் வெறுமனே இருக்கவே, அவள் நீராடத்தான் போயிருப்பாள் என்று இவளாகவே நினைத்துக்கொண்டாள். ஆனால் இவ்வளவு நேரமாகியும் இளங்கோப்பிச்சி திரும்பி வரவில்லை. இதோ, இரண்டு பாடகம் தொலைவில் உள்ள வேகவதி ஆற்றங் கரைக்குப் போய்வர இத்தனை நேரமா?

உத்தமசீலியின் மனத்தில் ஏதோ ஒருவிதப் பயம் சூழ்ந்து கொண்டது.

'இளங்கோப்பிச்சி எங்கே போயிருப்பாள்? கடந்த சில நாட்களாகத் தினமும் என்னை எழுப்பி அழைத்துக்கொண்டு நீராடச் செல்லும் அவள் இன்று மட்டும் என்னிடம் சொல்லாமலே எழுந்து போனதன் காரணம் என்ன!'—

சோழ இளவரசியைப்பற்றிப் பல சந்தேக வினாக்கள் எழுந்து அவற்றுக்கு இன்றுவரை விடை கிடைக்காமல் ஏற் கனவே குழம்பிப் போயிருந்த அவள் இப்போது இன்னும் அதிகக் குழப்பம் அடைந்தாள்.

ஆமாம்; ஆலம்பாக்கத்திலிருந்து பழையாறைக்குப் பயணப்பட்ட இளங்கோப்பிச்சி இடைவழியில் பெருவள நல்லூருக்குத் திரும்பி உத்தமசீலியைச் சந்திக்க வந்த காரணம் இன்றுவரை மர்மமாகவே இருந்தது. அதுபற்றி இவள் அவளைப் பல முறை கேட்டும் அதற்கு அவள் நேராகப் பதில் சொல்லாமல் சுற்றி வளைத்து ஏதேதோ கூறி மழுப்பி வருகிறாள். அவளுடைய வற்புறுத்தலின் பேரில்தான் இவள் பெருவளநல்லூரைவிட்டுத் திருப்பருத்திக்குன்றத்துக்கு வந்து சேர்ந்தாள். அதற்குக் காரணம், அப்போது பெய்த பெருமழை யால் சிற்றாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஆபத்தை உண்டாக்கலாம் எனப் பயந்தே அவள் அவ்வாறு இடம் பெயர வற்புறுத்தினாள் என்று முதலில் எண்ணினாள். இங்கு

வந்த பிறகு அவளுடைய நடத்தைகளையும் பேச்சுக்களையும் கொண்டு அந்தக் காரணமும் சரியல்ல என்று இவளுக்குத் தோன்றிவிட்டது. இரவு பகல் எந்நேரமும் இவளைவிட்டு அவள் அப்படியிப்படி அகலாமல் இருந்து வருவதை வைத்தே இவள் அவ்வாறு நினைக்கலானாள்.

இந்நிலையில், இன்று அவள் திடீரென்று ஏதும் சொல்லிக் கொள்ளாமல் வெளியே போய் இன்னமும் திரும்பி வராமல் இருக்கிறாள் என்றால் இவள் கவலைப்படாமல் இருக்க முடியுமா?

நேரம் செல்லச் செல்ல உத்தமசீலியின் கவலையும் குழப்பமும் மிகுதியாயின. ஆற்றங்கரைக்குப் போய் இளங்கோப்பிச்சியைத் தேடிப் பார்க்கலாமா என்று ஒரு கணம் எண்ணினாள். ஆனால் மறுகணம் அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டாள். காரணம், இவள் அவளைத் தேடிக் கொண்டு போகும் சமயம், பல்லவ மன்னன் பரமேசுவர வர்மன் இங்கே வந்துவிட்டால்?

ஏதும் செய்யத் தோன்றாமல் இருதலைக் கொள்ளி எறும்பென அங்குமிங்குமாக அலைமோதித் தவித்தாள் உத்தமசீலி.

# 129

# விஷக் கனல்

கட்டுமரத்தை விட்டுக் கீழே குதித்தான் கோவிந்த வர்மன். அவனுக்குப் பின்னால் இறங்கிய ஆபத்துதவி சம்பு வராயன் ஆற்றோரமாகக் கட்டுமரத்தை இழுத்துப் போட்டு விட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தவாறு அவனைப் பின் தொடர்ந்தான்.

வேகவதி ஆறு புதுப் புனலெடுத்து ஓடிக்கொண் டிருந்தது. முழுக்குத் துறைக்கு மேலண்டைப் புறமாக ஆற்றின் மறுகரையோரம் விரைந்து நடந்துகொண்டிருந்த கோவிந்த வர்மன், "எங்கே அவரைக் காணோம்? அவர் குறிப்பிட்டுச் சொன்ன இடம் இதுதானா, அல்லது இன்னும் மேலே போக வேண்டுமா?" என்று மெல்ல முனகியவாறு தயங்கி நின்றான்.

"குறிப்பிட்ட இடத்துக்கே வந்துவிட்டீர்கள்; வாருங்கள், இளவரசே!"

சடாரென்று திரும்பிய அவன் ஒரு நாணற்புதரை நீவிக் கொண்டு கரை மேட்டுக்குத் தாவிச் சென்றான். அங்கே கருவேல மரமொன்றின் அடியில் கவலையும் சோர்வுமாக அமர்ந்திருந்தார் பழையாறைச் சோழர்.

மகிழ்ச்சியும் நிம்மதியுமாக அவரைப் பார்த்துக் கொண்டே மணல் சரிவில் போய்த் துவண்டு உட்கார்ந்தான் கோவிந்தவர்மன். பழையாறைச் சோழரின் கவனம் அவன்மீது பதியவில்லை. அவனுக்குப் பின்னால் நாணற்புதரை விலக்கிக் கொண்டு வந்த ஆபத்துதவி வீரனை ஆவலுடன் பார்த்து, "சம்புவராயா! என் அன்பு மகள் இளங்கோப்பிச்சி இருக்கும்

இடத்தைக் கண்டு பிடித்துவிட்டாயா?" என்று அவசரமாகக் கேட்டார்.

"சோழ இளவரசியார் நன்னலத்தோடு இருக்கிறார், பிரபு!'' என்று உள்ளார்ந்த உற்சாகத்துடன் சொன்ன சம்புவராயன் சற்றுத் தயங்கிவிட்டுத் தணிந்த குரலில் மேலும் கூறினான்: "நாம் எதிர்பார்த்தபடியே அவர் இப்போது ஆந்திர இளவரசியுடன்தான் தங்கியிருக்கிறார். தெய்வாதீனமாகச் சளுக்கிய இளவரசனிடமிருந்து தப்பிய அவ்விருவரும் பெருவளநல்லூரைவிட்டு இந்தத் திருப்பருத்திக் குன்றத்துச் சமண சங்கப் பள்ளிக்குச் சொந்தமான ஓர் இல்லத்தில் வந்து தங்கியிருக்கிறார்கள்."

மகிழ்ச்சி நிலவிய பழையாறைச் சோழரின் முகத்தில் திடீரென்று வெறுப்பும் கோபமும் புகைந்தன. "அந்தச் சதிகாரப் பெண்ணோடு இவள் ஏன் போய்த் தங்கியிருக்கி றாளாம்?" என்று அதட்டலாகக் கேட்டார் அவர்.

சம்புவராயன் திருதிருவென்று விழித்துக்கொண்டு மௌனமாக நின்றான்.

"இளங்கோப்பிச்சியை நீ நேரில் சந்திக்கவில்லையா?"

"இல்லை, பிரபு! நம் இளவரசியாரின் சிவிகைதூக்கி களில் ஒருவனை இரகசியமாகப் பார்த்து இவ்விவரங்களைக் கேட்டு அறிந்தேன். கடமையிலிருந்து தவறிய என்மீது இளவரசியார் மிகுந்த கோபத்துடன் இருக்கிறாராம். அதனால் அவரை நேரில் சென்று சந்திக்க எனக்குத் துணிவு வரவில்லை..."

"ஓகோ! என் கட்டளையை மீறிப் பெருவளநல்லூ ருக்குப் போனதால்தான் அம்மாதிரி சங்கடங்கள் ஏற்பட்டன என்பதை அவள் மறந்துவிட்டாளோ?" என்று சினத்துடன் இரைந்து கேட்ட பழையாறைச் சோழர், "ஹூம்! என் வயிற்றில் பிறந்த பெண்ணே எனக்கு எதிரான நடவடிக்கை களில் ஈடுபடுவாள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை" என்றார் கசந்த குரலில்.

தலை குனிந்து உட்கார்ந்திருந்த கோவிந்தவர்மன் தன்னை மீறிய ஒரு துடிப்புடன் நிமிர்ந்து, "வருத்தப்படா தீர்கள், ஐயா! இளங்கோப்பிச்சியின் நோக்கம் நமக்குப் பாதகமாக இராமல் சாதகமாகவும் இருக்கலாம். ஆந்திர இளவரசியின் எண்ணத்தை அறிந்து அவளைப் பல்லவ மன்னரின் உறவிலிருந்து பிரித்து விரட்டியடிப்பதற்காக அவளோடு போய்த் தங்கியிருக்கலாம். பொறுத்திருந்து பார்க்க வேண்டிய விஷயம் இது" என்று மெல்லச் சிரித்துச் சொன்னான்.

பழையாறைச் சோழர் இதை ஒப்புக்கொள்ள மறுப்பவர் போல் வேகமாகத் தலையசைத்தவாறு சிறுபொழுது பேசாதிருந்துவிட்டுப் பிறகு சட்டென்று திரும்பி, "அது சரி, இளவரசே! நேற்றுக்காலை இந்நேரத்துக்கு இங்கு வருவதாகச் சொல்லிச் சென்ற நீங்கள் இவ்வளவு தாமதமாக வந்திருக்கிறீர்களே, ஏன்?" என்று கண்களை இடுக்கிக் கொண்டு கேட்டார்.

கோவிந்தவர்மனின முகத்தில் திடீரென்று ஆத்திர உணர்ச்சி குமுறியது. "ஆம், ஐயா! அதற்கு ஒரு முக்கிய காரணம் இருக்கிறது" என்று அடித் தொண்டையில் கரகரத்த அவன் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுச் சற்றே அருகில் நெருங்கிக் குரோதக் குரலில் படபடத்தான்: "சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் கூரம் கிராமத்தில் தமக்கென ஓர் இல்லத்தைத் அமைத்து வருகிறார் என்றும், அதற்குத் தேவையான நிலமும் பொருளும் பல்லவ மன்னரே முற்றூட்டாக அளித்திருக்கிறார் என்றும் ஏற்கனவே நாம் கேள்விப்பட்டோம் அல்லவா? அது எவ்வளவுதூரம் உண்மை என்பதை அறிவதற்காக நேற்று கூரத்துக்குப் போயிருந்தேன். அங்கு போன பிறகுதான் அந்தப் பேராசைக்கார மனிதர் தமக்குக் கிடைத்த முற்றூட்டு சாஸனத்தை எப்படியெல்லாம் துஷ்பிரயோகம் செய்திருக்கிறார் என்பது எனக்குப் புலனாகியது. ஒரு சேதியக் கலைஞரின் அந்தஸ்துக்கு ஏற்ற வகையில் அமைக்கப்பெறும் இல்லமாகவே அது தோன்ற

வில்லை; பேரரசனொருவனுக்காக நிர்மாணிக்கப்பெறும் பெரிய மாளிகையோ என்றுதான் நினைக்கவேண்டியிருந்தது."

"பாவம், அந்தப் பரவாதிமல்லரின்மேல் பல்லவ இளவரசருக்கு எப்போதும் ஒரு கசப்பு இருந்து வருவது ஏன் என்றே எனக்குப் புரியவில்லை!" என்று குறும்பாகக் கூறிச் சிரித்த பழையாறைச் சோழர் முகத்தைச் சுளித்துக்கொண்டு "ஆமாம்; அப்படி என்ன, அத்தனை பிரமாதமான மாளிகை அங்கே கட்டப்பட்டிருக்கிறதாம்?" என்று அலட்சியமாக வினவினார்.

"அது பிரமாதமான மாளிகைதான் என்பதில் சந்தேக மில்லை, ஐயா! ஆனால் அதை நான் பார்க்கவில்லை..."

"கண்ணால் பார்க்காமல் எப்படி அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறீர்கள், இளவரசே?"

"நூற்றுக்கணக்கான சிற்பிகள், கட்டடக் கலைஞர்கள்; ஆயிரக்கணக்கான கல் தச்சர்கள், சிற்றாட்கள்; மலை மலையாகக் கருங்கற்கள், ஓடுகள், சுண்ணக் கலவைகள்—இவ் வளவையும் சேர்த்துப் பார்த்தபோது அப்படித்தான் என்னால் ஊகிக்க முடிந்தது. அது மட்டுமல்ல; மாளிகை கட்டும் செலவுக்காக இதுவரை பல்லவ அரசாங்கத்தின் பொக்கிஷம் பாதியளவு கரைந்துபோய் விட்டிருக்குமோ என்றும் கருதத் தோன்றியது."

"நல்ல வேடிக்கை! கட்டடம் கட்ட கருங்கற்கள் உபயோகமா? இது என்ன, பைத்தியக்காரத்தனம்?"

"எனக்கும் அதுதான் ஆச்சரியமாக இருக்கிறது ஐயா!"

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் அந்த இல்லத்துக் கான அஸ்திவாரமே இன்னும் அங்கு எழுப்பப்படவில்லை போல் இருக்கிறதே?"

'மாளிகை முடிவடையும் தறுவாயில் இருப்பதாகக் கேள்விப்பட்டேன்."

"இளவரசே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"ஆம், ஐயா! அந்த மாளிகை கட்டும் வேலை முக்கால் பங்கு முடிவடைந்துவிட்டதாம். ஆனால் நான் அதைப் பார்க்கவில்லை; பார்க்கவும் முடியவில்லை."

பொறுமையிழந்த பழையாறைச் சோழர் அவனைக் கூர்ந்து நோக்கினார்.

"உண்மைதான், ஐயா! அந்த மாளிகையின் தோற்றத் தையோ அமைப்பையோ யாரும் அறிய முடியாதபடி பிரும்மாண்டமான கூரைப் பந்தலொன்று போடப்பெற்று உள்ளுக்குள்ளேயே இரகசியமாக வேலை நடந்து வருகிறதாம். மாளிகை கட்டி முடியுமுன் அதை எவரும் பார்க்கக் கூடாது என்பதற்காகவே அவ்வாறு மறைப்புக்கூரை போடப் பெற்றிருக்கிறதாம். அங்கு வேலை செய்கிறவர்களிடம் அம்மாளிகையைப்பற்றிய எந்த ஒரு சிறு விவரத்தையும் வெளியிடக் கூடாதென்ற உறுதிமொழி வாங்கப்பட்டிருக்கிற தாம். அதனால் அவர்களைத் தவிர அந்தக் கூரைக் கொட்ட கைக்குள் வேறு யாரையுமே அநுமதிக்கப்படுவதில்லையாம்" என்று மூர்க்கமான குரலில் கூறினான் கோவிந்தவர்மன்.

"என்ன இது விந்தை? ஏன் இந்த இரகசிய ஏற்பாடுகள்?"

"நானும் அதைத்தான் கேட்கிறேன், ஐயா! ஒரு சேதியக் கலைஞர் அரசாங்கத்தின் உதவி பெற்றுத் தம் சொந்தக் குடியிருப்புக்காகக் கட்டிக்கொள்ளும் இல்லத்தை இத்தனை இரகசியப்படுத்தி மறைத்து வைக்க வேண்டிய காரணம் என்ன?"

நெற்றி நரம்புகள் புடைத்துப் பின்னலிட ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவராய்ச் சில விநாடி மௌனமாயிருந்த பழையாறைச் சோழர் திடுமெனத் தலைநிமிர்ந்து, "ஆமாம்; இதுபற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், இளவரசே?" என்று கரகரத்த குரலில் கேட்டார்.

"பல்லவ மன்னர் அளித்த முற்றூட்டு சாஸனத்தைக் கொண்டு நியாயத்துக்குப் புறம்பான வகையில் அரசாங்கப் பொக்கிஷத்திலிருந்து ஏராளமான பொன்னும் பொருளும்

பெற்று அரண்மனைபோல் கட்டிவரும் தம் இல்லத்தை அதன் ஆரம்ப நிலையிலேயே பொதுமக்களும் அதிகாரிகளும் பார்க்க நேர்ந்தால் ஏதேனும் எதிர்ப்புக் கிளம்பித் தமது மோசடிச் செயல் வெளிப்பட்டுக் கட்டட வேலையும் தடையாகி விடுமோ என்று அஞ்சித்தான்; அந்தப் பரவாதிமல்லர் அப்படி மூடு மந்திரம் செய்து இரகசியமாகக் காரியத்தை நடத்திக்கொண்டு வருகிறார் என்று நினைக்கிறேன்" என்றான் கோவிந்தவர்மன் கோபக் குமுறலுடன்.

"ஓ... நான் அதைக் கேட்கவில்லை இளவரசே, அதைக் கேட்கவில்லை!'' என்று கூறிக் கடகடவெனச் சிரித்த பழையாறைச் சோழர் விருட்டென்று எழுந்து நின்றார்.

"வேறு எதைப்பற்றிக் கேட்கிறீர்கள்?'' என்றவாறு கோவிந்தவர்மனும் எழுந்தான்.

"நமக்குக் கிடைத்திருக்கும் இந்த அரிய வாய்ப்பை எப்படிப் பயன்படுத்திக்கொள்ள நினைக்கிறீர்கள் என்றுதான் கேட்டேன்."

"அரிய வாய்ப்பா? எனக்கு ஒன்றும் புரியவில்லையே?"

"புரியும்படி சொல்கிறேன், கேளுங்க இளவரசே!" என்று குரூரமான நகைப்புடன் சொன்ன பழையாறைச் சோழர் மேலும் கூறினார்: "ஆந்திர இளவரசி உத்தமசீலியைப் பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர் மணந்துகொண்டு அவளைப் பட்டத்து ராணியாக்கக் கூடாது என்பதற்காகக் குடிமக்களிடம் நாம் இதுவரை எடுத்துக் கூறிவரும் விஷயம் ஒன்றே ஒன்றுதான். அதாவது, சமண சமயத்தைச் சார்ந்த ஒருத்தி பல்லவப் பேரரசியானால் சைவ சமயத்துக்கு ஆபத்து ஏற்படும் என்றும், அதனால் சளுக்கியர்கள் மீண்டும் பல்லவ நாட்டை எளிதில் கைப்பற்றிக்கொள்வார்கள் என்றும் பிரசாரம் செய்து வருகிறோம். இந்தப் பிரசாரத்துக்கு ஓரளவு பலன் கிடைத்தும் வருகிறது. பரமேசுவரவர்மரின் திருமண முடிவை எதிர்ப்போருக்கும் ஆதரிப்போருக்குமிடையே சிறுசிறு கலகங்கள் மூண்டு வருகின்றன. விடுதலைப்

போருக்குமுன் ஒரு தாய் வயிற்றுச் சகோதரர்களைப்போல் ஒற்றுமையாக இருந்து வந்த சமணர்களும் சைவர்களும் இப்போது இந்த விஷயத்தில் பிளவுபட்டுப் பிணங்கி நிற்கிறார்கள். பழைய வேற்றுமைகளும் வெறுப்புகளும் மறுபடியும் மெல்ல மெல்லத் தலைதூக்குகின்றன. ஆனாலும் நாம் எதிர்பார்த்த அளவுக்கு அத்தனை பலமான எதிர்ப்பு இன்னும் உருவாகிவிடவில்லை. அதனால் பல்லவ மன்னர் ஆந்திர இளவரசியை மணந்துகொள்ளலாம் என்ற நிலைமையும் அப்படியே இருந்து வருகிறது. இதற்குக் காரணம், இதுவரை நாம் ஒரே ஒரு விஷயத்தை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு அதையே திருப்பித் திருப்பிப் பிரசாரம் செய்து வருவதுதான் என்று நினைக்கிறேன். ‘சைவசமயத்துக்கு ஆபத்து’ என்ற அந்த ஒரே பூச்சாண்டியை இனியும் தொடர்ந்து காட்டி வந்தால் நம் நோக்கம் நிறைவேறாது போய் விடலாம். எனவே, நம்முடைய பிரசாரத்துக்கு மூல பலமாக வேறு சில புதிய விஷயங்களையும் சேர்த்துக் கொண்டாக வேண்டும். அதற்குத் தோதாக இந்தக் கூரம் மாளிகையின் இரகசிய நிர்மாண விஷயம் இப்போது கிடைத்திருக்கிறது. இதை ஓர் அரிய பிரசாரக் கருவியாக நாம் பயன்படுத்திக் கொள்ளலாம்.”

வியப்பும் பிரமிப்புமாக அவரைப் பார்த்துக்கொண்டு நின்ற கோவிந்தவர்மன், “சொல்லுங்கள், ஐயா! இந்த விஷயத்தை நமக்குச் சாதகமாக எப்படிப் பயன்படுத்த நீங்கள் நினைக்கிறீர்கள்?” என்று மிகுந்த துடிப்புடன் வினவினான்.

மோவாயை வருடியவாறு சில கணம் மௌனமாயிருந்த பழையாறைச் சோழர் வன்மச் சிரிப்புடன் அழுத்தந்திருத்தமாகச் சொன்னார்: “கவனமாகக் கேளுங்கள், இளவரசே! சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் ஒரு சமணர். ஆதிமுதலே அவரது அன்புக்கும் ஆதரவுக்கும் பாத்திரமா யிருப்பவள் ஆந்திர இளவரசி உத்தமசீலி. இவ்விருவரும் இங்குள்ள திரமிள சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரரிடம்

மிக்க பக்தியும் மதிப்பும் வைத்திருப்பவர்கள். இவர்களைத் தவிர இப்போது பல்லவ மன்னரின் முழு நம்பிக்கைக்கும் உரியவராயிருப்பவரான சந்திரலேகைச் சிற்றரசர் பெரும்பிடுகு முத்தரையரும் சமண சமயத்தைச் சார்ந்தவரே. அவருக்குப் பலவகையிலும் உதவியாயிருக்கும் ஆபத்துதவி வீரனான இளங்காரிக்குடை யானும் ஒரு சமணன்தான். ஆக, இந்தச் சமணர்களெல்லாம் ஒன்று சேர்ந்து சைவரான பரமேசுவரவர்மரை ஒழித்துக் கட்டிவிட்டுப் பல்லவ நாட்டைக் கைப்பற்றிக்கொள்ளச் சதித் திட்டம் போடுகிறார்கள் என்றும், அவர்களுடைய அந்தச் சதிவேலைக்கு உதவும்படியாக இருக்கவே கூரம் கிராமத்தில் பரவாதிமல்லர் ஒரு மாளிகையை இரகசியமாக மூடி மறைத்துக் கட்டி வருகிறார் என்றும், இதற்கெல்லாம் தலைமை தாங்கி நிற்பவள் ஆந்திர இளவரசி உத்தமசீலிதான் என்றும், ஆகவே அவளைப் பரமேசுவரவர்மர் திருமணம் செய்து கொள்வதைப் பலமாக எதிர்க்கவேண்டும் என்றும் ஊர் ஊராகப் போய் நாம் தீவிரப் பிரசாரம் நடத்த வேண்டும். இந்தப் புதிய பிரசாரத்தினால் மக்களிடையே பீதியும் குழப்பமும் வெறுப்பும் கோபமும் எதிர்ப்பும் கண்டனமும் எளிதில் உருவாகிவிடும். பிறகு அவை பரமேசுவரவர்மரின் திருமண முடிவை மாற்றி, ஆந்திர இளவரசியை இந்நாட்டை விட்டே விரட்டியடிக்கும்படி செய்துவிடும்."

தான் அறிந்து வந்து சொன்ன ஒரு சிறு விஷயத்தைக் கொண்டு இவ்வளவு சீக்கிரம் இத்தனை பயங்கரமானதொரு பிரசாரத் திட்டத்தை அவர் உருவாக்கி வெளியிட்டதைக் கேட்டு அப்படியே வெலவெலத்து விட்டான் கோவிந்த வர்மன்.

ஆனால் பழையாறைச் சோழரோ வெகு அலட்சிய மாகத் தம் தோளைக் குலுக்கிக் கொண்டு நிமிர்ந்து, "ஹூம்! நம்முடைய நோக்கம் நிறைவேற இந்தப் பிரசாரத் தந்திரங்களை மட்டும் நான் நம்பிக்கொண்டிருப்பதாக

நினைத்துவிடாதீர்கள் இளவரசே! அதற்கெல்லாம் மேலாக இன்னொரு திட்டமும் இருக்கிறது. அதுவே இறுதியாகக் கைக்கொள்ளப் போகிற பயங்கரத் திட்டம்'' என்றார் ஆத்திரம் செருமிய அடித் தொண்டையில்.

இந்தச் சமயம், அவர்கள் நின்றிருந்த கருவேல மரத்துக்குப் பின்னாலிருந்து ஏதோ 'சலசல'வென்ற சப்தம் கேட்டது. பிறகு ஆற்றில் 'தொபுகடீ'ரென்று குதிக்கும் ஒலியும் கேட்டது.

திடுக்குற்றுத் திரும்பிய பழையாறைச் சோழரும் கோவிந்தவர்மனும் பரபரப்புடன் ஓடிப் போய் நாணல் புதரை நீவிக்கொண்டு ஆற்றுப்பக்கம் எட்டிப் பார்த்தனர்.

அவர்களுக்கு நேர் எதிரே ஆற்றின் நீர் மட்டத்தில் யாரோ பாய்ந்து குதித்ததன் அறிகுறியாக நுரைக் குமிழ்களும், வளையங்களும் மட்டுமே கொந்தளித்துச் சுழல்வது தெரிந்தன!

## 130

# 'அதோ, வருகிறார்!'

**உ**த்தமசீலியின் பொறுமையை இன்று எப்படியும் சோதித்துப் பார்த்துவிடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டாற்போல் நேரம் நத்தையாக ஊர்ந்துகொண் டிருந்தது.

அப்படியும் அவள் நொடி நொடியாக எண்ணி நான்கு நாழிகை நேரத்தைப் பொறுமையாகவே கழித்துவிட்டாள். அதற்கு மேல் பொறுமையைக் கடைப்பிடிப்பதுதான் அவளுக்குப் பெரும்பாடாகிவிட்டது. காரணம், அவள் எதிர் பார்த்ததுபோல் சமண சங்கப் பள்ளியிலிருந்து பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன் அவளைப் பார்ப்பதற்காக இந்த இல்லத்துக்கு வரவில்லை. அத்துடன் விடியற்சாமப் போதில் வெளியே போன இளங்கோப்பிச்சியும் திரும்பி வரவில்லை.

'ஆமாம்; அவர்களுடைய வருகைக்காக இனி காத்திருக்க முடியாது. நானே அவர்களைத் தேடிப் போக வேண்டியதுதான்.' —ஆந்திர இளவரசி திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தாள்.

அவசரமாகத் தன் ஆடைகளைத் திருத்திச் சரி செய்து கொண்டு வெளியே புறப்படத் தயாரான அவள் மனத்தில் ஒரு கேள்வி எழுந்தது. 'முதலில் பல்லவ மன்னரைப் பார்க்கப் போவதா? அல்லது இளங்கோப்பிச்சியைத் தேடிச் செல்வதா?'

இந்தக் கேள்விக்கு அவள் உடனே ஒரு முடிவைத் தேர்ந்தெடுத்துவிட்டாள்: 'பல்லவ மன்னரைப் பார்க்க

முதலில் சமணப் பள்ளிக்குப் போவது; பிறகு இளங்கோப்பிச்சி யைத் தேடி அழைத்து வர வேகவதி ஆற்றங்கரைக்குச் செல்வது!'

உற்சாகமாக ஒரு துள்ளுத் துள்ளி வெளியே விரைந்து வந்து முகப்பு வாயிலைக் கடந்து சமணப் பள்ளிக்குச் செல்லும் தோட்டத்துப் பாதையில் இறங்கி இரண்டடி எடுத்து வைத்தவள் அதிர்ச்சியுற்று நின்று அவசரமாகத் தன் பார்வையை மேலே உயர்த்தினாள்.

எதிரே, மிகப் பெரிய பூஞ்சோலை ஒன்றின் நடுவில் எளிமையும் எழிலுமாக அமைந்திருந்த சமண சங்கப் பள்ளியி லிருந்து அப்போதுதான் வெளியே வந்த பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன், சங்கத் தலைவர் சமந்தபத்திரரிடமும் மற்றத் துறவிகளிடமும் விடைபெற்றுத் தன் குதிரை மீதேறி புலப்பட ஆயத்தமானான்.

இந்தக் காட்சியைக் கண்ட உத்தமசீலியின் உடலும் உள்ளமும் குறுகுறுத்தன. 'அதோ அவர் வருகிறார்! என்னைப் பார்க்கத்தான் வருகிறார்.'

குபுக்கென்று குமுறி எழுந்த நாணம் அவளைப் பின்னுக்குப் பிடித்து இழுத்தது. மான் குட்டிபோல் சடாரென்று துள்ளித் திரும்பித் தன் இல்லத்தை நோக்கி ஓடிய அவள், முகப்பு வாயில் படிமீது ஏறி நின்றுகொண்டு ஆவலுடன் நிமிர்ந்து நோக்கினாள்.

என்ன ஆச்சரியம்! பரமேச்வரவர்மனின் புரவி அந்த இல்லத்தைக் கடந்து வெகு தூரத்துக்கப்பால் போய்ப் புழுதிக் கூடாரத்தில் மறைந்தது.

உத்தமசீலியால் இந்த ஏமாற்றத்தைத் தாளவே முடிய வில்லை. கண்கள் கலங்கி இருண்டன. கால்கள் தள்ளாடித் துவண்டன. உலகமே சுழல்வது போன்ற பிரமை. மயக்கமுற்ற நிலையில் தட்டுத் தடுமாறிக் கீழே சாயப்போன அவளை மென்மையான இரு கரங்கள் தாங்கிப் பிடித்தன.

அவள் மெல்லக் கண் திறந்து பார்த்தாள். தெப்பமாக நனைந்த ஆடையணி மணிகளுடன் வெடவெடத்துக் கொண்டிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சிதான் அவளை அப்படி அன்புடன் தாங்கிப் பிடித்துக்கொண்டு நின்றிருந்தாள்.

# 131

## நீரில் கோலம்

'காஞ்சியிலிருந்து பெருவளநல்லூருக்குப் போய் அங்கிருந்து திருப்பருத்திக்குன்றத்துக்கு வந்த பல்லவ மன்னர், இறுதியில் என்னைப் பார்க்காமலேயே புறப்பட்டுப் போய் விட்டாரே, ஏன்?'

அறுத்துப் போட்ட பசலைக் கொடிபோல் கட்டிலில் துவண்டு சாய்ந்து கிடந்த உத்தமசீலியின் வெதும்பிய மனத்தில் இந்த ஒரே கேள்வியே திரும்பத் திரும்பப் புகைந்து கொண்டிருந்தது.

'என்னைப் பார்க்கத்தானே அவர் இங்கு வந்தார்? அப்படி வந்தவர் சமண சங்கத் தலைவரைமட்டும் பார்த்து விட்டுப் போய்விட்டதன் காரணம் என்ன? ஒருகால் நான் இவ்வூருக்கு வந்திருக்கும் சேதி அவருக்குத் தெரியாதோ? நிச்சயமாக அவ்வாறு நினைக்க முடியாது. ஏனென்றால் சேதியக் கலைஞரின் தாற்காலிகமான இந்த இல்லத்தில் நானும் சோழ இளவரசியும் வந்து தங்கியிருக்கிறோம் என்ற விவரத்தைச் சமந்தபத்திரர் அவரிடம் சொல்லியேயிருப்பார். அவர் சொல்ல மறந்திருந்தாலும், என்னுடைய பணியாள னான நாகோதரனைப் பார்த்து நலம் விசாரித்த போதாவது நான் இங்குதான் இருக்கிறேன் என்பதை அவரால் உடனே ஊகித்துக்கொண்டிருக்க முடியுமே!'

அவள் சட்டென்று எழுந்து உட்கார்ந்து பரபரப்புடன் தன்னையே ஏற இறங்கப் பார்த்துக் கொண்டாள்.

'பல்லவ மன்னர் என்னை மறந்துவிட்டிருப்பாரோ? அல்லது என்னைப் பார்க்கவேண்டும் என்பது அத்தனை அவசியமாக இப்போது அவருக்குப் படவில்லையோ? அதனால்தான் இந்தப் பக்கமே திரும்பாமல் அவர் போய் விட்டாரோ?'

உத்தமசீலியின் பூவுடல் அதிர்ந்து நடுங்கியது. பொங்கி வந்த துயரத்தை அடக்கமாட்டாமல் முகத்தைப் பொத்திக் கொண்டு விம்மிப் பொருமிய அவள், அடுத்த அறைக் கதவு திறக்கப்பட்ட சப்தம் கேட்டு அவசரமாகத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

'என்ன பைத்தியக்கார எண்ணம் இது? என் இதய மன்னராவது, என்னை மறப்பதாவது! அவர் மறப்பார் என்று நான் மறந்தும் நினைக்கலாமோ? முன்னைப்போல் அவர் நினைத்த இடத்தில் நினைத்த நேரத்தில் வந்து என்னைச் சந்தித்துவிட முடியுமா? சகல அதிகாரங்களும் பெற்ற ஒரு மாபெரும் தேசத்து மன்னர்தான் என்றாலும் அவருக்கும் எத்தனையோ கட்டுத் திட்டங்களும் சம்பிரதாயங்களும் இருக்கும் அல்லவா? அரச பதவி என்பதே பிறர் உரிமை களைப் பாதுகாப்பதற்காகத் தனியொரு மனிதன் தன்னுடைய உரிமைகளைப் பறிகொடுப்பது என்பதுதானே? ஒரு சாதாரண குடிமகனுக்கு மன்னன் விதிக்கும் சட்டதிட்டங் களை அநுசரித்து நடக்கவேண்டிய கட்டாயம் இருந்தாலும் அவற்றை அவன் மீறிப் போகவும் அதனால் ஏற்க வேண்டிய தண்டனைகளை ஏற்றுக்கொள்ளவும் சுதந்தரம் இருக்கிறது; ஆனால் நாட்டை ஆளும் ஒரு மன்னனுக்கு அம்மாதிரியான சுதந்தரம்கூட இருப்பதில்லை. தண்டனைப் பெற வாய்ப்பில் லாத அவன் தனக்குரிய கட்டுத்திட்டங்களை மீறவும் வாய்ப்பற்றவனாகிவிடுகிறான். இந்த நியதிக்குப் பல்லவ மன்னர் மட்டும் விதிவிலக்காகிவிட முடியுமா? மேலும், தம்முடைய நாட்டைத் தம் புஜபலத்தாலும், தமக்குரிய காதலியைத் தமது மனப் பலத்தாலும் வென்று தேடிக்

கொண்ட அவர், ஊர் அறிய உலகம் அறிய வீராபிஷேக முடிசூட்டுவிழாவும் அதைத் தொடர்ந்து திருமண விழாவும் எடுப்பித்து நடத்தும்பொருட்டு எத்தனையெத்தனையோ ஏற்பாடுகளைச் செய்யவேண்டியவராய் இருப்பார். அத்துடன் ஒரு மிகப் பெரிய சாம்ராஜ்யத்தின் ஆட்சிப் பொறுப்பைப் புதிதாக ஏற்றிருப்பதால் அது சம்பந்தமான அவசர அவசியக் கடமைகளையும் பிரச்னைகளையும் கவனித்து ஆற்ற வேண்டியும் இருக்கும் இவ்வளவுக்கு மிடையே என்னைப் பற்றியும் நினைத்து என்னுடைய நலன்களை அறிவதற்காக இவ்வளவு தூரம் வந்துபோய் இருக்கிறாரே, இது ஒன்றே அவர் என்மீது வைத்திருக்கும் பேரன்புக்கு உறுதியான சான்று அல்லவா? என்னை அவரோ நானோ இனி நேரில் சந்தித்துக் கொள்ளவேண்டிய அவசியம்தான் என்ன? எங்களுக்குள் எள்ளத்தனை இடை வெளியாவது இருந்தால்தானே அம்மாதிரி சந்திப்புச் சம்பிரதாயத்தையெல்லாம் நாங்கள் எதிர்பார்க்கலாம்? என்னில் அவரும் அவரில் நானும் ஐக்கியப்பட்டு, நானே அவராகவும் அவரே நானாகவும் ஒருமித்து, ஒரு கோடி யுகமானாலும் பிரிக்க முடியாத உறவு பூண்டுவிட்டபின், அவரை நானோ அல்லது என்னை அவரோ சந்தித்துக் கொண்டால் என்ன, சந்திக்காமல் போனால்தான் என்ன?'

அவள் மனம் பளிச்சென்று தெளிவடைந்தது. உடலில் ஒரு புதிய தென்பும் ஊற்றெடுத்தது. இனிய கனவு கண்டு எழுந்தவள்போல் இமைகளைத் தட்டி எழிலார்ந்த புன்னகை பூத்தவாறு எதிரே தன்னுடைய பார்வையை நிமிர்த்தினாள்.

ஈர ஆடைகளைக் களைந்துவிட்டுப் புத்தாடை புனைந்து கொண்டு அப்போதுதான் அவ்வறைக்குள் பிரவேசித்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சி வியப்புடன் விழிகளை மலர்த்திக் கதவருகிலேயே தயங்கி நின்றாள். சற்றுமுன் தாளமுடியாத அதிர்ச்சியாலும் துயரத்தாலும் மயக்கமுற்றவள்போல் கட்டிலில் சாய்ந்து கிடந்த உத்தமசீலி

இப்போது உற்சாகமும் மகிழ்ச்சியுமாக இருப்பதைக் கண்டே அவள் அவ்வாறு வியந்துபோய் நின்றாள்.

"சோழ இளவரசிக்கு இப்போதுதான் என் நினைவு வந்ததோ?" என்று மெல்லச் சிரித்துக் கேட்டுக்கொண்டே அவளை நோக்கிச் சென்ற உத்தமசீலி குறும்பும் குதூகலமுமாக அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள். அன்றொரு நாள் பெருவளநல்லூரிலிருந்து பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளிக்குப் பயணமாகிப் போனபோது ஆலம்பாக்கம் அநந்தமதியின் இல்லத்துக்கு எதிரே சிவிகையை நிறுத்தி இளங் கோப்பிச்சியிடம் இளநீர் வாங்கிப் பருகிய அந்தப் பழைய சம்பவம் அவள் நினைவில் வந்து நின்றது. அன்று முதன் முதலாக அவளைப் பார்த்தபோது அவளுடைய அப்ராக்ருத சௌந்தரியத்தில் தானே மயங்கிப் போனதையும் இப்போது நினைத்துக்கொண்டாள். ஆனால் இன்றோ அவளது தோற்றம் அடியோடு மாறிவிட்டிருந்தது. ஆழ்ந்த திலேகமும், ஓயாத சிந்தனையும், உள்ளார்ந்த கலவரமும், அவநம்பிக்கையும், ஆசாபங்கமும், வெறுப்பும், விரக்தியும் ஒரு நிரந்தரத் தன்மையுடன் அவளது முகத்தில் நிலவிக் கிடந்ததாலேயே அவள் அப்படி இளைத்து வெளுத்துப் பொலிவிழந்து காணப்பட்டாள். இன்று மட்டுமா இப்படிக் காட்சி யளிக்கிறாள்? இல்லை; ஆலம்பாக்கத்திலிருந்து வந்த நாள்முதல் இதேபோன்ற நிலையில்தான் அவள் இருந்து வருகிறாள். இதற்குக் காரணம் என்ன?...

"நான் கேட்கவேண்டிய கேள்வியை நீங்கள் கேட்டு விட்டீர்களே! நல்ல வேடிக்கைதான்!" என்று வறண்ட சிரிப்புடன் சொன்ன இளங்கோப்பிச்சி, தன்னையே இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த உத்தமசீலியின் கரங்களை மெல்லப் பற்றினாள்.

"ஓகோ!" என்று பொய்க் கோபத்துடன் தலையாட்டிக் கொண்ட உத்தமசீலி, "ஆமாம்; இன்று காலை ஏன்

வழக்கத்துக்கு மாறாக என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் தனியே நீராடப் போனாய்?" என்று கேட்டாள்.

ஒருகணம் தயங்கிய இளங்கோப்பிச்சி, "நீங்கள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தீர்கள். அதனால்தான்...'' என்று இழுத்தாள்.

"சரி; அப்படியே இருக்கட்டும். ஆனால் ஆற்றிலே நீராடி வரப் போனவள் இவ்வளவு நேரம் கழித்து வந்திருக்கிறாயே, அதற்குக் காரணம் என்னவாம்?"

"நீங்களும் நீராட வருவீர்கள் என்று எண்ணி உங்கள் வருகையை எதிர்பார்த்து ஆற்றங்கரையிலேயே காத்துக் கொண்டிருந்தேன்."

உத்தமசீலி இதைக் கேட்டுக் கலீரெனச் சிரித்தாள். "பொய்! முழுப்பொய்!" என்று கூறி மீண்டும் சிரித்த அவள், "இளங்கோப்பிச்சி! உன்னைவிட நான் இரண்டு வயது மூத்தவள். என்னை உன்னால் ஏமாற்ற முடியாது" என்றாள் குறும்பாகக் கண்களைச் சிமிட்டி.

"ஒப்புக் கொள்கிறேன், இளவரசி! ஆனால் இத்தனை நாட்களாக என்னைப் பிரிந்து ஒரு கணமும் தனியே இருக்க விரும்பாத நீங்கள் இன்று மட்டும் என் நினைவே இல்லாமல் இருந்து விட்டீர்களே, ஏன்?"

"இல்லை; ஒவ்வொரு விநாடியும் உன் வரவை எதிர்பார்த்து நான் தவித்த தவிப்பு எனக்கல்லவா தெரியும்?"

"அப்படித் தவித்துக் கொண்டிருந்தது மெய்யானால் என்னைத் தேடிக் கொண்டு ஆற்றங்கரைக்கு ஓடி வந்திருப்பீர்களே!"

"வருவதற்குத்தான் நினைத்தேன். ஆனால்..."

"பல்லவ மன்னர் இவ்வூருக்கு விஜயம் செய்திருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டதும் என்னை அடியோடு மறந்து விட்டீர்கள், இல்லையா?"

உத்தமசீலி வெட்கத்துடன் தலை குனிந்தாள்.

ஏதோ சிந்தனையில் சிறுபொழுது மௌனமாயிருந்த இளங்கோப்பிச்சி, "அது சரி, இளவரசி! இவ்வளவு தூரம் வந்த பல்லவ மாமன்னர் உங்களைப் பார்க்காமலே போய் விட்டாரே, ஏன்?" என்று கேட்டாள்.

நாகோதரனின் வாயிலாகத் தான் கேள்விப்பட்ட விவரங்களை அவளிடம் சுருக்கமாகக் கூறிய உத்தமசீலி, "அவருக்கு இப்போது எவ்வளவோ அலுவல்கள் இருக்கும். என்னுடைய நலன்களைப் பற்றிச் சமணத் தலைவர் சமந்த பத்திரரிடம் விசாரித்துத் தெரிந்து கொண்டதோடு திருப்திப்பட்டுக் கொண்டு அவசரமாகப் போய்விட்டிருப் பார் என்று நினைக்கிறேன்" என்றாள் சிறுபிள்ளைத்தனமான பெருமிதத்துடன்.

"சீ... சளுக்கியத் தளபதியின் முடிவு அப்படியா ஆயிற்று?" என்று எங்கோ பார்த்தவாறு மெல்லிய குரலில் முணுமுணுத்த இளங்கோப்பிச்சி சட்டென்று திரும்பி, "என்ன சொன்னீர்கள், இளவரசி? பல்லவ மன்னர் உங்களைப் பார்க்காமல் போனதற்குக் காரணம் அவருடைய அவசர அலுவல்கள் தாம் என்றா நீங்கள் நினைக்கிறீர்கள்?' என்று விஷமச் சிரிப்புடன் வினவினாள்.

"ஆமாம்; தமது வீராபிஷேக முடிசூட்டு விழாவையும் திருமண வைபவத்தையும் விரைவில் நடத்தி முடிக்க வேண்டிய பெரும் பொறுப்பு அவருக்கு உண்டு அல்லவா?'.

இளங்கோப்பிச்சி அவளை ஆழ்ந்த அநுதாபத்துடன் பார்த்துப் பெருமூச்செறிந்துவிட்டு, "அப்படியாயின் பல்லவ நாடு விடுதலைப் போரில் வெற்றியடைந்து இரண்டு மாத காலமாகியும் அவ்வெற்றி விழா வைபவங்கள் இதுவரை நடைபெறாமல் இருப்பதற்கு நீங்கள் என்ன காரணம் கற்பித்துக் கொண்டிருக்கிறீர்கள், இளவரசி?'' என்று கேட்டாள்.

"அரசாங்கக் கணிகர்களும் அதிகாரிகளும் அந்த விழா வைபவங்களை நடத்துவதற்கான மங்கல நாட்களைச் சற்றுப்

*பின் தள்ளி நிர்ணயித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன்! இதைத் தவிர வேறு என்ன காரணம் இருக்க முடியும்?"*

*"அதாவது, இன்றோ நாளையோ இன்னும் சில தினங்களிலோ பல்லவ மாமன்னரின் பரிவாரங்கள் வந்து உங்களைக் காஞ்சிக்கு அழைத்துச் செல்லப் போகின்றன என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள், அப்படித் தானே!"*

*"இதிலென்ன உனக்கு சந்தேகம் வந்துவிட்டது?"*

*இளங்கோப்பிச்சி தன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு ஒரு விநாடி மௌனமாயிருந்தாள். "பாவம், ஆந்திர இளவரசியாருக்கு இந்நாட்டில் இப்போது என்ன நடக்கிறதென்றே தெரியாது போலும்! அது தெரிந்திருந்தால் இத்தனை இனிய கற்பனைகளில் சஞ்சரித்துக் கொண்டிருக்க மாட்டார்."*

*உத்தமசீலி இதைக் கேட்டுப் பெரிதும் அதிர்ச்சி யடைந்தவளாய் அவளைப் பரப்பரப்புடன் பார்த்து ஏதோ கேட்க வாயெடுத்தவள், வெளியே யாரோ வரும் காலடி ஓசை கேட்டுச் சாளரத்து வழியாக எட்டிப் பார்த்தாள்.*

*அங்கே, திரமிள சமண சங்கத் தலைவர் சமந்த பத்திரரும் அவருக்குப் பின்னால் வேறு இரு சமணத் துறவிகளும் வந்து கொண்டிருந்தார்கள்.*

*'என்றைக்குமில்லாத அதிசயமாக இன்று ஏன் இவர்கள் இங்கு வருகிறார்கள்? ஒருகால் பல்லவ மன்னர் எனக்கு ஏதேனும் சேதி அனுப்பிவிட்டுப் போயிருப்பாரோ? அதைத் தெரிவிக்கத்தான் இவர்கள் என் இல்லம் நாடி வருகிறார்களோ?'*

*திகைத்து நின்ற உத்தமசீலி அந்தத் துறவிகளை வரவேற்பதற்காக வெளி முற்றத்தை நோக்கி விரைந்தாள்.*

# 132

## சல்லேகனை

"ஆந்திர இளவரசியார் நலம்தானே?" என்று அன்பும் கனிவுமாகக் கேட்டுக் கொண்டே முற்றத்துத் தாழ்வாரத்தில் வந்து நின்றார் சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரர். அவருக்குப் பின்னால் அவ்விரு இனத்துறவிகளும் தலை குனிந்தவாறு நின்றனர்.

"வணக்கம், அடிகளே! தங்கள் அன்பாசியால் நன்னலமாகவே இருக்கிறேன்" என்று பணிவுடன் கூறிக் கரம் குவித்த உத்தமசீலி ஒரு தூணின் ஓரமாகப் போய் ஒதுங்கி நின்றாள். சமணத் துறவிகள் பிறர் இல்லங்களில் அமர்ந்து பேசமாட்டார்கள் என்ற விவரம் தெரிந்தவளாதலால் அவரை இருக்கையில் அமரச் சொல்லி உபசரிக்கவில்லை.

"இளவரசியாரைப் பார்த்து ஒரு மாதத்துக்குமேல் ஆகிறது. சங்கப் பள்ளியில் நடைபெறும் வாராந்திர ஞானோப தேசக் கூட்டங்களுக்குகூட அவர் ஏனோ வருவதில்லை" என்று புன்முறுவலுடன் பேச்சை ஆரம்பித்தார் சமந்த பத்திரர்.

உத்தமசீலியின் மனம் 'திக், திக்' என்று அடித்துக் கொண்டது. அவள் மௌனமாகத் தலைகுனிந்து நின்றாள்.

"சற்று முன்னதாகவே நாங்கள் இங்கு வரப் புறப்பட்டோம். அந்தச் சமயம் வேறோர் அவசர அலுவலைக் கவனிக்கவேண்டி நேர்ந்துவிட்டது" என்று அமைதியாகச் சொன்ன சமந்தபத்திரர் மேலும் கூறினார்: "நம் சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் தமது இல்லத்தை நிர்மாணித்து

வரும் ஊரான கூரம் கிராமத்தில் 'பரமேசுவர தடாகம்' என்பதாக ஓர் ஏரி இருக்கிறது. அந்த ஏரிக்கு மேலண்டைப் புறம் எங்கள் சங்கத்துக்குச் சொந்தமான ஒரு சிறிய ஆதுர சாலை உண்டு. சமணப் பெண் துறவிகளால் பெண் மக்களுக்கெனப் பிரத்தியேகமாக நடத்தப்பட்டு வரும் மருத்துவ விடுதி அது. நாகமதி கௌத்தியார் என்பவர் அவ்விடுதியின் தலைவர். அந்த அம்மையாருக்கு வயது தொண்ணூற்றைந்து ஆகிறது. அவர் மூப்பின் காரணமாகத் தம் பொறுப்பை வேறோர் ஆர்யாங்கனையிடம் ஒப்படைத்து விட்டுத் தாம் சல்லேகனை எனப்படும் உண்ணாநோன்பினை மேற்கொண்டு உயிர் வாழ்வதைத் துறக்க முடிவு செய்திருப்பதாக எனக்குச் சேதி வந்தது. அவருக்கு என் அநுமதியையும் இறுதி உபதேசங்களையும் ஒரு குரத்தியார் மூலம் வழங்கி அனுப்பிவிட்டு நேரே இங்கு வருகிறேன்."

சமந்தபத்திரர் சொன்ன இந்த விவரங்களை வெகு கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள் உத்தமசீலி.

உள்ளறையின் சாளரத்து ஓரம் நின்று கொண்டிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சி மெல்ல வெளியே வந்து சமந்தபத்திரரை வணங்கிவிட்டுச் சற்றுத் தள்ளிப் போய் நின்றுகொண்டு, "அடிகளே! சமண சமயத்தின் புனித நோன்பான சல்லேகனையைப் பற்றி நான் சிறிதளவேதான் தெரிந்து கொண்டிருக்கிறேன். அந்த உயரிய நோன்பின் முழு விளக்கத்தையும் தயைசெய்து தெரிவிப்பீர்களா?" என்று வினவினாள். அவள் சைவ சமயத்தில் தீவிர பற்றுக் கொண்டவள் என்றாலும் சமண சமய நெறிமுறைகளைத் தெரிந்து கொள்வதில் ஒரு தனி ஆர்வம் காட்டுவது வழக்கம்.

சிறுபொழுது சிந்தனையில் ஆழ்ந்து நின்ற சமந்தபத்திரர் அவளை இதமாக ஏறிட்டுப் பார்த்துப் புன்முறுவலுடன் சொன்னார்; "சோழ இளவரசியார் எங்கள் சமயக் கொள்கைகளை அறிந்து கொள்வதில் காட்டும் ஆர்வம் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. எந்தச் சமயத்தைச்

சார்ந்தவர்களும் பிற சமயக் கொள்கைகளை ஓரளவாவது தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். அப்படித் தெரிந்து கொள்வதால், தாம் சார்ந்த சமயத்தின் மீது மிகுந்த நம்பிக்கையும் பற்றுதலும் ஏற்படுவதோடல்லாமல் வீணான வேற்றுமை உணர்ச்சிகளும் ஏற்றத் தாழ்வு எண்ணங்களும் அகன்று, சமயப் பொறை காக்கும் சகிப்புத் தன்மையும் சமரச மனப்பான்மையும் ஏற்பட ஏதுவாகும். சரி; சல்லேகனையைப் பற்றிச் சுருக்கமாய்ச் சொல்கிறேன். கேளுங்கள், இளவரசி! இடையூறு, ஒழிவில் நோய், மூப்பு இவை வந்தால் கடை துறத்தல் சல்லேகனை. அதாவது, தாள முடியாத மனவேதனையைத் தருகிற இடையூறு, தீராத நோய், வயது மூப்பு முதலானவை உண்டாகும்போது சல்லேகனை செய்து உயிர் துறக்கலாம். பஞ்சத்தால் வாடும் போதும் இந்த உண்ணா நோன்பை ஏற்று உயிரை விடலாம். சல்லேகனை செய்வோர் தர்ப்பைப் புல்லின் மேல் வட திசை நோக்கி அமர்ந்து சாகிற வரையில் உணவு கொள்ளாமல் இருக்க வேண்டும். அந்த நாட்களில் எதையும் நினைக்காமலும், எதன் மேலும் விருப்பம் கொள்ளாமலும் இருத்தல் வேண்டும். மறு பிறவியில் அரசனாகவோ, அரசியாகவோ, பெருஞ் செல்வர்களாகவோ, தேவராகவோ பிறக்க வேண்டும் என்று ஆசைப்படக் கூடாது. உண்ணாமலிருப்பதால் ஏற்படும் உடல் வேதனை விரைவில் நீங்க வேண்டுமென்றும் நினைக்கக் கூடாது; முயற்சியும் செய்யக்கூடாது. தூய எண்ணத்துடன் வீடு பேறு ஒன்றையே நோக்கமாகக் கொள்ள வேண்டும். இவையே வடக்கிருத்தல் நோன்புக்கான முக்கிய நெறிமுறைகள்."

"அடிகளார் தந்த விளக்கத்துக்கு நன்றி! ஆயினும் ஒரு சிறு சந்தேகம்; நாமே வலிந்து சென்று உண்ணா நோன்பை மேற்கொண்டு உயிர் துறப்பது தற்கொலைக்கு ஒப்பான செயல் அல்லவா? அதை எப்படி ஓர் அற நெறியாகக் கொள்ள முடியும்?"

"சோழ இளவரசியார் தமிழ்க் காப்பியங்களை நன்கு பயின்றவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். எனவே, நீலகேசியிலிருந்து ஒரு பாடலை அவருக்கு நினைவுபடுத்தி விட்டால் அவரது வினாவுக்குச் சரியான விடை கிடைத்து விடும். அதாவது, **'அழிவுகாலத் தறத்தொடாய் பாடெலாம் ஒழியல் வேண்டுமென் தொற்றுமை தாங்கொளீஇ வழியுங் காட்டுமம் மாண்புடையார் கண்மேல் பழியுங்கிட்டுரைத்தாற் பயனென்னயோ?'** என்பதே அந்தப் பாடல்!"

திருப்தியுடன் தலையசைத்த இளங்கோப்பிச்சி ஒரு விநாடிக்குப் பின், "ஆமாம், அடிகளே! சல்லேகனை செய்யும்போது வடக்குத் திசை நோக்கி அமர வேண்டு மென்பதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டாள்.

"சமணர்களுக்கு வடதிசை ஒரு புண்ணிய திசையாகும். காரணம், எங்கள் புனிதத் தலைவர்களான தீர்த்தங்கரர்கள் அனைவரும் வடக்கே வீடுபேறு அடைந்தவர்கள். முதல் தீர்த்தங்கரரான ஆதிநாதர் எனப்படும் ரிஷபதேவர் கயிலாய மலையில் வீடுபேறு அடைந்தார். நேமிநாத தீர்த்தங்கரர் வட பாரதத்தின் கிர்நார் என்னும் நகரிலே வீடு பேறு பெற்றார். எனவேதான் சல்லேகனை நோன்புக்கு வடக்கு நோக்கி அமரும் வழக்கம் கைக்கொள்ளப்படுகிறது."

"வடக்கிருத்தல் நோன்பைச் சமணர் மட்டும்தான் மேற்கொள்ள வேணுமா அடிகளே?"

"இல்லை; சங்க காலத் தமிழகத்தில் மற்ற சமயத்தவரும் இந்த நோன்பை மேற்கொண்டிருக்கிறார்கள். ஏன்? உங்கள் மூதாதையரில் ஒருவரான கோப்பெருஞ் சோழர் வடக்கிருந்து வாழ்வை முடித்துக் கொண்டவர்தாம் என்பதும் உங்களுக்குத் தெரியாதா இளவரசி! அந்த மன்னரின் ஒப்பற்ற நண்பரான புலவர் பிசிராந்தையாரும், பொத்தியாரும்கூட வடக்கிருந்து உயிர் துறந்தவர்தாமே? வெண்ணிப் பறந்தலையில் கரிகால் சோழப் பெருவளத்தானோடு போரிட்டு முதுகில் புண்பட்ட சேரமன்னன் பெருஞ் சேரலாதன் அந்த அவமானத்தைத்

தாளாமல் வடக்கிருந்து உயிர்விட்டான் என்பதையும் அறிந்திருப்பீர்களே! பாரி மன்னன் இறந்த பிறகு அவர் பிரிவைத் தளாாத புலவர் கபிலரும் பட்டினி நோன்பை ஏற்று இறந்தவர்தாம்."

"மிக்க நன்றி அடிகளே!" என்றவாறு மெல்லப் பின்னால் பார்த்துக் கொண்டாள் இளங்கோப்பிச்சி.

ஏதோ முக்கியமான சேதி சொல்ல வந்த சமந்த பத்திரரின் கவனம் வேறு திசையில் திரும்பிவிட்டதே என்ற உள்ளத் துடிப்புடன் தவித்துக்கொண்டு நின்ற உத்தமசீலி அவரைப் பரப்பரப்போடு நோக்கினாள்.

# 133

## ஜனநாயகன்

"சிந்திப்பதற்கு இனி இடமே இல்லை, அரசே! ஏனென்றால் நாம் எதிர்பார்த்ததைவிட நிலைமை வெகு வேகமாகச் சீர்குலைந்து போய்க் கொண்டிருக்கிறது."

தம்மை மீறிய துடிப்பும் வெடிப்புமாக இவ்வாறு கூறிக் கொண்டே ஆசனத்தைவிட்டு 'விருட்'டென்று எழுந்த பெரும்பிடுகு முத்தரையர் பொறுமையிழந்த குரலில் மேலும் படபடத்தார்: "அரசாங்கத்தின் அன்றாட அலுவல்களும் உத்தரவுகளும்கூடச் சரிவர செயல்பட முடியாத அளவுக்கு நிலைமை மோசமடைந்துவிட்டது. உயர்தர ஆளுங்கணத்தார் முதல் சிறுதர வாரியங்கள்வரை மன்னரவர்களின் திருமண முடிவை ஆதரிப்போர் ஒரு கட்சியாகவும் எதிர்ப்போர் ஒரு கட்சியாகவும் பிளவுபட்டு ஒருவரோடு ஒருவர் மனவேறுபாடு கொண்டு தத்தமது கடமைகளில் நாட்டம் செலுத்தாமல் பிணங்கி நிற்பதாலேயே அத்தகைய ஸ்தம்பித நிலை உருவாகியிருக்கிறது. சிற்றூர்களிலும், சிறுசிறு குடும்பங் (பிரிக்கா)களிலும் மட்டுமே முதலில் தலைதூக்கிய இந்தப் பிளவு நிலைமை மெல்ல மெல்லப் பேரூர்களிலும் பெரிய பெரிய நகரங்களிலுமாகப் பரவி இப்போது நாடே இரண்டுபட்டு நிற்க ஆரம்பித்துவிட்டது. இதனால் இது காறும் அடங்கியொடுங்கிக் கிடந்த சமூக விரோத சக்திகள், சைவ சமணப் பூசல்களைக் கிளப்பிவிட்டு மக்களிடையே வீணான விரோத குரோதங்களை வளர்க்கத் தொடங்கிவிட்டன. தினந்தினம் இது போன்ற கலவரங்களும், குழப்பங்களும், சண்டை சச்சரவுகளும் ஆங்காங்கே நடை பெறுவதாகச்

சேதிகள் வந்த வண்ணம் இருக்கின்றன. நேற்றிரவு இந்தத் தலைநகரான காஞ்சியின் அறப்பணச் சேரித் தெருவிலும், சாத்தல் குட்டைத் தெருவிலும்கூடப் பயங்கரக் கலகம் ஒன்று மூண்டு அடங்கியதாகக் கேள்விப் பட்டேன். இப்படி நாடே அல்லோலகல்லோலப்பட்டுக் கொண்டிருந்தாலும் நான் அதிகமாகக் கவலைப்படுவது ஒன்றே ஒன்றுக்காகத்தான். அதாவது, நாட்டு மக்களிடையே ஏற்பட்டிருக்கும் இந்தப் பிளவு நிலை நம் படை வீரர்களிடையேயும் புகுந்து அவர்களுடைய ஒற்றுமைக்கும் கட்டுப்பாட்டுக்கும் உலை வைத்துவிடுமோ என்றுதான் பெரிதும் அஞ்சுகிறேன். இவ்வளவுக்கும் மூல காரணஸ்தர்கள் அந்தப் பழையாறைச் சோழரும், அவரது இழுப்புக்கெல்லாம் இழுபட்டுக் கொண்டிருக்கும் இளவரசர் கோவிந்தவர்மருமேதாம்.”

திருப்பருத்திக்குன்றத்திலிருந்து காஞ்சிக்கு வந்த நாள் முதலே பேசும் சக்தியை இழந்த ஊமைபோல் யாரிடமும் எவ்விதப் பேச்சும் வைத்துக்கொள்ளாமல், எந்த அவசர அலுவல்களிலும் கவனம் செலுத்தாமல், சோகமே வடிவாய் — சஞ்சலமே உருவாய் — சதா தனிமையிலும் சிந்தனையிலுமாக மூழ்கிக் கிடந்து இன்றுதான் இந்த ஆலோசனைக் கூடத்துக்கு வந்து பிரமை பிடித்தவன்போல் உட்கார்ந்திருந்த பரமேசுவர வர்மன், இவ்வளவு நேரம் தாம் சொன்ன விவரங்களைக் கேட்ட பிறகும் அவற்றால் எத்தகைய சலனமோ பரபரப்போ அடையாமல் அமைதியாக இருப்பதைக் கண்டு உள்ளூற ஆத்திரம் பொங்கியவராய்த் தமது குரலை உயர்த்தி மேலும் படபடப்பாகப் பேசினார் முத்தரையர்:

“நமக்குள்ளிருந்தே நம் எதிரிகளாக முளைத்திருக்கும் அந்தப் பழையாறைச் சோழரும், கோவிந்தவர்மரும் இந்நாள்வரை நமக்கு எதிராக நாட்டு மக்களிடையே சொல்லி வந்த விஷயம் வேறு. சமண சமயத்தைச் சார்ந்தவரான ஆந்திர இளவரசி உத்தமசீலி பல்லவ நாட்டின் பட்டத்து ராணியானால் வெகு விரைவிலேயே தமிழகத்திலிருந்து சைவம் அழிக்கப்பட்டுவிடும் என்றும், ஆகவே அவரைப்

பல்லவ மன்னர் திருமணம் செய்து கொள்ள ஒருபோதும் விடக்கூடாது என்றும் சொல்லி வந்த அவர்கள், அவ்விஷமத்தனமான பிரசாரத்துக்கு மேலும் வலிவு தரும் வகையில் இப்போது ஒரு புதிய விஷயத்தையும் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். சளுக்கிய எதிரிகளால் தம் இல்லத்தை இழந்து தவித்துக்கொண்டிருந்த நம் மதிப்புக்குரிய சேதியக் கலைஞர் பரவாதிமல்லருக்குத் தாங்கள் கூரம் கிராமத்திலே ஓர் இருப்பிடம் அமைத்துக் கொள்ள நிலமும் பொருளும் முற்றூட்டாக அளித்தீர்கள் அல்லவா? அந்த முற்றூட்டுச் சாஸனத்தை அவர் துஷ்பிரயோகம் செய்து அரண்மனை போன்ற மாபெரும் மாளிகையொன்றை இரகசியமாகக் கட்டி வருகிறார் என்றும், பல்லவ நாட்டைச் சளுக்கியர்கள் மீண்டும் பறித்துக் கொள்வதற்கான சதி வேலைகள் செய்வதற்கு உதவும்படியாக இருக்கவே அவர் அந்த மாளிகையை, அமைத்து வருகிறார் என்றும், அவ்விவரத்தையறியாமல் பல்லவ அரசாங்கம் அவருக்கு ஏராளமான பொன்னும் பொருளும் அளித்து வருகிறது என்றும் அவர்கள் இப்போது தீவிரப் பிரசாரம் செய்து வருகிறார்கள். இதிலே இன்னொரு வேடிக்கை என்னவென்றால், இந்நாட்டுக்குப் பேராபத்து விளைவிக்ககூடிய அந்தப் பெருஞ் சதிக் காரியத்தில் ஆந்திர இளவரசி உத்தமசீலியாருக்கும், சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரருக்கும், சந்திரலேகைச் சிற்றரசனான எனக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு என்றும், பல்லவ மன்னருக்கு எதிராக நாங்கள் திட்டமிட்டே பரவாதி மல்லர் மூலம் அந்த மாளிகையை இரகசியமாக நிர்மாணித்து வருகிறோம் என்றும், இந்தத் துரோகச் செயலைத் தெரிந்து கொள்ளாமல் ஆந்திர இளவரசியின் காதலில் அரசர் மயங்கிக் கிடக்கிறார் என்றும் அவர்கள் நாக் கூசாமல் பேசி வருகிறார்கள். இத்தகைய விபரீதப் பிரசாரத்தைக் கேட்டுத்தான் நாட்டு மக்கள் அப்படிக் கொந்தளித்துக் குமுறிக் கொண்டிருக் கிறார்கள். இதன் முடிவு என்ன ஆகும் என்பதை என்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை...”

இவ்வளவு நேரம் எழுதி வைத்த சித்திரம்போல் அமர்ந்திருந்த பரமேசுவரவர்மன் இந்த விவரத்தைக் கேட்டு உள்ளூறத் திகில் அடைந்தவனாய்ப் புருவங்களை நெரித்துக் கொண்டு மெல்லத் தலைநிமிர்ந்து அவரைப் பார்த்தான்.

"அந்தப் பொறாமைக்காரர்களின் இப்புதிய பிரசாரத்தில் ஏதேனும் உண்மை இருக்குமோ என்று சந்தேகப்பட்ட நான் அதனை அறிய நம் இளங்காரிக் குடையானை உடனடியாகக் கூரத்துக்கு அனுப்பி வைத்தேன். அவன் வந்து சொன்ன சேதியைக் கேட்டு எனக்கே ஆச்சரிய மாகிவிட்டது. ஏனென்றால், துரதிர்ஷ்டவசமாக அந்த விஷமக்காரர்களின் கூற்றிலும் ஓரளவு உண்மை இருக்கத்தான் செய்கிறது..." என்று அடைத்த குரலில் சொன்ன முத்தரையர் முகத்தைச் சுளித்துக் கொண்டு மேலும் கூறினார்: "ஆம், அரசே! கூரத்தில் நிர்மாணமாகி வரும் பரவாதிமல்லரின் இல்லத்தில் ஏதோ ஒரு மர்மம் இருப்பதாகவே தோன்றுகிறது. காரணம் அதை அவர் யாருமே பார்க்க முடியாதபடி கூரைப் பந்தல் போட்டு மறைத்துக் கொண்டு அத்தனை இரகசியமாகக் கட்டி வருகிறாராம். நமது நம்பிக்கைக்கு உரிய இளங்காரிக் குடையானைக்கூட அந்த மாளிகையைக் காண அனுமதிக்க வில்லையாம்."

விநோதமான சேதியொன்றைக் கேள்விப்பட்டவன் போல் மெல்லத் தலையசைத்துப் புன்னகை பூத்துக் கொண்டான் பரமேசுவரவர்மன்.

முத்தரையரோ அவனது மௌனத்தைச் சகிக்க மாட்டாதவராய் மீண்டும் படபடத்தார்: "இதுதான் இப்படியென்றால் அந்தப் பழையாறைச் சோழர் இப்போது இன்னொரு விஷயம் பற்றியும் மக்களிடையே தவறான பிரசாரம் செய்து வருகிறார், அரசே! சளுக்கியத் தளபதி வில்வேலி தம் கடைசிக் காலத்தில் மனம் திருந்தித் தங்கள் மடியில் உயிர் நீத்ததையும், அவரைத் தாங்கள் மன்னித்து மிகுந்த மரியாதையுடன் தங்கள் கையாலேயே ஜலசமாதி செய்ததையும் எப்படியோ தெரிந்து கொண்டு, தங்களின்

அந்தச் செயல் நாட்டுக்கே பெரிய அவமானத்தைத் தந்து விட்டது என்றும், அதனால் எதிரிகள் நம்மை எள்ளி நகை யாடுவதுமல்லாமல் நம்முடைய பலவீனமாக அதனைக் கருதி நம்மீது மீண்டும் படை திரட்டிவர வழிகோலிவிடுமென்றும், அப்படித் தாங்கள் நடந்துகொள்ள ஆந்திர இளவரசியின் தூண்டுதல்தான் காரணம் என்றும், ஆகவே அவரை இந்நாட்டைவிட்டு விரட்டியடிக்க வேண்டும் என்றும் அவர்கள் ஊர் ஊராகப் போய்க் கூட்டம் கூட்டிப் பேசி வருகிறார்களாம்.”

இதைக் கேட்ட பரமேசுவரவர்மன் கவலை தேங்கிய இளநகையுடன் அமைதியாகச் சொன்னான்: “மனித இதயத்துக்கு மதிப்புத் தராதவர்கள்தாம் அவ்வாறு பேச முடியும். அதைக் கேட்டு ஆத்திரப்படுகிறவர்களும் அத்தகைய வர்களாகவே இருப்பார்கள். உண்மையில் அந்த மாவீரரை மன்னித்து என் சகோதரராக ஏற்றுக் கொண்டு என்னுடைய கையாலேயே அவருக்கு ஜலசமாதி செய்ததோடு நான் திருப்திப்படவில்லை; அவர் மறைந்த இடத்தில் ஒரு வீரக்கல் நாட்டி அவருடைய நினைவை என்றும் போற்றிக் காக்க வேண்டும் என்றும் விரும்பினேன். ஆனால் சளுக்கியத் தளபதியான அந்த மாமனிதர் என்னளவில்தான் மதிப்பும் மன்னிப்பும் பெற்றாரே தவிர என் நாட்டுமக்களால் மன்னிக்கப்பட்டவராகவில்லை. அவர்களுக்கோ, அவரால் எள்ளத்தனை நன்மையும் விளையவில்லை. மாறாக, மலையளவு தீமைகளே ஏற்பட்டன. அப்படிப்பட்ட ஒரு மனிதருக்கு நினைவுச் சின்னம் எடுப்பிக்க வேண்டுமென்ற என் சுய விருப்பத்தை மக்களின்மேல் சமத்தி நிறைவேற்ற முனைவது எனக்குரிய இராஜாதிகாரத்தை நான் துஷ்பிரயோகம் செய்வது போலாகிவிடுமே என்பதால்தான் அவ்விருப்பத்தைக் கைவிட்டேன். இல்லையென்றால் இதுகாறும் பெருவளநல்லூர் சிற்றாற்றங்கரை மேட்டில் வில்வேலியின் பெயரைத் தாங்கிக் கொண்டு ஒரு வீரக்கல் எழும்பி நின்றிருக்கும்.”

# 134

## என்ன முடிவோ?

**வி**யப்பு மேலிட்டவராய் அவனை விழியசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த முத்தரையர் மெல்லப் பெருமூச்சு விட்டுக் கரகரத்த குரலில் சொன்னார்: "பல்லவ மன்னரின் மனிதாபிமானமிக்க இதயம் இப்படி நினைக்கிறது, பேசுகிறது. ஆனால், சளுக்கிய நாட்டில் நடப்பதோ? தளபதி வில்வேலிக்கு மைந்தனொருவன் இருக்கிறானாம். அவனுடைய பெயரும் வில்வேலிதானாம். அந்த இளைய வில்வேலி தன் தந்தை செய்த துரோகத்துக்குப் பிராயச் சித்தமாகத் தனது குடும்பத்தோடு தீக்குளிக்கப் போவதாக அறிவித்தானாம். அவனுடைய தேச பக்தியையும் இராஜ பக்தியையும் மெச்சிய சளுக்கிய விக்கிரமாதித்தன் அவனையே தன் நாட்டுப் படைகளுக்குத் தளபதியாக நியமித்து விட்டானாம். அதனால் உற்சாகம் தலைக்கேறிய அந்த இளைய வில்வேலி, இங்கே இன்னமும் தலைமறைவாகத் திரிந்து கொண்டிருக்கும் இளவரசன் விநயாதித்தன் வாதாபிக்கு வந்ததும் அவனுடைய தலைமையில் மறுபடியும் பல்லவ நாட்டின்மேல் படையெடுத்துச் செல்லத் திட்டமிட்டு, இப்போதே படைதிரட்டும் வேலையில் மும்முரமாக முனைய ஆரம்பித்துவிட்டானாம். இந்த விவரங்களை நம் ஒற்றனொருவன் அறிந்து வந்து நேற்றுத்தான் என்னிடம் சொன்னான்."

"இதிலே ஒன்றும் அதிசயமில்லை, அன்பரே! இப்படியெல்லாம் நடக்குமென்று நான் ஏற்கனவே எதிர் பார்த்ததுதான்."

“சரி; இதற்குத்தான் மன்னரவர்கள் இவ்வாறு பதில் சொல்லிவிட்டார். ஆனால், பரவாதிமல்லரின் விஷயம்? அவர் ஏன் நம்மிடம்கூட அறிவிக்காமல் தன் இல்லத்தை அத்தகைய இரகசியமாக நிர்மாணித்து வரவேண்டும்? இருக்கிற தொல்லை போதாதென்று அவர் வேறு ஏன் நமக்குச் சங்கடம் ஏற்படும்படி நடந்து கொள்ள வேண்டும்?”

“அவருடைய அந்தச் செயலுக்கு ஏதேனும் நியாயமான காரணம் இருக்கலாம். அவரை நேரில் சந்தித்து விசாரித்த பிறகுதான் அதுபற்றி என் அபிப்பிராயத்தைச் சொல்கிறேன்.”

“பழையாறைச் சோழரும் கோவிந்தவர்மரும் நமக்கு விரோதமாகக் கலகக் கொடி தூக்கியதை நான் முதலில் தெரிவித்தபோதுகூட மன்னரவர்கள் இப்படித்தான் அவர்கள் மீது அபார நம்பிக்கை வைத்துப் பேசினார். அதாவது, அவர்கள் ஏதோ ஒரு நன்மையான இலட்சியத்தை மனத்தில் கொண்டே அவ்வாறு போலியாகப் பிரசாரம் செய்து வருகிறார்கள் என்று சொன்னார்.”

“மனிதர்மேல் மனிதர் நம்பிக்கை கொள்வது தவறு அல்ல, நண்பரே! அது மனிதரிடம் இருக்க வேண்டிய ஒரு நல்ல ।ண்பு. ஆனால், அவர்கள்மீது அன்று நான் வைத்திருந்த அபிப்பிராயத்தை இப்போது அடியோடு மாற்றிக் கொண்டு விட்டேன். உண்மையாகவே அவர்கள் எனக்கு எதிரான நடவடிக்கையில்தான் ஈடுபட்டிருக்கிறார்களென்பதை மாமண்டூர் குகைக்கோயில் அருகில் நடைபெற்ற ஒரு சம்பவத்தை நேரில் கண்ட பிறகு தெரிந்து கொண்டேன். அத்துடன் திருப்பருத்திக்குன்றத்துச் சமணப்பள்ளியில் நான் தங்கியிருந்த தினத்தன்று பழையாறைச் சோழர் அவ்வூருக்கு வந்து என்னைப் பற்றிய எதிர்ப்புப் பிரசாரக் கூட்டம் ஒன்றை நடத்தப் போகிறார் என்று கேள்விப்பட்டே என் இதய ராணி யான உத்தமசீலியைக் கூடச் சந்தித்துப் பேசாமல்— அவளுடைய நலன்களைச் சமந்தபத்திரரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டதோடு திருப்தியடைந்து — காஞ்சிக்குப்

புறப்பட்டு வந்துவிட்டேன். எனவே, இனி அவர்களை நான் நம்பப்போவதில்லை.”

“அப்படியானால் மன்னரவர்கள் இந்த இக்கட்டான நிலைமைக்கு என்ன பரிகாரம் காணப் போகிறார்? பழையாறைச் சோழரின் நோக்கத்துக்கிசைய முடிசூட்டு விழாவை மட்டும் நடத்தப் போகிறாரா? அல்லது அந்தப் பொறாமைக்காரர்களுடையவும், நாட்டு மக்களுடைய ஒரு சாராருடையவும் அச்சுறுத்தலான அபிப்பிராயத்தைப் பொருட்படுத்தாமல் ஆந்திர இளவரசி உத்தமசீலியாரின் கரம் பற்றித் தமது காதல் திருமண வைபவத்தை நடத்தி முடித்துக் கொள்ளப் போகிறாரா?”

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவனாய்ச் சிறுபொழுது மௌனமாயிருந்த பரமேசுவரவர்மன் நெடிய பெருமூச்சு விட்டுக் கொண்டே எழுந்து, “என்னுடைய முடிவுதானே? அதைத் தெரிவிக்கிறேன். வாருங்கள்!” என்று தணிந்த குரலில் கூறியவாறு அரண்மனை மேன்மாடத்தை நோக்கி அமைதியாக நடந்தான். ஆவலும் திகிலுமாக அவனைப் பின் தொடர்ந்தார் முத்தரையர்.

**சா**ந்தி மயமான தோற்றத்துடன் எழிலுற விளங்கிய அந்த விசாலமான அறையில் சிவப் பழமாக ஒரு சிறிய ஆசனத்தில் வீற்று அப்பர் பெருமானின் திருப்பாக்களை மெல்லிய குரலில் வாய்விட்டு ஓதிக்கொண்டிருந்த பல்லவ மகாராணி காடவன்மாதேவி, தம் மைந்தனும், சந்திரலேகைச் சிற்றரசரும் வந்ததையறிந்து வியப்பும் மகிழ்ச்சியுமாக நிமிர்ந்து, “வா, மகனே! வாருங்கள், முத்தரையரே! இப்படி அமருங்கள்!” என்று வாஞ்சைப் புன்முறுவலுடன் வரவேற்றார்.

அன்னையின் பாதங்களைப் பணிவுடன் தொட்டு வணங்கிய பரமேசுவரவர்மன் அவரருகிலேயே முழங்கால் களை மடக்கிப் போட்டு அமர்ந்து கொண்டான்.

மகாராணியாருக்கு வணக்கம் செலுத்திய முத்தரையர் சற்றுத் தள்ளிப் போய் ஒரு தூணில் சாய்ந்து நின்றுகொண்டார்.

சில விநாடி மௌனத்துக்குப்பின், "சந்திரலேகைச் சிற்றரசர் என்னைச் சந்திக்க வந்திருப்பதுபற்றி நான் அத்தனை வியப்படையவில்லை; ஆனால், பல்லவ மாமன்னனுக்குத் தன் தாயைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் எழுந்த தோடல்லாமல் அவனை இவ்வளவுதூரம் அழைத்து வந்து விட்டுமிருக்கிறதே, அதுதான் ஆச்சரியம்!" என்று மகிழ்ச்சி மேவிய குறும்புச் சிரிப்புடன் அவ்விருவரையும் மாறி மாறிப் பார்த்தவாறு சொன்னார் மகாராணி காடவன்மாதேவி

முத்தரையர் இதைக் கேட்டு மெல்லச் சிரித்துக் கொண்டார்.

"என் மைந்தன்மீது குற்றம் சுமத்துவதாக நினைக்க வேண்டாம். அவன் இதயத்தில் எனக்கென்று ஒதுக்கியிருந்த இடத்தில் இப்போது வேறொன்று நிறைந்திருக்கிறது. அதனால்தான் அவனுக்கு என்னைப்புற்றிய நினைவு அதிகமாக எழுவதில்லை. ஆயினும் அதற்காக நான் வருந்தவுமில்லை. அதை என் தவப் பலிதமாக எண்ணி மகிழ்ச்சியடையவே செய்கிறேன்" என்று மீண்டும் அதே மென்னகையுடன் சொன்னார் மகாராணி.

நாணத்தால் முகம் சிவக்கச் சிறுபிள்ளைபோல் தலைகுனிந்தான் பரமேசுவரவர்மன். மறுகணமே அவன் முகத்தில் வேதனையும் சஞ்சலமும் சூழ்ந்து கவிந்தன. தன் தாயை இதமாக ஏறிட்டு நோக்கியவாறு, "அம்மா!" என்றான்.

"ஏன் மகனே? என்ன சொல்ல விரும்புகிறாய்?" என்று பரிவுடன் வினவினார் காடவன்மாதேவி.

# 135

## அன்னையின் ஆசை

நெஞ்சின் வேதனையை மறைக்க ஓர் இளநகை பூத்தவாறு தலை நிமிர்ந்த பரமேசுவரவர்மன், "அம்மா! நம் நாட்டின் இன்றைய நிலவரங்களைப் பற்றித் தாங்கள் அறிவீர்கள் அல்லவா?" என்று மெல்லப் பேச்சை ஆரம்பித்தான்.

இந்நேரம் மகிழ்ச்சியுடன் காணப்பட்ட மகாராணி காடவன்மாதேவியின் முகத்தில் சஞ்சல மேகம் சூழ்ந்தது. ஒரு கணம் பேசாதிருந்த அவர், "பல்லவ மன்னனைக் கடந்து வந்து என் செவிகளுக்கு எட்டிய சில சேதிகளைக் கொண்டு நிலைமையை ஓரளவு அறிந்துதான் இருக்கிறேன்" என்றார் கவலை தேங்கிய குரலில்.

"அன்னையார் அதுபற்றி என்ன நினைக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்டு போகவே இங்கு வந்தேன்" என்று சொல்லித் தன் தாயின் முகத்தில் ஏறிட்டு நோக்கினான் பரமேசுவரவர்மன்.

காடவன்மாதேவி இதைக் கேட்டுப் புன்னகை புரிந்தார். "எந்த விஷயமாகவும் முன்கூட்டியே ஏதாவதோர் அபிப் பிராயத்தை உருவாக்கிக் கொள்வதைக் கொஞ்ச காலமாகவே நான் தவிர்த்து வருகிறேன், மகனே! ஏனென்றால், ஒன்றைப் பற்றி நாம் அபிப்பிராயம் கொண்டபின் அதற்கு மாறுபட்ட அபிப்பிராயத்தைக் கேட்க நேரிடும்போது அதை எதிர்த்து வாதிடவோ, அல்லது பணிந்து போகவோ நேரிடலாம். அதனால் மனத்தின் அமைதி குலைந்து வீணான வருத்தமும்

கிலேசமும் உண்டாகலாம். எதுபற்றியும் எவ்வித அபிப் பிராயமும் கொள்ளாமலே இருந்துவிட்டால் இம்மாதிரிச் சங்கடங்கள் ஏற்பட வழியில்லை. எனவேதான், வாழ்க்கையில் சாந்தியையும் நிம்மதியையும் தேடிக்கொண்டிருக்கும் நான் இந்தப் பழக்கத்தைக் கைக்கொள்ள முயன்று வருகிறேன்."

இவ்வாறு சொன்ன மகாராணியை வியப்புடன் பார்த்த பரமேசுவரவர்மன், "அன்னையாரின் ஞானமார்க்கம் அற்புதமானது!...ஆயினும் புத்திபூர்வமாக ஒருவிஷயத்தைக் கிரகிக்கும்போது நம்மையறியாமலே நம்முள் அதுபற்றி ஓர் அபிப்பிராயம் உருவாவது இயற்கை; அப்படி உடனடியாக உருவாகும் அபிப்பிராயத்தையாவது வெளியிடலாம் அல்லவா?" என்று சிரித்துக்கொண்டே வினவினான்.

'அது அபிப்பிராயமாகாது பரமேசுவரா! வெறும் பதிலாகத்தான் இருக்கும். எந்தக் கேள்விக்கும் பதில் சொல்ல நான் எப்போதும் தயாராக இருக்கிறேன்."

சற்றுத் தொலைவில் நின்றிருந்த பெரும்பிடுகு முத்தரையர், தாய்க்கும் தனயனுக்குமிடையே ஆரம்பமான உரையாடலை வெகு கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார்.

சிறிதுநேரம் சிந்தனையில் மூழ்கியிருந்த பரமேசுவர வர்மன் சட்டென்று நிமிர்ந்து, "அம்மா! விடுதலை பெற்ற பல்லவ நாட்டின் மன்னனாக நான் வீராபிஷேகம் செய்து முடிசூட்டிக் கொள்வதோடு என் திருமண வைபவத்தையும் சேர்த்து நடத்திவிட விரும்புகிறேன்; தங்களுக்கு இதில் ஆட்சேபணை ஏதும் இல்லையே?" என்று பூஞ்சிரிப்புடன் கேட்டான்.

"காதால் கேட்கும்போதே நெஞ்சமெல்லாம் இனிக்கச் செய்யும் இந்த இனிய சேதிகளை நிகழ்ச்சி வடிவில் கண் குளிரக் காண வேண்டுமென்பதற்காக ஒவ்வொரு நாளும் ஏங்கிக் குமைந்து இறைவனிடம் மன்றாடிப் பிரார்த்தித்துக் கொண்டு வருகிறேன், மகனே!" என்றார் மகாராணி மகிழ்ச்சிக் கலவையிட்ட குரலில்.

"அப்படியானால் பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்ட மகிஷியாக நான் தேர்ந்தெடுத்திருக்கும் பெண்மணியை என் அன்புக்குரிய அன்னையாரும் தன் அருமை மருமகளாக ஏற்றுக் கொள்ளச் சம்மதித்துவிட்டார் என்பதுதானே இதற்கு அர்த்தம்?"

"தவமாத் தவமிருந்து பெற்ற என் செல்வத் திருக்குமாரனின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அவ்வுத்தம பெண்மணியை நான் இன்னும் நேரில் சந்தித்த தில்லையென்றாலும், அவளது அறிவு, ஆற்றல், அழகு, குணம், நடத்தை ஆகியவற்றைப் பற்றிச் சோழ இளவரசியின் வாயி லாக நிரம்பவும் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்பெண்ணரசி யின் பேருதவியாலேயே இந்தப் பழம் பெருமை வாய்ந்த பல்லவ நாடு சளுக்கியரின் ஆதிக்கப் பிடியிலிருந்து விடுதலை பெற முடிந்தது என்ற உண்மையையும் அறிந்து உள்ளம் பூரித்தேன். அப்படிப்பட்ட ஒரு மங்கை நல்லாளே என் மருமகளாக வர வேண்டுமென்றும் ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்..."

அன்னையின் இந்த மொழி கேட்டு ஆனந்தப் பரவசமடைந்த பரமேசுவரவர்மன் தன் கழுத்தில் பல நவரத்தின ஹாரங்களுக்கிடையே தவழ்ந்து கொண்டிருந்த அந்தச் சவுக்கைக் காய் மாலையைத் தன்னைமீறிய ஓர் ஆவலுடன் தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

"ஆனால் பரமேசுவரா! அந்த என் பேராசை நிராசையாகிவிடுமோ என்ற அச்சம் என்னை இப்போது அலைக்கழித்து வருகிறது. ஆந்திர இளவரசி உத்தமசீலியை என் மருமகளாகப் பெற முடியாத துர்ப்பாக்கியசாலியாகி விடுவேனோ என்னும் பெரும் துயரில் ஆழ்ந்து ஒவ்வொரு நாளையும் வேதனையோடு கடத்திக் கொண்டு வருகிறேன்."

பலத்த அதிர்ச்சியுற்றவன்போல் திரும்பி பரமேசுவர வர்மன், "ஏனம்மா, இப்படிச் சொல்கிறீர்கள்?" என்று துடிப்புடன் கேட்டான்.

"எனது ஆசாபங்கத்துக்குரிய காரணத்தை நீயும் அறிந்திருப்பாய் என்றே கருதுகிறேன்" என்று கம்மிய குரலில் அமைதியாகப் பதிலிறுத்தார் காடவன்மாதேவி.

"அதாவது, ஆந்திர இளவரசி உத்தமசீலி சமண சமயத்தைச் சார்ந்தவளாக இருக்கிறாளே என்று அன்னையார் ஆயாசப்படுகிறார், அப்படித்தானே?"

"அவ்வாறு சொல்ல எனக்கு உரிமையில்லை, மகனே! உன்னை நான் ஒரு சைவனாகப் பெற்றெடுத்துவிட்டேனே என்பதுதான் என் ஆயாசத்துக்குக் காரணம்."

தாள முடியாத மனவேதனையால் தலையைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு சற்றுநேரம் மௌனமாயிருந்த பரமேசுவரவர்மன் நெடிய பெருமூச்சு விட்டவனாய் நிமிர்ந்து ஆடாச் சிலைபோல் நின்று கொண்டிருந்த முத்தரையரைப் பார்த்து, "பழையாறைச் சோழருடையவும் கோவிந்தவர்ம னுடையவும் தீய பிரசாரம் என் அன்னையாரின் விரிந்த மனத்தைக்கூட இந்த அளவுக்குச் சுருக்கிவிடும் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவே இல்லை, ஐயா!" என்று அடைத்த குரலில் கரகரத்தான்.

"அப்படிச் சொல்லாதே, பரமேசுவரா! அவர்களுடைய நோக்கத்துக்கும் எனது கருத்துக்கும் நிறைய வேறுபாடு உண்டு. அவசரப்பட்டு என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளாதே!" என்று படபடப்புடன் கூறிய மகாராணி மேலும் தொடர்ந்து சொன்னார்: "நன்றாகச் சிந்தித்துப பார், மகனே! அவர்கள் ஆந்திர இளவரசியை அறவே எதிர்க்கிறார்கள்; வெறுக் கிறார்கள். நான் அவளை மனப்பூர்வமாக நேசிக்கிறேன்; பல்லவப் பேரரசி கோலத்தில் அவளைக் கண்டு களிக்கவும் ஆசைப்படுகிறேன். ஆனால்..."

"சைவனான நான் சமணத்தைச் சார்ந்த அவளை மணக்க விரும்பிவதை மட்டும் தாங்கள் ஒப்புக்கொள்ளத் தயங்குகிறீர்கள்? அதாவது, அவர்கள் அரசியல் காரணத் துக்காக அவளை எதிர்க்கிறார்கள்; நீங்களோ சமய வேறு பாட்டுக்காக அவளை ஏற்க மறுக்கிறீர்கள்?" என்று முகத்தைத் திருப்பிக்கொண்டு முணுமுணுத்தான் பரமேசுவரவர்மன்.

"ஆம், மகனே! அதில் ஓரளவு நியாயம் இருப்பதாகவே நினைக்கிறேன்."

"சமய வேறுபாட்டைக் கொண்டு மனிதரை மனிதர் பிரித்துக் காண்பதில் எத்தகைய நியாயமும் இருக்க முடியாதென்பது என் கருத்து அம்மா!"

உண்மைதான், பரமேசுவரா! சமயம் என்பது மனித சமூகத்தை அறநெறியில் வழி நடத்த உதவும் ஒரு கை விளக்குப் போன்றதுதானே தவிர, அது பிளவுபடுத்தி வேற்றுமையைக் கட்டிக் காக்கும் தடைச் சுவர் போன்றதல்ல என்பதை நான் நன்கு அறிவேன். ஆனால், ஓர் ஆணும் பெண்ணும் சேர்ந்து நடத்துவதான திருமண வாழ்க்கைக்கு அவ்விருவரின் அழகு, குணம், நடத்தை முதலானவற்றில் ஒரு நெருங்கிய ஒருமைப்பாடு வேண்டப்படுவதுபோல ஓரே சமயச் சார்பும் இதற்கு அவசியத் தேவையாகிறது. இனம், மொழி, நிறம் ஆகியவற்றைத் திருமண உறவு கடந்து செல்வதாயிருக்கலாம். ஆனால் சமய ஒருமையை மட்டும் அத்தகை எளிதாக அது கடந்து சென்றுவிட முடியாது. அப்படிச் சென்றால் அப்புனித உறவை எப்போதேனும் ஒரு காலத்தில் ஏதேனும் ஒரு குறை ஏற்பட்டே தீரும, அல்லது ஏற்படுவது போலத் தோன்றலாலது செய்யும். இது உலக நியதி. மனித வாழ்க்கையின் இயற்கைப் போக்கு. எனவேதான்..."

"இவ்வளவையும் நான் சிந்தித்துப் பார்க்காமலே, அந்த முடிவுக்கு வந்திருப்பேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா, அம்மா?"

"அப்படி ஒருபோதும் நினைக்கமாட்டேன், மகனே! உன்னைப் பற்றி எனக்குத் தெரியாதா? எந்தச் சிறு விஷயமானாலும் அதன் சகல முனைகளையும் துருவி ஆராய்ந்து பாராமல் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வரும் பழக்கம் உன்னிடம் கிடையாதென்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால் அப்படிப்பட்ட நீ, உன் திருமண விஷயத்தில் மட்டும் கேள்விக்கு இடமான அந்த முடிவை எப்படித் தேர்ந்தெடுத்தாய் என்பதை நினைக்கும்போது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது."

“இதிலிருந்தே அன்னையார் தெரிந்துகொள்ளலாமே, என்னுடைய திருமண முடிவில் இன்று மட்டுமல்ல — என்றுமே எவ்விதக் கேள்விக்கும் இடம் இருக்காது என்று?”

“மெத்த மகிழ்ச்சியடைகிறேன். பரமேசுவரா! இந்த இனிய பதிலை நீ ஒரு சாதாரண மனிதனாக இருந்து சொல்ல, நானும் ஒரு சாதாரணத் தாயாக இருந்து கேட்டிருந்தால் இன்னும் இரட்டிப்பு மகிழ்ச்சியடைந்திருப்பேன். ஆனால் நீ ஒரு மாபெரும் தேசத்து மன்னனாகவும், உன்னைப் பெற்றெடுத்த நான் ஒரு மகாராணியாகவும் அல்லவா இருக்கிறோம்? இதில்தானே நம்முடைய துர்ப்பாக்கியமே அடங்கியிருக்கிறது!”

“அவ்வளவு தூரத்துக்கு நம் துர்ப்பாக்கியத்தை மிகைப்படுத்த வேண்டாம், அம்மா! எனக்கும் என் மனைவியாகத் தேர்ந்தெடுத்திருப்பவளுக்கும் இடையே உள்ள சமயப் பிரிவு எங்கள் திருமண வாழ்க்கையில் எள்ளத்தனை கசப்பையும் ஏற்படுத்தாது என்று நான் உறுதியாக நம்புகிறேன். ஏனென்றால் எங்கள் சமய உணர்வு அத்தகையது.”

“எனக்கும் அதில் பரிபூரண நம்பிக்கை உண்டு, மகனே! ஆயினும் உன்னால் ஆளப்படும் மக்கள் அதை நம்ப வேண்டுமே? பல்லவ நாடு ஒரே சமயச் சார்புள்ளது அல்ல; பல்வேறு சமயங்களைக் கொண்ட பெரிய நாடு. அதிலே சைவமும் சமணமும்தான் பிரதானமானவையாக விளங்கு கின்றன. துரதிர்ஷ்டவசமாக இவற்றின் கடந்த காலம் பகையும் பூசலுமாக கழிந்து, உன்னுடைய தலைமைக்குப் பிறகுதான் ஓரளவு சீர்திருந்தியிருக்கிறது. இந்நிலையில் நீ சைவனாகவும், உன் கரம் பற்றுகிறவள் சமணளாகவும் ஆட்சி பீடத்தில் அமர நேரிட்டால் அந்தப் பழைய பிளவு மீண்டும் தலைதூக்கி விடாதா? மனிதர்களிடம் இயற்கையாகவே சில பலஹீனங்கள் இருப்பதை நாம் மறந்துவிட முடியுமா? சந்தேகமும், நம்பிக்கையின்மையும் உள்ள மக்களைக் கொண்ட ஒரு தேசத்தை ஆள்வது மிகமிகக் கடினம் ஆயிற்றே, மகனே?”

# 136

# கீரீட தண்டனை

மகாராணியாரின் உணர்ச்சி மிக்க பேச்சை மிகவும் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் மெல்லிய குரலில், "ஏற்கனவே நான் சிந்தித்துவிட்ட விஷயங்களை அன்னையார் மீண்டும் எனக்கு நினைவு படுத்தியதற்கு நன்றி!... ஆனால் என் சிந்தனைக்கும் இதுவரை எட்டாமலிருக்கும் ஒரே ஒரு கேள்வியை மட்டும் இப்போது கேட்கிறேன். அதற்குத் தங்களின் மேலான பதிலையும் எதிர்பார்க்கிறேன்." என்று அமைதியாகக் கூறிச் சிறிது நேரம் மௌனமாயிருந்துவிட்டுப் பிறகு செட்டென்று தலைநிமர்ந்து கேட்டான்: "அம்மா! தங்கள் அன்பு மைந்தன் பரமேசுவர வர்மன் ஒரு மனிதனாக வாழ வேண்டுமென்று விரும்பு கிறீர்களா? அல்லது அவன் மன்னனாக மட்டும் வாழ்ந்தால் போதும் என்று ஆசைப்படுகிறீர்களா?"

காடவன்மாதேவி இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தார். "காலஞ்சென்ற உன் தந்தையாரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டிருந்தால், 'நீ ஒரு மன்னனாக வாழ்ந்தால் போதும்' எனறே அவர் பதில் சொல்லியிருப்பார். மகனே! ஆனால் உன்னைப் பெற்றெடுத்த தாயாகிய நான் அவ்வாறு சொல்லமாட்டேன். என் ஆருயிர்ச் செல்வன் மன்னனாக மட்டுமல்ல, மனிதனாகவும் வாழவேண்டும் என்றே ஆசைப்படுகிறேன்."

மெல்லத் தலையசைத்த பரமேசுவரவர்மன், "அன்னையாரின் இந்த ஆசையை என்னால் நிறைவேற்ற முடியாது என்றே நினைக்கிறேன்!" என்றான்.

"அப்படியெல்லாம் அதைரியப்பட்டுப் பேசாதே, மகனே! எதற்கும் ஏதாவது ஒரு மார்க்கம் இல்லாமல் போகாது..."

"அன்னையார் என்ன சொல்கிறார்?"

தயக்கத்துடன் அவனை ஏறிட்டு நோக்கிய மகாராணி, "என் எளிய மனத்தில்பட்ட ஒரு சிறிய யோசனையைச் சொல்வேன்; அதைக் கேட்பாயா, பரமேசுவரா?" என்றார்.

"என்னால் ஏற்கக்கூடிய யோசனையாயிருந்தால் நிச்சயமாக ஏற்பேனம்மா!" என்றவாறு தன் தாயின் முகத்தை ஆவலுடன் நோக்கினான் பரமேசுவரவர்மன்.

மீண்டும் சற்றே தயங்கிய காடவன்மாதேவி தம்மைச் சமாளித்துக்கொண்டு அமைதியாகச் சொன்னார்: "ஆந்திர இளவரசி உத்தமசீலியை நீ எந்த அளவுக்கு நேசிக்கிறாயோ அதே அளவுக்கு அவளும் உன்னை நேசிப்பாள் என்றே நம்புகிறேன். அப்படி நேசிப்பது உண்மையானால், உனக்கு நேர்ந்துள்ள இந்த இக்கட்டான நிலைமையைப் போக்க அவள் ஒரு காரியம் செய்யலாம். அதாவது... தான் சார்ந்துள்ள சமண சமயத்தைவிட்டுச் சைவ சமயத்தை ஏற்பாளே யானால்..."

நெஞ்சிலே நெருப்பை வாரிக் கொட்டினாற்போல் துடித்துப் பதறிய பரமேசுவரவர்மன், "அம்மா?" என்று அலறிக்கொண்டே துள்ளியெழுந்து நின்றான். அவன் உடல் நிலைகொள்ளாமல் அதிர்ந்து நடுங்கியது. கண்கள் தீப்பிழம்பாகச் சிவந்து பழுத்தன. "அம்மா! தாங்களா இந்த யோசனையைச் சொன்னீர்கள்? தங்கள் வாயிலிருந்தா இந்தச் சொற்கள் வெளிவந்தன? என்னால் நம்பவே முடிய வில்லையே!" என்று இரைந்து கூவியவாறு தன்செவிகளை இறுகப் பொத்திக் கொண்ட அவன், ஆத்திரம் செருமிய அடித்தொண்டையில் மேலும் படபடத்தான். "ஆந்திர

இளவரசி சைவ சமயத்தைத் தழுவி வரட்டும் என்று தாங்கள் சொன்னதைவிட என்னைச் சமணனாக மாறும்படிச் சொல்லியிருக்கலாமே? அப்படிச் சொல்லியிருந்தால் கூட அதை என்னால் பொறுத்துக் கொண்டிருக்க முடியுமே! தயைகூர்ந்து தங்கள் திருவாயால் இனியொருமுறை அவ்வாறு கூறாதீர்கள். தாயே! தங்கள் தூய மனத்தில் அத்தகைய கறை படிந்த எண்ணமே இனித் தோன்றவிடாதீர்கள், அம்மா!"

சற்றே நிதானமடைந்த பரமேசுவரவர்மன் தணிந்த குரலில் மேலும் சொன்னான்: "அம்மா! சமயம் என்பது ஒரு தர்ம நெறி. அக வாழ்க்கையைச் செம்மைப்படுத்திப் பிறவியை முழுமையாக்குவது ஒன்றே அதன் நோக்கம். இந்த நோக்கத்தை மறந்து லௌகீக நலன்களுக்காக அதைப் பயன்படுத்த முனைவது மன்னிப்பே இல்லாத பாவமாகும். உலக வாழ்க்கையின் வெற்றிக்காகவும், இந்திரிய சுக போகங்களுக்காகவும் சமயம் விட்டுச் சமயம் மாறுவதோ மாற்றம் செய்விப்பதோ இ)ழிவான செயல் மட்டுமல்ல, வெறுக்கத்தக்க குற்றமும் ஆகும். எனவே, மிக உயர்ந்த அறநெறிப் பண்பாட்டில் வளர்ந்திருப்பவளான என் இதயப் பேரரசி உத்தமசீலி அத்தகைய இழிந்த செயலுக்கு ஒருபோதும் உடன்படமாட்டாள். என்பொருட்டு அவள் தன் சமயத்தைத் துறக்கத் துணிந்தாலும் நான் அதற்குச் சம்மதிக்க மாட்டேன். இது உறுதி."

தலைக் குனிவுடன் அமர்ந்திருந்த காடவன்மாதேவி, "என் மைந்தனுக்கு நான் சொன்ன யோசனை தவறானது என்பதை உணர்கிறேன். அதற்காகப் பல்லவ மன்னனிடம் மன்னிப்புக் கோருகிறேன்" என்றார் குரல் தழுதழுக்க.

தாயின் பாதங்களைத் தொட்டு வணங்கிவிட்டு அமைதியாக நடந்து போய் முத்தரையரின் எதிரே நின்ற பரமேசுவரவர்மன் அவரை இமைக்காமல் நோக்கியவாறு, "சந்திரலேகைச் சிறறரசே! தங்களிடம் நான் தெரிவிப்பதாகச் சொன்ன என் முடிவை இப்போது தெரியப்படுத்துகிறேன். கேளுங்க்ள்!" என்றான்.

பிரமை பிடித்தவர்போல் நின்றிருந்த முத்தரையர் அவனைத் திருதிருவெனப் பார்த்து விழித்தார்.

“பழையாறைச் சோழரும், பல்லவ இளவரசனான கோவிந்தவர்மனும் கூட்டுச் சேர்ந்து என் நாட்டிலே எனக்கு எதிரான பிரசாரம் செய்து வருவதன் நோக்கம் என்னவா யிருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள், நண்பரே?”

‘விடுதலைப் போரில் அவர்களுடைய உதவியை நாடாமலும், அவர்களுக்குப் போதிய முக்கியத்துவம் தராமலும், தாங்களே தங்கள் சுயமுயற்சியைக் கொண்டு தனித்து நின்று போரிட்டு வெற்றி தேடிக்கொண்டதால் ஏற்பட்ட காழ்ப்பினாலேயே அவர்கள் அவ்வாறு தவறான பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார்கள் என்று அன்றும் சொன்னேன்; இன்றும் அதையே சொல்கிறேன், அரசே!” என்றார் முத்தரையர் கரகரத்த குரலில்.

“இல்லை, நான் அப்படி நினைக்கவில்லை. என் அன்புக்குரிய இளவலான கோவிந்தவர்மனுக்கு இந்தப் பல்லவ நாட்டின் முடிமன்னனாக வேண்டுமென்னும் ஆசை இருக்கலாம் என்று நான் நினைக்கிறேன். அந்த ஆசையை அவனிடம் பழையாறைச் சோழர் தம் சுயநலத்துக்காகத் தூண்டிவிட்டிருக்கலாம் என்றும் கருதுகிறேன்.”

“அரசே!...”

“இவ்வளவு பெரிய குற்ற எண்ணம் கொண்ட கோவிந்தவர்மனுக்கு என்ன தண்டனை விதிக்கலாம்?”

“மன்னரவர்கள் சொல்வது?...”

“மரண தண்டனையல்ல? இந்த மாபெரும் தேசத்தின் ஆட்சிப்பொறுப்பை அவனிடமே ஒப்படைத்துவிட்டு நான் வெளியேறுவதுதான் அவனுக்கு அளிக்கப்படும் பெரிய தண்டனை! இதுதான் முடிவு? இதுவே என் முடிவு!”

காடவன்மாதேவியும், பெரும்பிடுகு முத்தரையரும் இதைக் கேட்டு இடியால் தாக்குண்டவர்கள் போல் நடுநடுங்கி விட்டார்கள்.

# 137

## சண்டமாருதம்

"ஆந்திர இளவரசியாரை நோக்கி ஒரு மிகப் பெரிய புயல் வந்து கொண்டிருக்கிறது. அந்தப் புயல் அவருடைய புற வாழ்க்கையை மட்டுமல்ல, அகவாழ்க்கையையும் அலைக்கழித்து வீழ்த்திவிடக்கூடிய தன்மை வாய்ந்தது. எண்ணத்தில் நிதானமும், இலட்சியத்தில் பற்றும், செயலில் உறுதியும் இருந்தால் மட்டுமே அதை எதிர்த்து நின்று வெற்றி பெறலாம். இதனை முன்கூட்டியே எடுத்துக் கூறி எச்சரித்துவிட்டுப் போகவே இங்கு வந்தேன்."

சில தினங்களுக்குமுன் எதிர்பாராதவிதமாக அந்த சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரர் முன்னும் பின்னும் எவ்வித விளக்க விவரமுமின்றி இவ்வாறு சொல்லிவிட்டுப் போனதையே இரவு பகலாகச் சிந்தித்துச் சிந்தித்துக் குழம்பிக் கொண்டிருந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி, அதற்கு முன் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி தெரிவித்த ஒரு விஷயத்தையும் இந்தக் கூற்றுடன் சேர்த்து நினைத்துப் பார்த்தாள்: 'பாவம், ஆந்திர இளவரசியாருக்குப் பல்லவ நாட்டில் இப்போது என்ன நடக்கிறது என்றே தெரியாது போலும்! அது தெரிந்தால் இத்தனை இனிய கற்பனைகளில் சஞ்சரித்துக்கொண்டிருக்க மாட்டார்.'

காஞ்சி அரண்மனைக்குத் தன்னை அழைத்துப் போவதற்காகப் பல்லவ மன்னனிடமிருந்த விசேஷ பரிவாரங்கள் வெகுவிரைவிலே வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டு இருப்பதாக அவள் சொன்னபோது

இளங்கோப்பிச்சி கூறிய இந்தப் பதிலுக்கும், சமந்தபத்திரரின் அந்தக் கூற்றுக்கும் ஏதோ தொடர்பு இருப்பதாகவே அவளுக்குத் தோன்றியது. அத்துடன், தன்னை பார்ப்பதற் கென்றே பெருவளநல்லூருக்குப் போய் அங்கிருந்து திருப் பருத்திக் குன்றத்துக்கு வந்த பல்லவ மன்னன் திடீரென்று அந்த நோக்கத்தை மாற்றிக்கொண்டு காஞ்சிக்குப் புறப்பட்டுப் போய்விட்டது பற்றித் தான் இதுவரை கற்பித்துக் கொண்டிருக்கும் காரணமும் சரியல்ல என்று இப்போது அவளுக்குப் பட்டது. தன்னால் தெரிந்துகொள்ள முடியாமலும், தான் தெரிந்து கொள்ளாமலும் இந்த நாட்டிலே தன்னைப்பற்றி — தன் காதல் திருமணத்தைப் பற்றி—ஏதோ ஒரு பாதகமான சூழ்நிலை உருவாகி இருக்கிறது என்றும், அதனாலேயே பல்லவ மன்னர் தன்னைப் பார்க்காமல் போய்விட்டிருக்கிறார் என்றும், அதன் காரணங்களைத் தெரிந்து கொண்டுதான் சமண சங்கத் தலைவரும் சோழ இளவரசியும் தன்னை எச்சரிப்பதுபோல் இவ்வாறு சூசகமாகப் பேசியிருக்கிறார்கள் என்றும் அவள் எண்ணி னாள்.

இந்த விதமான அநுமானங்களைப் புலப்படுத்திக் கொண்டதுமே அவளுடைய மனம் முன்னைவிடப் பெரிதும் கலங்கிக் குழம்பிவிட்டது. தன்னை மீறிய பயத்தினால் தவித்துத் தடுமாறிய அவள் ஒரு முடிவுக்கு வந்தவளாய் எழுந்து அடுத்த அறையை நோக்கி விரைந்து சென்றாள்.

அங்கே அரைகுறையாகத் தொடுத்த பூமாலை யொன்றைக் கையில் வைத்துக்கொண்டு அதிலுள்ள பூக்கள் ஒவ்வொன்றாக உருவிக் கூடையில் போட்டவாறு தலை குனிந்து அமர்ந்திருந்தாள் இளங்கோப்பிச்சி. அவளது அழகிய கருநீலக் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

இந்தக் காட்சியைக் கண்ட உத்தமசீலி வியப்புற்றவளாய் அவ்வறையின் கதவருகிலேயே தயங்கி நின்றாள். ஏற்கனவே

தன் சொந்தத் துயரங்களால் நைந்து நலிந்து கிடந்த அவள் மனம் இப்போது இளங்கோப்பிச்சியை அந்நிலையில் காண நேரிட்டதால் மேலும் வேதனையடைந்து துடித்தது. ஆயினும் தன்னைப்போல் இன்னொரு பெண் சோகத்தில் ஆழ்ந்து கண்ணீர் சிந்திக் கொண்டிருந்ததைக் காண அவளுக்கு ஒரு விசித்திர ஆறுதலாகவும் இருந்தது.

வாயில் நிலையருகே அவள் நின்றிருந்ததால் ஏற்பட்ட வெளிச்ச அடைப்பை உணர்ந்து சட்டென்று நிமிர்ந்த இளங்கோப்பிச்சி அவசரமாய்த் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்து, "வாருங்கள், இளவரசி!" என்றாள் உயிரற்ற புன்முறுவலுடன், ''நானே உங்களுடைய அறைக்கு வரவேண்டும் என்றிருந்தேன்; அதற்குள் நீங்களே வந்து விட்டீர்கள்."

"முன்னறிவிப்பின்றி வந்து உன் தனிமையில் குறுக்கிட்டு விட்டேன், இல்லையா? மன்னித்துக்கொள்!'' என்று மென்னகை புரிந்தவாறு அறைக்குள் பிரவேசித்த உத்தமசீலி, கீழே கிடந்த பூக்களையும் இளங்கோப்பிச்சியின் கையில் அரைக்குறையாகத் தொடுக்கப்பெற்றிருந்த மலர்ச் சரத்தையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டே, "தொடுத்த மாலையை ஏன் பிரிக்கிறாய்? நன்றாகத்தானே இருக்கிறது?" என்று கேட்டாள்.

"முதலில் அழகாகத்தான் தொடுத்தேன், இளவரசி! ஆனால் இடையிலே ஒரு சிறு தவறு நேர்ந்துவிட்டது. முல்லைப் பூ வரிசையில் எப்படியோ செவ்வலரி மலரொன்றும் சேர்ந்துவிட்டது. அதனால்தான்..." என்றாள் இளங்கோப்பிச்சி விரக்தி படிந்த புன்முறுவலுடன்.

"என்ன இருந்தாலும், தொடுத்த மாலையைப் பிரித்தால் மீண்டும் அதைத் தொடுக்க முடியாதபடி பூக்கள் கசங்கி வாடிவிடுமே?'' என்றவாறு கீழே குனிந்து சிதறிக் கிடந்த வண்ண மலர்களை மென்மையாக வாரிப் பூக்கூடையில் போட்டாள் உத்தமசீலி.

"நமக்குத் தெரிகிறது, இந்த உண்மை! ஆனால் நம்மை ஆட்டிப் படைக்கும் விதிக்குத் தெரியவில்லையே, இளவரசி!"

*வியப்புடன் தலைநிமிர்ந்த உத்தமசீலி அவளை உற்று நோக்கினாள்.*

*சற்று நேரம் அமைதியாக நின்றிருந்த இளங்கோப்பிச்சி, "ஆந்திர இளவரசியார் ஏதோ முக்கிய விஷயமாகப் பேச வந்திருக்கிறார் என்று நினைக்கிறேன்..." என்றாள் தணிந்த குரலில்.*

*"ஆமாம், இளங்கோப்பிச்சி உன் பேச்சிலிருந்து எழுந்த சந்தேகம் ஒன்றை உன்னிடமே கேட்டுத் தெரிந்து கொள்வதற்காகத்தான் வந்திருக்கிறேன்...'' என்றவாறு சிறியதொரு சாளரத்தை நோக்கி நடந்த உத்தமசீலி மெல்லத் திரும்பி, "அன்றொரு நாள், பல்லவ நாட்டில் இப்போது என்ன நடக்கிறது என்றே தெரியாமல் வெறும் கற்பனைகளில் நான் சஞ்சரித்துக் கொண்டிருப்பதாகச் சொன்னாயே, அதன் வெளிப்படையான அர்த்தம் என்ன?" என்று தன்னை மீறிய படபடப்புடன் கேட்டாள்.*

*இளங்கோப்பிச்சியின் வதனத்தில் சோக மயமான சிறு நகையொன்று தவழ்ந்தது. "இந்தக் கேள்வியை அன்றே என்னிடம் கேட்பீர்கள் என்று எதிர்பார்த்தேன்; ஆனால் இத்தனை நாட்கள் கழித்து வந்து கேட்பதையறிய எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது."*

*"ஆச்சரியப்படுவது இருக்கட்டும். நான் கேட்டதற்கு உன் பதில் என்ன?"*

*ஆழ்ந்த அநுதாபத்துடனும் வாஞ்சையுடனும் அவளைப் பார்த்துக்கொண்டே அருகில் நெருங்கி வந்த இளங்கோப்பிச்சி மிருதுவான குரலில் சொன்னாள்: "உலகில் பெண்ணாகப் பிறந்தவர்களுள் நீங்கள் மிகவும் பாக்கியசாலி என்றுதான் இத்தனை நாட்களும் எண்ணியிருந்தேன்; ஆனால் இப்போது உங்களைப் போன்ற துர்ப்பாக்கியசாலி வேறு யாருமே இருக்கமாட்டாள் என்று நினைக்க வேண்டியதாகி விட்டது."*

உத்தமசீலியின் மனம் உள்ளூற அதிர்ந்தது. ஆயினும் அதை வெளியே காட்டிக்கொள்ளாமல், "விஷயத்தைச் சொல், இளங்கோப்பிச்சி! என்னுடைய பாக்கியத்தை நீ ஏன் துர்ப்பாக்கியமாகக் கருதுகிறாய்?" என்று வினவினாள்'

"துரதிர்ஷ்டவசமாக நீங்கள் சைவ சமயத்தைச் சார்ந்தவராக இல்லையே என்பதுதான் அதற்குக் காரணம் இளவரசி!"

"அதிர்ஷ்டவசமாக நான் சமண சமயத்தைச் சார்ந்தவளாயிருப்பதால் யாருக்கு என்ன சங்கடம் ஏற்பட்டு விட்டதாம்?"

"உங்களுக்கு, உங்களைக் காதலிப்பவருக்கும், அவரால் ஆளப்படும் இந்தப் பல்லவ நாட்டுக்குமே பல சங்கடங்கள் தோன்றி அவை வெகு வேகமாக வளர்ந்தும் வருகின்றன!"

இதைக் கேட்ட உத்தமசீலியின் மனத்தில் மின்னலொன்று பளீரிட்டுச் சுருண்டது. சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரர் அவளை எச்சரிப்பது போல் சொல்லிச் சென்ற அந்தப் புதிர் போன்ற சொற்களின் நினைவோட்டம் தான் அது, "இளங்கோப்பிச்சி! நீ என்ன சொல்கிறாய்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்று தவிப்புடன் கேட்டாள் அவள்.

துயரப் பெருமூச்சுவிட்டு, முகத்தை வேறுபக்கம் திருப்பிக் கொண்ட இளங்கோப்பிச்சி அடைத்த குரலில் சொன்னாள்; "ஆம், இளவரசி! தங்கள்மீதும், பல்லவ மன்னர்மீதும் வீணான விரோத குரோதம் கொண்டுள்ள சிலரால் இந்த நாட்டிலே இப்போது ஒரு பெரும் கொந்தளிப்பு நிலை உருவாகியிருக்கிறது. அந்தக் கொந்தளிப்பின் அனல் வீச்சுப் பல்லவ நாட்டோடு நில்லாமல் பாண்டிய நாட்டிலும் புகுந்து, இதுவரை இவ்விரு நாடுகளுக்கிடையே நிலவி வந்த நல்லுறவு முறிந்து பகையையும் பூசலையும் தோற்றுவித்து விட்டிருக்கின்றன. இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம்,

*பல்லவ மன்னர் தங்களைக் காதலிப்பதும் தங்களையே திருமணம் செய்து கொள்ளப் போவதாக அவர் அறிவித் திருப்பதும்தாம்."*

*"சோழ குமாரியின் விளக்கம் வேடிக்கையாக இருக்கிறதே! பல்லவ நாட்டில் காதல் ஒரு குற்றமா? அல்லது காதலித்துக் கடிமணம் புரிந்து கொள்வதுதான் தவறா?"*

*"அப்படியல்ல, இளவரசி! தங்களிருவருக்குமிடையே யுள்ள சமய வேற்றுமைதான் தங்கள் காதலை வெட்டிப் பிளக்கக்கூடிய கோடரியாக இப்போது எழுந்து நிற்கிறது. இந்த எதிர்பாராத எதிர்ப்பின் காரணமாகவே பல்லவ மாமன்னரின் வீராபிஷேக முடிசூட்டு விழாவும், தங்களுடைய திருமண வைபவமும் இதுவரை நடைபெறாமல் தடைப்பட்டு நிற்கின்றன. உங்கள் எதிர்கால இன்ப வாழ்க்கைப்பற்றிய இனிய கற்பனைகளில் மூழ்கி இந்தச் சின்னஞ்சிறு இல்லத்தில் அடைந்து கிடப்பதாலேயே இதெல்லாம் உங்களுக்குத் தெரியாமல் இருக்கின்றன என்று நினைக்கிறேன். ஒருகால் இவ்வளவையும் தெரிந்து கொண்டு என்னதாம் நடக்கிற தென்று பார்ப்போமே என்பதற்காக, ஏதும் தெரியாதவர் போல் பாவனை செய்து வருகிறீர்களோ என்றும் சந்தேகிக் கிறேன்."*

*சண்டமாருதத்தில் சிக்கிக்கொண்ட பூங்கொடிபோல் அலைப்புற்றுத் துவண்டு நின்ற உத்தமசீலியின் காயாம்பூக் கண்களிலே அருவியெனக் கண்ணீர் வழிந்தது. அந்தச் சில விநாடிகளுக்குள் முன்னும் பின்னுமாகப் பல விஷயங்களை ஊகித்துக் கொண்டதால் ஏற்பட்ட பயம் அவளை மேலும் உலுக்கிக் குலுக்கியது. ஏதோ ஒன்றை நினைவுபடுத்திக் கொண்டவளாகத் திடுமென்று தலைநிமிர்ந்து, "அது சரி, இளங்கோப்பிச்சி! எங்களுக்கு எதிராக யாரோ சிலர் சேர்ந்து இத்தகைய கொந்தளிப்பை உருவாக்கி வருவதாகச் சொன்னாயே, அந்தச் 'சிலர்' என்பவர் யார்?" என்று ஆத்திரம் செருமிய குரலில் கேட்டாள்.*

இளங்கோப்பிச்சியின் முகம் இந்த ஒரே விநாடியில் பிரேதக் களை பெற்று வெளுத்துச் சிறுத்துவிட்டது. தீயின் மேல் நிற்பவள்போல் தவித்துத் தடுமாறினாள் அவள்.

"ஏன் தயங்குகிறாய்? அந்த விஷமக்காரர்களை வெளிப்படுத்த உனக்கு ஏன் இவ்வளவு தயக்கம்?" என்று மீண்டும் படபடப்பாக வினவினாள் உத்தமசீலி.

மிரட்சியுடன் சுற்றுமுற்றும் பார்த்த இளங்கோப்பிச்சி "அவர்கள்...அவர்கள்... என்னைச் சார்ந்தவர்கள்தாம்! எனக்குச் சொந்தமானவர்கள்தாம், இளவரசி!" என்று திக்கித் திணறினாள்.

திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்த உத்தமசீலி, "என்ன! எங்களுக்கு எதிரான நடவடிக்கையில் ஈடுபட்டிருந்தவர்கள் உன்னைச் சார்ந்தவர்களா?" என்று வியப்பேறிய குரலில் விளித்தாள்.

"ஆம், இளவரசி, பல்லவ மாமன்னரின் பேரன்புக்கு உரியவர்களாயிருந்த பழையாறைச் சோழரும், கோவிந்த வர்மரும்தான் அந்தக் கொந்தளிப்புச் சூழ்நிலையை இப்போது உருவாக்கி வருகிறார்கள்!" என்று தாள முடியாத அவமானத்துடன் முணுமுணுத்தாள் இளங்கோப்பிச்சி.

138

# இரு மனம்

**உ**த்தமசீலி கலகலவென நகைத்தாள். "நல்ல நாடகம்! மிக நல்ல நாடகம் இது!" என்று கூறி மீண்டும் சிரித்த அவள் அலட்சிய மிடுக்குடன் நிமிர்ந்து குறும்பும் குத்தலுமாக, "சோழகுமாரி! உன்னுடைய நடிப்பு அபாரமானது: நீ நடத்தி வரும் நாடகமோ அதைவிட அற்புதமானது. ஆனால் இதையெல்லாம் கண்டு நான் ஏமாந்து விடுவேன் என்று மட்டும் உன் கனவிலும் கருதாதே!" என்றாள் சீற்றத்துடன்.

இளங்கோப்பிச்சியின் உடல் தடதடவென ஆடியது. "இளவரசி..." என்று வாய் குழற இழுத்தாள் அவள்.

"எனக்குத் தெரியும். நீ எப்பேர்ப்பட்டவள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். "

"அவசரப்படாதீர்கள், இளவரசி!" என்றாள் இளங்கோப்பிச்சி.

"இல்லை, சோழகுமாரி! நிதானமாகத்தான் பேசுகிறேன். நான் நினைத்தது சரியாகவே ஆகிவிட்டது. திடீரென்று என்னை நீ காண வந்தபோதே சிறிதளவு சந்தேகப்பட்டேன். பிறகு என்னுடன் தங்கியிருக்கப் போவதாகச் சொன்னபோதும், அதற்கான காரணத்தைப் பலமுறை கேட்டுங்கூடச் சரியான பதில் சொல்லாமல் மழுப்பியபோதும் அந்தச் சந்தேகம் வளர்ந்தது. அப்புறம் அடிக்கடி நீ வெளியே போய் வருவதைப் பார்த்தபோது மேலும் என் சந்தேகம் வலுவடைந்தது. அவையெல்லாமாகச் சேர்ந்து இன்று உண்மை வெளிப்பட்டுவிட்டது."

"வேண்டாம், இளவரசி! என்மீது வீண்பழி சுமத்தாதீர்கள்!"

"உன்மீது நான் ஏன் பழி சுமத்தவேண்டும்? என்மேல் கொண்ட பழைய வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள முயல்கிறாய்! உன்னைப் பொறுத்தவரையில் அது நியாயம்தானே? உன் நோக்கம் என்ன என்பதை நான் அறிவேன். அதிகார ஆள் பலத்தோடு இந்த நாட்டுக்கு நான் வந்தபோது, என்னால் நீ அடைய நேரிட்ட கஷ்ட நஷ்டங்களுக்கும் அவமானத்துக்கும் சேர்த்து என்னைப் பழி வாங்க வேண்டும் என்பதுதான் உன்னுடைய நோக்கம். அதற்காகவே இத்தனை நாள் என்னுடன் வந்து வஞ்சகமாகத் தங்கியிருக்கிறாய். ஏதேதோ சூழ்ச்சி செய்து அதன் இறுதி அஸ்திரமாக இந்தப் பொய்க் கூற்றை இப்போது பிரயோகிக்கிறாய். இல்லாத பொல்லாத தகவல்களைச் சொல்லி என்னைப் பயமுறுத்தி இந்த நாட்டைவிட்டே விரட்டியடிக்கப் பார்க்கிறாய். நான் ஏமாறமாட்டேன்."

வேர்த்து விறுவிறுத்து நின்ற இளங்கோப்பிச்சி வேதனைப் பொருமலுடன் சிரித்தாள். "ஒரு மாபெரும் தேசத்து மன்னரின் இதயத்தைக் கவர்ந்தவரான உங்களை இந்த விதமாக ஏமாற்றிப் பழி வாங்கிவிட முடியும் என்று பச்சைக் குழந்தைகூட நினைக்காது. என் மேல்தான் உங்களுக்கு நம்பிக்கை இல்லை; சமண சங்கத் தலைவர் வந்து உங்களிடம் என்ன சொல்லிவிட்டுப் போனார்; அதையாவது சற்று சிந்தித்துப் பாருங்களேன்!"

உத்தமசீலியின் முகத்தில் சட்டென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. உதட்டைக் கடித்துக்கொண்டு சிறுபொழுது மௌனமாயிருந்த அவள், "அப்படியானால் நீ சொல்வ தெல்லாம் உண்மைதானா, இளங்கோப்பிச்சி?" என்று நடுக்கத்துடன் கேட்டாள்.

"நான் சொல்வது அவ்வளவும் உண்மை என்றே நம்புங்கள். இளவரசி!"

"பெற்று வளர்த்த தந்தைக்கு விரோதமாகவும், உயிருக்குயிராக நேசிக்கும் காதலனுக்கு எதிராகவும் பேசும் உன்னையா நம்பச் சொல்கிறாய்?"

"நியாயத்துக்கும், தர்மத்துக்கும், சத்தியத்துக்கும் அஞ்சி நடக்கும் ஒரு பெண்ணால் அப்படிப் பேச முடியும் என்பதையும் நம்புங்கள் இளவரசி!"

ஆச்சரியத்துடன் கண்களை மலர்த்தி அவளை வெறித்து நோக்கிய உத்தமசீலி, "என் பக்கம் நியாயம் இருக் கிறது என்பதற்காகத்தான் என்னுடன் வந்து தங்கியிருக் கிறாயோ?" என்று கேட்டாள்.

"அது மட்டுமல்ல, இளவரசி! அவர்களால் உங்கள் உயிருக்கு ஆபத்து நேரலாம் என்பதை அறிந்தே உங்களுக்குப் பாதுகாப்பாக இங்கு வந்து தங்கியிருக்கிறேன். இதில் சந்தேகமிருந்தால் நமது படுக்கையறைக்குப் போய் என் மஞ்சத்தின் பட்டு மெத்தையை எடுத்துவிட்டுப் பாருங்கள்: அங்கே ஒரு நீண்ட வாளை நான் மறைத்து வைத்திருப்பதைக் காண்பீர்கள்."

உத்தமசீலியின் பூவுடல் ஒரு குலுங்குக் குலுங்கியது. பயப்பிராந்தியுடன் அவளைப் பார்த்துக்கொண்டே பின்னால் நகர்ந்தாள் அவள்.

இளங்கோப்பிச்சியின் கண்கள் கலங்கிக் குளமாயின. உதட்டை மடித்துக் கடித்துத் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு மிகவும் நிதான்மாகச் சொன்னாள்: "இவ்வளவுக்கும் காரணம் என் சுயநலம்தான். இளவரசி! பரமேசுவரவர்மர் உங்கள் கரம் பற்றினால்தான் நானும் என் காதலர் கோவிந்தவர்மரின் கரம் பற்ற முடியும். பல்லவ மன்னரின் காதல் தோல்விக்கு அவரது தம்பியே காரணமாயிருந்து விட்டால் அவ்விருவருக்குமிடையே பகையும் பிளவும் ஏற்படலாம்; அதனால் எனது காதலை மட்டுமல்ல, என் காதலரையே இழக்கும்படியான துர்ப்பாக்கியமும் நேரிடலாம். அத்தகைய விபரீத

சோதனையிலிருந்து என்னைக் காப்பாற்றிக் கொள்ளும் சுயநல நோக்கத்தோடு தான் உங்களையும் உங்கள் காதலையும் காப்பாற்றி வெற்றி பெற வைக்க வேண்டுமென்று மனப்பூர்வமாக விரும்பி அவற்றுக்கான முயற்சியில் ஈடுபட இங்கு வந்தேன். ஆனால், என்னுடைய அந்த நம்பிக்கை இப்போது தளர்ந்து விட்டது. என் முயற்சியில் வெற்றிபெற முடியாத அளவுக்கு நிலைமை மோசமடைந்து போய்விட்டது...”

இதற்குமேல் பேச முடியாமல் தொண்டை அடைத்துக் கொள்ளவே பொருமி அழுதுவிட்டாள் இளங்கோப்பிச்சி.

# 139

## ஆதொண்டை மாலை

அளவுக்கு மீறிய பயத்தாலும் துயரத்தாலும் அழுத்தப்பட்டுப் பிரமை பிடித்தவள்போல் அப்படியே விறைத்து நின்று கொண்டிருந்தாள் உத்தமசீலி.

நீரில் நீந்திய தன் கண்களைத் துடைத்துக்கொண்டு அவள் அருகில் வந்த இளங்கோப்பிச்சி பாசப் பரிவுடன் ஏறிட்டுப் பார்த்து, "இந்த இக்கட்டான நிலைமையிலிருந்து நாம் இருவருமே விடுபடவும், நம்முடைய காதல் எவ்விதத் தடையுமின்றி நிறைவேறவும் நான் ஓர் எளிய யோசனை சொல்வேன்; அதைக் கேட்பீர்களாக இளவரசி?" என்று தணிந்த குரலில் வினவினாள்.

சஞ்சீவிக் காற்றை சுவாசித்தவள்போல் நெளிந்து நிமிர்ந்த உத்தமசீலி அவளை ஆவலுடன் நோக்கினாள்.

"வைரத்தை வைத்தால்தான் வெட்டவேண்டும்; முள்ளை முள்ளால்தான் கீறி களையவேண்டும்; சமய வேற்றுமையைக் காட்டி உங்களது உயரிய காதலை முறிக்க முயலுவோரை அந்தச் சமயத்தின் துணைகொண்டே வீழ்த்திப் பணிய வைக்கவேண்டும். ஆம், இளவரசி! சமண சமயத்தைச் சார்ந்து நிற்கும் தாங்கள் சைவ சமயத்தைத் தழுவி விட்டால் தங்களுடைய காதல் திருமணத்தைத் தடுத்து நிறுத்த இந்த உலகமே முயன்றாலும் முடியாது. அதுமட்டுமல்ல; தங்கள் இதயக் கோமான் பரமேசுவரவர்மருக்கும், அவரது மாபெரும் பல்லவ சாம்ராஜ்யத்துக்கும் அதனால் பேருதவி புரிந்தவராகவும் ஆவீர்கள்."

இதைக் கேட்டு மூச்சு முட்டித் திணறிப்போன உத்தமசீலி தன்னை உடனே சமாளித்துக் கொண்டு அவளைப் பரிதாபமாகப் பார்த்து அவலப் புன்னகை பூத்தாள். "சோழகுமாரி! என்மீது நீ வைத்திருக்கும் மாசற்ற அன்பினாலேயே இப்படிப்பட்ட ஒரு யோசனையைச் சொல்லத் துணிந்தாய் என்று நான் மனப்பூர்வமாக நம்பி, அதற்காக என் இதயம் கனிந்த நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால், என் உயிரே போவதானாலும் இந்த யோசனையை மட்டும் ஒரு போதும் ஏற்க மாட்டேன். சைவ சமயத்தைவிட சமண சமயமே உயர்ந்தது என்று வெறித்தனமான நம்பிக்கையில் இவ்வாறு நான் சொல்வதாக நினைக்காதே. சமண சமயத்தை எந்த அளவுக்கு நேசித்து மதிக்கிறேனோ, அதே அளவுக்குச் சைவ சமயத்தையும் நேசிக்கிறேன், மதிக்கிறேன். உலகிலுள்ள மற்ற எல்லா சமயங்களையும் இவ்வாறே மதித்துப் போற்றிக் கௌரவிக்கிறேன். ஆனால் புறவாழ்க்கையின் அநித்தியமான ஓர் அற்ப உணர்ச்சி ஈடேற்றத்துக்காக, அக வாழ்க்கையின் நித்திய பேரின்பப் பேற்றுக்குரிய ஓர் ஊன்றுகோலை மாற்றிக் கொள்ள முனைவதுபோன்ற அருவருக்கத் தக்க செயலை ஒருகாலும் செய்யத் துணிமாட்டேன். அப்படியே நான் சமயம் விட்டுச் சமயம் மாறத் துணிந்தாலும் என்னுடைய நோக்கம் நிச்சயம் வெற்றி பெறாதென்பது எனக்கு நன்றாகத் தெரியும். யாருக்காக நான் அந்தக் காரியத்தைச் செய்கிறேனோ அவரே அதை ஏற்கமாட்டார். ஏற்காததோடு மட்டுமல்ல; என்னையும் என்மீது கொண்ட காதலையும் அவர் இழிவுமிக்க புழுவென மதித்து அக்கணமே உதறித் தள்ளியும் விடுவார். பல்லவ மாமன்னர் பரமேசுவரவர்மரைப் பற்றி நான் நன்கு அறிவேன். இந்த நாட்டுக்கு வந்த போது ஓரளவு சமய வெறி காண்டவளாயிருந்த என்னுள் சமயப் பொறையை ஊட்டிச் சமயம் என்றால் என்ன என்பதைச் சரியாக எனக்கு உணர்த்தியவரே அவர்தாம். என்னை அவர் அழகுக்காகவோ, அறிவுக்காகவோ, அல்லது அவருடைய நாட்டின் விடுதலைக்கு நான் செய்த உதவிக்காகவோ காதலிக்கவில்லை;

என்னிடமுள்ள ஒழுக்கக் கட்டுப்பாட்டுக்காகவும், சமய நெறிகளில் எனக்குள்ள ஆழ்ந்த பற்றுக்காகவுமே என்னை அவர் காதலித்தார். இப்போதும் காதலிக்கிறார். இத்தகைய உயரிய நம்பிக்கை கொண்ட அந்த உத்தமக் கோமகனுக்கு நான் ஒருபோதும் துரோகம் செய்யமாட்டேன். என்மீது அவர் வைத்திருக்கும் மலையொத்த மதிப்பிலிருந்து என்னை எள்ளத்தனையும் குறைத்துக் கொள்ளவே மாட்டேன்."

பள்ளத்தாக்கில் நின்று மலையின் சிகர விளிம்பைப் பார்ப்பதுபோல் அவளைப் பார்த்துக் கொண்டிருந்த இளங்கோப்பிச்சியின் உடல் வேர்த்துத் தெப்பமாக நனைந்து விட்டது.

சற்று நேர அமைதிக்குப்பின் மெல்லத் தலைநிமிர்ந்த உத்தமசீலி கம்மிய குரலில், "இளங்கோப்பிச்சி! எங்கள் திருமணத்துக்கு எதிராக நாட்டில் ஏற்பட்டிருக்கும் கொந்தளிப்பு நிலைபற்றிப் பல்லவ மன்னர் என்ன நினைக்கிறார்? அது குறித்து நீ ஏதேனும் அறிவாயா?" என்று கேட்டாள்.

"எனக்கு மட்டுமல்ல, இந்த நாட்டில் உள்ள வேறு எவருக்குமே அதுபற்றி ஏதும் தெரியாது என்று நினைக்கிறேன், இளவரசி!" முணுமுணுத்தாள் இளங்கோப்பிச்சி.

இதைக் கேட்டுத் திடீரென்று சிரித்த உத்தமசீலி, "எனக்குத் தெரியும். சோழ குமாரி! எனக்கு அதுபற்றி நன்றாகத் தெரியும்!" என்று தன்னை மீறிய மகிழ்ச்சியுடன் குதித்துக் கூறிக்கொண்டே தன் அறைக்கு ஓடியவள், அங்கே ஒரு பேழையில் பத்திரமாகச் சுருட்டி வைத்திருந்த—வாடிக் கருகிய—ஆதொண்டை மலர் மாலை ஒன்றை அவசரமாக எடுத்துக் கழுத்தில் அணிந்துகொண்டு ஓர் அழகுக் கோணத்தில் ஒயிலாக நின்று மீண்டும் கலகலவெனச் சிரித்தாள்.

அன்றொரு நாள் இரவு பெருவளநல்லூர்ச் சிற்றாற்றங்கரை மணற்சரிவில் அவளும் பரமேசுவரவர்மனும்

அமர்ந்து கந்தர்வ ரசமயமான காதல் உணர்வில் கட்டுண்டு கிடந்தபோது, அவன் தன் மார்பில் புரண்டு கொண்டிருந்த ஆதொண்டை மலர் மாலையைக் கழற்றி அவளது சங்கு நிறக் கழுத்தில் அணிவித்தானே, அந்த மாலையைத்தான் அவள் அத்தனை பத்திரமாக வைத்திருந்து இப்போது எடுத்துச் சூடிக்கொண்டு இளங்கோப்பிச்சியிடம் எதோ சொல்ல முற்பட்ட சமயம், வெளியே குதிரையொன்று ஓடி வந்த ஒலி கேட்டுத் திடுக்குற்றவளாய்ச் சாளரத்துப் பக்கம் எட்டிப் பார்த்தாள்.

சந்திரலேகைச் சிற்றரசரான பெரும்பிடுகு முத்தரையர் புரவியைவிட்டு இறங்கி வந்த இல்லத்தை நோக்கித் தளர் நடையிட்டு வந்து கொண்டிருந்தார்!

"ஆந்திர இளவரசியாருக்கு என் அன்பு கலந்த வணக்கம் உரித்தாகும்."

இதற்குமுன் அறிமுகமில்லாத புதிய மனிதர் ஒருவரைப் பார்த்ததால் ஏற்பட்ட பரபரப்புடன் முன்றிலுக்கு வந்த உத்தமசீலி, அங்கே சோர்வும் களைப்புமாக நின்று கொண்டிருந்த முத்தரையரை ஏறிட்டு நோக்கினாள்.

இதுவரை தாம் கற்பனை செய்து வைத்திருந்த அழகு வடிவத்தைக் காட்டிலும் பன்மடங்கு பேரழகு வாய்ந்தவளாய், பூசனைக்குரிய ஒரு தெய்வச் சிலைபோல் விளங்கிய அவளை வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்த முத்தரையர் குழைவுப் புன்னகையுடன் நிமிர்ந்து, "என் பெயர் பெரும்பிடுகு முத்தரையன், சந்திரலேகைக் குறுநில மன்னன்" என்று தம்மை அறிமுகப் படுத்திக்கொண்டு மேலும் சொன்னார்: "பல்லவ நாட்டின் விடுதலைக்குப் பேருதவி புரிந்த உத்தமசீலியாரை இன்று முதன்முதலாகச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்."

"வணக்கம் ஐயா!" என்று பணிவுடன் கரம் கூப்பிய உத்தமசீலி, 'இவர் பல்லவ மன்னரோடு காஞ்சியில்

இருப்பதாக அல்லவா கேள்விப்பட்டேன்? எங்கே ஏன் இப்போது வந்திருக்கிறார்?' என்று எண்ணிக் குழம்பலானாள்.

அந்த இல்லத்தினுள் பிரவேசிக்கும்போதே அங்கு சோழ இளவரசி இளங்கோப்பிச்சி இருப்பதைக் கவனித்துவிட்ட முத்தரையர், தாம் வந்த விஷயமாகப் பேச்சை எடுக்கலாமா வேண்டாமா என்று தயக்கப்படுகிற வர்போல் சிறிது நேரம் பேசாதிருந்தார். இளங்கோப்பிச்சியோ அவரை நேரில் வந்து பார்க்கத் தைரியமில்லாதவளாய்த் தன் அறையிலேயே ஒடுங்கி மறைந்து நின்று கொண்டிருந்தாள்.

"ஆந்திர இளவரசியாரிடம் ஒரு முக்கியமான விஷயம் பற்றிப் பேச வந்திருக்கேறன்..." என்று கரகரத்த குரலில் கூறிய முத்தரையர் தன் பார்வையை உட்பக்கம் செலுத்தியவாறு, "சோழ இளவரசியாரும் இங்குதான் இருக்கிறாரா?..." என்று இழுத்தாற்போல் வினவினார்.

அவரது தயக்கத்தின் காரணத்தை உடனே புரிந்து கொண்ட உத்தமசீலி, "ஆம், ஐயா! இளங்கோப்பிச்சி என்னுடன்தான் தங்கியிருக்கிறாள். அவள் எனக்குத் துணை யாக மட்டுமல்ல, என் நம்பிக்கைக்கு உரிய சகோதரியாகவும் இருந்து வருகிறாள்" என்றாள் இளநகையுடன்.

அவளது புத்திக்கூர்மையை அறிந்து உள்ளூற வியப்படைந்த முத்தரையர், "மெத்த மகிழ்ச்சி, அம்மணீ!" என்று கூறிச் சிறுபொழுது பேசாதிருந்துவிட்டு பிறகு துயரம் செறிந்த குரலில் மெல்லப் பேச்சை ஆரம்பித்தார்: "ஆந்திர இளவரசியார் இந்நாட்டின் இன்றைய நிலவரங்களை ஓரளவாவது அறிந்திருப்பார் என்று நினைக்கிறேன்..."

உத்தமசீலியின் உடலும் உள்ளமும் நிலைகொள்ளாமல் பற்றித் துடித்தன. ஏதோ ஒரு பேரிடி தன்மீது விழப் போவதை உணர்ந்து அதைப் பயப்பிராந்தியுடன் எதிர்பார்ப்பவள் போல் அவரை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"இளவரசியார் மௌனம் சாதிப்பதிலிருந்து அவருக்கு எல்லா விவரங்களும் தெரிந்திருக்கின்றன என்றே தோன்று

கிறது. ஆகவே, அவற்றை மீண்டும் சொல்லி அவரது மனத்தைப் புண்படுத்த நான் விரும்பவில்லை. ஆயின் அவருக்குத் தெரியாத—அவரால் தெரிந்து கொள்ள முடியாத ஒரே ஒரு சேதியை மட்டும் சொல்லியாக வேண்டும். அதைச் சொல்லிவிட்டுப் போகவே இங்கு வந்திருக்கிறேன்.”

முத்தரையரின் இந்தப் பீடிகையைக் கேட்டு வெடவெடவென்று நடுங்கிய உத்தமசீலி உதட்டை இறுகக் கடித்துக் கொண்டு பாதங்களைத் தரையில் ஊன்றவிட்டு நின்றாள்.

# 140

## முத்தரையரின் யோசனை

**க**ண்களை மூடிச் சற்று நேரம் விறைத்து நின்று கொண்டிருந்த முத்தரையர் சட்டென்று நிமிர்ந்து, "ஆமாம், இளவரசி! பழம்பெருமை வாய்ந்த பல்லவ நாடு கடந்த சில ஆண்டுகளாக அந்நியரின் ஆதிக்கத்தில் அடிமைப்பட்டுக் கிடந்தது. ஆனால் இப்போதோ அது நாயகனை இழந்த நாயகியாகக் கைம்மைக் கோலம் பூண்டு நிற்கப் போகிறது. அதற்கான நேரமும் நெருங்கி வந்துகொண்டேயிருக்கிறது" என்றார் கரகரத்த குரலில்.

மின்னலால் தாக்குண்டவள்போல் துடித்துப் பதறிய உத்தமசீலி, "ஐயா! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று நாக்குழறக் கேட்டாள்.

"உண்மைதான், இளவரசி! பல்லவப் பேரரசர் பரமேசுவரவர்மர் தம் மணி முடியைத் துறக்க முடிவு செய்துவிட்டார்!"

"என்ன? பல்லவ சாம்ராஜ்யத்தின் அரசு கட்டிலைத் துறக்கப் போகிறாரா?"

"ஆம், அம்மணீ!"

"ஏன் இந்தப் பயங்கர முடிவு?"

"உள்ளார்ந்த காரணம் ஒன்று; ஆனால் அதற்கு அவர் வெளிப்படையாகச் சொல்லும் காரணமோ விசித்திர மானது."

"அதை நான் அறியலாமா, ஐயா?"

"அவசியம் நீங்கள் அறிந்தே ஆக வேண்டும். இளவரசி! அதாவது, அவருக்கு விரோதமாக இளவரசர் கோவிந்த வர்மரும், பழையாறைச் சோழரும் சேர்ந்து நாட்டில் குழப்பத்தை உண்டாக்கி வருவதற்குக் காரணம் அவருடைய திருமணத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்பதற்காக அல்ல என்றும், பல்லவ அரச பீடத்துக்கு ஆசைப்பட்டே அவர்கள் அவ்வாறு குறுக்கு வழிப் பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார்கள் என்றும், அதனால் அவர்களுடைய ஆசைக்குப் பங்கம் விளைவிக்காமல் நாட்டிலே அமைதியும் நல்வாழ்வும் நிலவவேண்டும் என்பதற்காகத் தமது மணி முடியைத் துறந்து இராஜாதிகாரத்தை இளவரசர் கோவிந்தவர்மரிடம் ஒப்படைத்துவிட்டுத் தாம் வெளியேறிவிடுவதென்றும் முடிவு செய்துவிட்டாகச் சொல்கிறார் பரமேசுவரவர்மர்."

"அப்படியானால்?"

"அவருடைய இந்த முடிவின் உள் நோக்கம் வேறு அம்மணீ! சைவ சமயத்தைச் சார்ந்த அவர் சமணரான தங்க்ளை மணக்க அவர் தம் அன்னையே அநுமதி வழங்க மறுத்துவிட்டார். அதற்குக் காரணம், அவர் ஒரு மாபெரும் தேசத்து மன்னராக இருப்பதால்தான் என்றும் சொல்லி விட்டார். இந்நிலையில் பல்லவ சாம்ராஜ்யத்தின் மணிமுடியைவிடத் தங்களையும் தங்கள்மீது கொண்ட காதலையுமே உயர்வாகக் கருதிப் போற்றிவரும் அவர் தம் இராஜ கிரீடத்தைத் துச்சமெனத் தூக்கி எறிந்துவிட்டுத் தங்களின் திருக்கரம் பற்றி இந்நாட்டைவிட்டே வெளியேறி விடுவதென்று தீர்மானித்துவிட்டார். இதை அவர் வாய் விட்டுச் சொல்லவில்லையே தவிர, அவரின் அந்தத் திடீர் முடிவுக்கு, இதுதான் உண்மையான காரணம்."

அளவுக்கு மீறிய பயத்தாலும், தாங்கொணாத் துயரத்தாலும் அதிர்ந்து நடுங்கிக்கொண்டு நின்றிருந்த உத்தமசீலி முத்தரையரின் இந்தப் பேச்சைக் கேட்டதும் ஏதோ சொர்க்க சுகானந்தத் தேன்பொழிவில் குதித்து நீந்துபவள்

போல் மகிழ்ச்சிப் பரவசத்துடன் முகம் சிவக்க அழகுப் புன்னகை பூத்தவள். தனக்காகத் தன் காதலன் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையே துறக்கத் தயாராகிவிட்டான் என்பதைக் கேள்விப்பட்டே அவள் அப்படிக் குதூகலக் குளிர்ச்சி யடைந்தாள்.

அவளுடைய மன நிலையைப் புரிந்துகொண்ட முத்தரையர் திகிலுற்றுத் திரும்பியவராய் ஓரடி முன் வந்து படபடப்புடன் சொன்னார்: "எனவேதான் இளவரசி, நான் முதலில் சொன்னதுபோல் இந்தப் புகழ் மண்டிய பல்லவ நாடு இன்னும் சில தினங்களிலே வைதவ்ய கோலம் பூண்ட வனிதையாக நின்று தவிக்கப் போகிறது என்கிறேன். பரமேசுவரவர்மர் எதைப்பற்றியும் எளிதில் ஒரு முடிவுக்கு வரமாட்டார். ஏதேனும் முடிவுக்கு வந்துவிட்டாலோ அதை எந்தக் காரணத்தைக் கொண்டும் மாற்றிக்கொள்ள மாட்டார். இது தான்அவருடைய இயற்கையான குணம். இப்படிப் பட்டவர் தம் இராஜாதிகாரப் பொறுப்பை இளவரசர் கோவிந்தவர்மரிடம் ஒப்படைத்துப் போய்விட்டாரானால் இந்நாட்டின் நிலைமை என்ன ஆகும்? இராஜரீக அனுபவ மற்ற—முன் கோபமும், அவசரப்புத்தியும், உணர்ச்சிகளுக்குச் சடுதியில் இரையாகக்கூடிய பலவீனமும் கொண்ட இளைஞரான கோவிந்தவர்மரால் இம்மாபெரும் தேசத்தைக் கட்டியாள முடியுமா? அவர் ஆள முன்வந்தாலும் மக்கள் அவரை மன்னராக ஏற்றுக் கொள்வார்களா? இன்று அவரால் நாட்டிலே பரப்பப்பட்டிருக்கும் சமயத் துவேஷக் கனல் அவரையே சுட்டுச் சாம்பலாக்கிவிடுமே! இந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு மீண்டும் தமது ஆதிக்கக் கொடியைப் பறக்கவிடச் சளுக்கியர்கள் படையெடுத்துப் பாய்ந்து வந்துவிடுவார்களே! இதற்காகவா இந்நாட்டின் விடுதலைக் காக நாம் பாடுபட்டோம்? இப்படிச் சீர்குலைந்து சின்னா பின்னப் படுவதற்காகவா எண்ணற்ற கஷ்ட நஷ்டங்களையும் வேதனைகளையும் நாம் அநுபவித்தோம்? உங்களையும் சேர்த்துத்தான் கேட்கிறேன், இளவரசி!"

மகிழ்ச்சிப் போதையில் கிறங்கி நின்றுகொண்டிருந்த உத்தமசீலி திடுக்குற்றவள்போல் தலைநிமிர்ந்து, "ஏன்ன கேட்டீர்கள், ஐயா?" என்று அவசரமாக வினவினாள்.

"ஆந்திர இளவரசியாரின் அன்புக்குப் பாத்திரமான இந்த அழகிய பல்லவ நாடு அத்தகைய பரிதாப நிலைக்கு உட்பட்டு சீரழிய விரும்புவாரா என்றுதான் கேட்கிறேன்!"

"இவ்வளவு பெரிய கேள்விக்குச் சிறிய பெண்ணான நான் என்ன பதில் சொல்ல முடியும், ஐயா?"

"இந்த மாபெரும் கேள்விக்கு உரிய மாபெரும் பதில் உங்கள் ஒருவரின் கையில்தான் இருக்கிறது, அம்மணீ!"

உத்தமசீலி விழித்துக் கொண்டாள். தன்னை நோக்கி வந்த இடி தன் தலைக்கு நேராகச் சமீபித்துவிட்டது என்பதைத் தீர்மானித்துக் கொண்டாள்.

"இளவரசியார் ஏன் மௌனமாக இருக்கிறார்? பல்லவ நாட்டைப் பற்றித் தமக்கு அக்கறை இல்லை என்பதுதான் அவரது பதிலா?" என்று அடைத்த குரலில் வினவினார் முத்தரையர்.

உத்தமசீலி பதிலேதும் சொல்லாமல் மௌனமாய் நின்றாள்.

'நிச்சயமாக நான் நம்புகிறேன், ஆந்திர இளவரசியார் அப்படிச் சொல்லவே மாட்டார் என்று."

இப்போதும் அவள் ஏதும் கூறாது சிலைபோல் இருந்தாள்.

"உண்மையில் உத்தமசீலியார் அதை விரும்பவில்லையென்றால், அவர் செய்யக்கூடிய ஒரு பேருபகாரத்துக்கு எனது எளிய யோசனை ஒன்றைச் சொல்வேன்: கேட்பாரா?"

எவ்வித உணர்ச்சியுமின்றி அவரை ஏறிட்டு நோக்கினாள் உத்தமசீலி

"இந்த இக்கட்டான நிலைமையைப் போக்க ஆந்திர இளவரசியார் சைவ சமயத்தைத் தழுவவேண்டும் என்று நான்

யோசனை சொல்லப் போவதாக நினைக்க வேண்டாம்! அவ்வாறு ஒருபோதும் சொல்லமாட்டேன். ஏனென்றால், நானும் சமண சமயத்தைச் சார்ந்தவன். நான் ஓர் உண்மையான சமணனானதால் சைவ சமயத்தை உளமார நேசிக்கிறேன். எனவே, அத்தகைய தவறான யோசனை சொல்லிச் சைவ சமயத்தைக் குறைவுபடுத்த மாட்டேன்."

அவள் இப்போது அவரைக் கூர்ந்து நோக்கினாள்.

"இளவரசி! நான் உங்களுக்குச் சொல்லக்கூடிய ஒரே யோசனை இதுதான்; பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரிடம் சொல்லிக் கொள்ளாமல் இரகசியமாகத் தாங்கள் இந்நாட்டிலிருந்து உடனே பயணமாகித் தங்களது சொந்த ஆந்திர நாட்டுக்குப் போய் அங்கேயே சிறிது காலம் தங்கியிருக்க வேண்டும். அப்படிச் செய்தால் இங்கு ஏற்பட்டுள்ள கொந்தளிப்பு ஒருவாறு அடங்கிவிடும். பிறகு உண்மையைப் பரமேசுவரவர்மனுக்குத் தெரிவித்து, அவரை முடி துறக்க விடாமல் தடுத்து, அதன் பின் மக்களின் மன நிலையை மெல்ல மெல்ல மாற்றியமைத்துக்கொண்டு அவர்களது பரிபூரண சம்மதத்தோடு தங்களை வரவழைத்துத் திருமணத்தை வெற்றிகரமாக நடத்தி முடித்துவிடலாம். இந்தத் திட்டத்தை நானே முன்னின்று நடத்தி வைப்பேன். நிச்சயமாக நடத்தி முடித்தே தீருவேன். என்னை நீங்கள் முழுதும் நம்பலாம்.

நீண்ட நேர அமைதிக்குப் பின் ஓர் இளநகையுடன் தலை நிமிர்ந்த உத்தமசீலி மிகமிக நிதானமாகச் சொன்னாள்; "ஐயா! தங்களின் இந்த மேலான யோசனையை நான் ஏற்பதாகவோ, அல்லது ஏற்க மறுப்பதாகவோ இப்போதைக்கு என்னால் எதுவும் சொல்ல முடியாது. ஆனால் ஒன்றை மட்டும் உறுதியாக சொல்வேன்; பல்லவ மாமன்னர் என் பொருட்டுத் தம் மணி முடியைத் துறப்பதற்கு நான் எவ்வகையிலும் காரணமாயிருக்க மாட்டேன். இதே நம்பிக்கையுடன் தாங்கள் சென்று வரலாம்."

# 141

# ஞான வனிதை

மறுநாள் காலை.

ஆந்திர இளவரசியின் கட்டளைப்படி சிவிகையொன்றைப் பயணத்துக்குத் தயார் செய்து வைத்துக்கொண்டு காத்திருந்தான் நாகோதரன். ஆனால் அவனுக்கே அவள் எந்த ஊருக்குப் பயணமாகிறாள் என்பது தெரியாமலிருந்தது.

விடியற்காலமே எழுந்து நீராடிவிட்டுக் காலை ஆராதனையை முடித்துக்ஒகாண்டு நேரே சமண சங்கப் பள்ளிக்குப் போய்ச் சமந்தபத்திரரிடம் விடைபெற்றுத் திரும்பியிருந்த உத்தமசீலி, பயணமாவதற்குத் தயாரான நிலையில் யாரோ ஒருவருடைய வரவை எதிர்பார்த்துக் காத்திருப்பவள் போல் முற்றத்து அறையில் தன்னந்தனியே அமர்ந்திருந்தாள். அவளுடைய தோற்றத்திலோ நடையுடை பாவனைகளிலோ எவ்வித மாறுதலும் தென்படவில்லை. எப்போதும்போல் மலர்ந்த முகத்துடனும் மகிழ்ச்சியுடனும் காணப்பட்டாள். ஆயினும் அவளது பார்வை மட்டும் எந்த ஒரு பொருளின் மீதும் பதியாமல் ஒளிப் பசையின்றி மிதவையிட்டுக் கொண்டிருந்தது.

"வணக்கம், இளவரசி!"

அவள் மெல்லத் திரும்பிப் பார்த்தாள். அன்றொரு நாள், ஏதோ புதிய பொருள் ஒன்றை உருவாக்கித் தருவதற்காக அவளுடைய பொன்னாபரணங்களை வாங்கிச் சென்ற பொற்கொல்லன் மல்லிநாதன்தான் அந்தப் பேழையுடன் அங்கு வந்து பணிவும் குழைவுமாக நின்றான்.

"மல்லிநாதனா? உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்?" என்றவாறு எழுந்தாள் உத்தமசீலி.

"தாமதத்துக்கு மன்னியுங்கள், தாயே! தங்களைக் காண்பதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்த சமயம் நாகோதரனும் வந்து அழைத்தார். உடனே இதோ ஓடி வந்திருக்கிறேன்" என்றான் மல்லிநாதன்.

"மகிழ்ச்சி! நான் சொன்ன காரியம் என்ன ஆயிற்று?"

"இரவு பகலாக முழுமூச்சுடன் முனைந்து இன்று காலைதான் நிறைவாக்கி முடித்தேன், அம்மணீ!" என்று கூறிக் கொண்டே தன் கையிலிருந்த பேழையைப் பயபக்தியுடன் அவளிடம் கொடுத்தான் பொற்கொல்லன்.

உத்தமசீலி அதை ஆவலுடன் வாங்கி அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்தாள். பிறகு அதன் மூடியைத் திறப்பதற்காகக் கையெடுத்தவள், 'வேண்டாம்' என்பது போல தலையசைத்துக்கொண்டு, "என் சித்திரக் குறிப்புப்படிதானே இதைச் செய்திருக்கிறாய்?" என்று அடைத்த குரலில் கேட்டாள்.

"இளவரசியின் மாதிரிச் சித்திரத்திலிருந்து அணுவும் பிசகாமல் அப்படியே உருவாக்கியிருக்கிறேன்; பேழையைத் திறந்து பாருங்கள், தாயே!"

"இருக்கட்டும்" என்று முனகிய உத்தமசீலி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவளாய்ச் சிறுபொழுது மௌனமாயிருந் தாள். அவளது அழகிய முகம் வெளிறிச் சாம்பியது. கண்கள் இலேசாகக் கலங்கிப் பனித்தன. சட்டென்று நிமிர்ந்த அவள், இளவரசிக்குரிய சின்னமாகத் தன் தலையில் சூடியிருந்த—பிறை நிலாப்போன்ற—விலையுயர்ந்த அணிகலன் ஒன்றைக் கழற்றி எடுத்து, "மல்லிநாதா! நான் இட்ட பணியைச் செய்து முடித்ததற்கு ஊதியமாக இதை உனக்கு அளிக்கிறேன், பெற்றுக் கொள்!" என்று கூறி அவனிடம் நீட்டினாள்.

திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்த மல்லிநாதன் அவளைத் திருதிருவெனப் பார்த்து விழித்தான்.

"ஏன் வாங்க மறுக்கிறாய்? அன்று நான் இது சம்பந்த மாகச் சொன்னதை மறந்துவிட்டேனோ என்று நினைக் கிறாயா? மறக்கவில்லை, மல்லிநாதா! ஆனால் அன்றைய என் நிலை வேறு; இன்று இருக்கும் நிலை வேறு. உன்னுடைய உழைப்புக்கு ஊதியம் கொடுத்தாக வேண்டிய நிலையில் இப்போது இருக்கிறேன். எனது வெறும் பாராட்டு இனி உனக்கு எந்த வகையிலும் பயன்படாது. எனவே இதை நீ வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்."

பதில் பேச நாவெழாமல் பயந்து நடுங்கிய மல்லிநாதன் அந்த மதிப்பு வாய்ந்த ஆபரணத்தை வணங்கிப் பெற்றுக் கொண்டான்.

"சரி; நீ போகலாம்."

கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போல் தட்டுத் தடுமாறியபடி அங்கிருந்து அகன்றான் மல்லிநாதன்.

சில விநாடிகளுக்குப் பின், "நாகோதரா! பயணத்துக்கு எல்லாம் தயாராகி விட்டதா?" என்று கேட்டாள் உத்தமசீலி.

"ஆயிற்று, அம்மணீ!" என்று ஓடி வந்து பதிலிறுத்தான் நாகோதரன்.

கையிலிருந்த பேழையை மார்புடன் அணைத்தவாறு மெல்லப் பின்னால் திரும்பினாள் உத்தமசீலி.

விடிந்தது முதலே அவளது ஒவ்வொரு நடவடிக்கையை யும் தன் அறையில் இருந்தபடி வெகு கவனமாகக் கவனித்துக் கொண்டிருந்த இளங்கோப்பிச்சி, "புறப்பட்டுவிட்டீர்களா, இளவரசி?" என்று கேட்டுக்கொண்டே முன்றிலை நோக்கி அவசரமாக வந்தாள்.

"ஆம், சகோதரி! உன்னிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட வேண்டியதுதான்" என்று கூறிப் புன்னகை பூத்தாள் உத்தமசீலி.

"ஆந்திர இளவரசியார் எங்கு செல்கிறார் என்பது பற்றி என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லையே!"

"சொல்லக்கூடாத இரகசியம் ஏதுமில்லை; கூரம் கிராமத்துக்குத்தான் போகிறேன்."

"சேதியக் கலைஞரை சந்திப்பதற்குத்தானே?"

'ஆம்' என்று தலையசைத்தாள் உத்தமசீலி.

"அதற்கு ஏன் இவ்வளவு அவசரமாகப் பயணப்பட வேண்டும்? இன்னும் சில தினங்களில் அவரே இவ்வூருக்கு வந்தாலும் வருவாரே?"

"அதுவரை என்னால் இங்கு தங்கியிருக்க முடியாது. எனக்கு ஆத்மசாந்தி வேண்டும். அதை நாடித்தான் அவரது புதிய கிருகத்துக்குப் போகிறேன்."

சற்று நேரம் அவளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த இளங்கோப்பிச்சி பொங்கி வந்த துக்கத்தை அடக்கிக்கொண்டு, "ஆந்திர இளவரசியார் எங்கு போனாலும் என்னை மறக்காமல் இருப்பார் அல்லவா?" என்று கேட்டாள்.

உத்தமசீலியின் வதனத்தில் ஓர் அபூர்வ ஒளி படர்ந்தது. "எனக்கு ஞாபக சக்தி அதிகம், சகோதரி! யாரையும் எதையும் நான் எளிதில் மறக்கமாட்டேன். அதற்கு ஓர் உதாரணம் வேண்டுமா? அன்றொரு நாள், சமண சங்கத் தலைவர் சமந்த பத்திரரிடம் நீ வடக்கிருத்தல் நோன்பு பற்றிக் கேட்ட கேள்விக்கு அவர் கூறிய ஒரு பாடலை அப்படியே சொல்கிறேன்: கேள்: 'இடையூறு, ஒழிவில் நோய், மூப்பு இவை வந்தால் கடைதுறத்தல் சல்லேகனை!' — பார்த்தாயா, என் ஞாபக சக்தியை?" என்று மென்னகை புரிந்து சொன்ன அவள் பாசம் பரிமளிக்கும் குரலில் மேலும் கூறினாள்: "என் அன்புச் சகோதரி! உன்னை நான் இந்தப் பிறவியில் மட்டுமல்ல, இனி வரும் பிறவிகளிலும் மறக்க மாட்டேன்."

இளங்கோப்பிச்சியின் இதயம் உருகிக் கரைந்தது. தன்னையறியாமலே தன் இரு கரங்களையும் குவித்துக் கொண்டு கண்கலங்கி நின்றாள் அவள்.

"வருகிறேன், சோழகுமாரி! உனக்கு என் அன்பான வாழ்த்துக்கள்!" என்றவாறு அமைதியாக நடந்து போய்ச் சிவிகையில் அமர்ந்தாள் உத்தமசீலி.

வடதிசை நோக்கிச் சிவிகை புறப்பட்டது.

**ஆ**ந்திர இளவரசி பயணமாகிப் போனபின் அந்த இல்லத்திலே தான்மட்டும் தங்கியிருப்பதில் அர்த்தமில்லையென நினைத்த இளங்கோப்பிச்சி அன்றே அவ்வூரைவிட்டுப் புறப்பட்டுவிட எண்ணினாள். அப்படி எண்ணியதுமே, பழையாறைக்குப் போவதா, அல்லது மதுரை அரண்மனைக்குச் சென்று தன் அத்தையார் மங்கையர்க்கரசியுடன் தங்கியிருப்பதா என்ற குழப்பமான கேள்வி அவள் மனத்தில் எழுந்தது. அத்துடன், தான் இங்கு இருக்கும் விவரத்தை அறிந்துள்ள கோவிந்தவர்மன் தன்னைப் பார்ப்பதற்காக வந்தாலும் வருவான் என்னுமொரு நப்பாசையும் அவளுக்கு ஏற்பட்டது. இந்த ஆசையிலும் குழப்பத்திலுமாகத் தன் பயணத்தைத் தள்ளிப் போட்டுவிட்டு இரண்டு வார காலத்தை எப்படியோ கழித்துவிட்டாள்.

ஆனால், அவள் ஆவலுடன் எதிர்பார்த்ததுபோல் கோவிந்தவர்மன் அவளைப் பார்க்க வரவேயில்லை. ஒருகால் ஆந்திர இளவரசி உத்தமசீலி இங்கிருந்து கூரத்துக்குப் போய்விட்ட விஷயம் அவனுக்குத் தெரியாமலிருக்கலாம்; அல்லது தன் எதிர்ப்பு நடவடிக்கையில் இன்னும் தீவிரமாக ஈடுபட வேறு எந்த ஊருக்காவது போய்விட்டிருக்கலாம்.

இளங்கோப்பிச்சி தன்மீதும் தனது எதிர்கால வாழ்க்கையின்மீதும் அளவற்ற வெறுப்பும் சலிப்பும் அவநம்பிக்கையும் கொண்டாள். இதற்குமேல் அந்த இடத்தில் தங்கியிருந்தால் தனக்குப் பைத்தியமே பிடித்துவிடும் என்றும் அவளுக்குத் தோன்றியது. ஆகவே, அவள் சடுதியில் ஒரு முடிவுக்கு வந்தாள். நாளைப் பொழுது புலர்ந்ததும் திருப்பருத்திக்குன்றத்தைவிட்டு மதுரைக்குப் பயணமாகி விடுவது என்னும் முடிவுதான் அது.

பயணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டு அப்போதுதான் முன்றிலுக்கு வந்த இளங்கோப்பிச்சி, அங்கே சிறிதும் எதிர்பாராதவிதமாகச் சேதியக் கலைஞர் பரவாதி மல்லர் வருவதைக் கண்டு வியப்படைந்தவளாய் அவரை வரவேற்றாள்.

"சோழ இளவரசியார் நலம்தானே?" என்று பரிவுடன் கேட்டுக்கொண்டே வந்த பரவாதிமல்லர் அங்குமிங்குமாகத் தம் பார்வையைச் செலுத்தியவாறு, "உத்தமசீலியார் உள்ளே இருக்கிறாரா? அல்லது வெளியில் எங்கேனும் போய் இருக்கிறாரா?" என்று ஆவலோடு வினவினார்.

இளங்கோப்பிச்சிக்கு தூக்கிவாரிப் போட்டதுபோல் ஆகிவிட்டது. பரபரப்புடன் அவரைப் பார்த்த அவள், "என்ன ஐயா! ஆந்திர இளவரசியை நீங்கள் பார்க்கவில்லையா? உங்களைச் சந்திக்கக் கூரத்துக்கு வந்தாரே?" என்று அவசரமாகக் கேட்டாள்.

"அப்படியா?" என்று கண்களை அகல மலர்த்திய பரவாதிமல்லர் சில விநாடி யோசனைக்குப்பின், "உத்தம சீலியார் இங்கிருந்து எப்போது பயணமானார்?" என்று விசாரித்தார்.

"அவர் புறப்பட்டுப்போய் இரண்டு வாரங்களாகின்றன கலைஞரே!"

"ஓ,...சரிதான்! இருபது நாட்களுக்குமுன் கூரத்தை விட்டுக் கிளம்பிய நான், ஓர் அவசர காரியமாக மாமல்லபுரம் போய் அங்கிருந்து நேரே இங்கு வருகிறேன்."

இதைக் கேட்டு நிம்மதியடைந்த இளங்கோப்பிச்சி, "கூரத்தில் நிர்மாணிக்கத் தொடங்கிய தங்கள் இல்லம் முழுமையடைந்துவிட்டதா, கலைஞரே?" என்று தன்னை மீறிய ஒரு திகிலுடன் வினவினாள்.

"அநேகமாக முடிவடைந்துவிட்டது என்றுதான் சொல்லவேண்டும், அம்மணீ!"

"கிருகப் பிரவேசம் எப்போது வைத்திருக்கிறீர்கள்?"

"அந்த மங்கல நன்னாளைப் பல்லவ மன்னர்தாம் தீர்மானிக்கவேண்டும்!" என்று மகிழ்ச்சி பொங்கச் சொன்ன பரவாதிமல்லர் ஏதோ நினைத்துக் கொண்டவர்போல் கேட்டார்: "அது சரி, இளவரசி! உத்தமசீலியார் முன்னறிவிப் பின்றித் திடீரென்று ஏன் என்னைப் பார்க்கக் கூரத்துக்குப் போனார்?"

"ஆத்மசாந்தியை நாடிப் போவதாக மட்டுமே என்னிடம் சொன்னார், ஐயா! அதற்குமேல் அவரைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது" என்று அடைத்த குரலில் பதிலிறுத்த இளங்கோப்பிச்சி, "தாங்கள் அந்த ஊரில் இல்லாததால் அவர் அங்கே தங்கியிருப்பதில் ஏதேனும் சிரமம் ஏற்படுமோ?" என்று கவலையுடன் வினவினாள்.

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவராய்ச் சிறிது நேரம் பேசாதிருந்த பரவாதிமல்லர், "அப்படியெல்லாம் ஒன்றும் நேராது, அம்மணி! ஏனென்றால், அங்கு என் பிரதம சீடர் புஷ்பசேனர் இருக்கிறார். அவர் ஆந்திர இளவரசியாரை நன்கு கவனித்துக் கொள்வார்," என்று புன்முறுவலுடன் சொல்லிப் புறப்பட ஆயத்தமானார்.

"சேதியக் கலைஞர் இப்போது கூரத்துக்குத்தானே போகிறார்?"

"இல்லை, இளவரசி! என் புதிய கிருகப்பிரவேசத்துக் காகப் பல்லவ மன்னரை அழைக்கக் காஞ்சிக்குப் பயணமாகிறேன்."

இவ்வாறு சொல்லிவிட்டு விடை பெற்றுச் சென்ற பரவாதிமல்லரை வியப்புடன் பார்த்துக்கொண்டு நின்ற இளங்கோப்பிச்சி, "இந்த மனிதரைப்பற்றி நாட்டிலே நிலவும் கொந்தளிப்பை இவர் அறிந்ததாகவோ, அப்படி அறிந்திருந் தாலும் அதற்காகக் கவலைப்படுகிறவராகவோ தெரிய வில்லையே!" என்று தனக்குள் எண்ணிக் குழம்பலானாள்.

# 142

## வீர மங்கை

அன்றிரவு மூன்றாம் சாம வேளை.

இன்பமும் துன்பமுமாகக் கழிந்த இறந்த காலத்தையும், குழப்பமும் தோல்வியுமாக இருக்கும் நிகழ்காலத்தையும், மர்மமும் பயங்கரமுமாகத் தோன்றும் எதிர்காலத்தையும் தன் மனக்கண் முன்னே நிறுத்தி வைத்துக்கொண்டு அவை பற்றிய சிந்தனையில் உறக்கம் பிடிக்காமல் கட்டிலில் படுத்திருந்தாள் இளங்கோப்பிச்சி. அவளுக்குப்பக்கத்தில்—பெரிய சாளரம் ஒன்றின் ஓரமாக மற்றொரு கட்டில் வெறுமனே கிடந்தது. உத்தமசீலி பயன்படுத்திவிட்டுப் போன கட்டில் அது. அந்தக் கட்டிலின்மேல் குறுக்குவாட்டத்தில் சுருட்டி வைக்கப்பட்டிருந்த ஒரு பட்டு மெத்தையானது, அவள் இப்போதும் அதிலே படுத்திருப்பதுபோன்ற பொய்த் தோற்றத்தைத் தந்தது. அறையின் எங்கோ ஒரு மூலையில் 'மினுக், மினுக்'கென்று விளக்கு எரிந்துகொண்டிருந்தாலும் அங்கு இருளின் ஆதிக்கமே மேலோங்கியிருந்தது. வெளியில் சற்றுப் பலமாகக் காற்று வீசியதால் சாளரத் திரைச்சீலை படபடத்துக் கொண்டிருந்தது.

அப்படிப் படபடத்த திரைச்சீலையையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த இளங்கோப்பிச்சி ஏதோ சரசர வென்ற ஒலி கேட்டுத் திடுக்குற்றுச் சுற்றுமுற்றும் பார்த்தாள். அந்தச் சாளரத்தின் வெளிச் சுவர்ப் பக்கமாக யாரோ ஏறி வருவதுபோல் திரைச்சீலையில் ஒரு கரிய நிழல் அசைந்தது,

அதைக் கண்டு திகிலடைந்துவிட்ட அவள் தலையணையில் முகத்தைப் புதைத்துக்கொண்டு மெல்லக் கண் திறந்து மீண்டும் அந்தச் சாளரத்தை உற்று நோக்கினாள்.

சந்தேகமில்லை; வாட்டசாட்டமாயிருந்த ஓர் ஆள் தன் முகத்தைக் கறுப்புத் துணியால் மறைத்துக்கொண்டு சாளரத்தின் விளிம்புச் சுவரில் ஏறி உட்கார்ந்து உள்ளே எட்டிப் பார்ப்பது நன்றாகத் தெரிந்தது. அவன் கையில் பளபளப்பான நீண்டதொரு வாள் மின்னிக்கொண்டிருப்பதும் புலனாகியது.

அளவுக்கு மீறிய பயத்தால் சில்லிட்டு விறைத்த இளங்கோப்பிச்சி தூங்குவதுபோன்ற பாவனையில் அப்படியே அசையாமல் கிடந்தவாறு இமையிதழ்களை மட்டும் இலேசாகப் பிரித்து அவ்வுருவத்தைக் கூர்ந்து பார்த்தாள். அந்த உருவம் தன் கையிலிருந்த வாளை இறுகப் பற்றிக்கொண்டு வெறுமனே கிடந்த கட்டிலின்மேல் சுருட்டி வைக்கப்பட்டிருந்த மெத்தையைக் குறிவைத்துப் பாயத் தயாராவதுபோல் தோன்றியது.

'யார் அந்த ஆள்? யாரைக் கொலை செய்ய இத்தனை பயங்கர வெறியுடன் வருகிறான்? ஒருகால் சளுக்கிய இளவரசன் விநயாதித்தனாக இருப்பானோ?'

இளங்கோப்பிச்சியின் உடலிலும் உள்ளத்திலும் திடீரென ஒரு வீராவேசக் குமுறல் வெடித்துப் பொங்கவே வில்லெனத் துள்ளியெழுந்து தன் தலையணைக்குக் கீழே ஒளித்து வைத்திருந்த வாளை வெடுக்கென்று இழுத்து எடுத்துக் கொண்டு அந்தச் சாளரத்தை நோக்கிக் குபீரெனப் பாய்ந்தோடினாள்.

இந்த எதிர்பாராத எதிர்ப்பைக் கண்டு அதிர்ச்சியடைந்துவிட்ட அந்த மர்ம மனிதன் சாளரத்து வெளியே தாவிக் குதித்தான். இளங்கோப்பிச்சியும் அதே வேகத்தில் வெளிப்புறத்தே பாய்ந்தாள். அடுத்த கணம்—

'பளார்! பளீர்!... டணார்!... டணீர்!'

*நீண்ட இரு வாட்கள் ஒன்றுடன் ஒன்று முட்டி மோதி இரவின் கருமையை வெட்டிப் பிளப்பதுபோல் மின்னிப் பளிச்சிட்டன. முகத்திரை போர்த்தி வந்த மர்ம மனிதனுக்கும், இளங்கோப்பிச்சிக்கும்தான் அங்கே பயங்கர வாட்போர் மூண்டது!*

*அவள் அசுர வேகத்தில் தன் வாளைச் சுழற்றினாள். அவளுடைய ஆவேச வாள் வீச்சிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முயல்பவன்போல் அந்த மர்ம மனிதனும் தன் வாளைச் சக்கர வட்டமாகச் சுழற்றிக்கொண்டே பின்னால் நகர்ந்தான்.*

*சற்று முன்வரை மலர்ச் சிலைபோல் மென்மையும் தண்மையுமாக விளங்கிய இளங்கோப்பிச்சியா இப்படிக் கோர தாண்டவம் புரியும் கொற்றவைபோல் காட்சியளிக்கிறாள்? ஆம்; மாவீரர் பழையாறைச் சோழரின் மகள் அல்லவா? இளமை முதலே அவரிடம் பயிற்சி பெற்ற வாட்போர்த் திறனை வெளிப்படுத்த இதோ ஒரு சந்தர்ப்பம் அவளுக்கு வாய்த்துவிட்டது.*

*ஆனால்?... அதோ... இளங்கோப்பிச்சியின் கை சோர்வடைகிறதே! அவளது வாளின் சுழற்சிவேகம் குறைகிறதே! புடைத்துத் திமிறிய அவள் உடலில் எதிரியின் வாள் முனை இரத்தக் கோலங்களைத் தீட்டுகின்றனவே!... ஐயோ, அந்த வீரமாப் பெண்ணின் வாழ்க்கை இன்றோடு முடிவடையப் போகிறதா?*

*'பளார்!'—*

*இரண்டு வாட்களில் ஒன்று கணீரென்ற ஒலியுடன் தெறித்துப் போய்ச் சற்றுத் தொலைவில் வீழ்ந்தது. முகத்திரையணிந்த மனிதன் வெறுங்கையோடு செடி கொடிகளுக்கிடையே புகுந்து இருளில் மறைந்து ஓட்டமெடுத்தான். உண்மையில் அவன் வாட்போரில் தோற்றுவிட்டானா? அல்லது வேண்டுமென்றே தன் வாளை வீசியெறிந்துவிட்டு ஓடுகிறானா? வெற்றிப் பெருமிதத்துடன் பயங்கரமாகச்*

சிரித்துக்கொண்டே தள்ளாடித் தள்ளாடி நடந்து சென்ற இளங்கோப்பிச்சி, கீழே கிடந்த அந்த வாளைத் தன் இடக் கரத்தால் எடுத்துத் தூக்கிப் பிடித்து அதன் கைப்பிடியை உற்று நோக்கினாள்.

"ஹா!... புலிச் சின்னம்! சோழக் குறுநில அரசாங்கத்தின் புலி இலச்சினை!" —அவள் கையில் பற்றியிருந்த இரண்டு வாட்களும் தாமாகவே நழுவித் தரையில் விழுந்தன. அவளும் மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தாள்.

# 143

## தந்தையும் மகளும்

அடுத்த நாள் மாலை மயங்கும் நேரம்.

அந்தச் சிறிய இல்லத்தின் படுக்கை அறையில் பிரமை பிடித்தவர்போல் உட்கார்ந்திருந்தார் பழையாறைச் சோழர். அவருக்கு எதிரிலிருந்த கட்டிலைச் சுற்றி மருத்துவத்தில் கை தேர்ந்த சமண கௌந்திமார் மூவர் நின்றிருந்தனர். அவர் களுக்குச் சற்று அப்பால் சாந்தமே வடிவாகச் சிந்தனையில் ஆழ்ந்து நின்றுகொண்டிருந்தார் சமந்தபத்திரர். இவர்கள் அனைவருடைய பார்வைக்கும் இலக்கான நிலையில் அந்தக் கட்டிலின்மேல் பிரக்ஞையிழந்து படுத்துக் கிடந்தாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி.

அறையில் மெல்ல மெல்ல இருள் சூழ்வதை அறிந்த சமந்தபத்திரர் ஓசைப்படாமல் எழுந்து போய் விளக் கேற்றினார்.

இவ்வளவு நேரம் அறுத்துப் போட்ட பூங்கொடியென அசைவின்றிப் படுத்துக் கிடந்த இளங்கோப்பிச்சியின் உடல் இலேசாக நெளிந்து புரண்டது. இதைக் கண்ட கௌந்திகள் முகம் மலர்ந்தவர்களாய்ச் சற்று விலகி நின்றனர்.

"கவலைப்படுவதற்கு இனி ஒன்றுமில்லை, ஐயா! முன் னெச்சரிக்கையாகத் தாங்கள் நேற்றிரவே என்னிடம் விவரம் சொல்லி அழைத்து வந்து உடனடியாகச் சிகிச்சையை மேற் கொண்டதால்தான் தங்கள் குமாரி இப்போது உயிர் பிழைத்திருக்கிறார். இல்லையென்றால் நிலைமை வேறு

விதமாக முடிந்து விட்டிருக்கும்" என்று தணிந்த குரலில் சொன்னார் சமந்தபத்திரர்.

நன்றியுடன் அவரைப் பார்த்துத் தலையசைத்துக் கொண்ட பழையாறைச் சோழர் தம் மகளை ஆவலோடு கூர்ந்து நோக்கினார்.

இளங்கோப்பிச்சி மெல்லக் கண் திறந்தாள். தன்னைச் சுற்றி நின்றிருந்தவர்களை மிரள மிரளப் பார்த்து விழித்தாள். பழையாறைச் சோழர் இதைக் கண்டு மகிழ்ச்சி மேலிட்ட வராய், "இளங்கோப்பிச்சி!..." என்று அன்பாவேசத்துடன் அழைத்துக்கொண்டே அவளருகில் எழுந்தோடினார்.

இளங்கோப்பிச்சி தன் முழங்கைகளை ஊன்றிக் கொண்டு தலையை மட்டும் மேலே தூக்கினாள். அடுத்த கணம் அவள் முகத்தில் ஒருவித கோபாக்கினி சுடர் விட்டது. "யார் ஐயா, நீங்கள்?" என்று சற்றே அதட்டலான குரலில் கேட்டாள்.

பழையாறைச் சோழரின் உடல் குப்பென்று வியர்த்துக் கொட்டியது. அவளைப் பார்க்க அச்சமும் கூச்சமும் அடைந்தவராய்க் கைகளைப் பிசைந்த வண்ணம், "நான்தான் மகளே! என்னை உனக்குத் தெரியவில்லையா?" என்று அடைத்த குரலில் குழறினார்.

ஏதோ ஓர் ஆவேசத்தால் நெம்பி நிமிர்த்தப்பட்டவள் போல் திடுமென்று எழுந்து உட்கார்ந்த இளங்கோப்பிச்சி அவரைச் சுட்டெரித்து விடுபவள் மாதிரி வெறித்துப் பார்த்துக் கலகலவெனச் சிரித்தாள். "ஓ,...பழம் பெருமை வாய்ந்த சென்னிகுலச் செல்வராம் பழையாறைச் சோழர் அல்லவா நீங்கள்? வணக்கம், ஐயா! நலம்தானே?"

பழையாறைச் சோழரின் உள்ளம் அதிர்ந்தது. அவர் தம் மகளைத் திருதிருவென விழித்துப் பார்த்தார்.

"ஆமாம்; நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள்? உங்களுக்கு எவ்வளவோ அதிமுக்கியமான அலுவல்களெல்லாம் இருக்குமே! பல்லவ நாட்டின் எதிர்கால நலன்களைக் கட்டிக்

காப்பதற்காகவும், சைவ சமயத்துக்கு ஏற்பட்டுவிட்ட ஆபத்தைத் தடுத்து நிறுத்துவதற்காகவுமே அவதாரம் செய்திருக்கும் மகா புருஷரான நீங்கள், அந்தப் பெரும் பணிகளுக்காக ஊர்ஊராகப் போய்ப் பிரசாரம் செய்து மக்களைத் தட்டியெழுப்ப வேண்டியதை விட்டுவிட்டு உங்கள் பொன்னான நேரத்தை வீண் படுத்திக்கொண்டு என்னை ஏன் பார்க்க வந்திருக்கிறீர்கள்?" என்று மீண்டும் அதே குத்தல் சிரிப்புடன் கேட்டாள் இளங்கோப்பிச்சி.

பழையாறைச் சோழரின் முகம் பாறையாக இறுகிக் கறுத்தது. தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு மௌனமாக நின்றார் அவர்.

"நல்ல வேடிக்கைதான்! மாபெரும் வீரரான பழையாறைச் சிற்றரசர் ஓர் எளிய பேதைப் பெண்ணின் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் மௌனம் சாதிப்பது விந்தையிலும் விந்தையே! அப்படியானால் நான் இன்னும் சில கேள்விகளையும் கேட்கலாமா? கேட்டுத்தான் ஆக வேண்டும். சளுக்கியரிடம் அடிமைப்பட்டுக் கிடந்த பல்லவ நாட்டை மீட்பதற்காகக் கொஞ்ச காலம் அவர்களுடன் கூட்டுச் சேர்ந்து நாடகம் ஆடியதாகச் சொன்னீர்களே, அது எவ்வளவு தூரம் உண்மை? பல்லவ நாட்டுக்குக் கதி மோட்சம் இல்லை என்ற நிலைமை இருந்தவரை எதிரிகளோடு கூடிக் குலாவிவிட்டுப் பிறகு நிலைமை மாறும்போல் தெரிந்ததும் அந்த துரோகச் செயலுக்கு இராஜ தந்திர முலாம் பூசிக் காட்டிக்கொண்டு திரும்பி வந்து விட்டீர்கள் என்று நான் சொல்கிறேன். இதை உங்களால் மறுக்க முடியுமா?"

அடிபட்ட வேங்கைபோல் சினந்து நிமிர்ந்த பழை யாறைச் சோழர், "இளங்கோப்பிச்சி!..." எனக் கூவினார்.

"அநியாயமாகப் பழி சுமத்துகிறேனே என்று ஆத்திரப் படுகிறீர்களா? அப்படியானால் பல்லவ மாமன்னர் தம் சுய முயற்சியால் பெற்ற வெற்றியை நீங்கள் ஏன் ஒப்புக் கொள்ள மறுத்து அவருக்கு எதிராகக் கலகக் கொடியைத் தூக்கிக்

கொண்டு புறப்பட்டிருக்கிறீர்களாம்? பல்லவ நாட்டின் வெற்றிக்குரிய முழுப் பெருமையும் உங்கள் ஒருவரையே சார்ந்திருக்கவேண்டும் என்றும், அதைக்கொண்டு பரமேசுவர வர்மரை உங்கள் கைப்பாவையாக ஆட்டிப் படைக்க வேண்டும் என்றும் ஆசைக் கனவு கண்டிருக்கிறீர்கள்; அந்தப் பேராசைக் கனவைப் பல்லவ மன்னர் தகர்த்துவிட்ட தோடல்லாமல் அவரது வெற்றிப் பெருமையில் ஆந்திர இளவரசியும் முத்தரையரும் பங்கு பெறும்படிச் செய்து விட்டார்; இந்த எதிர்பாராத ஏமாற்றத்தை உங்களால் பொறுக்க முடியவில்லை; அதனால் மனக் காய்ச்சலடைந்து தகாத திசையில் திரும்பிவிட்டீர்கள்—அப்படித்தானே?"

சுடு சரங்களால் துளைக்கப்பட்டவர்போல் தம் உடம்பை நெளித்துக்கொண்டு விழிகளை உருட்டிப் புரட்டினார் பழையாறைச் சோழர்.

"அப்பா! உங்கள் நெஞ்சிலே கை வைத்துச் சொல்லுங்கள்: ஆந்திர இளவரசி உத்தமசீலியைப் பரமேசுவர வர்மர் மணப்பதால் நம் சைவ சமயத்துக்கு ஆபத்து ஏற்படும் என்று நீங்கள் நிஜமாகவே நினைக்கிறீர்களா? அவள் இந்த நாட்டின் விடுதலைக்காகச் செய்த உதவிகளெல்லாம் வெறும் அரசியல் சதி நோக்கம் கொண்டவைதாம் என்றும் நம்புகிறீர் களா? அப்படியானால் பரமேசுவரவர்மரைவிட நீங்கள் சைவ சமயத்தில் அதிகப் பற்றும் பக்தியும் கொண்டவர் என்று உங்களால் சொல்லிக்கொள்ள முடியுமா? இந்த நாட்டின் சுயாதிக்க உரிமையிலும், மக்களின் அகப்புற வாழ்க்கை நலன் களிலும் அவரைவிட உங்களுக்கு அதிக அக்கறையும் பொறுப்பும் உண்டு என்றாவது உங்களால் கூற முடியுமா? உண்மையில் நீங்கள் ஒரு மாசற்ற தேசபக்தராகவும், சைவ சமயத்தில் தூய பற்றுள்ளவராகவும் இருந்தால் உங்களுடைய மனத்தில் இத்தகைய தாழ்மையுணர்ச்சியோ, பொறாமையோ சிறிதளவும் தோன்றியிருக்காதே! சிவநேசச் செல்வமணியாக விளங்கும் மங்கையர்க்கரசியாரின் சகோதரர் என்பதற்கு

அருகதையுள்ளவராகவா நீங்கள் இப்போது நடந்துகொள் கிறீர்கள்? உங்களுடைய தவறான நடவடிக்கைகளை நான் எப்படித் தெரிந்துகொண்டு பேசுகிறேன் என்று திகைக் கிறீர்களா? அன்றொரு நாள் வேகவதி ஆற்றங்கரையில் நீங்களும் கோவிந்தவர்மரும் பேசிக்கொண்டிருந்ததை யெல்லாம் ஒரு பெண் மறைந்திருந்து கேட்டுவிட்டு ஆற்றில் குதித்து நீந்தி ஓடி மறைந்தாளே, அந்தப் பெண் வேறு யாருமல்ல; நானேதான் அப்பா!"

அதிகாயபாகுவான பழையாறைச் சோழர் கூனி குறுகி நின்றார்.

"இன்னொன்றையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும், அப்பா! உங்களுடைய தடம் தவறிய நடத்தை யாலும் போக்காலும் உங்களுக்கு மட்டுமல்ல, எனது இன்ப வாழ்க்கைக்கும் இடர்த் தேடிவிட்டீர்கள் என்பதை அறிவீர் களா? சூதுவாது அறியாத வெகுளி மனம் படைத்த சுத்த வீரரான பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரை ஏமாற்றி, அவரையும் தவறான வழிக்கு அழைத்துச் சென்றுவிட்டீர் களே, இது உங்களுக்கு நியாயமா, அப்பா? உண்மையில் அவர் உங்களுடைய கருத்துக்களை ஒப்புக்கொண்டு, உங்கள் பேச்சுக்குக் கட்டுப்பட்டுப் பல்லவ மன்னருக்கு விரோதமாக நடக்கிறார் என்று நீங்கள் நம்புகிறீர்களா? நான் அவ்வாறு நம்பவே மாட்டேன். என்மீது கொண்ட எல்லையற்ற காதலின் அறிவு மயக்கத்தினால்தான் அவர் உங்களுடைய இழுப்புக் கெல்லாம் இழுபட்டுக் கொண்டிருக்கிறார். என்றாவது ஒரு நாள் தம் சகோதரரை நேரில் சந்தித்து விட்டாலோ, அவருடைய போக்கு அடியோடு மாறிவிடும். அப்போது உங்களுக்கு மட்டுமல்ல, எனக்கும் அவரே எமனாகிவிடுவார்."

பழையாறைச் சோழரின் முகம் சவமாக வெளுத்துச் சிறுத்தது. கசப்பான மருந்தைக் கொஞ்சங் கொஞ்சமாக உட் கொள்கிறவர்போல் உடலை முறுக்கிக்கொண்டு நின்றார் அவர்.

இளங்கோப்பிச்சியின் கண்கள் புதுப் புனலென நீர் சொரிந்தன. அவமானமும் வேதனையும் செறிந்த குரலில் அழுதுகொண்டே மேலும் சொன்னாள்: "அப்பா! பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரை நீங்கள் பணியவைக்க முயன்று வருகிறீர்கள்; ஆனால் அவரோ உங்கள் இருவரின் தலை மீதுமே ஒரு பெரிய பாறையைத் தூக்கிப் போடத் தீர்மானித்து விட்டார். ஆம்; பல்லவ சாம்ராஜ்யத்தின் மணிமுடிமீது கோவிந்தவர்மர் ஆசைப்படுகிறார் என்றும், அந்த ஆசையை அவருக்கு நீங்கள்தாம் தூண்டிவிட்டிருக்கிறீர்கள் என்றும், அதனாலேயே நாட்டில் குழப்பத்தை உண்டுபண்ணுகிறீர்கள் என்றும் கூறி, உங்களின் பேராசைப்படியே தம் அரசுக் கட்டிலை கோவிந்தவர்மரிடம் ஒப்படைத்துவிட்டுத் தாம் இந்நாட்டைவிட்டே வெளியேறிவிடப் போவதாக அவர் முடிவு செய்துவிட்டாராம்..."

இதைக் கேட்டு நெஞ்சில் வேல் பாய்ந்தவர்போல் துடித்துப் பதறிய பழையாறைச் சோழர், "என்ன! இதெல்லாம் உண்மைதானா, இளங்கோப்பிச்சி?" என்று வினவினார்.

"ஹூம்! இந்த மாபெரும் நாட்டையே உலுக்கிக் குலுக்கிக் கொண்டிருக்கும் அந்தச் சேதி உங்களுக்குத் தெரியாமல் இருப்பதுபற்றி நான் வியப்படையவில்லை. ஏனென்றால், கேவலம் ஒரு பெண்ணைக் கொலை செய்ய நினைக்கும் அளவுக்கு உங்கள் வீரமும் விவேகமும் இப்போது மழுங்கிப் போய் விட்டிருக்கின்றன. என்னுடன் இங்கே ஆந்திர இளவரசி உத்தமசீலியும் தங்கியிருக்கிறாள் என நினைத்துக் கோழைத்தனமாக அவளைக் கொலை செய்யத் தானே நேற்றிரவு வாளேந்தி வந்தீர்கள்? ஆனால் அதிர்ஷ்ட வசமாக அந்தச் சீலமிகு ஞானமங்கை கூரத்தில் சேதியக் கலைஞரின் புதிய கிருகத்துக்குப் போய்விட்டாள். அதனால் உங்கள் வீரமும் மானமும் தப்பிப் பிழைத்துவிட்டன" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே பிரக்ஞையிழந்து அப்படியே படுக்கையில் சுருண்டு சாய்ந்தாள் இளங் கோப்பிச்சி.

"ஐயோ, பாதகம் செய்துவிட்டேனே! இந்நேரம் அந்த அநியாயம் நடந்துவிட்டிருக்குமே!'' என்று பைத்தியம் பிடித்தவர்போல் உளறிக் கூவிக்கொண்டே வெளியில் பாய்ந்தோடிய பழையாறைச் சோழர் சடாரென்று திரும்பி வந்து, "அடிகளே! என் அருமை மகள்..." என்று குழறினார்.

"நீங்கள் ஏதோ ஓர் அக்கிரமச் செயலைத் தடுக்கப் போவதாக நினைக்கிறேன்; உடனே புறப்படுங்கள், ஐயா! உங்கள் செல்வக் குமாரிக்கு எவ்வித ஆபத்தும் நேர்ந்து விடாமல் நான் காப்பாற்றுகிறேன்" என்று அமைதியாகப் பதிலிறுத்தார் சமந்தபத்திரர்.

அடுத்த கணம், பழையாறைச் சோழரின் புரவி, கூரம் கிராமத்தை நோக்கி வளியென விரைந்து சென்று மறைந்தது.

144

# மன்னிப்பு ஏன்?

காஞ்சி அரண்மனையில் அரச குடும்பத்தினரின் வழி பாட்டுக்கென்றே அமைந்த அழகிய *தேவாரத்திலிருந்து இறைவனைச் சேவித்த மனச்சாந்தியுடன் வெளியே வந்த பரமேசுவரவர்மன் தன் வரவுக்காகக் காத்திருந்த சேதியக் கலைஞர் பரவாதிமல்லரைக் கண்டு மகிழ்ச்சி அடைந்த வனாய், "வாருங்கள், கலைஞரே! நலம்தானே?" என்று அன்புடன் விளித்தவாறு அவர் அருகில் சென்றான்.

மகத்தான காரியம் ஒன்றைச் சாதித்துவிட்டு வந்திருப்பது போன்ற பெருமிதம் முகத்தில் பொங்க அவனைப் பார்த்து, "மன்னரவர்களின் கருணையன்பால் நன்னலமே!" என்று தலைதாழ்த்தினார் பரவாதிமல்லர்.

"கலைஞரைச் சந்தித்து நீண்ட நாட்களாகிவிட்டன...! கூரத்திலிருந்துதானே வருகிறீர்கள்?"

"இல்லை, அரசே! மாமல்லபுரத்துக்குப் போய் அங்கிருந்து திருப்பருத்திக்குன்றம் வழியாகக் காஞ்சிக்கு வந்திருக்கிறேன்."

---

* இந்தக் கதை நிகழ்ந்த காலத்தில் 'தேவாரம்' என்னும் சொல் 'வழிபாடு' என்ற பொருளிலும், 'வழிபாட்டறை' என்ற பொருளிலுமே வழங்கப்பட்டது. கி.பி. பதினான்காம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் வாழ்ந்த இரட்டைப் புலவர்கள் தாம் பாடிய 'ஏகாம்பர நாதருலா'வில் 'தேவாரம்' என்னும் சொல்லை அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோர் அருளிய திருப்பதிகங்களைக் குறிக்கும் பொருளில் முதன் முதலாக வழங்கினார்கள்.

திருப்பருத்திக்குன்றத்தில் உத்தமசீலி இன்னமும் தங்கி யிருக்கிறாள் என்றே எண்ணிக்கொண்டிருந்த பரமேசுவர வர்மன், அவ்வூரிலிருந்து வந்திருக்கும் பரவாதிமல்லரிடம் அவள் ஏதேனும் சேதி அனுப்பியிருப்பாள் என்று உள்ளூறப் பரபரப்படைந்தான். ஆனால் பரவாதிமல்லரோ ஆந்திர இளவரசி கூரத்துக்குச் சென்றிருப்பதைப் பல்லவ மன்னன் அறிந்திருப்பான் என்று நினைத்து, அதுபற்றித் தன்னிடம் ஏதோ சொல்லப் போகிறான் என்று அவன் முகத்தை ஆவலுடன் ஏறிட்டு நோக்கினார்.

தான் எதிர்பார்த்ததுபோல் சேதியக் கலைஞர் ஏதும் சொல்லாதிருக்கவே தன் உணர்ச்சிகளை மறைக்க இளநகை பூத்தவாறு, "கூரத்தில் கலைஞர் தமது மாளிகையைக் கட்டி முடித்திருப்பார் என்று நினைக்கிறேன். புதுமனை புகுவிழா எப்போது நடத்துவதாக உத்தேசம்?'' என்று கேட்டுக் கொண்டே தேவாரத்துக்கு வலப்பக்கவாட்டிலிருந்த ஒரு குருந்த மரத்தை நோக்கி நடந்தான் பரமேசுவரவர்மன்.

"அது சம்பந்தமாக மன்னரவர்களைக் கண்டு பேசவே இங்கு வந்திருக்கிறேன்'' என்று தம்மை மீறிய குதூகலக் குழைவுடன் கூறிய பரவாதிமல்லர் அவனைப் பின் தொடர்ந்தார்.

குருத்த மரத்தின் காலை நேரத்து நீண்ட நிழலில் போய் நின்ற பரமேசுவரவர்மன், "கலைஞர் என்ன பேச விரும்புகிறார்?" என்று அமைதியாகக் கேட்டான்.

"பல்லவ அரசாங்கத்தின் பேராதரவைக் கொண்டு கூரத்தில் நான் உருவாக்கியிருக்கும் புதிய கிருகத்தை மாமன்னரவர்கள் நேரில் வந்து பார்வையிட வேண்டு மென்றும், அதன் பிரவேச விழாவை அவரே முன்னின்று நடத்திவைக்க வேண்டுமென்றும் பெரிதும் விரும்புகிறேன்."

"இன்றையச் சூழ்நிலையில் கலைஞரும் நானும் அந்தச் சந்தோஷத்தைப் பகிர்ந்துகொள்ள முடியுமா என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்!"

சட்டென்று நிமிர்ந்த பரவாதிமல்லர் எதையோ புரிந்து கொண்டவர்போல் தம் வெண் தாடியை நீவியவாறு சொன்னார்: "என்னைப்பற்றியும் கூரத்தில் கட்டி முடித்துள்ள அந்தப் புதிய கிருகத்தைப்பற்றியும் நாட்டு மக்களிடையே எத்தகைய அபிப்பிராயம் நிலவுகிறது என்பதை அறியாமல் இப்படி வந்து அழைப்பு விடுக்கிறேனே என்று அரசரவர்கள் நினைத்துச் சங்கடப்படுவதாகத் தோன்றுகிறது. ஆனால்..."

வேகமாகத் தலையசைத்த பரமேசுவரவர்மன் உறுதியான குரலில், "அதைப்பற்றியெல்லாம் சிறிதும் கவலைப் படவில்லை, கலைஞரே! பல்லவ நாட்டின் விலைமதிப்பற்ற பொக்கிஷமென நான் மதித்துப் போற்றும் மகா சேதியக் கலைஞரான தங்களுக்குக் கூரத்தில் கட்டப்பெற்றிருப்பது போன்ற பல மாளிகைகளைக் கட்டிக்கொள்ள எல்லாவித மான உதவிகளைச் செய்யவும் சித்தமாயிருக்கிறேன்'' என்றான்.

பரவாதிமல்லர் இதைக் கேட்டுச் சிறுபிள்ளைபோல் கலகலவென்று சிரித்தார். "கூரத்தில் எனக்காக மாளிகை கட்டிக்கொண்டு விட்டேனோ? யார் அப்படிச் சொன்னது?"

திடுக்குற்ற பரமேசுவரவர்மன் அவரை வியப்புடன் கூர்ந்து நோக்கினான்.

"ஆம், அரசே! எனக்காக அந்தக் கிருகம் கட்டப் பெற வில்லை; வேறொருவருக்காக, வேறொன்றுக்காகவே அதை நிர்மாணித்திருக்கிறேன்."

பரமேசுவரவர்மனின் மனம் குழம்பிக் கலங்கியது. அந்தக் கூரம் இல்லத்தைப்பற்றிப் பழையாறைச் சோழர் சொல்லி வரும் குற்றச்சாட்டுகளெல்லாம் இப்போது அவன் நினைவில் அக்கினிக் கணைகளெனப் பாய்ந்து வந்து தைத்தன. தன் செவிகளால் தீண்ட விரும்பாத கசப்பான சேதி ஒன்றைக் கேட்டுக் கசப்படையத் தயாராவதுபோல் அவரை வெறித்து நோக்கினான் அவன்.

பரவாதிமல்லர் மீண்டும் அதே குறும்புச் சிரிப்புடன் கூறினார்: "அந்த விஷயத்தை அரசரிடம் தெரிவிக்குமுன் வேறொரு சேதியைத் தெரிவித்தாகவேண்டும். அதாவது... எனக்காக மன்னரவர்கள் மனமுவந்து அளித்த முற்றூட்டுச் சாசனத்தைத் தங்களது அநுமதியின்றி மற்றொன்றுக்காகப் பயன்படுத்திவிட்டேன் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொண்டு அதற்காக மன்னிப்பும் கோருகிறேன்."

# 145

## பரமேசுவர கிருகம்

"கலைஞரே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? கூரத்தில் கட்டப்பெற்ற அந்த இல்லம் உங்களுடையது இல்லையா?" என்று அடக்க முடியாத துடிப்புடன் கேட்டான் பரமேசுவர வர்மன்.

புன்னகை தவழ அவனைப் பார்த்த பரவாதிமல்லர், "எனக்கென்று ஓர் இல்லம் இருக்க வேண்டுமென்று நான் ஆசைப்பட்டதில்லை, அரசே! அப்படி இருந்த இல்லத்தையும் சளுக்கியர்கள் இடித்துத் தரை மட்டமாக்கியதை நேருக்கு நேர் பார்த்தபோதுகூட அதற்காகச் சிறிதும் கவலைப்படவில்லை. ஏனென்றால், என் கண்ணுக்கு இவ்வுலகமே ஓர் இல்லமாகத் தான் தென்படுகிறது. இந்த அழகிய விசாலமான இல்லத்தில் குடியிருந்து வரும் நான் ஏன் இன்னோர் இல்லத்துக்கு ஆசைப்பட வேண்டும்?" என்று மிகமிக அமைதியாகக் கூறினார்.

பரமேசுவரவர்மனின் ஆவல் மேலும் வளர்ந்தது. "அப்படியானால் அந்தக் கூரம் கிருகத்தை யாருக்காக நிர்மாணித்தீர்கள், கலைஞரே?"

"பல்லவ நாயகரின் பெயரில் உலக நாயகருக்காக அதைக் கட்டி முடித்திருக்கிறேன்!" என்று மகிழ்ச்சிப் பரவசத்துடன் சொன்ன பரவாதிமல்லர் தம் கண்களை மெல்ல மூடியவாறு மேலும் கூறினார்: "மறைந்த மாமன்னர் நரசிம்மவர்மரின் திருப்பெயரை இந்த நானிலம் என்றுமே மறக்காதிருக்கும் வகையில் மாமல்லபுரத்திலே பல அற்புதக்

கற்கோயில்களைச் சமைத்துத் தந்த நான், எனது பேரன்புக்கும் பெருமதிப்புக்கும் உரியவரான பரமேசுவரவர்மரின் பெயரையும் அவ்வாறே அழியாச் சிறப்புடையதாக்கிவிட வேண்டுமென்று ஆசைப்பட்டேன். என் ஆசைக்குக் கலைத் தேவியும் அருள்பாலித்து அரியதொரு வரம் வழங்கினாள். புத்தம் புதுக் கலைக்கனவு ஒன்று கண்டேன். தமிழகத்துக்கு முற்றும் புதியதான அந்தக் கலைக் கனவை நனவாக்கி நிலைபெறச் செய்துவிட ஆவேசம் கொண்டேன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக என் கலையாவேசத்தைச் சளுக்கியர்கள் படையெடுத்து வந்து கலைத்து அழித்துவிட்டார்கள். அதனால் விடியற்போதை எதிர்நோக்கி ஓலமிடும் செம்போத்துப் பறவையைப்போல் உள்ளம் குமைந்து உற்சாகம் குன்றித் தவிக்கலானேன். கால தேவன் கண் திறந்தான். பல்லவ நாட்டைக் கப்பியிருந்த அடிமை இருள் அகன்றது. சுதந்தரச் சூரியன் உதயமாயிற்று. நீறுபூத்த நெருப்பாக என் நெஞ்சத்திலே புதைந்து கிடந்த அந்தப் புதுக் கலைக் கனவும் புத்துயிர் பெற்று எழுந்தது. அப்போதுதான் மன்னரவர்கள் வந்து, எனக்கு என்று கூரத்தில் ஓர் இல்லம் அமைத்துக் கொள்ள முற்றூட்டுச் சாஸனம் எழுதிக் கொடுத்தார். என் சிந்தனை தீவிரமாகியது. திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தேன். எனக்குக் கிடைத்த முற்றூட்டை—அதன் நோக்கத்துக்குப் புறம்பாக—எனது மாபெரும் கலைக்கனவை நனவாக்குவதற்கெனப் பயன்படுத்திவிடுவது என்னும் முடிவுதான் அது. அந்த முடிவுக்கு வந்த அன்றே என்னை மறந்தேன்; உலகை மறந்தேன்; என் அன்புக் கோமான் பரமேசு வரவர்மனின் நெஞ்சில் நின்றுலாவும் நித்திய பரம்பொருளாம் நிமல நாதனுக்குப் புத்தம்புது வடிவில்—தமிழகம் இதுவரை கண்டிராத முறையில்—கற்றளி ஒன்று சமைக்க ஆரம்பித்தேன். சுட்ட செங்கல்லையும், சுண்ணக் கலவையையும் மண்ணை யும், மரத்தையும் கொண்டு உருவான மண்டளிகளிலும், பாறையைக் குடைந்து படைத்த குகைக் கோயில்களிலுமே

இதுகாறும் எழுந்தருளி வாசம் செய்த எம்பிரான் நீலமணி மிடற்றுடையானுக்கு முழுக்க முழுக்கக் கருங்கற்களாலான கண்கவர் கற்கோயில் ஒன்றை உருவாக்கித்தந்து தமிழக சேதியக் கலையில் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவிக்க முற்பட்டேன். என் கனவு பலித்தது; என் ஆசை கைகூடியது. காலத்தை வெல்லும் கலையொன்றைத் தமிழகத்துக்குக் கற்றுத் தந்துவிட்டேன். இனி இம்முறையைப் பின்பற்றித் தென்னக மெங்கும் ஒன்றல்ல, பத்தல்ல, ஆயிரமாயிரம் கற்கோயில்கள் ககனத்தை அளாவி எழும்பி நிற்கும். அவை இந்த யுகத்துக்கு மட்டுமல்ல, இனி வரப்போகும் பல யுகங்களுக்கும் தமிழரின் சேதியக் கலை ஞான வெற்றிச் சின்னங்களாக விளங்கும். அப்படி விளங்கக்கூடிய கோயில்களுக்கெல்லாம் ஒரு மூல மாதிரிச் சின்னமாக உருவாகியிருக்கும் அந்தக் கூரம் கோயிலுக்கு, என்னை இதுகாறும் உளமார நேசித்து என் கலைத்திறனை உண்மையாக மதித்துப் போற்றி ஆதரவு நல்கி வரும் பல்லவச் செல்வர்பால் நான் கொண்டுள்ள அன்புக்கும் விசுவாசத்துக்கும் நன்றியறிதலுக்கும் அடையாளமாக அவருடைய திருப்பெயரையே—அதாவது, 'வித்யா விநீத பல்லவ பரமேசுவரகிருகம்' என்று—சூட்டியிருக்கிறேன். எனவேதான் அரசரவர்கள் அந்தக் கோயிலை நேரில் வந்து பார்வையிட்டு அதன் குடமுழுக்கு விழாவையும் அவரே முன்னின்று நடத்தி வைக்கவேண்டும் என்று விரும்பியும் வேண்டியும் கொள்கிறேன்."

உணர்ச்சிப் பெருக்கால் தொண்டையடைத்துக் கொள்ளவே சற்றுநேரம் திக்கித் திணறலிட்ட பரவாதி மல்லர் மெல்லக் கண் திறந்தார்.

பரமேசுவரவர்மன் எங்கே? மாபெரும் பல்லவ சாம்ராஜ்யத்தின் மகா சக்கரவர்த்தியான அவன், தன்னை மறந்த நிலையில் அந்த எளிய சேதியக் கலைஞரின் எதிரே முழந்தாளிட்டு அவரை அப்படியே அணைத்துத் தழுவிக் கொண்டிருந்தான்!

திடுக்குற்று நடுங்கிய பரவாதிமல்லர் அவனை அவசரமாகத் தூக்கி நிறுத்திவிட்டுப் பின்னால் நகர்ந்தார். ஒளி பொருந்திய அவரது கண்களிலிருந்து மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கெடுத்தது.

"கலைஞர் பெருமானே! என்னுடையவும் என் நாட்டினுடையவும் பெருமையை உயர்த்துவதற்காகத் தாங்கள் செய்த இந்த மகத்தான காரியத்தை முன்னதாகவே என்னிடம் தெரிவித்திருக்கலாமே? அப்படித் தெரியப் படுத்தாமல் அதை ஏன் இத்தனை இரகசியமாக மூடி மறைத்தீர்கள்?'' என்று உள்ளார்ந்த கவலையுடன் வினவினான் பரமேசுவரவர்மன்.

சேதியக் கலைஞர் இதைக் கேட்டு இளநகை புரிந்தார். "பல்லவ நாடு விடுதலைப் போரில் வெற்றியடைந்ததுமே ஒரு நல்ல சந்தர்ப்பச் சூழ்நிலையில் அந்த விஷயத்தைத் தங்களிடம் தெரிவித்து அநுமதி பெற்றுச் செயலில் இறங்கவேண்டும் என்றுதான் முதலில் திட்டமிட்டிருந்தேன், அரசே! ஆனால், எதிர்பாராத விதமாகப் பழையாறைச் சோழரும், கோவிந்தவர்மரும் சேர்ந்து நாட்டிலே சமயப் பூசலைக் கிளப்பிவிட முற்பட்டதை அறிந்ததும் என் திட்டத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதாகிவிட்டது. காரணம், அவர்கள் பரப்பி வந்த துவேஷப் பிரசாரத்தினால் சைவர்களைவிட சமணர்களே மிகவும் கொதிப்படைந்திருந் தார்கள். அந்நிலையில் சமணனான நான் சைவ சமயத்தின் முழுமுதற் தெய்வத்துக்கு அரசாங்கப் பணச் செலவிலே கற்கோயில் எடுப்பிப்பதைச் சமணர்கள் சகித்துக்கொள்வார் களா? சைவர்களேகூட அதைச் சரியான நோக்கில் பார்த்து என்னை நம்பியும் ஆதரிக்கவும், மாட்டார்களே! எனவே கூரத்தில் அந்தக் கோயிலைக் கட்டி முடிக்கும்வரை அதை யாரும் அறியவிடாமல் மூடி வைப்பதென முடிவு செய்தேன்."

இவ்வாறு சொன்ன பரவாதிமல்லர் எதையோ நினைத்துக்கொண்டவராய்ச் சட்டென்று நிமிர்ந்து தமு

தழுத்த குரலில் கூறினார்: " 'நாட்டு நிலைமை இத்தனை மோசமாக இருக்கும்போது அவசரப்பட்டு அந்த முயற்சியில் ஏன் ஈடுபட வேண்டும்? எல்லாம் சரியானபின் அமைதியாக ஆரம்பித்திருக்கலாமே?' என்று அரசரவர்கள் கேட்கலாம். நானும் முதலில் அப்படித்தான் நினைத்தேன். ஆனால் என் முதுமைப் பருவம் எனக்குரிய எதிர்காலத்தை மிகக் குறைந்த அளவிலேயே வைத்திருப்பதாக எனது உள்ளுணர்வு என்னை எச்சரித்தது. காலம் என் கணக்கைத் தீர்க்குமுன் காலத்தின் முதுகிலே என்னுடைய மகத்தான கலைக்கனவை நனவாக்கிப் பொறித்துவிட வேண்டும் என்று எழுச்சியுற்றேன். என்னைப் பற்றி யார் எத்தகைய தவறான பிரசாரம் செய்தாலும் அதைப் பல்லவ மாமன்னர் கடுகளவும் நம்பமாட்டார் என்ற நம்பிக்கை எனக்குப் பூரணமாக இருந்தது. அந்த நம்பிக்கையில் பிறந்த துணிவினால்தான் என் முயற்சியில் முழுமூச்சுடன் இறங்கி வெற்றிகரமாக முடித்தும் விட்டேன். இப்போது நான் மகிழ்ச்சியடைவதெல்லாம் என்னுடைய மாபெரும் சாதனைக்காக அல்ல; என்மீது தேச மக்கள் பலவிதமான சந்தேகங்கள் கொண்ட நிலையிலும் மன்னரவர்கள் அவற்றை யெல்லாம் பொருட்படுத்தாமல் நான் கேட்டபோதெல்லாம் எவ்வித சுணக்கமும் இன்றி ஏராளமான நிதி வசதிகளை—அவை என் சொந்த இல்லம் கட்டுவதற்குத் தேவை என்றே எண்ணி—வாரி வாரி வழங்கிக் கொண்டிருந்தாரே, அதை நினைத்துத்தான் எல்லையற்ற ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைகிறேன். இத்தகைய பேரன்புக்கு நன்றி செலுத்துவதற் கென்றே நான் இன்னும் பல பிறவிகள் எடுக்கவேண்டும் என்றும் விழைகிறேன்."

குளிர்ந்த பார்வையால் அவரையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன் சில விநாடிகளுக்குப்பின், "கலைஞரே! தங்களின் மகோன்னத சிருஷ்டியை இன்றே காணவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். கூரத்துக்குப் புறப்படுவோமா?" என்றவாறு அவரது கரங்களை அன்புடன் பற்றினான்.

பரவாதிமல்லரின் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடியது. ஆனால் மறுகணமே ஒருவித பீதியும் சஞ்சலமும் கொண்டவராய்த் தலைகுனிந்து, 'புறப்படலாம் அரசே!... அதற்குமுன் ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்புகிறேன்...'' என்று அடைத்த குரலில் இழுத்தார் "அதாவது, நான் காஞ்சிக்கு வரும் வழியில் திடுக்குறும் சேதியொன்றைக் கேள்விப்பட்டேன். அந்தச் சேதி என்னை மட்டுமல்ல, தேசம் முழுவதையுமே ஒரு குலுக்குக் குலுக்கி அலைக்கழித்துவிட்டிருக்கிறது. ஆயினும் அது உண்மையாக இருக்குமோ என்று சந்தேகமாகவும் இருக்கிறது."

"கலைஞர் கேள்விப்பட்ட அந்தச் சேதி என்னவோ?" என்று அமைதியாக வினவினான் பரமேசுவரவர்மன்.

"அதை என் வாயால் சொல்லவே அச்சமாயிருக்கிறது, அரசே!...அதாவது...தாங்கள் பல்லவ சாம்ராஜ்யத்தின் மணி முடியைத் துறந்துவிட முடிவு செய்திருப்பதாக நாடெங்கும் பேச்சாயிருக்கிறது. அதனால் மக்களெல்லாம் இடியோசை கேட்ட நாகம்போல் நடுநடுங்கி விட்டிருக்கிறார்கள்."

"உண்மையான சேதியைத்தான் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்."

"அரசே?..."

"ஆனால், அது என் உண்மையான முடிவு அல்ல" என்று கூறி ஓர் அவலப் புன்னகை பூத்த பரமேசுவரவர்மன் நிதானமான குரலில் மேலும் சொன்னான்: "ஆமாம், கலைஞரே! கிரீட ஜாதியில் பிறந்த நான் கிரீடத்தைத் துறந்து விடுவது என்பது அத்தனை சாதாரண விஷயமல்ல. தாயின் உதரத்தைவிட்டு வெளிவந்த அக்கணமே என் தலையில் சுமத்தப்பட்ட அந்தக் கிரீடச் சுமையை அவ்வளவு எளிதாக என்னால் தட்டிக் கழித்துவிட முடியாது. கடமையை மறந்து பொறுப்பை உதறிவிட்டு ஓடுபவன் கோழை; அப்படிப்பட்ட கோழையுமல்லன் நான். சளுக்கியரிடம் பல்லவ நாடு அடிமைப்பட்டுக் கிடந்தபோது அத்தகைய பலவீன எண்ணம்

என் மனத்தில் எழுந்ததென்னவோ உண்மைதான். ஆனால், அன்றைய நிலைமை வேறு. இன்று அவ்வாறு கனவிலும் கருதமாட்டேன்; கருதவும் கூடாது. அப்படியாயின் முடி துறக்கப் போவதாக நான் சொன்னதற்குக் காரணம் என்ன? அது ஓர் இராஜதந்திரப் பரிசோதனை! பொறுப்பற்றவர்களின் பேச்சைக் கேட்டுப் பொறுப்பில்லாமல் நடந்துகொள்ளும் என் தேச மக்களுக்கு ஓர் அதிர்ச்சி மருத்துவம் செய்யவே அத்தகைய திடீர் முடிவு ஒன்றைத் தூக்கிப் போட்டிருக் கிறேன். என் இதயக் கோமகள் உத்தமசீலியை எனக்கு உரியவளாக்கிக் கொள்வதில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் தடையைத் தகர்த்தெறியவும் அதை ஓர் ஆயுதமாகப் பிரயோகித்திருக்கிறேன். அதன் விளைவுகளை இப்போது மிகவும் கவனமாகப் பரிசீலித்துக் கொண்டும் வருகிறேன்." —

எங்கோ சென்றுவிட்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவ ராய் தேவாரத்து வழியே அப்போதுதான் வந்துகொண்டிருந்த பெரும்பிடுகு முத்தரையர், பல்லவ மன்னனின் இந்தப் பேச்சைக் கேட்டு அப்படியே வெலவெலத்து நின்று விட்டார்.

இந்தச் சமயம், அரண்மனை தேவாரத்தைக் கண் காணிக்கும் அதிகாரியான தேவாரநாயகம் அங்கு அவசர மாக வந்து, "கலைஞரே! தங்களைக் காண யாரோ ஓர் இளைஞர் வந்திருக்கிறார்" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே, தலைவிரி கோலமாக அங்கு ஓடி வந்தார் பரவாதி மல்லரின் பிரதம சீடரான புஷ்பசேனர்.

சேதியக் கலைஞரும், பல்லவ மன்னனும் அவரைத் திரும்பிப் பார்த்தனர்.

"குருதேவரே! அநியாயம் நடந்துவிட்டது! அக்கிரமம் நடந்தே விட்டது!" என்று குழறிக் கூவிக்கொண்டு வேர்க்க விறுவிறுக்க வந்து நின்றார் புஷ்பசேனர். "ஆம், குருதேவா! நமது புதிய கிருகத்தைச் சுற்றிப் போடப்பெற்றிருந்த கீற்றுப் பந்தலுக்கு யாரோ தீ வைத்துவிட்டார்கள்! நேற்று நள்ளிரவில் அந்த நாசவேலை நடந்துவிட்டது!"

பரவாதிமல்லர் இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தார். “அவ்வளவுதானே? பரவாயில்லை!” என்றுகூறி மீண்டும் நகைத்த அவர் அலட்சிய மிடுக்குடன் அமைதியாகச் சொன்னார்: “தீ என்ன, வெள்ளமோ புயலோ வந்தாலும் அந்தப் பரமேசுவர கிருகத்தை அசைக்க முடியாது. அழிக்கவும் இயலாது.”

“உண்மைதான், குருதேவா! சதிகாரர்கள் இட்ட தீ, கீற்றுப் பந்தலைத்தான் எரித்துச் சாம்பலாக்கியதே தவிர தங்களின் மகோன்னத சிருஷ்டியைத் தீண்டவே இல்லை!... ஆனால்...”

“என்ன, புஷ்பசேனரே?”

“அந்தச் சம்பவத்தையொட்டி எதிர்பாராத பேராபத்து ஒன்றும் நேர்ந்துவிட்டது, ஐயா!...அதாவது, திருப்பருத்திக் குன்றத்திலிருந்து தங்களைப் பார்ப்பதற்காக வந்த ஆந்திர இளவரசி உத்தமசீலியார்...”

அக்கினிப் பந்தத்தால் தாக்கப்பட்டவர்போல் துடித்துப் பதறிய பரவாதிமல்லர், “அவருக்கு என்ன நேர்ந்தது?” என்று பரபரப்பாகக் கேட்டார்.

“கீற்றுப் பந்தல் தீப்பிடித்து எரிந்தபோது உத்தமசீலியார் கோவிலினுள் இருந்தார். ஐயா! ஊர் மக்களெல்லாம் சேர்ந்து தீயை அணைத்த பின்னும் அவர் கோயிலுக்குள்ளேதான் இருந்து வருகிறார். உட்புறம் சாத்திய கதவு இன்னமும் திறக்கப் படாமலே இருக்கிறது.”

“ஏன் அப்படி புஷ்பசேனரே?”

“குருதேவர் மாமல்லபுரத்துக்குப் புறப்பட்டுப்போன மறுநாள் ஆந்திர இளவரசியார் கூரத்துக்கு வந்தார். தாங்கள் திரும்பி வரும்வரையில் தங்களது கூடாரத்திலே தங்கியிருக்கு மாறு அவரை வேண்டிக்கொண்டேன். ஆனால் அவர் பிடிவாதமாக அந்தப் பரமேசுவர கிருகத்தில் இருக்கப் போவதாகச் சொன்னார். மறுக்க இயலாமல் ஒப்புக் கொண்டேன். அன்று மாலை கிருகத்தினுள் சென்று கதவைச்

சாத்திக்கொண்டவர், நேற்றோடு இருபது நாட்களாகியும் வெளியில் வரவில்லை. ஏதோ காரணமாக அவர் தலைமறைவாக இருக்கிறார் என்று எண்ணி அவருக்குச் சிரமம் தரக்கூடாதெனப் பேசாமல் இருந்து விட்டேன்...”

“ஆந்திர இளவரசியாரின் பணியாள் நாகோதரன் என்பவன் அவருடனே வந்திருப்பானே? அவனிடம் விவரம் கேட்டீர்களா?”

“அந்த உத்தம வீரன் தன் இளவரசியைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆவேசத்தோடு தீ ஜ்வாலைக்கிடையே பாய்ந்து சென்று வெளியேற முடியாமல் வெந்து மாண்டு விட்டான், ஐயா!”

அரண்மனையே கிடுகிடுக்கும்படியான ஒரு பேரொலி—

“உத்தம...சீலி...”

பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன் எங்கே? அதோ, தன் ‘அதிசயம்’ என்ற புரவி மீதேறிக் கூரத்தை நோக்கிக் காற்றாய்ப் பறந்து கொண்டிருக்கிறான்!

# 146

## மாலை சூட்டினாள்!

அக்கினி தேவனால் திறப்பு விழா செய்யப்பட்ட அருங் கலைக்கோயில்!

ஆம்; வளம் கொழிக்கும் கூரம் கிராமத்தின் ஓரிடத்தில் தீயினால் எரிந்து சாம்பலான கீற்றோலைப் பந்தலின் சவுக்கை மரக் கம்பங்கள் தாறுமாறாகச் சாய்ந்து கிடக்க, அவற்றின் நடுவிலே, மாலை நேரத்தின் மஞ்சள் வெயிலிலே பொற் கும்பம் தகத்தகாயமிட்டு ஜ்வலிக்க, கலையரசியின் மாபெரும் சிம்மாசனம்போல் எழில் மணம் வீசி வானுற ஓங்கி நிமிர்ந்து நின்றுகொண்டிருந்தது, தமிழகத்தின் முதற் கற்கோயிலான வித்யா விநீத பல்லவ பரமேசுவர கிருகம்.

ஆயிரமாயிரம் மக்கள் கூடி நின்று அந்த அதிசயக் கோயிலை வியப்பும் பிரமிப்புமாகக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் அனைவருடைய முகங்களிலும் பலவிதமான உணர்ச்சிகள் கொப்பளித்துக் கொண்டிருந்தன.

"நான் நிச்சயமாகச் சொல்வேன்; நேற்றிரவு இந்தக் கூரைப் பந்தலுக்குத் தீயிட்டு நாச வேலை செய்தவர் கோவிந்த வர்மராகத்தான் இருக்கும்!'' என்று ஆத்திரத்துடன் சொன்னான் ஊர்க் காவல் அதிகாரி ஒருவன்.

"அதிலென்ன சந்தேகம்? எல்லாம் அந்தப் பழையாறைச் சோழரின் தூண்டுதலாலேயே அவர் அப்படிச் செய்திருப்பார்" என்று குமுறினான் ஏரி வாரியத் தலைவ னொருவன்.

"இந்தப் பொறாமைக்காரர்கள் என்ன நோக்கத்தோடு இத்தனை பயங்கர நாச வேலையைச் செய்திருப்பார்கள்?"

"பல்லவ மன்னரை ஏமாற்றிப் பெற்ற பெரும் பொருளைக் கொண்டு பரவாதிமல்லர் தமக்குச் சொந்தமாகப் பெரியதொரு மாளிகை கட்டிக் கொள்கிறார் என்று தவறாக எண்ணி, அதனால் ஏற்பட்ட காழ்ப்பினால் இந்தத் தகாத காரியத்தை அவர்கள் செய்யத் துணிந்திருக்க வேண்டும்."

"எனக்கு அது சரியாகப்படவில்லை; கும்பாபிஷேகம் நடத்தப்பெறாமல் வெறும் கோட்டமாக இருக்கும் இந்தப் பரமேசுவர கிருகத்தில் ஆந்திர இளவரசியார் வந்து தங்கியிருக்கிறார் என்பதை அறிந்து அவரைப் பழிவாங்க வேண்டும் என்பதற்காகவே அவர்கள் இந்த அநியாய செயலைச் செய்திருப்பார்கள்!"

"என்னால் இதை நம்ப முடியாது. ஏனென்றால், இந்த ஊரில் வாழும் நமக்கே ஆந்திர இளவரசியார் இங்கு வந்து தங்கியிருந்த விஷயம் நேற்றுவரை தெரியாது; அவர்களுக்கு மட்டும் எப்படி அது தெரிந்திருக்கும்?"

"உமக்கும் எனக்கும் இரண்டு கண்கள்; சதிகாரர்களுக்கோ உடம்பெல்லாம் கண்கள்!"

"சரி, அப்படியே இருக்கட்டும். ஆனால், பந்தல் தீப் பிடித்து எரிந்துகொண்டிருந்தபோது தலைவிரி கோலமாக ஓடி வந்த பழையாறைச் சோழர் தீயை அணைக்க அரும்பாடு பட்டாரே?"

"அதெல்லாம் வெறும் வேஷம்! செய்த குற்றத்தை மறைப்பதற்காக அவர் ஆடிக் காட்டிய நாடகம்."

"அது எப்படியாவது போகட்டும். கூரைப் பந்தல் எரிந்த போது கோயிலினுள்ளிருந்த உத்தமசீலியாரின் கதி என்ன ஆயிற்று? அதைச் சொல்லுங்கள்!"

"அந்தத் தகவல்தான் இன்னமும் யாருக்கும் தெரியவில்லை. நேற்றிரவு முதல் இன்று இந்நேரம்வரை அப்படி

யிப்படி நகராமல், அதோ கோயிலின் பிரதான வாயிலிலேயே அந்த எமகிங்கரர் நின்று கொண்டிருக்கிறாரே, அவரைக் கடந்து உள்ளே செல்ல யாருக்குத் துணிவு வரும்?”

இவ்வாறு பேசிக்கொண்ட ஊர்க்காவல் அதிகாரியும், ஏரி வாரியமும் நிமிர்ந்து அவ்வழகிய கற்கோயிலின் முகப்பு வாயில் பக்கம் தமது பார்வையைச் செலுத்தினர்.

அங்கே, கறுத்த முகமும் வெறித்த பார்வையுமாகப் பிரமை பிடித்தவர்போல் நின்றுகொண்டிருந்தார் பழையாறைச் சோழர்!

கோயிலைச் சுற்றிக் குழுமியிருந்த ஜனக் கூட்டத்தினிடையே திடீரென்று ஒரு கலகலப்பு ஏற்பட்டது. பீதியும் குழப்பமும் நிறைந்து படபடத்த இலட்சோப இலட்சம் கண்கள் ஒரே திசை நோக்கித் திரும்பின.

கூரம் ஏரி எனப்படும் பரமேசுவர தடாகத்துக்கு அப்பால் மிகத் தொலை தூரத்தில் காஞ்சியிலிருந்து கூரத்துக்கு வரும் சாலையில்—புழுதிக் கூடாரம் ஒன்று சுழித்தெழுந்து வெகு வேகமாக முன்னே வருவது தெரிந்தது. அதைத் தொடர்ந்து மத்தள வாசிப்பு போன்ற குதிரைக் குளம்பொலியும் கேட்டது.

ஜனங்களிடையே கசமசவென்ற பேச்சு; ஆவலும் திகிலுமான பரபரப்பு!

அந்தப் புழுதிக் கூடாரத்திலிருந்து மின்னலொன்று வெளிப்பட்டாற்போல் ஒரு வெள்ளைப் புரவி வாயு வேகமாகப் பாய்ச்சலிட்டு வருவது இப்போது இலேசாகத் தெரியலாயிற்று.

*“உத்தம...சீலி...!”* —எண்டிசையும் அதிர்ந்து நடுங்கும் படியான அவலப் பெருங்குரல்.

*“ஹிஹ் ஹிஹ் ஹிஹ்ஹீ!...”* —குதிரையின் பயங்கரக் கனைப்பொலி.

"அதோ, நம் பேரரசர் பரமேசுவரவர்மர்தாம் வருகிறார்!"—ஜனங்கள் அங்குமிங்குமாகக் கலைந்து ஓடி மீண்டும் சிறுசிறு கூட்டமாகக் கூடினர்.

காஞ்சிச் சாலையைவிட்டு ஒரு கொடிப் பாதையில் திரும்பிக் காற்று வேகமாகப் பாய்ந்துவந்த அந்த வெள்ளைப் புரவி, கூரம் ஏரியிலிருந்து பிரிந்து ஓடிய கால்வாய் ஒன்று குறுக்கிடவே அதை அப்படியே தாவித் தாண்டியது.

அடுத்த கணம், அங்கு என்ன நடந்ததோ—தாண்டிய குதிரை தடாலென ஒரு பக்கம் போய்க் குப்புற வீழ, அதனைச் செலுத்தி வந்து பரமேசுவரவர்மன் கால்வாய்த் தண்ணீரில் தூக்கி எறியப்பட்டான்!

இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஜனக்கூட்டம் 'ஹோ' வென்று அலறிக் கூவியது.

ஆனால், சில விநாடி நேரத்துக்கெல்லாம் கால்வாயை நீந்திக் கரையேறிய பரமேசுவரவர்மன் கோயிலை நோக்கித் தள்ளாடித் தள்ளாடி வரலானான். சுருண்டு விழுந்த 'அதிசயம்' மட்டும் மறுபடி எழுந்திருக்கவே யில்லை.

**எ**ங்கும் ஒரே நிசப்தம்.

தெப்பமாக நனைந்த கோலத்தில் கோயிலின் பிரதான வாயிலுக்கு எதிரே வந்து நின்றான் பரமேசுவரவர்மன். அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன்கூடிய மரக் கதவு தீயினால் சிறிதளவு சேதப்பட்டு ஒருக்களித்துச் சாத்தியிருக்க, அதன் அருகில் சிலைபோல் விறைத்து நின்றுகொண்டிருந்தார் பழையாறைச் சோழர்.

பரமேசுவரவர்மன் அவரை அமைதியாகவே ஏறிட்டு நோக்கினான். அவரும் அவனை நிமிர்ந்து பார்த்தார். மறுகணம், அவர் கண்களிலிருந்து புதுப் புனலென நீர் கொப்புளித்துக் கொட்டியது. வாயிலைவிட்டு ஓரடி விலகி நின்றார் அவர்.

முற்றும் துறந்த முனிவன்போல் ஓர் இளநகை புரிந்த பரமேசுவரவர்மன் வலக் காலை முன்னே எடுத்து வைத்துக் கோயிலுக்குள் பிரவேசித்தான்.

அதற்குள் கட்டு மீறிப்போன ஜனங்கள் ஒருவரோடு ஒருவர் முட்டி மோதிக்கொண்டு கோயிலில் நுழைந்து விட்டனர். இந்தச் சமயம், வெளியே இரண்டு ரதங்களும் ஒரு குதிரையும் வந்து நின்றன. அவற்றிலிருந்து இறங்கிய மகாராணி காடவன்மாதேவியும் பெரும்பிடுகு முத்தரையரும், பரவாதிமல்லரும், புஷ்பசேனரும் அரக்கப் பரக்க உள்ளே சென்றனர்.

கோயிலின் கருவறையை நோக்கி நடந்த பரமேசுவர வர்மன் தயங்கி நின்று தன் பார்வையைச் சுற்றிலும் ஓட்டினான்.

கருவறை வெறுமனே இருந்தது. அவ்வாறே மற்ற தெய்வத் திருப்பீடங்களும் காட்சியளித்தன. ஆயின் அவ்வந்தப் பீடங்களில் பிரதிஷ்டை செய்வதற்கான அழகிய விக்கிரகங்கள் அதனதன் பக்கத்தில் வைக்கப்பெற்றிருந்தன. அதனால் அந்தக் கோயில் இப்போது முழுமையாக விளங்க வில்லை; முற்றுப்பெறாத ஒரு புனிதக் கோட்டமாகத் தோற்ற மளித்தது.

திருநிலையறைக்கு வெளியே, வலப் பக்கவாட்டில், அற்புதச் சிற்ப வேலைபாடுகளுடன் கூடிய ஒரு பெரிய கல் தூண் நின்றிருந்தது. அதன் எதிரே, கருவறையில் பிரதிஷ்டை செய்வதற்கென உருவாக்கிய—சாஸ்திர முறைப்படி அபிஷேகம் செய்யப்பெறாத—அழகிய சிவலிங்கம் ஒன்று நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. இவற்றின் இடையே, காய்ந்து வெளுத்த தருப்பைப் புற்கள் பரவலாகத் தூவிக் கிடக்க, அந்தப் புல் விரிப்பின்மேல் வெள்ளை ஆடையும் அவிழ்ந்த கூந்தலுமாக, இளைத்து வெளுத்து மெலிந்த கோலத்தில், கழுத்திலே வாடிக் கருகிய ஆதொண்டை மலர் மாலை யொன்றுடன், வடக்கு நோக்கித் திரும்பி, அரைப் பிரக்ஞை

யில் கண்மூடிச் சோர்ந்து துவண்டு தூணிலே சாய்ந்தவாறு அமர்ந்திருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி. அவள் எதிரேயிருந்த சிவலிங்கத்தின் திருச்சுற்று வட்டத் தட்டில், உருத்திராக்க மணிகளுடன் விலைமதிப்பற்ற நவரத்தினங் களும் குயிற்று உருவாக்கிய எழில்மிகு பொற்கிரீடம் ஒன்று வைக்கப்பெற்றிருந்தது.

உத்தமசீலி வடக்கிருத்தல் நோன்பை மேற்கொண்டு விட்டாளா? ஆம்; அந்தப் புனித சல்லேகனையில்தான் அவள் இப்போது ஆழ்ந்திருக்கிறாள்!

இவ்வளவையும் பார்த்துக்கொண்டு நின்ற பரமேசுவர வர்மனின் முகத்தில் எவ்வித உணர்ச்சியும் இழையோட வில்லை. அமைதியாக நடந்துபோய் அவளருகில் ஒற்றை முழந் தாளிட்டு அமர்ந்து அவளது முகத்தை ஏறிட்டு நோக்கினான்.

"உத்தம...சீலி!..."

மிக மிக மென்மையான இந்த அழைப்பைக் கேட்டு மெல்லக் கண் திறந்தாள் உத்தமசீலி. வெளுத்து வறண்ட அவள் அதரங்களில் புன்னகை தவழ்ந்தது. உலர்ந்து ஒட்டிய முகத்தில் தெய்விக ஒளி சுடர் விரித்தது. பொன்வண்டின் உட் சிறகுகள் துடிப்பனபோல கண் இமைகள் மிருதுவாகப் படபடக்க, பார்வையை மலர்த்தினாள் அவள். உட்குழிந்து சுருங்கிய அவளது கண்டத்திலிருந்து காற்றோசை போன்ற மென்குரல் ஒன்று எழுந்தது.

"பிரபு!..."

பரமேசுவரவர்மன் அவளைப் பார்த்து அழகாகச் சிரித்தான். சிரிப்பா அது? ஈரேழு பதினான்கு லோகங்களின் சகல விதமான அவலங்களும் அந்தச் சிரிப்பிலே நிறைந்து வழிந்தன.

அவனுடைய திண்ணிய கழுத்தில் தவழ்ந்துகொண் டிருந்த சவுக்கைக்காய் மாலையின்மீதே தன் பார்வையைப் பதித்திருந்த உத்தமசீலி நிதானமாக நிமிர்ந்து அந்த உருத்திராக்க மணிகளாலான கிரீடத்தை நோக்கினாள்.

*"அற்புதமான கனவு! அழகான கற்பனை! எங்கோ நிறைவேற்ற நினைத்த ஆசை இங்கே வந்து நிறைவேறுகிறது!"*

*மீண்டும் அவள் முகத்தில் ஒரு நிறைவான புன்னகை நெளிந்தது. மிகவும் சிரமப்பட்டுத் தன் மெலிந்த கைகளை மேலே உயர்த்திச் சிவலிங்கச் சுற்றுத் தட்டின் மேலிருந்த கிரீடத்தை மெல்ல எடுத்தாள்.*

*பரமேசுவரவர்மனின் கண்கள் முதன்முறையாக நீர் முத்துக்களைப் பிலிற்றின. அவனையறியாமலே அவனது கரங்கள் குவிந்து, தலை தாழ்ந்தது.*

*பின்னால் குழுமி நின்ற பெருங்கூட்டத்தினிடையே விசும்பல் ஒலி! வெளியே நாட்டப்பெற்றிருந்த கொடி மரத்தின் இலை மணிகள் காற்றிலே குலுங்கி எழுப்பிய ஓசை!*

*ஆந்திர இளவரசி உத்தமசீலி, பல்லவப் பேரரசின் மாமன்னனான பரமேசுவரவர்மனின் சென்னியில், உருத்தி ராக்க மணிகளாலான பொற்கிரீடத்தைச் சூட்டினாள். அவள் கரங்கள் நடுங்கின. ஆயினும் மிகுந்த பிரயாசையுடன் தன் கழுத்தில் கருகிக் காய்ந்து தவழ்ந்துகொண்டிருந்த ஆதொண்டை மாலையைக் கழற்றி அவனது கழுத்தில் அணிவித்தாள்.*

*"சமணச் செல்வி உத்தமசீலி இதோ, சைவச் செல்வர் பரமேசுவரவர்மரின் பட்ட மகிஷியாகி விட்டாள்!"*

*உத்தமசீலியின் வதனத்தில் ஒண்ணொளி வீசும் வெற்றிக் களிப்பு! அவள் சிரித்துக்கொண்டே அவனது குளிர்ந்த மார்பில் சாய்ந்தாள்.*

*அடுத்த கண[illegible]த்தமப் பத்தினிப் பெண்ணின் கருநீலக் கண்[illegible] சுகானந்தப் பெருந்துயிலில் ஆழ்ந்தன.*

**முற்றிற்று**

